ஸ்ரீ

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



# அஸ்வமேதபர்வம்.

இஃது

மயிலம்

சுப்பிரமண்ணிய சுவாமிகளால்

பார்வையிடப்பட்டு

கூ - வெங்கடாசலமுதலியார் - குமாரர்

முனிசாமிமுதலியாரது

மாதவநிவாசவச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது

1881 ஹு

வண்ணாரப்பேட்டை





ஸ்ரீராமஜெயம்.

# அஸ்வமேதபர்வம்

## வியாசபகவான் தோத்திரம்

சுலோகம்.

வியாசம்வசிஷ்டநப்தாரம் சக்தேஃபௌத்ரமகல்மஷம்
பராசராத்மஜம்வந்தே சுகதாதம்தபோநிதிம்
வியாசாயவிஷ்ணுரூபாய வியாசரூபாயவிஷ்ணவே
நமோவை பிரமமநிதயே வசிஷ்டாய நமோநமஃ

## நூன்முகம்

இந்தப்படி வேதவியாசரைத் தோத்திரஞ்செய்து ஐந்தாம்வேதமாகிய ஸ்ரீமத்மகாபாரத சரித்திரத்தைச்சொல்லுகிறோம், அஃதெப்படியென்றால், பூர்வத்தில் சந்திரவம்சமகாராஜாவாகியஜனமேஜயமகாராஜாவானவர் மந்திரிபிரதானிகள் முதலியசேனைகளும்புடைசூழத்தக்கதாகச் சகலசம்பிரமத்துடன் இரத்தின சிங்காதனத்திற்கொலுமுகமாக வீற்றிருக்கும்பொழுது அவரிடத்திற்குப்பரமபாகவதசிகாமணியாகியவேதவியாசர்சீஷரென்கிறஜயமுனீந்திரமகாரிஷியானவர் எழுந்தருளிவந்தார்-அப்போ தவரைக்கண்டு ஜனமேஜயமகாராஜாவானவர்சிங்காதனத்தை விட்டிறங்கி தண்டஞ்செய்து அவருக்கு அர்க்கியபாத்திய முதலான சகலோபசார மலர்பெய்துபூசைசெய்து ஓராசனங்கொடுத்து அதன்மேலெழுந்தருளப்பண்ணி அந்தமுனீஸ்பரரைப்பார்த்துச் சனமேயெமகாராசாவானவர் ஓசுவாமிஜயமுனீந்திரரேபூருவத்தில் எங்கள்பாட்டனை தருமராசாவானவர் அஸ்வமேதயாகஞ்செய்ததிவ்வியசரித்திரத்தைச்சொல்லி யருளவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்தார்-அதுகேட்டுச் சயமுனீந்திரரானவர் சந்தோஷப்பட்டுச்சொல்லுகிறார் ஓசனமேசயமகாராசனே-நீர்இப்போதுகேட்ட அஸ்வ

மேதயாக சரித்திரமானது வேதசாரமாகியமகாரகசியமாகியும்இருக்கிறது அதையாதாமொருவர் பஞ்சகரண சுத்தியாயிருந்து கேட்பாராகிலவர்கள் மூர்ப்பவத்திற்செய்துள்ளகோஹத்தி-பிர்மஹத்தி-ஸ்திரீஹத்தி-சிசுஅத்திமுதலான சகலபாவங்களும்நீங்கி யிம்மையிற்சகலபோக பாக்கியங்களையு மனுபவித்து கிருதகிருத்தியராய் மறுமையில்ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய பாதாரவிந்தங்களையும்பெருவார்களப்படிப்பட்ட புண்ணியசரித்திரத்தைச் சொல்லுகிறோம்நீகேட்பாயாகவென்றுசயமுனீந்திரர் தனது ஆசிரியராகிய வேதவியாசரைத்தியானஞ்செய்து சனமேசயமகாராசாவுக்குச் சொல்லத்தொடங்கினர்.

## கதையின்வரலாறு

அஃதெப்படியென்றால், கேளுமையா-சனமேசய மகாராசாவே முன்னேஉங்கள் பாட்டனை தருமராசனனவர் சுவரவர்களுடனேயதினெட்டுநாள்வரைக்கும் யுத்தஞ்செய்துஜயம்பெற்றுப்பட்டாபிஷேகரா யிருபத்தைந்துவருஷம்இராச்சியபரிபாலனஞ்செய்துவருகிறநாவில்ஒருநாள்தருமராசாவானவர் கொலுவாயிருக்கும்பொழுது அவரிடத்திற்குவேதவியாசமுனிவர்எழுந்தருளிவந்தார் அவரைக்கண்டுதருமராசாவானவர் எழுந்திருந்து அவருக்குப்பூசைநமஸ்காரமுதலியஉபசாரங்களுஞ்செய்து அவரைஒரு ஆசனத்திலெழுந்தருளச்செய்து அவரைப்பார்த்து விண்ணப்பஞ்செய்கிறார் ஓசுவாமிஅடியேன்வெகுபிராகூஷயம்பண்ணி அதனால் வெகுபாவங்களைச் சம்பாதித்துக்கொண்டேனதுவுமல்லாமல் சவுரவஸ்திரீகள்எல்லாம் என்னேரமும்கூகாவென்று அழுதுக்கொண்டிருக்கிறார்கள் அந்தஅகோரத்தை என்னால் கேட்டுச் சகிக்கமுடியவில்லையல்லாமலும் சத்தியசந்தனராகியும்பரமபாகவதராகியும் பராக்கிரமசாலியாகியும்புண்ணியமூர்த்தியாகியும்எங்களைகிருபையுடனே வளர்த்துரட்சித்தவராகியும் விளங்கியவீஷ்டுமாசாரியனை இரணகளத்திலேபடுக்கவைத்தேன் அதுவுமல்லாமல்பெரியவராகியும் பூதபவுள்ளவராயும் அகண்டித வீரபராக்கிரமமுடையவராயும் வில்லுக்கு ஆசாரியராயும்அதிரதசிரேஷ்டராகியும்எங்களகுருசிகாமணியாகியும்விளங்கிய துரோணாசாரியரைக்கொன்றுவிட்டேன் அதுவுமல்லாமல் பிதாவாயிருந்தகனனைததமையனென்றுஎவ்வளவுமெண்ணாமல் இராச்சியபரிபாலன அபேக்ஷயினலேகண்டித்துவிட்டேன்-பின்னும் அண்ணன்தம்பிமாமன்மைத்துனன்உற்றார்பெற்றார்சினேகிதர்முதலானமற்றுமுள்ள ராசாக்களையுங்கொன்று வெகுபாவங்களைக்கட்டிக்கொண்டேன் ஆகையினல்சுவாமிஇந்தராச்சியவாஞ்சைமிகவுங்கெட்டது இதுயென்னராச்சியம் என்னசுகம்நான் இனிமேல்ஒருநிமிஷமாகிலும்இந்தராச்சியத்தைப்பரிபாலனஞ் செய்யமாட்டேன்ஆனபடியினல் இந்தராச்சியத்தையென் தம்பிமார்கையில்ஒப்பிவைத்துவிட்டு நானபரமபெவத்திரனுக்கு சாட்டுக்குப்போய்மரவுரி

டுத்திக்கொண்டுசெருகுசலபட்சணஞ்செய்துதபசுபண்ணிசகலபாவங்களையும்போக்கடித்துக் கிருதகிருத்தியனாகின்றேன் அதற்குதேவரீர் அனுக்கிரகம்பண்ணவேண்டுமென்றுதருமபுத்திராசாவானவர்விண்ணப்பஞ்செய்ய வியாசமுனிவர்கேட்டுப் புன்னகைகொண்டுதருமராஜாவைப்பார்த்துச்சொல்லுகின்றார்.

ஓ தர்மநந்தனா நானுனக்குளத்தனையாக்ச்சொன்னாலுந்தெளிவுண்டாகவில்லை துஷ்டனிக்கிரகமசிஷ்டபரிபாலனஞ்செயவதுராசதர்மமேயல்லாமல் வேறல்லஆனாலும்பூர்வத்தில்சூரியவம்சராசாவாகிய ஸ்ரீராமரானவர் இராவணாதிராக்ஷஸசம்மாரஞ்செய்து அந்தபாவங்கள்போகத்தக்கதாக அஸ்வமேதயாகஞ்செய்து புண்ணியதேகராய்க்கிருதகிருத்தியராய்ப்பூலோகத்திற் கீர்த்திபெற்றிருந்தாரவரைப்போல நீரும் அஸ்வமேதயாகஞ்செய்துசகலபாவங்களையும் போக்கடித்துக்கொள்ளும்இனிநீர்சந்தேகப்படவேண்டியதில்லைஎன்றுசொல்ல அதுகேட்டுதர்மபுத்திரர்சந்தோஷசித்தராய்ஓசுவாமிமுனிநாதரேதேவரீர் திருவாய்மலர்ந்தருளியபடியே அந்தஅஸ்வமேதயாகத்தைசசெய்வோமென்றால்அதற்குவெகுதிரவியஞ்செல்லுமேஅவ்வளவுதிரவியமெனக்குஎப்படிகிடைக்கப்போகிறதென்றுதர்மராசாவானவர் விண்ணப்பஞ்செய்யஅதுகேட்டுவேதவியாசர்சொல்லுகின்றார் ஓதர்மநந்தனாநீர் திரவியத்தைக்குறித்து அணுவளவும் விசாரப்படவேண்டியதில்லைமுன்புசூரியவம்மிசாதிபரான மருத்துமகாராசாவென்கிறவர்அஸ்வமேதயாகஞ்செய்துஅபரிமிதமாய்ப்பிராமணாளுக்கு வெகுதிரவியத்தைத்தானங்கொடுத்தார் அப்பொழுது அவர்கள் எடுக்கமாட்டாமல்அந்ததிரவியத்தை இமோர்பர்வதத்தண்டையில்போட்டுவிட்டுப்போனார்கள்அந்ததிரவியத்தைஇப்போது நீர எடுப்பித்துக்கொண்டுவந்துயாகஞ்செய்து முடிக்கலாமென்றுசொல்லஅதுகேட்டுதர்மராசாவானவர்சிந்தாக்கிராந்தராய்க்கிலேசப்பட்டுவேதவியாசரைப்பார்த்துச்சொல்லுகின்றார் ஓ சுவாமிமுனிநாதரேதேவரீர்நல்லகாரியஞ்செய்யச் சொன்னீர் இதுவுமொருநன்றாயிருக்கிறதோநாமுன்னையேபிராஜாசூயமபண்ணிஅந்தபாவத்தைப்போக்கடிப்பதற்குவழிகாணாமலிருக்கிறபோது பின்னையும்பிராமணாள் உடமையை அபகரித்துக்கொண்டு அந்ததோஷமுஞ்சம்பாதித்துககொள்ளவேண்டுமோ இப்படிக்கொத்தகாரியம்நானசொப்பனத்திலுஞ்செய்யமாட்டேனென்று தர்மபுத்திரர்சொல்லஅதுகேட்டு வேதவியாசர்சொல்லுகிறார்.

ஓதர்மதயாநிதி நாம்பாவத்துக்குஅனுகூலமானகாரியஞ்சொல்லுவோமோஅப்படிஒருக்காலும் நீர்நினைக்கவேண்டாம் அந்தமருத்து காராசாஅஸ்வமேதயாகஞ்செய்துஅனேகமாயிரம் பிராமணர்க அவ்வவர்கள்ஆசைதணியத்தக்கதாகவெகுதிரவியத்தைத்தா ங் ரள நிக்கும்போது அந்தப்பிராமணர்களெல்லாம் வெகுசந்தோ

னே தானம்வாங்கிக்கொண்டுஎடுக்கமாட்டாமல்மெத்தவுந்தாபந்திரிய
ப்பட்டு அவர்கள்சுமக்கத்தகுந்ததிரவியத்தை எடுத்துக்கொண்டுமிச்ச
மானதிரவியததைஇமோர்பர்வதத்தண்டையில் கும்பலாய்ப் போட்டு
இந்ததிரவியத்தை எவர்கள்கண்டாலும் அவர்கள்சுகமாய் எடுத்துக்
கொண்டுபோகக்கடவர்களென்று சொல்லிப்போய்விட்டார்கள்அது
வுமல்லாமல் பூமியிலிருக்கிறபொருள்கள தர்ம ராசாக்களுக்கென்று
வேதத்திற்சொல்லியிருக்கிறது ஆகையினால்நீர்ஒன்றுக்கும்யோசனை
பண்ணாமல் அந்ததிரவியத்தைஎடுப்பித்துக்கொண்டுவந்துயாகஞ்செ
ய்யுமென்று சொல்ல அதுகேட்டுதர்மராசாவும்அப்படியேநல்லதென்
றுசம்மதித்து ஓ முனிசிரேஷ்டரே அந்த அஸ்வமேதயாகஞ் செய்கிற
விதம்எப்படிஅதைநன்றாய் எனக்கு தெரியச்சொல்லவேண்டுமென
று விண்ணப்பஞ்செய்ய அதற்குவேதவியாசபகவானானவர் தர்மரா
சாவைப்பார்த்துச்சொல்லுகிறார்கேளுமையா தர்மநந்தனா அஸ்வமே
தயாகஞ் செய்கிறவிர்த்தாந்தத்தை சொல்லுகிறோம்என்னவென்றால்
அந்தயாகத்துக்கு தகுந்தகுதிரையானதுசரீரமுழுதும்வெளுப்பாகவு
வால்கறுப்பாகவும்கழுத்தும்வயிறுங் குங்குமநிறமாகவும் இடதுகாது
பச்சைநிறமாகவும்வலதுகால் மஞ்சள்நிறமாகவும் உதடுபவளம்போ
லாகவும் இருக்கவேணும் இப்படிக்கொத்தசுபலக்ஷணமுள்ளஅஸ்வத்
தைக்கொண்டுவந்துஸ்நானம்பண்ணுவித்து பூசைசெய்து மந்திரபூர்
வகமாய்த் தோத்திரம்பண்ணிமந்திரஆவாகனஞ்செய்து யாககுண்ட
த்தைப்பிரதட்சணம்பண்ணி உம்முடைய பிரதாபசௌரியத்தைஒரு
பொற்பட்டத்தி லெழுதிஅந்தபட்டத்தை அஸ்வத்தினுடைய நெற்றியி
லேகட்டிபிற்பாடு கந்தபுஷ்ப அக்ஷதைகளால்மந்திரபூர்வத்துடன்அ
ந்த அஸ்வத்தைப்பூசித்துப் பிராமணர்களுககு அனேகதானங்கொடு
த்துஅந்த ஒருவருஷபரியந்திரம் பூமிப்பிரதட்சணம் பண்ணுவித்து
அங்கங்கேயெதிர்ததுவந்தராசாக்களை எல்லாஞ்சங்கரித்துச்சயம்பண்
ணிகுதிரையைநடப்பித்துக்கொண்டுவந்து யாககுண்டத்தில்மந்திரபூ
ர்வகத்துடன் யக்கியம்பண்ணிதேவர்களுககெல்லாம் அவிர்ப்பாகங்க
ளைக்கொடுத்து அந்தயாகஞ்செய்கின்ற பிராமணர்களுககுத் தானங்
கொடுக்கவேண்டும் அஃதெப்படியென்றால் ஒவ்வொருவருக்குஆனை
யொன்று குதிரைமூன்று தோஏழு-காலாள ஒன்பதுஸ்ரீகள்நாலுத
ங்கம் ஒருபாரம் இந்தப்பிரகாரம்கொடுத்து மகாகீர்த்திப் பிரகாசத்
தைப் பொருந்துமென்றுசொல்ல அதுகேட்டுதருமபுத்திரர் சிந்தாக்
கிராந்தனாய் விசாரப்பட்டு வேதவியாசரைப்பார்த்துச சொல்லுகின்
றார்ஓ முனிந்திர நன்றுசசுது அஸ்வமேதக்குதிரையைப் பிடித்துக்
கொண்டு எந்தவரசர்களாவது எதிர்த்தால் அவ்வரசர்களுடனேபோ
ம்படி சொன்னீரே அப்படிப்பட்ட பிரஜக்ஷயமாய்க் கடும்
ஞ்ஞ னமாயிருக்கிற காரியம நான்செய்யப் படுவேனோ எனக்
மேல் ஜாக்ஷயமெனகிற காரியத்தைநினைக்கிலுமசரீரம்நடுங்கிறது
ட்டே விசாரமாயிருக்கின்றது ஆகையால்நான் எந்தவிதமாக இந்தஅ

ஸ்வமேதயாகத்தைச் செய்துமுடிப்பேன் சொல்லுமையா வென்று விண்ணப்பஞ்செய்ய அதுகேட்டுவேதவியாசர்சொல்லுகின்றார்.

ஓ தர்மநந்தனா நீர் அடிக்கடி இப்படிச்சொல்லவேண்டாம் நாம் கட்டளையிட்டபடி நீர் அந்தயாகத்தைச்செய்துமுடித்தால் பிர்மஹத்திமுதலான எவ்வகைப்பட்ட மகாபாவங்களும் சூரியனைக்கண்டபனிபோலநீங்கிப்போம் இதுவல்லாமல் ஸ்ரீஅகிலாண்டகோடிபிர்மாண்டநாயகராகிய கிருஷ்ணதேவரிருக்கும்போ தும்முடைய காரியம்அனுகூலமாகாமற்போகுமோ அந்தகிருஷ்ணமூர்த்தியே புண்ணிய பாவங்களுக்குக்காரணமானவர் ஆதலாலவருடைய அனுமதியினாலே இந்தயாகத்தைச்செய்து நிறைவேற்றுமென்ற வேதவியாசர்சொல்லஅதுகேட்டுதர்மபுத்திரரானவர் அந்தயாகத்திற்குத் தகுந்தகுதிரை எவ்விடத்திற் சம்பாதிக்கப் போகிறேனென்று சொல்ல அதுகேட்டு வேதவியாசர் சொல்லுகிறார்

ஓ தர்ம்மநந்தனா அஸ்வமேதயாகத்திற்குத் தகுந்தகுதிரையானதுபத்திராவதி பட்டணத்தையாளுகிற எவ்வனாசுவமகாராசாவினிடத்தில் இருக்கின்றது அதைஉபாயமாகக்கொண்டுவரவேண்டும் அந்தராசாவுக்குப் பத்து அக்குரோணி சேனைகளிருக்கின்றது அதுவுமல்லாமல் அந்தராசன் மகாவீரதிவீரன் விஷ்ணுபத்தியுடையவன் அப்படிப்பட்ட மகாபுருஷனிடத்திலிருக்கிறகுதிரையை எப்படியாவது அழைப்பிக்கவேண்டுமென்றுசொல்ல அதுக்கேட்டுதர்மராஜரவானவர் சந்தோஷசித்தராய் இதற்கெப்படியென்று ஆலோசனை செய்யும்போது அந்தக்கொலுவி லிருக்கின்ற மகாவீரபராக்கிரமசாலியாகிய வீமசேனன் சொல்லுகிறான் ஓ அண்ணா தர்மநீதி அடியேன்சொல்லுகின்றவிண்ணப்பத்தைக்கேளும் அஃதென்னென்றால் அந்தஎவ்வனாசுவனுடைய புஜபலபராக்கிரமமு மவனுடையசேனைகளின்பிரதாபமும் எம்மாத்திரமென்றுயோசிக்கின்றீர் அவர்களையெல்லாம் என்னுடைய கதாயுதத்துக்கிரையாகும்படி ஒருநொடியில் நுறுங்கடித்து அந்தராசனைக்கெலித் தவனிடத்திலிருக்கிற அந்த அஸ்வமேதக்குதிரையை நானேபோய்கொண்டுவருகிறேன் என்னுடைய பராக்கிரமத்தைப்பாரும் அப்படிச்செயம்பெற்று அந்த அஸ்வத்தைக்கொண்டு வராமற்போவேனாகில்மாதாபிதாக்களைத் தூஷித்தபேர்களபோகின்ற பாவத்திலேயும் குருத்துரோகந் தெய்வத்துரோகஞ்செய்தவர்கள் போகிறபாவத்திலேயும் போவேனென்று மகத்தாகிய சபதஞ்செய்தான் அதுகேட்டுதர்மபுத்திரர்மனங்கலங்கி ஓ வீமசேனாநீகொஞ்சமாகிலும் எதிரினுடைய பலாபலங்களை யோசிக்காமல் இப்படியாகப்பதறி சபதஞ்செய்யலாமோ அந்தராசன் அதிகபலாட்டியன் அதுவுமல்லாமல் (ஜயாபஜயம்) ஒருவர்பங்கல்லவே அப்படியிருக்க நீ இப்படிச் சபதஞ்சொல்லி விட்டாயே இதற்குஎன்ன செய்யலாமென்று தர்மராசாவானவர் யோசிக்கும்பொழுது அதுதெரிந்து கர்ணகுமாரனாகிய விஸ்வகேது சொல்லுகிறான் ஓ ஐயா ராஜசேகரரே

கள் இப்படியோசிக்க வேண்டுமோ அந்தராசன்பேரில் என்னே அனுப்பிவையுங்கள் என்சிறிய தகப்பனுகிய வீமசேன மகாராசனே அப்புறமவைத்துவிட்டுநான் ஒருவனுகத்தனித்துப்போய்ப்பிரசண்டயுத்தஞ்செய்து அந்தராசனேயும் அவனுடைய ரதகஜதுரகபதாதிகளேயுஞ் சின்னப்படுத்திவிட்டுஜயலட்சுமிசமேதமுய்ச்செயபேரிகைமுழங்கத்தக்கதாக அந்தஅஸ்வத்தைக்கொண்டுவருகிறேன் என்சமாத்தியத்தைச் சற்றேபாருங்களென்றுசொல்ல அதுகேட்டு தர்மராசாவானவர் விசாரப்பட்டுஒருமாரகா புத்திராதநமேநாங்களுன்னே யுத்தத்துக்கனுப்பிவிக்கிறது கர்மமல்லவே நீசிறுபிள்ளையாச்சுதே உன்னேச்சகல போகபாக்கியங்களேயு மனுபவிக்கச்செய்வதும் நல்லஎவ்வர்ன்னஸ்திரீகளேகூடி லீலாவினேதமா யிருக்கச்செய்வதுவுமல்லாமல்உன்னே யுத்தமுகத்திற் கனுப்புவதுநியாயமல்லவே இதுவுமல்லாமல்உன்தகப்பனுகிய கன்னனேத்தமையனென்று அறிந்துக்கொள்ளாமல் அர்ச்சுனன்கையில் கொல்லும்படிசெய்தேனந்தத்துக்கமே இன்னமும் பொறுத்து முடியாமல்உன்னேப்பார்த்துப்பொருத்திருக்கிறேன்நீசண்டைக்குப்போகவேண்டாமென்று சொல்ல அதுகேட்டுவிஸ்வகேதுசொல்லுகிறுன் ஒஐயா நீர்இப்படிசந்தேகப்பட வேண்டாம் என்னுடைய தகப்பனுகிய கன்னன் நடுவுநிலமையாகியதர்மத்தைவிட்டுஅதர்மத்திற்குஉட்புகுந்துதுன்மார்க்கனைதுரியோதனுதிகளுடன்கூடிக்கொண்டு உங்களுக்குவெகு ஊபத்துகளுண்டாக்கினபடியால் இரும்புடனேகூடின நெருப்புக்கும் அடிபடும் என்பதுபோல கன்னனும் மடிந்துபோனுன் அதற்கு நீங்கள் ஏன்விசனப்படுகிறீர்கள் அப்படிவிசனப்படாமல் எனக்கு சண்டைக்கு அனுமதிபண்ணி அனுப்பிவையுங்கள் உத்தமக்ஷத்திரியராகப்பிறந்துசண்டைக்குப்பயப்படுவார்களோ நீங்கள்ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம்என்சௌரியபராக்கிரமத்தை நீங்களே சொல்லப்போகிறீர்களென்றுசொல்ல அதுகேட்டு தர்மராசாவானவர்சமம்தப்பட்டிருக்கும்போதுவீம சேனன்பேரனும் கடோர்க்கஜன்குமாரனுமாகிய மேகவர்னன்சொல்லுகிறுன்,

ஒ பாட்டா தருமசுகிபா என்னுடைய விண்ணப்பத்தைக்கேளும் எங்களபாட்டன் வீமசேனனும்விஸ்வகேதுவும அந்தராசாவின் சேனேகளுடனே போராடி யுத்தம்பண்ணுகிறபோதுநான் என்னுடையராட்சதமாய்கைகளேயுண்டாக்கி ஒருவருக்குந்தெரியாமல பட்டணத்திற்புகுந்து அந்தஅஸ்வத்தைப்பிடித்துகொண்டுஇவவிடத்துக்கு வருகிறேன்ஒசுவாமிஎனக்குச செலவுகொடுமென்று இரண்டுகைகளேயுங்கட்டிக்கொண்டு பத்திவிநயத்துடனேகேட்க அதுகேட்டு தர்மராசா ஆச்சரியப்பட்டு ஒமேகவர்ன்ன நீசிறுபிள்ளைநீபோகவேண்டாம் குதிரைவேண்டுமானல் வீமசேனனும்விஸ்வகேது மேல்போகிறுர்கள்நீசுகமாய்சகலசவுக்கியங்களேயு யனுபவித்துக்கொண்டேயிருவென்றுசொல்ல அதற்குமேகவர்ணன் நகைத்து பாட்டனு

கிய தர்மராஜாவுக்கு நமஸ்காரம்பண்ணி எப்படியும்நான்போகவேணு மென்று அனுமதிபெற்றுக்கொண்டானப்போது சூரியாஸ்தமானமா ச்சுது அதுகண்டுவேதவியாசர் சந்தியானுஷ்டானக் கிரியைகளை முடி த்துக்கொள்ள வேண்டி தம்முடைய ஆசிரமத்துக்கு எழுந்தருளி னார் அப்பொழுது தர்மராசாவானவர் வீமன் அர்ச்சுனன் நகுலன்சகாதே வர்களுடனும் மந்திரிகளுடனுங் கொலுவைவிட்டுஎழுந்திருந்துபோய் சந்தியானுஷ்டான சபதங்களைமுடித்துக்கொண்டு மறுபடியும் வந்து சகலசேனைகளும் புடைசூழத்தக்கதாக கொலுவாயிருந்து தர்மராசா வானவர் தன்னைவியாசபகவான்அஸ்வமேதயாகம் பண்ணச்சொன்ன தும் தான் சம்மதித்ததும் எவ்வனாசுவன்பட்டணத்துக்குவீமசேன ன்விஸ்வகேது மேகவர்ணன் இவர்கள்போகிறோமென்று சொல்லிய வார்த்தையையும்நினைத்து இதுவெல்லாம் அசாத்தியமானகாரியமாக விருக்கின்றது இதற்கென்னசெய்யலாம் இவைகளுக்கெல்லாம்கிருஷ் ணமூர்த்தி யிருக்கிறாரென்றுஅவரை மனதிலேதியானித்து ஓ கிருஷ் ணா துவாரகாபுரிவாசாவாசுதேவா தேவகிநந்தனா கோவிந்தா அரிகரி கோபாலா அனாதரட்சகாஆபத்பாந்தவா ஓ சுவாமியென்றுஅநேகவித மாய்க்கொண்டாடி அர்ச்சுனனைப்பார்த்துச் சொல்லுகிறார் ஓ அர்ச்சு னா நீ காலமே துவாரகாபுரிக்குப்போய் நமதுகுருசுவாமியாகியகிருஷ் ணதேவரை அழைத்துக்கொண்டுவா நமக்கு அவரையல்லாமல்ஒருகா ரியமும நடவாதென்று சொல்ல அப்படியேநல்லதென்று அருச்சுன ராசனும் சம்மதித்திருக்க அந்தச்சமயத்தில் வாசல்காக்கிற தலையாரி கள்வந்து தெண்டனிட்டு ஓ ஐயாராசேந்திரராசமார்த்தாண்டராச கெம்பீரா அதோ அரண்மனைவாசலில் லோககர்த்தாவாகிய கிருஷ்ண தேவர் வந்திறங்கி அரண்மனைக்குவரலாமாவென்றுகேட்கச்சொன்னா ர் அந்தச்சேதி தேவரீர்சித்தமறியவேண்டுமென்று விண்ணப்பஞ்செ ய்துநிற்க அதுகேட்டு தர்மநந்தனர்ஆனந்தசமுத்திரத்தில்மூழ்கினவ ராய்த்திடுக்கென்றெழுந்திருந்து தம்பிமாருந் தானுமாக எதிர்கொண் டுபோய் மிகுந்த தரித்திரனுக்குத் திரவியநிட்சேபத்தைக்கண்டால் எ வ்வளவு அபேக்ஷையிருக்குமோ அவ்வளவு அபேக்ஷையாய் அரண்ம னைவாசலில வந்துநிற்கிறகிருஷ்ணபகவானைக்கண்டு ஓ புண்டரீகாக்ஷா ஓ சுவாமி உமக்குக்காவலுண்டோ என்லோகனடனஞ்செய்கிறீரென் று சொல்லஅதுகண்டு கிருஷ்ணதேவர்தர்மராசாவுக்குசாஷ்டாங்கதெ ..நிட்டார் அப்பொழுது தர்மராசாவும் கிருஷ்ணமூர்த்தியை எடுத் மார்போடணைத்துக்கொண்டார் வீமசேனனுங் கிருஷ்ணதேவருந்த ..க்கொண்டார்கள் அருச்சுனன்-நகுலன்-சகாதேவன்- இவர்கள்மூ ..ம்கிருஷ்ணதேவரைஅழைத்துக்கொண்டுவந்துஅரண்மனையிற்புகுந் ..ாலுவில்உட்கார்ந்தார்கள்அப்போதுஅந்தப்புரத்திலிருந்ததிரௌ ..பம்மன்வந்துகிருஷ்ணதேவருக்குத்தெண்டனிட்டு ஓ அண்ணா தே

வமிநந்தனுவந்திர்களோ முன்னாலேஎன்னைத்துரியோதன னவன் அந்தராஜசபையில் அவன்தம்பியாகிய துற்சாதனனைவிட்டுமானபங்கஞ் செய்யும்போது அக்ஷயமாகக் காத்திரக்ஷித்த மகானுபாவாசுவாமியென்று விண்ணப்பஞ்செய்ய அதுகண்டு கோபாலசூடாமணியாகியகிருஷ்ணபகவான்சொல்லுகிறார்ஓஅம்மாபுண்ணியவதிஉன்னுடையபதிவிரதாதர்மத்தினாலும் தர்மநந்தனனுடைய சத்தியத்தினாலும் ஒருகுறைவுமில்லாமல்துவாரகையில் எல்லவரும் சுகமேயிருக்கிறார்கள் என்னாலொருகாரியமுமில்லை தர்மராசாவினுடைய அனுக்கிரகத்தினாலே சகலஆத்மகோடிகளும் ஆனந்தமுண்டாச்சுது அம்மாஇனிநீ அந்தப்புரத்துக்குப்போம் இங்கேயிருக்கவேண்டாமென்று சொல்ல அதுகேட்டு திரௌபதியும்ஓ அண்ணாருக்மணிமனோகரா இவ்விடத்தில்தலைமயனாகியதாமும் என்புருஷருமல்லாமல்வேறே எவர்களுமில்லையே நானிருந்தால்தான் என்னவென்று சொல்ல அம்மா நீ இந்தச்சபையிலிருக்கவேண்டாமென்று திரும்பவுங் கிருஷ்ணதேவர் சொல்லியருளினார்அதுகண்டு திரௌபதியும் அப்படியேநல்லதென்று அந்தப் புரத்திற்குப்போனாள் பின்பு தர்மராசாவானவர் கிருஷ்ணதேவரைப்பார்த்துஓ கபடநாடக சூஸ்த்ராவதாரீ ஓ கிருஷ்ண நானிப்பொழுது அருச்சுனனுக்குத் துவாரகைக்குப்போய்தங்களை அழைத்துக்கொண்டுவரும்படிகட்டளையிட்டேன் அதற்குள் தேவரீரும் வந்துவிட்டீரென்றுசொல்ல அதுகேட்டு கிருஷ்ணமூர்த்தியும் தர்மராசாவைப் பார்த்து ஓ ராசேந்திரா நம்மைப்பற்றி ஏதாகிலுங் காரியமுண்டோசொல்லுமென்றுகேட்கதர்மபுத்திரர்சொல்லுகிறார் ஓ பரமபுருஷாதேவாதிதேவாவேதவியாசர்இவ்விடத்திற்குஎழுந்தருளிவந்து என்னைஅஸ்வமேதயாகஞ்செய்து பாவங்களைப் போக்கடித்துக்கொள்ளுமென்று அதற்கு திரவியம்வேண்டுமென்று நான்சொன்னதற்கு மருத்துமகாராசா யாகம்பண்ணி அந்தயாகத்தில் பிராமணர்களுக்கு தக்ஷிணைகொடுத்தார்அவர்கள் அந்ததிரவியத்தைச் சுமந்துக்கொண்டு போகமாட்டாமல் இமோற்பர்வதத்தண்டையில் போட்டுவிட்டுப் போனார்க ளதையெடுத்துக்கொண்டுவந்து செலவுபண்ணுமென்றும் அஸ்வமேதயாகத்திற்குத் தகுந்தஅஸ்வமானது எவ்வர்ணசுவமகாராசாவினிடத்தி லிருக்கின்றது அதையழைப்பியுமென்றுஞ் சொல்லிப்போனார் பின்பு வீமசேனனந்த அஸ்வத்தைக் கொண்டுவருகிறே னென்றுசொல்லிச்சபதங்கூறினான் ஆகையால் இதுகளுக்கெல்லாம் தேவரீரே..ல்லாமல்ஒருஅணுவாகிம் அசையமாட்டாதென்று நினைத்து தங்களை அழைத்துக்கொண்டு..ரச் சொன்னேன் சுவாமி யென்று சொல்ல அதுகேட்டு கிருஷ்ண..கவானும் புன்னகைகொண்டு தலையையசைத்து சற்றுநேரம்யோசனை..ஞ்..ண்ணி இந்தயாகத்திலே நமது காரியமெல்லாம் நிறைவேற வேண்..மேல்..ல்லவோவென்று மனதில்நினைத்துக்கொண்டுஅந்ததேவனானவர்..ட்டு கமானது கர்ச்சித்தாப் போல் ஒருவசனஞ் சொல்லுகிறார் ஓ தர்ம..ந்தன நீங்கள் சத்ருவிலும் நமதுபலத்தையுமூமாற்றானுடையபலத்..

யும் எண்ணிச்செய்கிறதில்லை அந்தவியாசருக்கும் வேலையில்லை தேவ
ர்கள் முதலானவர்களுக்கும் அசாத்தியமானகாரியத்தைச் செய்யும் ப
டிசொல்லிப்போனார் அப்படியானாலும் இந்தவீமசேனன் முன்னும்பி
ன்னும், யோசிக்காமல் பதயி எவ்வர்ணுசுவன வசத்தி லிருக்கிறகுதி
ரையைக்கொண்டுவருகிறேனென்று எப்படிசபதங்கூறினான்அந்தஎவ
ர்ணுசுவனுக்குப் பத்து அக்குரோணிசேனைகளிருக்கின்றது அவனோச
த்தியசந்தன் வீராதிவீரன் விஷ்ணுபக்தன் அவனைசெயிக்க எனக்குக்
கூடசயிக்கியமல்லவேபுலியின்வாயில்அகப்பட்டமாமிசந்திரும்பவும் ஒ
ருவருக்குக்கிடைக்குமோ நீங்கள் என்றைக்கும் இப்படிதான் முன்பி
ன்எண்ணிப்பாராமல் யோசனைபண்ணுகிறீர்கள் முன் பாரதயுத்தத்தி
லே இந்தஅர்ச்சுனன் சயிந்தவனைக் கொல்லுகிரேனென்று சபதங்கூறி
அதனால் எத்தனை ஆபந்துவந்தது அதுவுமல்லாமல் இந்தயாகஞ்செய்
வது கொஞ்சத்திலில்லை முன்புஸ்ரீராமர் அஸ்வமேதயாகம்பண்ணவே
ண்டுமென்று ஆயுத்தப்பட்டுகுதிரையைவிட்டா ரந்தக்குதிரையைச்சு
ரதனென்கிறராஜன் பிடித்துக்கட்டிவிட்டுஅதன்பிரகேவந்தஅனுமார்
சுக்ரீபன்முதலான இரண்டுவெள்ளஞ் சேனையுஞ் சின்னபின்னப்படுத்
தித் துரத்திவிட்டான் அதுகேட்டு ஸ்ரீராமரானவர் வெகுசேனாசமுத்
திரத்தினுடனே அந்தராசாவையெதிர்த்துவெகுபிரயாசமடைந்துஅவ
னைச்செயித்து அந்தக்குதிரையைக் கொண்டுவந்து பின்பு அந்தயாகத்
தைச் செய்துமுடித்தார் அப்படிப்பட்டமகானுபாவனுக்கேசக்கியமா
னாதகாரியம் உங்களுக்குச் சக்கியமாகுமோ பூமியில்அனந்தமாயிரபல
சாலிகளான அரசர்களிருக்கிறார்கள் அவர்களையொருவராலுஞ்செயிக்க
கமுடியாது அதுவுமல்லாமல் பூலோகத்தில் எந்தராசன் அஸ்வமேத
யாகஞ்செய்கிறானோ அந்தக்குதிரையைக்கொண்டுபோவோமென்றுநி
னைத்து தேவேந்திரன் இருந்துகொண்டேயிருப்பான் இதுகளில்யாக
ஞ்செய்து நிறைவேற்றுகிறது மெத்தவுங்கடினம் ஆனாலும்ஓ தர்மநந்
தனா நீ நினைத்தகாரியத்தை முடியாவிட்டாலும் ஆகாது இதற்கெப்ப
டியென்று ஸ்ரீகிருஷ்ணதேவர்அவ்வவர்களின்மனதைச்சோதிக்கும்படி
கேட்டருளினார் அதுகேட்டு தர்மபுத்திரர்சொல்லுகிறார்ஓ தேவகிநந்
தனா தேவரீர் எங்கள்மனதைச்சோதிக்கும்பொருட்டு கேட்டதேயல்
லாமல் நிசமாகக்கேட்டவார்த்தையல்லதேவரீர் மேருவைதுரும்பாக
ச்செய்வீர் துரும்பைமேருவாகச்செய்வீர் அப்படிப்பட்டநீர் நினைத்த
காரியம் நிறைவேறாமற் போகுமோ கபடநாடக சூஸத்ராவதாரியான
தேவரீர்கடாக்ஷம் எங்கள்பேரில் பூரணமாயிருக்கிறபோது அந்தயாகந்
தான் எவ்வளவு வீமசேனன்செய்த பிரதிக்கினைதான் எம்மாத்திரம்ஆ
கையால் இந்தப்பரியாசவார்த்தைகளை விட்டுவிட்டு என்கையினால்இந்
த அஸ்வமேதயாகம்பண்ணுவித்து என்னைப்பரமபவித்திரனாகச்செய்
வதுமன்றி இந்தவீமசேனன் பிரதிக்கினைபடியே குதிரையையும் அ
ழைப்பித்துக்கொடும் சுவாமியென்றுசொல்ல வீமசேனனும் ஓ கிரு

மிதேவரீரது கடாட்சவிட்சண்ணிய மிருப்பதினுலல்லவோ அப்படிச் சபதஞ்செய்து நிறைவேறுமற்போகுமோ எங்களை ஏன்இப்படிமிரட்டுகிறீரென்று பரிகாசமாகச்சொன்னான்அருச்சுனனும்ஓகிருஷ்ணதேவரீர் மச்சான்வரிசைகொண்டு இப்படிவிளையாடுகிறீரல்லாமல் உண்மையாகச்சொன்னசொல்லல்லவே ஆகையினால் பிர்மாநினைத்தால்ஆயுசுக்குக் குறைவுண்டோ வென்பதுபோல தருமபுத்திரர் நினைத்தகாரியத்திற்கு ஒருகுறைவுவருமோ ஒருக்காலும் குறைவுவருகிறதில்லை சுவாமியென்று சொன்னான், நகுலனும் சகாதேவனும் அப்படியேசொன்னார்கள் இதுகளெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திகேட்டு புன்சிரிப்புகொண்டு, சந்தோஷசித்தராய்ச் சொல்லுகிறார்;ஓ தருமனந்தனநான் உங்கள்மனதையறியவேண்டி இப்படிச்சொன்னேனல்லாமல் நீங்கள் நினைத்தகாரியம் முடியாமற்போகிரதில்லை நீஙகள் தருமசொரூபமாயிருக்கிறவர்கள் உங்களுக்கு ஒருநாளும்குறைவில்லைகுதிரைவருகிறதற்குவீமசேனனையனுப்பும் குதிரையின்பிறகே அருச்சுனனையனுப்பும் நீர்சுகமாயந்தயாகத்தைமுடியுமென்றுகிருஷ்ணதேவர்பரிபூரணதயவுடன்திருவுளம்பற்றியருளினார்அதுகேட்டு பாண்டவர்கள் சந்தோஷசமுத்திரத்தில் மூழ்கினார்கள்அப்போதுஅந்தப்புரத்திலிருந்த துரௌபதி வந்துபோசனத்துக் கெழுந்தருளவேண்டுமென்றழைத்தாளப்படியே கிருஷ்ணமூர்த்தியும் தர்மபுத்திரரும்வீமன்-அருச்சுனன்-நகுலன்சகாதேவர்களுடன் எழுந்திருந்துபோய்ஸ்நானானுஷ்டானகிரியைகளைமுடித்துக்கொண்டுபோசனஞ்செய்துகைகால்சுத்திபண்ணிக்கொண்டுவெகுசம்பிரமத்துடன் கந்தபுஷ்பபரிமளாதிகளணிந்துகர்ப்பூர முதலியபரிமளவஸ்துக்களோடுந் தாம்பூலந்தரித்துக்கொண்டுதர்மனந்தனரிடத்திற் செலவுபெற்றுக்கொண்டுகிருஷ்ணபகவான் நவரத்தினகசிதமாகிய சப்பிரகூடமஞ்சத்தின்பேரில் நித்திரைசெய்தருளினார் பாண்டவர்களும் அவ்வவர்கள் சப்பிரமஞ்சத்தின்பேரில் நித்திரைசெய்தார்கள்அதன்பின்புசூரியபகவானும் திருடர்களைவெளிப்படுத்தவும் சோரஸ்திரிகளைப்பங்கப்படுத்தவும் சகலசீவகோடிகளுக்கும் ஆனந்தமுண்டாகவும்கிழக்குத்திசையிலுதயமாகினார் அப்பொழுது ஆகாயத்திற்றோன்றுகிறநட்சத்திரங்கள்மறைந்துவிட்ட துதடாகங்கள்தோன்றும்நிறைந்துள்ளதாமரைப்புஷ்பங்களெல்லாம்மலர்ந்துஇப்படி சூரியனுதையமாகுமுன்னே சங்கிதசாகித்தியவித்துவசனங்கள்முதலானவர்களும்கூட்டமாகக்கூடிக்கொண்டுநவரத்தினமயமாகியசப்பிரகூடமஞ்சத்தின்பேரில்சயனித்திருக்கிற கிருஷ்ணதேவரிடத்திற்குவந்து தங்கள்தங்கள்வித்தைகளை ஏற்பாடுசெய்துதும்புருவீணையாழ்ராவணஸ்தமுதலியகருவிகளில் சுதிகூட்டிக்கொண்டு முப்பத்திரண்டுராகங்களாலும் அவைகளுக்கிசைந்த வர்ணசுரங்களாலும் திருப்பள்ளியெழுச்சியென்னுந்திருப்பாசுரங்களாலுந் தோத்திரஞ்செய்து நித்திரையெழுப்புகிறார்கள்அஃதெப்படியென்றால் ஓ துவார்காபுரிவாசா தேவரீர்நந்தனனெழுந்திருளும்

பூதகியென்கிற ராட்சசிமுலையையுண்டு அவளுடைய பிராணனை உறிஞ்
சிக்கொண்டு அவளுக்குவைகுந்தங்கொடுத்த ஸ்ரீகிருஷ்ண எழுந்தருளு
ம்(சகடாசுரனென்கிறராட்சதன்)தம்மைக்கொல்லவந்தானென்றறிந்
து அவனைத்திருவடிகளாலுதைத்துச் சங்கரித்தகோவிந்தா எழுந்தரு
ளும்கோபாலர்கள்வருஷத்திற்கொருதரம்தேவேந்திரனை நோக்கிப்பி
ரிந்தாவனத்தில்பொங்கலிட்டுக்கொண்டுவரும்போது அந்தநியமத்தை
த்தவிர்த்து கோவர்த்தனகிரிக்குபொங்கலிட அதற்கு தேவேந்திரன்
கோபித்துக்கொண்டு கல்மழைவருஷிக்க அதுகண்டுகோவர்த்தனகிரி
யையேந்திக்குடையாகப்பிடித்து அவர்களைக்காத்துரட்சித்தகோபால
சூடாமணி எழுந்தருளும்தேனுகாசூரன-மகாசூரன்முதலான அனேக
ராக்ஷதவீரர்களைச்சங்கரித்தபுண்டரீகாக்ஷா எழுந்தருளும் வாணாசு
ரனானவன் தம்மையெதிர்த்துவர அவனுடனே தேவரீர்போராடிச்சக்
கரத்தினால் அவனது ஆயிரங்கைகளையும் துண்டந்துண்டமாகக்கண்டிக்
கிறபோது ஸ்ரீகைலாசபதியான (சாம்பவமூர்த்திவந்து) ஸ்ரீகிருஷ்ண இ
வன்நம்முடையபக்தன இவனை ரட்சிக்கவேண்டுமென்று வேண்டிக்
கொண்டபடியினாலே அவனைநாலுகைகளையும் இரண்டுகாலுமாக வி
ட்டு இரட்சித்த கமலனேத்திரா எழுந்தருளுமென்று தோத்திரஞ்செ
ய்தபொழுது அந்தகிருஷ்ணபகவானானவர் நித்திரைதெளிந்து எழு
ந்தருளி வெளியேவந்து காலோசிதமான நித்தியகருமங்களை முடித்
துக்கொண்டு தர்மபுத்திரருந்தாமுமாக ஸ்நானானுஷ்டான கிரியைக
ளைமுடித்துப்போசனஞ்செய்துகைகால் சுத்திபண்ணிக்கொண்டு கந்
தபுஷ்பபரிமளாதிகளையணிந்து தாம்பூலம்தரித்துக்கொண்டு திவ்விய
வஸ்திராபாணங்களை யலங்கரித்துக்கொண்டு தருமராசாவுந்தாமுமா
க ஆஸ்தானபண்டபத்துக்குவந்து ஸ்ரீகிருஷ்ணபகவான் நவரத்தின
கசிதமான பொற்பீடத்தின் பேரில் உட்கார்ந்தருளினார் தருமபுத்திர
ருந் தங்கமயமான ஒருசிங்காதனத்தில் உட்கார்ந்தார் அருச்சுனன் ந
குலன்-சகாதேவன்-சாத்தகி-கிருதவர்மமன்- சஞ்சயன் விதுரன் கி
ருபாசாரிமுதலானவர்களும் மந்திரிமுதலிய சகலமானபேர்களும்வந்
து தருமபுத்திரருக்கும்- கிருஷ்ணமூர்த்திக்கும் நமஸ்காரம் பண்ணி
அவ்வவர்கள் ஸ்தானத்தில் உட்கார்ந்தார்கள்.



வீமசேனன் அஸ்வமேதக்குதிரை கொண்டுவர
விடைபெற்று ஏகுதல்.

வீமசேனனும் விஸ்வகேதுவும் மேகவர்ணனும் போசனஞ் செய்
து யுத்தசன்னத்தராய்வந்து தருமபுத்திரருக்கும் கிருஷ்ணமூர்த்தி
க்கும் நமஸ்காரம் பண்ணி ஸ்ரீ கிருஷ்ண ஜனார்த்தன எங்களுக்கு
ச்செலவுகொடும் நாங்கள்குதிரையைக்கொண்டுவரப்போகிறோம் இ
ராத்திரிதானே தேவரீர்ஆலோசனைபண்ணி ஏற்பாடுசெய்தீர்களே மீ
றுபடியும் அதற்குஆலோசனையென்னவிருக்கிறது நாங்கள் பத்திரா
வதிப்பட்டணத்திற்குப்போய்வருகிறோம் தேவரீர் இங்கேதர்மபுத்
திரரையும் மற்றுமுண்டான பேர்களையும் பார்த்துக்கொள்ளும் அ

கே எங்களுக்கு ஜெயம்பொருந்தத்தககதாக அனுக்கிரகம்பண்ணி ர ட்சியுமென்றுசொல்லி ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில்விடை பெற்றுக் கொண்டுதாயாராகிய குந்திதேவியாரிடத்திற்குப்போய நமஸ்காரஞ் செய்து ஓ அம்மா நாங்கள் கிருஷ்ணபகவானுடைய அனுமதியினால் எவ்வர்ணுசுவன்பட்டணத்திற்குப்போய் குதிரைகொண்டுவரப்போ கிறோம் எங்களுக்குச்செயமுண்டாகத்தக்கதாக ஆசீர்வாதம்பண்ணு மென்றுசொல்ல அதுகேட்டு குந்திதேவியாருஞ் சந்தோஷகரமாய் (விஜையபவாவென்று) ஆசீர்வாதஞ்செய்து அனுப்பினைத்தாள் பி ற்பாடுவீமசேனன் திரௌபதியண்டைக்குப்போய் எங்களுக்குச்செ லவுகொடுநாங்கள் குதிரையைக் கொண்டு வரப்போகிறோ மென்று சொல்ல அப்படியே அந்தபதிவிரதாசிரோன்மணியும் போய்வாருங் களென்றுவிடைகொடுத்தனுப்பினுள்-அவ்விடம்விட்டுவீமசேனன்வி ஸ்வகேது மேகவர்ணன் இவர்கள்மூன்றுபேரும்அர்ச்சுனன் நகுலச காதேவர்களிடத்திலும் மற்றுமுள்ள பெரியோர்கள் சிறியோர்களிட த்திலும் சொல்லிசெலவுபெற்றுக்கொண்டு அஸ்தினுபுரத்தைவிட்டு புறப்பட்டு சிங்காரவனங்கள் பூஞ்சோலைகள்-கழிகள்-ஆறுகள்-மடுவு கள் இதுகளைத்தாண்டி காடுகள்-மேடுகள் வனங்கள்வனந்திரங்கள்கு ன்றுகள்-பர்வதங்கள்- சுனைகளகடந்துபோய அப்புறம்பத்திராவதிப ட்டணத்திற்குச் சமீபமாகவந்துதிவ்வியபரிமளம்வீசத்தக்கதாகவெ ண்டாமரை-செந்தாமரைகள் முதலிய புட்பங்கள்புட்பிதது ஆமைமு தலை மச்சங்கள்முதலான சகலசெந்துக்களும்சஞ்சரிக்கும்படிசமுத் திரம்போல விஸ்திரணமாக விளங்கப்பட்ட ஒருதடாகத்தைக் கண்டு அதனிடத்திற்போய்த் தங்கள்தாகத்தைத்தீர்த்துக்கொண்டுஅப்புறம ந்தத்தடாகதீர்த்தத்திலிருந்து பத்திராவதிப்பட்டணத்தைப்பார்த்து, வீமசேனன்விஸ்வகேதுவுடனேசொல்லுகிறான் ஒகுழந்தாய்விஸ்வ கேதாகண்டாயோ இந்தப்பட்டணத்தில் சிவாலயம்விஷ்ணுவாலயம் பிரமாலயமுதலிய கூடகோபுரங்களும் மாடமாளிகைகளும் தங்கமய மாக விளங்குகின்றது என்னேரமும்வெகுசம்பிரமாகப் பதினெட்டு மேளவாத்தியங்களு முழங்குகின்றது இந்தப்பட்டணத்திலுள்ளஜன ங்களெல்லாம் விஷ்ணுபத்தர்களும் சத்தியசந்தர்களுமாயிருக்கின் றார்கள் இதுவுமல்லாமல் இந்தப்பட்டணத்தையாளுகினறஎவ்வர்ணு சுவமகாராஜனும் பத்தக்ரோணி சேனைகளும் மந்திரிசாமந்திரிசளும் பிள்ளைகள்பேரன்மார் அண்ணன்தம்பிமார்களும்புடைசூழத்தக்கதா கச் சுகமாயிருந்து ராச்சியபரிபாலனம்பண்ணிக்கொண்டுவருகிறான், நாமிவனிடத்தி லிருக்கிற அஸ்வமேதக்குதிரையை எப்படி கா ண்போகிறோமென்று சொல்லி அந்தத் தடாகத்தின் விசித்திர ங்களை முழுதும் நன்றாய்ப்பார்த்து அங்கே காலடிகளைக் கண்டு பிடித்து பின்னுஞ் சொல்லுகிறான் ஓ விஸ்வகேதா மேகவர்ணு இதோ கண்டீர் களோ இந்தத்தடாகக்கரையைசுற்றிலும

சேனைகளுடைய அடிகளும் ஆனைகுதிரைகளுடைய அடிகளுமாகவிரு க்கின்றது இந்தப்பட்டணத்திற்குவேறேதூரவுகிணறுகளில்லையோ இ ந்தக்குளத்தினுடைய சலத்தைத்தானே சகலசனங்களும் கொண்டு போகிறுகள் அதோகுதிரைகளவந்து தண்ணீர்குடித்துப்போனகால டிகளைப்பார்த்தீர்களோ ஆகையினாலிந்தப்பட்டணத்து சனங்களுக்கு ம் ஆனைகுதிரைகளுக்கும் இந்தத்தண்ணீரையல்லாமல்வேறேதண்ணீ ரில்லை நாமிவ்விடத்தில்தானே ஒளித்துக்கொண்டிருந்தால் நாம்நினை த்துவந்தகுதிரையும் இந்தத்தடாகத்தில் தண்ணீர்குடிக்கவருமப்பொ ழுததன்பிறகேவந்தசனங்களைகண்ட தண்டஞ்செய்து குதிரையைக் கொண்டுபோவோமென்று ஆலோசனை செய்துக்கொண்டு அங்கே யொருபர்வதத்தின்பேரில்மூன்றுபேருமவ்விலொருகுகையிலேஒளித்து க்கொண்டிருந்தார்கள அப்பொழுதுபத்ராவதிபட்டணத்திலிருந்து அ நேகஆனைக்கூட்டங்களதும்பல்கும்பலாய்வந்து அந்தகுளத்தில்விழுந் துசலக்கிரீடைபண்ணி தண்ணீர்குடித்துப்பட்டணத்திற்கும்போய்வி ட்டதுகளபிற்பாடு அநேகமாயிரங்குதிரைகளும்பசுக்களுமவந்துதண் ணீர்குடித்துப்போய்விட்டதுகள அதுகண்டுவீமசேனனைப்பார்த்துவி ஸ்வகேதுசொல்லுகிறான்ஓஐயா வீமசேனா இந்தப்பட்டணத்திலிருந் துவேறேஅனேகயானைகளகுதிரைகளப்சுக்களமுதலானதுகளும்வந் துதண்ணீர்குடித்துப்போகின்றதுகளல்லாமல்நாம்நாடிவந்த குதிரை மாத்திரம்வரக்காணோம்ஆகையினாலவர்களந்தக்குதிரையையனுப்பா மல்அவ்விடத்தில்தானேகட்டிவைத்துக்கவளந்தண்ணீர்புல்முதலான துகளும்கொடுப்பிக்கிறதாகத் தோன்றுகிறதென்று சொல்லும்பொ ழுது அந்தக்கோட்டைவாசலைவிட்டுஅஸ்வமேதக்குதிரையானதுவெ ணசாமரைகள்வெளளைக்குடைகளபிடித்துவரத்தக்கதாகவும்ஈட்டிக் காரர் குதிரைக்காரர் ரதக்காரர்கள பின்னும் அனேகவீராதிவீரர்க ளாகியசேவகர்களுடனே வெளிப்பட்டுவருகிறதைக்கண்டு விஸ்வகே துசந்தோஷப்பட்டு ஓஐயா வீமசேனாஇதோநாம்நினைத்துவந்த குதி ரைவருகிறது இனி என்னுடைய சாமார்த்தியத்தை பாரும் தேவரீ ரிந்த மலையின்பேரிலிரும் நானந்த அஸ்வத்தைக்கொண்டு வருகிறே னென்றுசொல்ல அது கேட்டுவீமசேனன் சந்தோஷப்பட்டு ஓ அ ப்பாவிஸ்வகேதா நீ சற்றுநேரம் பொறுத்திருவென்று கையமர்த்தி மேகவர்ணனைப்பார்த்து ஓ மேகவர்ணா நீ உன்தகப்பனாகிய கடோ ர்க்கசனைப்பார்க்கிலும் அதிகமான ராட்சசமாய்கையறிந்தசாமார்த் தியனாச்சுதே எதேபார்ப்போம் அந்தக்குதிரையைக் கொண்டுவாவென் றுசொல்ல அதுகேட்டு மேகவர்ணனும் மகாசந்தோஷப்பட்டு உச் சாகத்துடனே எழுந்திருந்து ஐயா பாட்டா இன்றைக்கு என்னு டைய வல்லமையைப்பாரும் ஒருவனாயு மதிக்காமல் குதிரையைக் கொண்டு வருகிறேன் நீங்களிங்கேதானே யிருங்கோளென்று சொ ல்லிவிட்டு தன்தகப்பன் கடோர்க்கஜன் சொன்ன சாம்ப

சியென்றிராட்சசமந்திரத்தைச் சபம் பண்ணினான் அப்பொழுது அந்தமந்திரசத்தியினாலே காரூடமேகக்களுண்டாகி எங்கேபார்த்தாலுங்கன்னங்கரேலென்று இருட்டிக்கொண்டு அந்தச்சமயத்தில் மேகவர்ணனும்ஆகாசமார்கத்திலெழும்பி குடுகுடுவென்றுசிங்கநாதத்தை அட்டகாசம்பண்ணிக்கொக்கரித்தான் அந்தசத்தத்தினா லேதிரிலோகத்திலுள்ளவர்களும் பயந்தார்கள் அப்போது தேவேந்திரன் திகிலடைந்துதேவகுருவாகிய (பிரகஸ்பதியை) அழைத்துஆலோசனைசெய்துஇரண்டுதூதரையழைப்பித்து ஓதூதரே நீங்கள்போய் இந்தச்சங்கதிகளையெல்லாம் விரைவில்விசாரித்துக்கொண்டு வாருங்களென்றுசொல்லியனுப்ப அவர்களும்வந்து மேககவர்ணனைக்கண்டு ஓவீராதிவீராநீயார்உன்பெயரென்ன இப்படிப்பட்ட உற்பாதகாரியங்களை யேன்செய்கிறாய் எங்களையெல்லாம் ஏன்வதக்கிறாய் உன்னுடைய ஆரவாரத்தை எங்கள்ராஜாவாகிய தேவேந்திரன்கேட்டு விசாரித்துவரச்சொன்னார் நீரிப்படிசெய்யவேண்டாமென்று சொல்ல அதுகேட்டு அந்ததூதர்களைப்பார்த்து மேகவணன்சொல்லுகிறான் ஓதூதர்களேநான்லோகங்களை வாதப்படுத்தவில்லை பூலோகத்தில் தர்மராசாவானவர்அஸ்வமேதயாகஞ்செய்யவேண்டிகிருஷ்ணபகவானுடைய அனுக்ஞையினால் எவ்வர்னாசுவன் வசத்திலிருக்கிற குதிரையைக்கொண்டுபோகும்படி வந்திருக்கிரதேயல்லாமல் உலகத்தி லுள்ளவர்களை வருத்துகிறதற்குவரவில்லை யென்றுசொன்னான் அதுகேட்டுதேவதூதர்களும் தேவேந்திரனிடத்திற்குவந்து நமஸ்காரஞ்செய்து அஞ்சலியஸ்தராய்நின்றுகொண்டு அந்தச்சேதியைச்சொன்னார்கள அதுகேட்டுதேவேந்திரனும்சந்தோஷகரமாய்நமக்குச்சகாயமாய்நாம்செய்யவேணாகிரகாரியம்அவரேசெய்தால் நமக்குநன்மைதானே அப்படியேயாகட்டுமென்றுசொல்லித்தூதர்களை அநுப்பிவிட்டுத்தேவேந்திரனானவன்தர்மராசாயாகம்பண்ணுகிறதைக்குறித்துசந்தோஷப்பட்டுக்கொண்டிருந்தான் இவ்விடத்தில் மேகவர்ணனும்தனது ராட்சசமாய்கைகளை வந்தசேனைகள் பேரில்நிறைத்து அவர்கள் கண்ணுக்கு ஒன்றுந்தோன்றவொட்டாமற்செய்து பூமியிலிறங்கி அந்தக்குதிரையைமாத்திர அவதான லீலையாகத்தூக்கி இடையனானவன் ஆட்டுக்குட்டியைத் தோளின்பேரில் போட்டுக்கொண்டதுபோல் தோளின்பேரில் போட்டுக்கொண்டு ஆகாசவீதியில் சரேலென்றேழும்பினான் அப்போது அங்கிருந்த சேவகர்களெல்லாரும் திகிலடைந்து குதிரையைக்காணாமல் ஆகாசத்தைப்பார்த்து ராட்சதனைக்கண்டு அந்தசேவகர்கள் ஓடிவந்து பட்டணத்துப்புகுந்து எவ்வர்னாசுவ மகாராசனிடத்தில் முறையிட்டு ஐயா ராசேந்திரா நாங்கள் அஸ்வமேதக் குதிரையைத் தண்ணீர் குடிப்பிக்கும்படி பட்டணத்திற்கு வெளியேகொண்டு போகும்போது ஆரோ ஒருராட்சதன் மாய்கையாய்வந்து எங்களுக்குத்தெரியாமல் குதிரையைத்தூக்கித் தோளின் பேரில போட்டுக்

கொண்டு ஆகாசமார்க்கமாக யெழும்பிப்போனுனென்றுசொல்ல அ துகேட்டுளெவ்வற்ஞசுவமகாராசனும் வெகுகோபங்கொண்டு ஓசே வகர்களே நீங்கள்ஒருநாளுமில்லாத விந்தையானவார்த்தை இன்றை க்குச்சொன்னீர்கள் ஆஆ ஆச்சரியமாகயிருக்கின்றது ராக்ஷதனுவது நம்முடையகுதிரையைப் பிடிக்கிறதாவது அப்படிப்பட்ட காரியம் இ ன்றைக்குநடந்துதல்லவா நல்லது ஆகட்டுமென்றுசொல்லி எவ்வற் ஞசுவன் தன்னிடத்திலிருக்கிற (கந்தர்வராசாக்களில்) நாலாயிரம்ர தக்காரரை அழைப்பித்து நீங்கள்போய் அந்தராக்ஷதனைக்கொன்றுகு திரையைக்கொண்டுவாருங்களென்று செலவுகொடுத்தனுப்பினுன் அ ப்படியேநல்லதென்று அவர்களும்யுத்தசன்னத்தராய் மகாரோஷத் துடன்புறப்பட்டுவந்து ஆகாசத்திலிருக்கிற மேகவர்ணனைக்கண்டு த ங்கள்தங்கள் ரதங்களை ஆகசத்திலநிறுத்தி பிரசண்டமாகிய வில்லுக் களையெடுத்து குணத்தொனிசெய்துசகலலோகங்களுஞ் செவிடுபடத் தக்கதாகமேகவர்ணன்பேரில் அநேகமாயிரம்பாணங்களைப் பிரயோக ஞ்செய்தார்கள் அதுகண்டுமேகவர்ணனும் கலீலென்று நகைத்து அ னுவளவாகிலும் சஞ்சலப்படாமல்மகாஉக்கிராகாரத்துடனே புஜத் தின்பேரிலிருக்கிற குதிரையைஇடதுபக்கத்தலிடுக்கிக்கொண்டு வல துகையினுல்ஒருமலையைப் பிடிங்கிக்கொண்டு அந்தமலையினுல்அவர்க ளவிட்டபாணங்களையும் ஆயுதங்களையும் தடுத்துமுறித்துவிட்டுச் சக் கிராகாரமாய்த்திரிந்துகொண்டு அவர்களுடையரதபதாதிகளை யெல் லாம்பொடிப்பொடியாகத் தும்சப்படுத்தி ஒருக்ஷணப்பொழுதிலந்த நாலாயிரம் ரதக்காரரையும் சுவர்க்கத்திற்கனுப்பி விட்டு ஜெயம்ஜெ யமென்று சிங்கநாதஞ்செய்தான் அதைஎவ்வற்ஞசுவன்கேள்விப்ப ட்டுமகாகோபங்கொண்டு மறுபடியும்ஆயிரம்யானைகளையும் மூவாயிர ம் ரதங்களையும்பதினுயிரங்குதிரைகளும் பத்துலட்சங்காலாள்களையு ங்கூட்டியனுப்பிவித்தான் அவர்களும்வந்துமேகவர்ணனைச் சூழ்ந்து கொண்டார்கள் அதுகண்டுமேகவர்ணனும்நகைத்து அந்தஅஸ்வத்தை க்கொண்டுவந்து மலையின்பேரிலிருக்கிற வீமசேனன்கையில் ஒப்பிவி த்துபிறகுஒருமரத்தைப்பிடுங்கிக்கொண்டு அந்தச்சேனைகளையெல்லா ங்கண்டித்துஒருத்தரையாகிலுந் தப்பிப்பிழைத்துப் போகவொட்டா மல் தும்சப்படுதகிவிட்டான் அதிலுந்தப்பிப்பிழைத்துப்போன சில சேவர்கள் ஓடிப்போய் எவ்வற்ஞசுவனுடைய பாதத்தில்விழுந்து ஓ சுவாமி எங்களால் அந்தராட்சதனைசெயிக்க முடியாதென்றுமுறையி ட அதுகேட்டு எவ்வற்ஞசுவனும் கோபமிகுந்துதன்னுடையசேனைக ளையெல்லாம் புறப்படசொல்லித் தானும்யுத்தசன்னத்தனுய்த்தம் பிமார் - பிள்ளைகள்-மந்திரிகள்-சாமந்திரிகள்-மகுடவர்த்தனர்கள் மு தலானசதுரங்கசேனைகளுடனே புறப்பட்டு பட்டணத்திற்கு வெளி யேவந்து ரணபேரிகையறைவித்துத் தன்னுடைய சேனைகளையெல் லாம் மேகவர்ணன்பேரில் ஏவினுன் அவர்கள்மேகவர்ணனைச்சுற்றிக்

கொண்டுஅனேகஅஸ்திரங்களையும் ஆயுதங்களையும்எய்தார்களதுகளு
க்குமேகவர்ணன் சலியாமலெதிர்த்துய்யோராடுகிறபோதுவீமசேன
னைப்பார்த்து விஸ்வகேதுசொல்லுகிறான்-ஐயாநீங்கள்இங்கேதானே
குதிரையைக்காத்துக் கொண்டிருங்கள் மேகவர்ணன் இளைப்படைந்
திருக்கிறான் நான்போய்வருகிறேனென்று செலவுபெற்றுக் கொண்
டுவந்துதன்கையிலிருந்தவில்லைக்குணத்தொனிசெய்து தான்வந்தசே
திமேகவர்ணனுக்குத் தெரியப்படுத்தி தனதுவில்லினிடமாகமகதீட்
சண்யமானபாணங்களைத்தொடுத்து பிரயோகஞ்செய்து அந்தராசன்
அனுப்பினசேனைகளையெல்லாம் கால்வேறுகைவேறு தலைவேறாகக்
கண்டித்துவயிற்றைப்பீறிரத்தவெள்ளம் பெருகும்படிச்செய்துகழுகு
கூளிகளுக்குவிருந்தாக்கிவைத்தான் அதில்சிலசேனைகள் தப்பிஓடிப்
போய்விட்டது மேகவர்ணனும் மலையின்பேரிலேகுதிரையைப்பிடித்
துக்கொண்டுபோய் குகையில்வைத்துச்கொண்டு இனிமேல் திரினே
த்திரதாரியாகியபரமசிவன்வந்தாலும் குதிரையைவிடவேண்டியதில்
லையென்றுசொல்லியிருந்தான் இங்கே தன்னுடையசேனைகளெல்லா
ம்முறிந்துப்போனதுகண்டு எவ்வற்றுசுவன் பின்னும்அனேகஞ்சே
னைகளைஏவினான்அவர்களும் யுத்தமுகத்தில்நெருங்கி மகாவேகத்து
டனே எதிர்த்துநின்றார்கள் அதுகண்டு வீமசேனன் சிந்தாக்கிராந்த
னாய்சிறுபிள்ளைபேரில்எத்தனைதளம்வந்தெதிர்த்ததென்றுதனது கை
யிலெடுத்துக்கொண்டு பூமியிலகுதித்து ஓடிவருகிறபோதுஅதுகண்டு
விஸ்வகேது சிறியதகப்பனுக்குத் தெண்டமிட்டு ஐயாநான் இந்தசே
னைகளாடுகிற ஸ்திரீயின்பேரில் அபேட்சித்தேன்ஆகையால்நானேய
னுபவிக்கவேண்டும் உங்களுக்கு மரியாதையல்ல மருமகளைமாமனார்
தீண்டுவாரோ ஐயாவென்றுசொல்ல அதுகேட்டுவீமசேனனும்ஓவி
ஸ்வகேதா புருஷனுக்குஅடங்காதஸ்திரீயை மாமனார் தண்டிக்கவே
ண்டாமோ வென்றான் அதற்குவிஸ்வகேதுவும்ஐயாபுருஷன்கையில்
ஸ்திரீஅடங்கா மற்போனால்பிறகுமாமனார்விசாரிக்கவேண்டும்ஆதலா
ல் நீங்கள்மலையின் பேரிலேதானேயிருந்து வேடிக்கைபார்த்துக்கொ
ண்டிருங்கள் இந்தஅற்பமான சேனைகளைக் குறித்து நீங்கள் வரவே
ண்டுமோ வென்றுசொல்லி யனுப்பிவிட்டு பிறப்பாடு வில்லைக் குண
த்தொனிசெய்து அந்தவில்லினிடமாக திவ்வியபாணங்களைத் தொடு
த்துப் பிரயோகம்பண்ணி அந்தச் சேனைகளையெல்லாங்கொன்று ரத்
தப்பரவாகமுண்டாக்கி ஆஆவென்று சிங்கநாதஞ்செய்து வில்லைப்பூ
மியிலூன்றிக் கொண்டு பார்க்கப் பயங்கரமாக விருந்தான் அப்பொ
ழுது எவ்வற்றுசுவனானவன் தனதுசேனவெள்ளங்கள் மடிந்துகிட
ப்பதையும் விஸ்வகேதுவையும் பார்த்து ஆச்சரியப்பட்டுச் சொல்லு
கிறான் ஓமந்திரிமார்களே கேட்டீர்களோ நான் ஐந்நூறுவருஷமாய்
ராச்சியபரிபாலனம் பண்ணினேன் இதுவரையில் இப்படிப்பட்டசே
வகனை எவ்விடத்திலுங் கண்டதில்லை இந்த ராஜகுமாரனைக் கண்க
ளினால்பார்க்கப் பயங்கரமாயிருக்கின்றது வில்வித்தையோ வென்
றால்இவன் கற்றதே வில்வித்தை இவன் மகா வீர தி வீ ர ன்

அதோபார்த்தீர்களா இந்தமலையின்பேரில் ஒருதிவ்வியபுருஷன்பெரி யவில்லை யூன்றிக்கொண்டு நமது பட்டணத்தையும் நமதுசேனாசமுத் திரங்களையும்ஒருமசகமாத்திரமாகநினைத்துவேடிக்கைபார்த்துக்கொ ண்டிருக்கிறான் ஆகையினால்என்ன அனர்த்தகாலம்வருகிறதோதெரி யவராது இதை ஆலோசிக்குமிடத்துமும்மூர்த்திகளும்ஒருமுகமாகக் கூடி நம்முடையபேரில் துசமெடுத்து வந்தவர்களாகவேண்டும் இல் லாவிட்டால் பூலோகத்திலுள்ளவர்களிலஎப்படிப்பட்டவர்களானாலு ம்நமது பட்டணத்தைக்கண்டெடுத்துப் பார்க்கமாட்டார்கள் நல்லது ஆகட்டுமென்றுசொல்லித் தன்சேனைகளையெல்லாம்ஓரிடமாகக்கூட் டிவிஸ்வகேதுவின்பேரிலேவினான் அவர்களும்மகாரோஷத்துடனே அவ்வவர்கள் கையிலிருக்கிறஆயுதங்களையும்பாணங்களையும்பிரயோக ம்பண்ணிகொக்கரித்துநின்றார்கள் அதுகண்டுவிஸ்வகேதுநகைத்து த ன்னுடையவில்லிலே ஒரு திட்சண்ணியமானபாணத்தைத்தொடுத்து அந்தசேனைகளையெல்லாஞ் சிந்துசிந்தாகஎங்கேபார்த்தாலும்பிணம லைகளும் மாங்கிஷக் குப்பைகளும்எலும்புராசிகளும்ரத்தமடுக்களுமா கச் செய்தான் அதுகண்டுதேவர்களெல்லாஞ்சவாசென்றுமெச்சினார் கள் வீமசேனனும் ஆனந்தபரவசமாகினான் அப்போழுதுஎவ்வர்ணசு வனும்சிந்தாக்கிரந்தனாய்ஆலோசிதது நாம்பார்த்துக்கொண்டிருக்கும் போது இவன்எவ்வளவுசேனைகளைக் கண்டித்துவிட்டான்இவனுடை யமகிமைதான் என்னமோதெரியாது ஆகையினாலே இவனது ஊரை யும் பேரையுந்தெரிந்தபிற்பாடுசண்டைபண்ணுவோமென்றுமனதில் நிச்சயம்பண்ணிக்கொண்டு தண்டிகைவிட்டிறங்கி ஒருபெரியயானையி ன்மேலேறிக்கொண்டுவந்து விஸ்வகேதுவைப்பார்த்து ஓராசகுமார கா உன்னைப்பார்த்தால் எனக்குசண்டைசெய்கிறதற்குமனமில்லை நீ யோசிறுபிள்ளையாயிருக்கிறாய்நீயாருடையகுமாரன் உன்பெயரென்ன உன் ஊரென்ன நீங்களேன் என்குதிரையைப்பிடித்தீர்கள் அந்தமலையி ன்பேரிலிருக்கிறவன் யாவன் இதுகளையெல்லாம்எனக்குநன்றாகத்தெ ரியச்சொல்லும்பிற்பாடுயுத்தம்பண்ணுவோமென்றுஎவ்வர்ணசுவன் கேட்க விஸ்வகேதுசொலலுகிறான.

ஓராசனே எங்களுடைய குலம் கோத்திரங்கேட்டீரேஆனால்சொ ல்லுகிறேன்கேள் நான் முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கும் அதிப தியாகிய தேவேந்திரனுக்குக் கவசகுண்டலத்தைக் கொடுத்து கீர்த்தி பெற்றமகாதானபரனாகிய கர்ன்னமகாராசனுடையபுத்திரன் என்பெ யர் விஸ்வகேதுவென்றுசொல்வார்கள தருமசொரூபியாகியதருமரா சாவானவர் அஸ்வமேதயாகம்பண்ணுகிறநிமித்தம்ஸ்ரீகிருஷ்ணதேவ ருடனேஆலோசனைசெய்து அவருடைய அனுமதியின்பேரில்உன்வ சத்திலிருக்கிறஅஸ்வமேதக்குதிரையைக்கொண்டுவரும்படியெங்களை அனுப்பிவைத்தார் ஆகையால்நான் இவ்விடத்தில்வந்தேன் இதோம லையின்பேரிலிருக்கிறவனைப்பார்த்தாயோ அவரைத்தருமபுத்திருடை

ய தம்பியாகிய வீமசேனனென்றறிந்துக்கொள் அதுவுமல்லாமல்உன் குதிரையைத் தூக்கிக்கொண்டுபோனவன்வீமசேனன்பேரனாகியமேகவர்ணனென்றறிந்துக்கொள், ஆதலால் என்பேரையும்ஊரையுஞ் சொன்னேனல்லவோ இன்னமும்என்னுடையவார்த்தையைக்கேளும் அஃதென்னவென்றால்- அகிலாண்டகோடிபிர்மாண்டநாயகராகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியினுடைய பரிபூரணகடாட்சத்தினாலும்அவரது சகாயத்தினாலும் நான் சண்டைசெயகிறேன் நான்தெய்வசகாயமுள்ளவன் நீ மநுஷசகாயமுள்ளவன் இன்றைக்கு உன்னுடையசேனைகளையும் அண்ணன் தம்பி மாமன் மைத்துனன் உற்றார் பெற்றார் பிள்ளைகள் பேரன்மார்மந்திரி பிரதானிகள்முதலியசகலரையுங்கொன்று உன் கெர்வத்தையுமடைக்கிஉன்பத்திராவதிபட்டணத்தையுங்கொள்ளைகொண்டு போகிறேனென்றுசொல்ல அந்தவசனத்தைஎவ்வற்றுசுவனுங்கேட்டு கோபிக்காமல்குலம்கோத்திரத்துக்காகச்சந்தோஷப்பட்டுவிஸ்வகேதுவைப்பார்த்து ஓ விஸ்வகேதாநல்லது நீ அப்படியே செய்கிறாய் இப்பொழுதுநீ பூமியில்நின்றுகொண்டிருக்கிறாய்நானயானையின்மேலிருக்கிறேன் இப்படியிருக்கிற உன்னுடனே எதிர்ப்பது என்னைப்போன்றராசாக்களுக்கு நியாயமல்லவே ஆனபடியினாலே உனக்குவேண்டிய சகலஆயுதங்களும் நிறைந்திருப்பதாகவும் நல்லகுதிரைகளைக்கட்டி யிருப்பதாகவும் விளங்குகின்றஒருரதத்தைசாரதியுடனே அழைப்பித்துக்கொடுக்கிறேன் நீ அதன்மேலேறிக்கொண்டு பிரமுகனாயிருந்துகொடியயுத்தஞ்செய்வாயென்றுசொல்ல அதுகேட்டு விஸ்வகேதுவும் ஐயா- எவ்வற்றுசுவபூபாலகா என்னைஉம்மிடத்தில் ரதம்வாங்கிஅதன்பேரிலேறிக்கொண்டுயுத்தம்பண்ணச்சொன்னீரல்லவா அப்படிநான்செய்யமாட்டேன் தேவேந்திரனுக்கேகவசகுண்டலத்தைதானமாகக்கொடுத்துக்கீர்த்திபெற்றமகாதியாகியினுடையபுத்திரனாகியநானேவும்மிடத்தில்ரதம்வாங்கியேறுகிறவன அதுகூடாது நீர்தேரின்பேரிலேதானேயிருந்துயுத்தம்பண்ணும்உம்முடைய வல்லபத்தைப்பார்ப்போமென்றுசொன்னான் அதுகேட்டு எவ்வற்றுசுவனும் நீயோ சிறுபிள்ளை நானேபெரியவன் ஆகையினால்நான்உன்பேரில்முந்திபாணந் தொடுக்கிறதில்லையென்றுசொல்லியானையைவிட்டிறங்கிரதத்தின்பேரிலேறிக்கொண்டுவில்லைக்குணத்தொனிபண்ணிச்சிங்கநாதஞ்செய்து அட்டகாசம்பண்ணினான்,

அதுகண்டு விஸ்வகேதுவும் சிரித்து என்சிறுபிள்ளைத் தன்மையைச் சற்றுநேரத்திற்காண்பிக்கிறேன்பாருமென்றுசொல்லியாதசாரியாய் வில்லைக்குணத்தொனிபண்ணிச் சிங்கநாதஞ்செய்து துவேஷத்துடனே காலாக்கினிருத்திரனைப்போலேகண்களில்நெருப்புப்பொறிபறக்கவும் மீசை படபடவென்று துடிக்கவும் பற்களை நெறநெறவென்றுகடித்து தன்னுடையவில்லினிடமாக அதிதீக்ஷண்யமான ஆஸ்திரங்களைத்தொடுத்து எவ்வற்றுசுவனுடையமார்புபிளக்கும்படியாக

ப்பிரயோகஞ்செய்தான் அதுகண்டுஎவ்வற்ஞசுவனுங் கோபதிப்தனு
ய்மிஞ்சிவிட்டதென்று சீக்கிரமாகத்தன்னுடையவில்லிலே அதிதீக்ஷ
ணயமாய்க் கிருஷ்ணசர்ம்பம்போ லிருக்கப்பட்ட எழுபதுபாணங்க
ளைத் தொடுத்துப் பிரயோகஞ்செய்தா னதுகளொவ்வொன்றொன்று
உராப்கதுவிஷங்களைக் குபீலென்றிகக்கிக்கொண்டு நெருப்புப்பொறி
கள்பறக்க அதிகவேகமாய்வருகிறபோது விஸ்வகேதுவும் அதிசீக்கி
ரமாகத்தன்னுடையவிலலிலே அனேகமாயிரம் பாணங்களைதொடு
த்துவிட்டு எவ்வற்ஞசுவன்விட்டபாணங்களையெல்லாம் பொடிபொ
டியாகச்செய்து அவன்கையிலிருந்தவில்லையுங்கண்டித்து அவன்தேரி
ற்கட்டியகுடையும் கொடியும்விழும்படியறுத்து அவனுடையதேரின்
பேரிலும்அநேகபாணங்களை கிரப்பினன் அப்போது அவனுடையசே
னைகளெல்லாம் நடுநடுங்கி இன்றேடேராஜாவுக்குமுடிவுகாலம்வந்து
சம்பவித்ததென்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டார்களந்தசம
யத்தில் எவ்வர்ஞசுவன எவ்வளவுமபயங்கொள்ளாமல் வேறொருவி
ல்லையெடுத்து அககினியாஸ்திரத்தைத்தொடுத்துப்பிரயோகஞ் செய்
தான்அந்தஅஸ்திரமானதுநெருப்புப்பொறிகள்பறக்கும்படிகாளகூட
விஷத்துக்குசமானமாய்இரைச்சலிட்டுக்கொண்டுவிஸ்வகேதுவிட்
டபாணங்களையெல்லாங்கண்டித்துவருகிறதைக்கண்டு விஸ்வகேதுப
யப்படாமல் நின்று தன்னுடையவில்லிலே ஒருவருணாஸ்திரத்தைத்
தொடுத்துவிட்டுஅந்தவருணாஸ்திரம்வந்து அக்கினியாஸதிரத்துடன்
போராடிவிழுந்துபோய்விட்டது அதுகண்டுவிஸ்வகேதுதன்னுடைய
வில்லிலேஅதிசீக்கிரமாக மறுபடியும்ஒருவாய்வாஸ்திரத்தைத்தொடு
த்துப்பிரயோகஞ்செய்தான்அதிலுண்டானபெருங்காற்றினல்எவ்வர்
ஞசுவனுடைய சேனைகளெல்லாம் மின்மினிப்பூச்சிகள்போலசிதறிப்
போய்விட்டதுகள் அப்பொழுது எவ்வற்ஞசுவன்பயப்படாமலதன்
னுடையவில்லைக்குணத்தொனிபண்ணி இறுகப்பிடித்துபர்வதாஸ்தி
ரமென்கிற ஒருபாணத்தைத தொடுத்துப் பிரயோகஞ்செய்தான் அ
திலனேகமாயிரம் எண்ணிக்கையில்லாத பர்வதங்கள்பிறந்து அந்தப்
பெருங்காற்றைத தணித்துவிட்டு அதுகண்டு விஸ்வகேதுகோபாக்
கினிருத்திரனைப் எரிந்துவிழுந்து தேவேந்திரனுடைய வச்சிராயுதத்
திலும் கொடுமையுள்ள ஒரு அஸ்திரத்தைத்தொடுதுப் பிரயோக
ஞ்செய்தான் அதில் அளவிறந்த வச்சிராயுதங்கள் பிறந்து கிறுகிறு
வென்றுசுழன்றுவந்து அந்தப்பர்வதங்களையும் தூளாக்கிவிட்டது அ
துகண்டு எவ்வற்ஞசுவனும் மகாகோபதீப்பதனுய்த்தன்னுடையவி
ல்லிலே அநேகமாயிரம் திவ்யபாணங்களைத் தொடுத்துப் பிரயோக
ம்பண்ணினன் அதுகள்வந்து விஸ்வகேதுவினுடைய சரீரமெல்லா
ம் ரத்தப்பிரவாகமாகும்படிதைக்கிறபோது அதனல் விஸ்வ கேதுவு
ம் மிகவும்நொந்து ஆயாசத்துடனே பூமியில் சாய்ந்து விழுந்து மூர்
ச்சையடைந்தான் அதுகண்டு எவ்வர்ஞசுவனுடைய சேனைகளெல்
லாம் சந்தோஷத்துடனே சிங்கநாதஞ்செய்து அட்டகாசம்பண்ணி
னர்கள் அப்போது மலையின்பேரிலிருந்த வீமசேனன்கண்டு

அதிகோபதீப்தனாய் கதாயுதத்துடனே மலையைவிட்டுக்குதித்து யானைக்கூட்டங்களின்மேற் பாய்கிறசிங்கத்தைப்போல ஓடிவருகிறபோது எவ்வனாசுவன்குமாரனான சுவேதனென்கிறவன் எதிர்த்துக்குறுக்கேவிழுந்துதடுத்துவீமசேனனுடனேபோராடிக்கொண்டிருந்தான் அப்போதுவிஸ்வகேதுவும்மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்துகண்ணைவிழித்துப்பார்த்து குகையில்படுத்துக்கொண்டிருக்கிறபுலியின்பேரில்ஒருகல்லைப்போட்டால்அது எப்படிச்சீறிஎழுந்திருக்குமோ அப்படிக்கோபதீப்தனாய்க் காளகூடவிஷம்போல பகபகவென்றெரிந்துவிழுந்து தன்னுடையவில்லிலே அகோரமானபாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்து எவ்வனாசுவனுடையகைவில்லைகண்டித்துஅவனதுரதசாரதியைக்கொன்றுவிட்டுஎட்டுக்குதிரைகளையுங்கண்டதுண்டமாக்கிரதத்தையுஞ்சக்கைசக்கையாய்ப்பேர்த்தெறிந்துஅவனுடைய நெற்றியையும் உடைத்தான்-அதனால்-எவ்வனாசுவன்மிகவும்நொந்துரத்தங்கக்கிக்கொண்டுகண்கள்சுழலவாயைஆவென்றுதிறந்துக்கொண்டுபூவுங்காய்களுநிறைந்திருக்கிற ஒரிளவாழைமரமானதுகாற்றிலடிபட்டுவிழுந்தாலெப்படிசாய்ந்துவிழுமோ அப்படிபோல ரததினுடைய குத்துக்காலின்பேரில் சாய்ந்து விழுந்துமரணத்துக்குச்சரியான மூர்ச்சையடைந்தான்.

அதுகண்டுவிஸ்வகேதுவும் எவ்வனாசுவன் இறந்துபோனானோ என்னமோ பார்ப்போமென்று ஓடிவந்துஎவ்வனாசுவனைப்பார்த்து தத்தளித்துத் தலையண்டையிலஉட்கார்ந்துதனவஸ்திரத்தொங்கலினால்அவனுடையமுகத்தைத்துடைத்து சற்றுநேரம்விசிறிபிறகுவிசாரத்துடவேசொல்லுகிறான் ஐயோநானறியாமல்பாணங்களைவிட்டுஇந்தராசனைக்கொன்றுவிட்டேன்என்பேரில் நிந்தைவந்ததே ஓதுவாரகாபுரிவாசா ஓகிருஷ்ணமூர்த்தி ஓபக்தர்களைரட்சிக்கிறதுஉண்மையானாலிப்போதுஎன்முறைமைகேட்டு இந்தராசனைப்பிழைக்கப்பாரும் ஓசககிராதாரா ஓகஜேந்திரரட்சகா ஓதேவாதிதேவா ஓசுவாமியென்றுஸ்தோத்திரஞ்செய்கிற விஸ்வகேதுவினுடையமுறைமைய அஸ்தினாபுரத்திலிருக்கிறஸ்ரீகிருஷ்ணபகவான்கேட்டுவிஸ்வகேது நினைத்த படியே எவ்வனாசுவன்பிழைக்கக்கடவதென்றுதிருவுளஞ்செய்தருளினார் அதனால் அந்தஎவ்வனாசுவனும் பிழைத்து கண்ணைவிழித்துப்பார்த்துநித்திரைசெய்தவன் விழித்தெழுந்ததுபோல அவனுமெழுந்திருந்துஉட்கார்ந்தான் அதுகண்டு விஸ்வகேதுவும்ஓஐயா ராஜேந்திராசுகமாயிருக்கிறதோசரீரமெத்தநொந்ததோஉமதுஆயாசந்தீர்ந்ததோவென்றுகேட்க அவனும்ஆயாசமொன்றுமில்லை சுகமாயிருக்கிறதென்றுசொல்லஅதுகேட்டுவிஸ்வகேதுவம்நீர்தேரை விட்டிழிந்து அப்புறத்தில் நின்று கொண்டு வில்லைகுணதொனிசெய்துசண்டைபண்ணவாருமென்றழைக்க அதற்கு எவ்வனாசுவனுஞ்சிரித்துத்தலையையசைத்து ஆ ஆ இதேது இந்தராசகுமாரனைப்போலெங்குங்கண்டதில்லை பகையாளியுடனே போராடுகிறபோது தன்னைஆயுதத்தினால் விழுந்து

விட்டால் அவனைக்கொன்று ஜெயம்பெறுகிறதேயல்லாமல்மறுபடியும் அவனுக்குபசாரஞ்செய்து பிழைப்பிக்கிறவர்களுமுண்டோவென்றுதனக்குத்தானேயோசனைசெய்து தேரைவிட்டிறங்கிவந்து விஸ்வகேதுவைக் கட்டியணைத்துக்கொண்டு ஐயாராஜகுமாரகா உன்னைப்போன்றசற்புத்திரனைநானெங்குங் கண்டதில்லை இனி உனக்குமெனக்குஞ் சண்டைவேண்டியதில்லை நானும்எனதுநாடுநகரமுமஉங்களுடையஆதீனம் இனிசுகமாம் தர்ம்மராசாவை அஸ்வமேதயாகம் பண்ணச்சொல்லும் உன்கையிலிருக்கிற பாணங்களை அம்புறுத்தூணியில் வையும் வில்லைத்தளர்த்துமென்று வெகுவாய்சமாதான வார்த்தைகள்சொல்ல அதுகேட்டு விஸ்வகேதுவும் ஐயாராஜேந்திரா சமாதானப்படுவது என்னிச்சையல்ல என்சிறியதகப்பனாகிய வீமசேனன் அதோமலையின்பேரி லிருக்கிறார் அவரண்டைக்குப் போகலாம் வாருமென்றுசொல்லி எவ்வற்றுசுவனை அழைத்துக்கொண்டுபோய் வீமசேனன்முன்னே விட்டுஐயா இந்தராஜாவானவர் சமாதானமாய்நமதுஅடிமையாய் வருகிறேனென்றசொல்லைச்சொல்லி வேண்டிக்கொள்ளுகிறார் தேவரீர் தயவு செய்யுமென்றுசொல்ல-அதற்குவீமசேனனும் அதுகூடாது எனக்கு எசமானாகியதருமராசா விருக்கிறார் அவரிடத்திற்சொல்லவேண்டுமென்றுசொல்லஅதுகேட்டுஎவ்வற்றுசுவனும்வீமசேனனுக்குப்பிரிய வசனஞ்சொல்லித்தழுவிக்கொண்டுதருமராசாவுக்குப்பதினாயிரம்ஆனைகளும் லட்சங்குதிரைகளும்வெகுமதிபண்ணினேன்ஸ்ரீகிருஷ்பகவானுக்குப்பதினாயிரந் தெண்டனிட்டேனென்று இரக்கமாகச்சொல்லஅதுகேட்டு வீமசேனனுக்குக்கிருபைவந்து சரணமடைந்தவர்களைக்காக்கிறதேதர்மமென்றுசொல்லிசமாதானமாய் ஒருவர்க்கொருவர்தழுவிக்கொண்டுசந்தோஷப்பட்டார்கள்அப்போது மேகவாணனும் அஸ்வமேதக் குதிரையுடனே வெளிப்பட்டு வீமசேனனிடத்தில் வந்துசேர்ந்தான்.

அவனையும்எவ்வற்றுசுவன்தழுவிக்கொண்டுஇம்மூன்றுபேரையும் ஆனைமீதேற்றிக்கொண்டு இறந்தவர்கள்போக மற்றசேனைகளுடனும் பந்துவர்க்கங்கள் குமாரவர்க்கங்கள் மந்திரி பிரதானிகளுடனுஞ்சென்று பத்திராவதிபட்டணத்துட்புகுந் தங்குள்ளஸ்திரீசனங்கள் அட்சதைகளிறைக்கவும் முத்தாலாத்தி பவளாலாத்திமுதலான அநேக ஆலாத்திகளெடுக்கவு மகாவைபவத்துடனேபோய் எவ்வற்றுசுவபூபாலனு மானந்த சமுத்திரத்தில் மூழ்கினவனாய் சேனைகளையெல்லாம் வெளியேநிறுத்திவிட்டு- வீமசேனன்- விஸ்வகேது- மேகவர்ணன்இவர்கள் மூன்றுபேருக்கும் தனதுபட்டதேவியாகியபிரபாவதிகையினால் ஆலாத்தியெடுப்பித்து அந்தப்புரத்துக்குள்ளழைத்துக்கொண்டுபோயவர்களை ஸ்நானம்பண்ணுவித்துத்தானும் ஸ்நானம்பண்ணி போசனசாலையிற்புகுந்துசகலசம்பிரமத்துடன்போசனஞ்செய்து கைகால்சுத்திபண்ணிக்கொண்டுதாம்பூலந்தரித்துக்கொண்டு ஆஸ்தானமண்டபத்திற்கு வந்துசகலராசாக்களுடனுங் கொலுவாய்த்தன்னுடையநவரத்தின்பீடத்திலேவீமசேனனைஉட்காரவைத்துக்கொ

ண்டு மற்றஇரண்டுபேருக்கும் வேறேநவரத்நபீடம்போட்டுவித்துச்ச
ங்கீதமேளநாகசுர மேளவாத்தியக்காரரையும் ஊர்வசிரம்பைதிலோ
த்தமைக்குச் சரியானநாடகப்பெண்களையும் அழைப்பித்து அந்தமூன்
றுபேருக்கும்பொழுதுபோக்கிவைக்கும்படி திட்டஞ்செய்து எவ்வற்
னுசுவமகாராஜனுமதனதுசேனையதிபதியாகியசுவேதனென்கிறவனை அ
ழைத்துச்சொல்லுகிறான் ஓசுவேதா நாளையதினம்தருமராஜாவானவ
ர்செய்கிற அஸ்வமேதயாகத்திற்குநாமெல்லோரும் போகவேண்டும்
ஆதலால்நமதுசேனைகளையும் பட்டணத்துசனங்களெல்லாரையும்
சீக்கிரமாய்ப்பிரயாணப்படுத்து அதுவுமல்லாமல் தருமநந்தனருக்குக்
காணிக்கையாகக்கொண்டுபோகிற வஸ்துக்களை ரூஸ்தீதுபண்ணென்
று கட்டளையிட்டபிற்பாடுதன்னுடைய ஸ்திரீகள்பிள்ளைகள் சகலமான
வர்களுக்கும்உத்தரவுசெய்துபிரயாணப்படசொன்னான் அப்படியே
அவர்களெல்லாரும பிரயாணப்பட்டார்கள் சுவேதனும் எவ்வற்னுசுவ
னுடைய உத்தாரப்படி இந்தசேதிசகலமானபேர்களுக்குந்தெரியும்ப
டிபறைவித்து தன்னுடைய வளவுக்குப்போய்தன்பெண்சாதிபிள்ளை
களுக்கும் பிரயாணசேதியைச் சொல்லிவிட்டு தன்மாதாவாகிய துன்
மார்க்கி யென்கிறவளண்டைக்குப்போய்த்தெண்டனிட்டுஓ அம்மாதா
யேஎவ்வற்னுசுவமகாராசாவானவர் சகலசேனைகளுடனேபிரயாணப்
ட்டு தருமராசாசெய்கிறயாகத்தைப் பார்க்கப்போகிறார் நாமும்போய்
க் கண்குளிரப்பார்த்து ஸ்ரீகிருஷ்ணபகவானையும சேவித்துநாம்செய்
தபாவங்கள்போகத்தக்கதாக கங்கைமுதலியபுண்ணிய தீர்த்தங்களிலு
ம் ஸ்நானஞ்செய்துசுகமாய்வரலாம் வாருந்தாயேயென்று அழைக்க
அதுகேட்டு அந்ததுர்பாக்கியும் தன்குமாரனாகியசுவேதனைப்பார்த்து
அடாபயலே நீ என்னசொன்னாய் தர்மராசாயாகம்பண்ணுகிறான் எ
வ்வற்னுசுவன் போகிறான் நானும்போகிறேன்நீயும்வாவென்றுஎன்
னை அழைக்கிறாயல்லவா அடாபிள்ளாய் நீ ஒருபயித்தியக்காரன்அந்த
எவ்வற்னுசுவனும் ஒருபயித்தியக்காரன் யாகஞ்செய்கிற தர்மராசா
வோ உங்களிலும் பெரியபயித்தியககாரன் அஃதெப்படியென்றுகே
ட்பாயாயில அந்ததருமராசா இதுபரியந்தம் வனவாசஞ்செய்து அ
லைசசல்பட்டு முடிவிலேதுரியோதனாதிகளைச்செயித்து மூந்தானு
ளவோபட்டஙகட்டிக்கொண்டான் இனியாகிலும்பெணசாதிபிள்ளை
களுடனே சுகமாய் வேளைக்குச்சாப்பிட்டுக்கொண்டு மூலே வீட்டில்
சும்மாவிராமல் பயித்தியம்பிடித்துவிருதாவாயாகஞ்செய்கிறதென்று
பார்ப்பார்பேச்சைசைக்கேட்டு வீணாகதிரவியத்தையெல்லாஞ்செல
வழித்து விடுகிறான் - ஐயையோ தர்மராஜா இதுவரையில்மெத்தபுத்தி
யுள்ளவனென்றெண்ணி யிருந்தேன் இதனாலஅவன்புத்தி தெரியவந்
தது இந்தபயித்தியங்கொண்டு பணத்தையெல்லாஞ்செலவிடுகிறானா
ல்லவோ ஆனாலவன்பிழைக்கமட்டா னந்தகிருஷ்ணனைப்பார்த்துபெ
ண்சாதிக்குமஉடமையிட்டுஒருதகருக்கும்ஒருகாசுகொடாமல்ஒருயா
கமும்பண்ணுமல்பிச்சையிடாமல்திரவியத்தையெல்லாமபதகிரய்படு

திவிட்டு ஒருநாளாகிலும்வீட்டில்சாப்பிடாமல்ஊருராய்த்திரிந்து வ யிறுவளர்த்துக் கொண்டுகாலங்கழிக்கிறுன்பார்த்தையோ அவனேஎன க்குப்பிரியமானவன் அவனேமெச்சினேனவனேப்பார்த்தாகிலும தரு மராஜாபிழையாமல் விருதாவாகக்கெட்டுப்போகிருனுனுலுமாகட்டும் நான்வருகிறதில்லே அந்தப்பயித்தியக்காரன் செய்கிறயாகத்தைத நான் பார்க்கலாகாது என்னேத தண்ணீரில்விழுந்து சாகசசொன்னுயோஎ னக்குவரககூடாது அப்படியல்லவென்று நான்வந்துவிட்டால்இங்கே வீட்டில் மருமக்கள்மார் மிஞ்சினவர்கள் பணங்காசுகளே அபாரியாகச் செலவுபண்ணிவிடுவார்கள் ஆகையால் அப்படிச்செய்ய வொட்டாம ல்தண்டிப்பதைவிட்டும் பிள்ளேகளேயும் பெண்களேயும் வேளேக்குவே ளேசோறுதின்ன வொட்டாமல் அதட்டி அரைவயிறுங் கால்வயிறுமா ய்ஒருவேளே சோறுதின்னச்சொல்லி கட்டுப்பண்ணுகிறதை விட்டு ப் பிக்ஷைக்காரரை ஊர்வழிதெருவழி வரவொட்டாமல் காலொடியும் படி அடிக்கிறதைவிட்டும் அண்டை அசலுடன் உலக்கைதடியை யெ டுத்துக்கொண்டு சண்டைக்குப் போகிறதைவிட்டும என்புருஷனே நி த்தநித்தங் கண்டனே பண்ணுகிறதைவிட்டும உன்பிறகே வரச்சொல் லுகிருயோ நல்லவேலேசெய்தாய் பிள்ளாய் நான்வந்துவிட்டால் எ ன்வீடெல்லாங் கொள்ளேயாய்போம் அப்போ தென்சிவனும்போம் நான்வருகிறதில்லே நீவேணுமானுல் பயித்தியம்பிடித்துப் போகுரு என்றுசொல்லியனுப்ப அவனுஞ்சிரித்துக்கொண்டுவந்து அவள்சொ ன்ன வசனங்களெல்லாம் எவ்வற்ஞசுனனிடத்திலும் வீமசேனன் முதலானவர்களிடத்திலுஞ் சொன்னுன்-

அதுகேட்டு அவர்களெல்லாருங் கலீலென்றுநகைத்து இப்படி க்கொததவள் தருமராசா ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி இவர்களிடத்தில்வந்தி ருந்தால் பொழுதுபோக்கிக்கொண்டிருப்பாள் ஆகையால் அவளேயுங் கூடவே அழைத்துக்கொண்டுவாவென்று வீமசேனன்சொல்லசுவே தனும் ஐயாநான் என்னுற்கூடியமட்டுஞ்சொல்லிப்பார்தேன் அவள் வருகிறதில்லேயென்றுசொன்னுள் அதுகேட்டு எவ்வர்ஞசுவனும அ ப்படியானுல் அவளேக்கையுங் காலுங்கட்டி டோலியில்போட்டுககொ ண்டுவாவென்ருன் அதுகேட்டு சுவேதனும்அப்படியே தாயாரிடத்தி ற்போயழைக்க அவள் வரமாட்டேனென்று சொல்ல அவளேப்பலவத் காரமாய்ப் பிடித்துக் காலுங்கையுங்கட்டி யெடுத்துங்கொண்டுவந்து டோலியில போட்டுக்கொண்டு அவற் கூகாவென்று கூச்சலிடும்படி கொண்டுவந்து எவ்வர்ஞசுவன்முன்னே நிறுத்தினுன் அதுகண்டு எ வ்வற்ஞசுவனுஞ் சிரித்து சகலசனங்களேயும் பிரயாணப்படுத்தி தர னும் ரதகசதுரகபதாதிகளும் மந்திரிப்பிரதானிகளும் குமாரவர்க்க ளும் பந்துவர்க்கங்களும் ஸ்திரீசனங்களும் வீமசேனன்-விஸ்வகேது- மேகவர்ணன் குமாரனை சுவேதனும்தளபதியானசுவேதனும்புடை சூழத்தக்கதாக அஸ்வமேதக்குதிரையைக் கூட்டிக்கொண்டுபிரயாண ப்பட்டு பதினெட்டுமேளவாத்தியங்களும் தாம்தாமென்று முழங்கும்

மடியாக பத்திராவதிபட்டணத்தைவிட்டு புறப்பட்டு வெளிகூடாரம் போட்டு சேனைகளெல்லாங் கும்பலாகக்கூட்டிப் பிராயணப்படுத்தி அஸ்தினாபுரத்திற்குச் சமீபமாகவந்து எவ்வற்றுசுவனும் வீமசேன மகாராசனுடைய அனுமதியின்பேரில் தன்சேனைகளையெல்லாம் அங்கேஒருசிங்காரவனத்தில் இறங்கும்படிசெய்தான் அப்பொழுது வீமசேனனும் தான்முன்னாக நடந்துவந்து அஸ்தினாபுரத்திற் புகுந்துதருமராஜாவைக்கண்டு நமஸ்காரம்பண்ணினான் அவரும் தம்பியையெடுத்து மார்போடணைத்துக் கொண்டாசீர்வாதம்பண்ணினார் அப்போதுவீமசேனனும் தான்போய்வந்த சகலசேதிகளையெல்லாஞ்சொல்லி எவ்வற்றுசுவமகாராஜனும் அஸ்வமேதக்குதிரையுடனே தண்டுவிட்டு நம்முடைய ஊருக்குசமீபத்தில் வந்திறங்கி யிருக்கிறான் நான் முன்னதாக வந்தேனென்று சொல்லிவிட்டுஅந்தப்புரத்திற்குப்போய் குந்தாதேவிக்கு நமஸ்காரஞ்செய்து அந்தம்மாளுடனே சகலசேதிகளையுஞ்சொல்லிவிட்டு பிற்பாடு கிருஷ்ணதேவர் எங்கிருக்கிறாரென்று விசாரித்து உப்பரிகையின் பேரிலிருக்கிறதாகக் கேள்விப்பட்டு அவ்விடத்திற்போய் கிருஷ்ணமூர்த்தியைக் கண்டு நமஸ்காரஞ்செய்ய அவரும் வீமசேனனையெடுத்து மார்புடனே தழுவிக்கொண்டு ஓ வீமசேனா நீ அஸ்வமேதக்குதிரையைக் கொண்டுவந்தாயோவென்று கேட்க அதற்கு வாயுகுமாரனாகிய வீமசேனன்சொல்லுகிறான்

ஓஐயா கிருஷ்ணமூர்த்தி உம்முடைய அனுக்கிரகத்தினாலே நானும் விஸ்வகேதுவும்மேகவர்ணனும்பத்திராவதிப்பட்டணத்திற்போய் குதிரையைப் பிடித்துக்கொண்டு எவ்வற்றுசுவினிடத்தில் சண்டை சமாதானஞ்செய்து அந்தராஜனையும் உடன்படுத்தி குதிரையுடனேயழைத்துக்கொண்டுவந்தோம் அதோ அவர்களும் வருகிறார்கள் நான் உங்களுக்குச் சேதி சொல்லும்படி முன்பாக வந்தேனென்று சொல்லி அவருக்குச் சந்தோஷமுண்டாக்கிவிட்டு அங்கிருந்து திரௌபதியி னிடத்திற்குவந்து அவளுடனேயுஞ் சொல்லிவிட்டு அர்ச்சுனன் நகுலன் சகாதேவன் முதலானவர்களுக்குந் தெரிவித்துவிட்டு பிற்பாடு போசனச் சாலைக்குப்போய் சகலசம்பரமத்துடன் போசனம்பண்ணிக் கைகால்சுத்தி செய்துக்கொண்டு மறுபடியுந்தன்தமயனாராகிய தர்மபுத்திர ரிடத்திற்குவந்து கிருஷ்ணபகவானோடும் தர்மராசாவினோடும் அலோசனைசெய்து நாம் அனைவரும் எதிர்கொண்டுபோய் எவ்வற்றுசுவமகாராசனை அழைத்து வரவேண்டுமென்று வீமசேனன்சொல்ல அதுகேட்டு தருமபுத்திரரும் கிருஷ்ணமூர்த்தி யாருடைய அனுமதியின் பேரில் மந்திரிப்பிரதானிகளுடனே தம்பிமார்களும் புடைசூழத்தக்கதாப் புறப்பட்டுவருகிறபோது எவ்வற்றுசுவனும் சேர்ந்துவந்து தனக்கெதிராகவந்த தருமனந்தனருக்குத் தான்கொண்டுவந்த காணிக்கைகளை வைத்துச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் பண்ணின னதுகண்டு தருமபுத்திரரும் சந்தோஷகரமாக வெவ்வற்றுசுவனை யெடுத்து மார்போடேதழுவிக்கொண்டு ஓராஜேந்திரா உன்னுடையசிநேகவாஞ்சையைவிரும்பியே

வீமசேனனையனுப்பிக் குதிரையைபிடிக்கச் சொன்னோம் இனிமேல்
நாம்செய்கிறயாகமானது ஒருவிக்கினமும் வாராமல் நிறைவேறுமெ
ன்றுசொல்லஅதற்குஎவ்வற்ணுசவனும்ஐயா தருமநந்தனுஉங்களுடை
யதரிசனமும் சினேகமும்வேண்டி அடியேனும்இவ்விடம்வந்தேனெ
ன்றுசொல்லிப் பிற்பாடுதேவாதிதேவனான கிருஷ்ணமூர்த்தியைக்க
ண்டு நமஸ்காரஞ்செயதான் அவரும்எவ்வற்ணுசுவனையெடுத்து மார்
போடணைத்துக்கொண்டு ஆசீர்வாதஞ்செய்தருளினார், பிற்பாடு எவ்
வற்ணுசுவன்- அர்ச்சுனனையும்- நகுலனையும்-சகாதேவனையும்-தழுவிக்
கொண்டு ஒருவர்க்கொருவர்சந்தோஷவார்த்தைகளைப்பேசிக்கொண்
டுசகலஜனங்களுடனேயும் அஸ்தினபுரத்திலிருந்தான் தருமராசாவு
ம்அந்த அஸ்வமேதக்குதிரையைத் தன்னரண்மனையிற்கட்டிவைத்து
சகலராசாக்களுடனேயும் நவரத்நமண்டபத்தில்கொலுவாயிருந்தா
ர்பின்பு எவ்வற்ணுசுவன் பெண்சாதியாகிய பிரபாவதியானவள் குந்
தாதேவிக்கும் துரௌபதிக்கும் நமஸ்க்காரஞ்செய்துஅவர்கள்ஆதர
ணைசெய்ய அந்தப்புரத்திலேயிருந்தாள்மற்றசேனைகளு மவரவர்களு
க்குவிட்டவிடுதியிலிறங்கி யிருந்தார்கள் அந்தச்சமயத்தில் கிருஷ்ண
மூர்த்தியானவர்தருமராஜாவைப்பார்த்து ஓ தர்மநந்தனுசித்திரபர்வ
த்திலல்லவோநாம் குதிரைவிடப்போகிறது அப்பொழுது என்னைய
ழைத்தனுப்பினால்நான்வருகிறேன் இப்பொழுதுதுவாரகைக்குப்போ
கிறேனென்று தருமநந்தனரிடத்திலும்-வீமன்- அர்ச்சுனன்-நகுலன்
சகாதேவன்- இவர்களிடத்திலும்- குந்திதேவி- சுபத்திரை- துரௌப
தி- இவாகளிடத்திலுஞ் செலவுபெற்றுக்கொண்டு-சாத்தகி-கிருதவர்
மன்- இவர்களோடும் ஒருதிவ்வியரதத்திலேறிக்கொண்டுமகாசந்தோ
ஷத்துடனே துவாரகைக்குளெழுந்தருளினார்- பின்புதருமராசாவான
வர் இரண்டுமாதவரைக்கும் மஹாவைபவத்துடனே ராச்சியபரிபால
னம்பண்ணிக்கொண்டிருக்குங்காலத்தில் தருமராஜா கொலுமண்டப
த்திலிருக்கிற வேளையிலவரிடத்திற்கு மறுபடியும்வேதவியாசரெழுந்
தருளிவந்தார் அதுகண்டுதருமபுத்திரரும்கொலுவைவிட்டெழுந்திரு
ந்துஎதிர்கொண்டுபோய்ச்சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து அந்த
முனிசிகாமணியைஅழைத்துவந்து பொற்பீடத்தின்பேரில் எழுந்தரு
ளசசெய்து கந்தபுஷ்ப அக்ஷதைகளால் பூசைசெய்துயோகக்ஷேமங்
களையொருவர்க்கொருவர்வினவினபின்புதருமராசாவானவர் அந்தமு
னிநாதனைப்பார்த்து ஓ வியாசமுனீந்திரதேவரீர் கட்டளையிட்டபடி
அஸ்வமேதக்குதிரையையழைப்பித்து இமோர்பர்வதத் தண்டையிலி
ருக்கிற திரவியத்தையுமெடுப்பித்துக்கொள்ளுகிறேனதுயிருக்கட்டும்
முன்புஅஸ்வமேதயாகத்தையும் மருத்துமகாராசாசெய்து முடித்தா
ரென்று திருவுளம்பற்றியருளினீரே - அந்தமருத்துமகாராசா எந்த
விதமாக அந்தயாகத்தைநிறைவேற்றினார்-அதைவிவரத்தை அடியேனு
க்குத்தெரியப்படுத்தவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யஅதற்குவி
யாசபகவான் திருவுளம்பற்றியருளுகின்றார் (வியாசபகவான்தருமன
ந்தனருககு அஸ்வமேதயாகத்தின்முறைமை கூறல்) ஓ தருமநந்தனு

அந்தமருத்துமகாராசா யாகஞ்செய்து முடித்தவிபரத்தைச்சொல்லு கிறேன்நீர்கேட்பீராக அஃதெப்படியென்றால்பூர்வத்திலந்தமருத்துரா சன்ராச்சியபரிபாலனம் பண்ணிக்கொண் டிருக்கும்போது தான் சுவர்க்கபோக மனுபவிக்கவேண்டி அஸ்வமேத யாகஞ் செய்யும் படி நினைத்து தெய்வலோகத்திற்குப்போய் பிரகஸ்பதிபகவானைக் கண்டுநமஸ்காரஞ்செய்து அவரைத்தான்செய்கிறயாகத்திற்குப்புரோ கிதராயிருக்கும்படியழைக்க அவருமப்படியேவருகிறேனென்று சம்ம தித்துப்பின்பு தேவேந்திரனிடத்திற்குப்போய்ச்செலவுகேட்க அந்த த்தேவேந்திரனும்ஆலோசனைசெய்து அந்தயாகத்தை நீரிருந்துநிறை வேற்றிவைத்தால் அவன் நம்முடையபதவிக்குவருவான ஆதலால்நீ ர்போகவேண்டாமென்றுசொல்லிவிட்டான் ஆகையினால்பிரகஸ்பதி பகவானும் வரமாட்டோமென்றுசொன்னார், அதுகேட்டு மருத்தும காராசனும் மிகுந்தவிசாரத்துடன் பூலோகத்திற்குவந்து துக்கித்துக் கொண்டிருக்கிறபோது அவரிடத்திற்கு நாரதர்வந்து சொல்லுகிறார் ஓ மருத்துமகாராஜாவே நீரேன்விசாரப்படுகிறீர் பிரகஸ்பதிவாராமற் போனாற்போகட்டும் அவர்தம்பியான சங்கவர்ணர்யோகீஸ்வரராய்க் காசியிலிருக்கின்றார் - நீர்அவரிடத்திற்குப்போய் அவரை அழைத்து வந்துபுரோகிதராக வைத்துக்கொண்டுயாகஞ்செய்யும்அவர் எத்தனை கோபித்துக்கொண்டாலும் நீர் பொறுத்திரும் என்சேதி உனக்குச் சொன்னவனாரென்றுகேட்டால் நாரதர்சொல்லிவிட்டு அக்கினியில் விழுந்தாரென்று சொல்லும் போய்வாருமென்று சொல்லி நாரதர் போய்விட்டார்.

அதுகேட்டு- மருத்துமகாராசனும் அப்படியேகாசிக்குப்போய் பேய்பிடித்தவரைப்போல் திரிந்துக்கொண்டிருக்கிற சங்க வர்ணனை க்கண்டு தெண்டனிட்டுஎதிரேநிற்க அதுகண்டுஅந்த சங்கவர்ணரும் ராசாவின்பேரில் காரியுமிழ்ந்துவிட்டுப் பேய்நினைவாயோடிபோனா ர், அதுகண்டு மருத்துமகாராசனும் பின்விடாமல் தொடந்துபோக அப்போது சங்கவர்ணனும்நீயாரென்றுகேட்கமருத்து மகாராசனும் அவரைப்பார்த்து ஓ சுவாமி அடியேனும்அஸ்வமேதயாகஞ்செய்யவே ண்டி சுவர்க்கபூமிக்குப்போய் பிரகஸ்பதியைப் புரோகிதராக யிருக்கு ம்படி அழைத்தேன் அவரும் தேவேந்திரன்பேச்சைக் கேட்டுக் கொ ண்டு வரமாட்டேனென்று சொல்லிவிட்டார் அதுகேட்டுபூலோகத் திற்குவந்து நான் விசாரப்பட்டுக்கொண்டிருக்கும்போது நாரதர்வந் துதேவரீரை அழைத்துக்கொண்டுவந்து நிறைவேற்றும்படிசொல்லி விட்டு அக்கினியில்விழுந்துபோனாரென்று நடந்தவிஸ்தாரங்களைச் சொல்ல- அதுகேட்டுசங்கவர்ணனுஞ் சிரித்து ஓ மருத்துமகாராசா வே நீ அழைப்பித்தபடியே நான்வந்துஉன்னையினாலந்தயாகத்தைச் செய்து முடிக்கிறேன் நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம் அப்படிசெ ய்யும்போது மத்தியில் பிரகஸ்பதிவந்தால் அவரை வைத்துக்கொ ண்டு செய்கிறதில்லையென்று நீ உறுதியாகச்சொல்லவையாகி

ல்நர்னே அந்தயாகத்தைநிறைவேற்றி உன்னை மோக்ஷா ஐக்கியனாகச் செய்கிறேனென்றுசொல்ல அதுகேட்டுமருத்துமகாராசனும் அப்படியேநல்லதென்றுசத்தியவசனமாகச்சொல்ல அதற்குச்சங்கவர்ணனும்சம்மதப்பட்டு அந்தராசாவின்பின்னேவந்துயாகமுஸ்தீது பண்ணிவைத்து அந்த்யாககுண்டத்தில் அக்கினியையவளர்த்த அந்தஅக்கினியும்இந்திரனிடத்தில்கட்டுப்பட்டிருந்தபடியினால் தணிந்துவிட்டது அதற்குச்சங்கவர்ணருங்கோபங்கொண்டு அக்கினியைச் சபிக்கும்படிநினைக்கும்போது அதுகண்டு அக்கினிதேவருங்கிடுகிடுவென்றுநடுங்கிப் பயந்துவந்து அந்தயாககுண்டலத்தில்பிரகாசமாயெரிந்தார் அப்போதுசங்கவர்ணரும் மந்திரங்களைச்சொல்லிஅந்தராசன்கையினால் யாகஞ்செய்விக்கும்போது அந்தஜுமப்புகையானது தெய்வலோகமட்டாயெழும்பியது அதுகண்டுதேவேந்திரன்ஆலோசித்துப் பிரகஸ்பதியை வைத்துக்கொண்டுயாகம்பண்ணச்சொல்லி ஒருதூதனுடனே சொல்லியனுப்பினான் அந்ததூதனும்வந்து சங்கவர்ணருடையகோபாக்கினிக்குப்பயந்துதிரும்பிப்போய்தேவேந்திரனுடனே கூடாதென்றுசொல்ல அதுகேட்டுதேவேந்திரன்கோபங்கொண்டு வச்சிராயுதத்தையெடுத்துவருகிறபோது அதுதெரிந்துசங்கவர்ணருஞ்சிரித்து வச்சிராயுதத்தைப்பிரயோகஞ்செய்யாமலும் அவனைநடந்துவரவொட்டாமலும் ஸ்தம்பித்துவிட்டார்அதுகண்டு தேவேந்திரன்பயந்துகெர்வமடங்கினவனாய்மெத்தவும்பரிதாபப்பட அப்போதுசங்கவர்ணருக்குத்தயவுவந்துஎப்போதும்போலிருக்கப்பண்ணி அந்த இந்திரன்முதலானதிக்குப்பாலகர்கள்கையினால் யாகத்துக்குவேண்டியவஸ்துக்களை யெடுத்துத்தரச்சொல்லி சகலசம்ரமத்துடனேமருத்துமகாராஜன்கையினால்யாகத்தைசாங்கமாய்நடப்பித்து இந்திரன்முதலானதேவர்களுக்கெல்லாமந்தராசன்கையினாலவிர்ப்பாகங்களைக்கொடுப்பித்துசந்தோஷம் பண்ணுவித்தானந்தமருத்துமகாராசனுஞ்சந்தோஷமா யந்தயாகத்தை நிறைவேற்றிவிட்டுசங்கவர்ணருக்குக் கணக்கில்லாத திரவியத்தைத் தக்ஷணையாகக்கொடுத்து இன்னம்அநேகமாயிரம்பிராமணாகளுக்குந்திரவியத்தைப்பர்வதாகாரமாய்க்குவித்துதக்ஷணையாககொடுத்துகீர்த்திபெற்றான் அந்தப்பிராமணர்களுமஅவரவர்கள் சுமக்கத்தகுந்ததிரவியத்தையெடுத்துக்கொண்டுமிச்சமானதிரவியத்தை இமோபர்வதத் தண்டையில்கும்பலாகக்குவித்துவிட்டு இந்தத் திரவியத்தைக்கண்டபேர்கள் சுகமாய் எடுத்துக்கொள்ளக் கடவர்க ளென்று சொல்லிப் போனார்கள்ஆகையினால்ஓதருமராசவேநீ அந்தத்திரவியத்தைஎடுத்துக்கொண்டுயாகம்பண்ணுமென்றுசொன்னார் அதுகேட்டுதருமநந்தனருஞ்சந்தோஷப்பட்டுஐயாமுனிநாதரே பூலோகத்தில் பிர்மக்ஷத்திரியவைசியசூத்திரர்களாகிய இந்நான்குவருணத்தாரும்அவரவர்கள்நடந்துக்கொள்ளவேண்டிய முறைமையைக்கிரமப்படி அடியேனுக்குத் தெரியப்படுத்தவேண்டுமென்றுகேட்க அதற்குவேதவியாசர் சொல்லுகிறார்.

ஓ தருமநந்தனுகேளும பிராமணனுக்கிருக்கவேண்டியதுஸ்நான

ம்சந்தியாவந்தனம்-சபதபவேதபாராயணம்ஓமம் பொருமை சத்திய
ம்இந்தநற்குணங்களையுடைத்தாயிருக்கின்றவனே பிராமணன் அவன்
அந்தத்தில்பிர்மலோகத்தையடைவான்க்ஷத்திரியனுக்கிருக்கவேண்டி
யதுதுஷடநிக்கிரகம் சிஷ்டபரிபாலனம்சத்தியம் பூததயாளசத்துரு
செயம் பிர்மணசேவை-இந்தநற்குணங்களையுடைத்தாயிருக்கின்றவ
னேஉத்தமக்ஷத்திரியன்அவன் அந்தத்தில்புண்ணியலோகத்தையடை
வார்வைசியனுக்கிருக்கவேண்டியது ஒருவஸ்துவைக்கொள்ளல் விற்
றல்அதில்சமமானது ஆதாயம்வைத்துக்கொண்டு தராசுநிலையாகிற்ற
ல்இந்தநற்குணங்களையுடைத்தாயிருகின்றவனே உத்தமவைசியன்அ
வனந்தத்தில்இந்திரலோகத்தையடைவான்சூத்திரனுக்கிருக்கவேண்
டியதுதனது நடைபிறழாமைபொய்சொல்லாமை பூததயாளம் பெரி
யோர்கள்பகதி-பிராமணசேவை-இந்தநற்குணங்களை யுடைத்தாயிருக்
கின்றவனேஉத்தமசூத்திரன்அவனும் அந்தத்தில்புண்ணிய லோகத்
தையடைவான்கேட்டீரோதருமராசாவே இதுகளுக்கெல்லாம்ஒருசூ
க்ஷூமமான ரகசியஞ்சொல்லுகிரோம் அஃதென்னவென்றால் எந்த
ச்சாதியிற்பிறந்தவனானாலுஞ் சரியே அவனிடததிற் பரஸ்திரீ கமன
மில்லாமையும் இரந்தவர்களுக்கு இல்லையென்னமல் தன்னா லியன்ற
மாத்திரங் கொடுக்கின்ற சீவகாருண்ணியமும் தேவதாபத்தியும் பிரா
ணவிசுவாசமும் பிதிர்க்கள் பக்தியும் தெளிவைத்தரும் வேதாகமசா
ஸ்திரங்களிடத்தில் நம்பிக்கையுமாகிய இந்தநற்குணங்கள் உண்டாயி
ருக்கவேண்டும்மேலும்சேன்மவாரம்சென்மநக்ஷத்திம்மாசபிரவேசம்
ஏகாதசிஅமாவாசை பௌரணமி இதுமுதலானதினங்களில்ஸ்திரீசை
யோகஞ்செய்யாமல் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியினிடத்தில் பக்தி விசு
வாசமாயிருந்தவன் எவனோ அவன்சம்சய மில்லாமல் புண்ணியலோ
கத்தைச்சேருவானென்று வேதவியாசர் திருவுளம்பற்றியருளி தரு
மராசாவி னிடத்திற்செலவுபெற்றுக்கொண்டு தம்முடைய ஆசிரமத்
துக்கெழுந்தருளினார் அதன்பின்புதருமராசாவும் ஏகாந்தஸ்தானத்தி
லிருந்து ஆலோசனைசெய்து சித்திராபர்வமும் சமீபித்திருக்கின்றதா
கையால் இனிநாம்சும்மாயிராமல் யாகத்திறகுவேண்டிய முஸ்திபுபண்
ணவேண்டுமே இதுகளுக் கெல்லாம் ஸ்ரீகிருஷ்ண பகவானிருக்கவே
ண்டும் அவனாயல்லாமல் ஒருகாரியமும் நடவாதேயென்று நிச்சயித்
துக்கொண்டு தம்பியாகிய வீமசேனனையழைத்து ஓவீமசேனா நீசீக்கி
ரமாய் ரதமேரிககொண்டு துவாரகாபுரிக்குப்போய் கிருஷ்ணமூர்த்தி
யைக்கண்டு சித்திராபர்வம் சமீபித்துவிட்டதென்றுசொல்லி அவரையு
ம் அவர்பெண்சாதி பிள்ளைகள்முதலானபட்டணத்திலுள்ள சகலசன
ங்களையும் அழைத்துக்கொண்டுவாவென்று கட்டளையிட்டார்.

அப்படியேநல்லதென்று வீமசேனனும் ரதமேறிககொண்டு அதிக
வேகமாய் துவாரகைக்குப்போய் கிருஷ்ணபகவானுடைய அரண்மனை
வாசற்படியில் தேரைவிட்டிறங்கி வாசலகார்கிற சேவகர்களுடனே அ
ஸ்தினாபுரத்திலிருந்துவீமசேனன்வந்திருக்கிறானென்னரண்மனைக்கு

ருகிறதற்குச் சமயமாவென்று கேட்டுவரச் சொன்னுரென்று அறிய ப்படுத்துங்களென்று சொல்லியனுப்ப அந்தசேவகர்களு மப்படியே நல்லதென்று அரண்மனைக்குள்ளேபோக அங்கேயந்தப்புரத்தில் கிருஷ்ணபகவானானவர் ஒருநவரத்தின பீடத்தில்உட்கார்ந்துகொண்டு தங்கப்பள்ளயத்தில் தேவகிதேவியார் இஷ்டான்னம்பரிமாற ருக்மணிசத்தியபாமையிருவரும் மயில்விசிரிகொண்டு விசுற மகாசந்தோஷத்துடனே தும்பமலர்போன்றசாதத்தில் தங்கக்கடடியோல பருப்பைபோட்டுக்கொண்டு புத்துருக்கு நெய்விட்டு ஐந்துவிரலாலும்பிசைந்து கையெடுத்து சாப்பிடயொகிற சமயற்றிற் சேவகர்கள்வந்து தண்டனிட்டுஜயா கிருஷ்ணமூர்த்தி உம்முடையமத்துனரான வீமசேனராசா அரண்மனைவசலிலேவந்து நிர்க்கின்றூர் அரண்மனைக்குள்ளேவருகிறதற்க்குச் சமயமாவென்று கேட்டுவரச்சொன்னு ரென்றுசொல்ல அதுகேட்டு அந்த பகவான் சிரித்து ஒசேவகர்களே அப்டியானல் வீமசேனனைச்சனுதியில்வரச்சொல்லுங்கோளென்றுசொல்லியனுப்பிவிட்டு தன்கையில் அள்ளின அமுதத்தைச் சாப்பிடாமலப்படியே பிடித்துக்கொண்டிருக்க அதிலந்தசேவகர்கள்சொன்னவார்த்தையைக்கேட்டு வீமசேனனுமரண்மனைக்குள்ளே வருவதுகண்டு கிருஷ்ணமூர்த்தியும் நகைத்து வாவாவீமசேன நீயும்நல்வேளைக்குவந்தாய் நீ மகாஆயாசத்துடனேயிருக்கிராய்ஆதலால்நாமிருவரும்போசனம்பண்ணுவோம்வாவென்றழைக்கஅதுகேட்டுவீமசேனனும் நல்லதென்றுசமீபத்தில் வரவேஅதற்குகிருஷ்ணமூர்த்தியும்நகைத்துஓ வீமசேன நான்விளையாட்டுக்காகச் சாப்பிடவாவென்றுஅழைத்தால் நீயுமெய்யென்று வெட்கமில்லாமல்வந்துவிட்டாயேஅப்படிவரலாகுமாஉலகத்தில்ஒருவன் சாப்பிடும்போது ஒருவன் வந்தால் அவனை உபசாரமாகச் சாப்பிடுவோம் வாருமென்றழைத்தால்அவன்நான்சாப்பிட்டேன் நீர்சாப்பிடுமென்றுசொல்வானேயல்லாமல் சாப்பிடவரமாட்டான் அப்படியல்லவென்றுஉனக்குச்சாதத்தைக் கொடுத்தாலும்போதுமோ முன்னாலேஏகசக்கிரமென்கிற அக்கிராரத்தில்பகாசூரனுக்கு ஒருவண்டியில் நிறையவந்தசாதமும் கறிகளும்கொண்டுபோகச்சொல்லிஉன்னையனுப்பின லதுகளையெல்லாம்புசித்துஅதிலும்உதாக்கினியடங்காமல் யமுனைநதியிலிருந்த சலத்தையெல்லா குடித்துப்போதாதஉனக்குஇந்தப்பள்ளயச்சாதந்தான்போதுமோவென்று கேட்க அதற்குவீமசேனனும் சிரித்துஐயாகிருஷ்ணமூர்த்தியே நல்லவார்த்தைசொன்னீர் உம்முடையதலையின்பேரில பூசினிக்காயளவு குற்றத்தைவைத்துக்கொண்டுஎன்பேரில் குற்றம்சொல்லிமிரட்டுகிரீரோ நான்சாப்பாட்டைத்தள்ளப்போகாதென்று நினைத்துவந்தாலென்னை இப்படிசொல்லலாமோ ஆனல்சொல்லுகிரேன்கேளும் முன்னாலேஈரேழுபதினலு லோகங்களையும் சத்தசாகரங்களையும வயற்றிலடக்கிக்கொண்டு அதுவும்போதாமல்இடைச்சிகள்வீட்டிலுள்ள தயிர்வெண்ணைகளைத்திருடியுண்டும்கோபாலர்களெல்லாம் இந்திரனுக்குப்பொங்கலிட்டாலஅதைவேண்டாமென்றுதடுத்து கோவர்த்தனகிரி

க்குப்பொங்கலிடுகிறதுபோல் பேர்வைத்துப் பொங்கலிடுவித்து அந்த சாதத்தையெல்லாந்தின்று வயிறுநிரப்பிக்கொண்டவர் நீரல்லவோ அப்படிப்பட்டஉம்முடையவயருக்குமுன் என்வயிறு எம்மாத்திரம் கிருஷ்ணாவென்று பரிகாசம்பண்ணினான் அதுகேட்டுகிருஷ்ணமூர்த்தியும்நகைத்தருளினார் அங்கிருந்த ருக்மணிசத்தியபாமைமுதலானஸ்திரீஜனங்களெல்லாரும் சலீலென்றுநகைத்தார்க ளப்போதுகிருஷ்ணபகவானும்வீமசேனனைவாவென்றழைத்து தம்முடனேகூட உட்காரவைத்துக்கொண்டு இரண்டுபேருமாகஒருபள்ளயத்தில்சாப்பிட அப்போதுதேவகிதேவியார் சாதமும்கறிகளும பால்மோர்நெய்களும்வேண்டியமட்டுக்கும்பரிமாற ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும்வீமசேனனும் திருப்தியாகப்போசனம்பண்ணிக் கைகால்சுத்திசெய்துக்கொண்டுநவரத்தினகசிதமானமண்டபத்திலுட்கார்ந்தார்க ளதிலேருக்மணிதேவியாரும் நல்லசுகந்தமாகியசந்தனமும்பனிநீரும் தாம்பூலமும் பரிமளதிரவியமும் பாரிசாதபுட்பமுங்கொண்டுவந்துவைக்க அதுகளை யிருவருஞ்சந்தோஷமாகதரித்துக்கொண்டுஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் வீமசேனனைப்பார்த்து நீவந்தகாரியமென்னவென்றுகேட்கவீமசேனனும் ஐயாநான்வந்தகாரிய முமக்குத்தெரியாதோ ஆனாலும்சொல்லுகிறேன்கேளும்அகதென்னவென்றால்தருமராஜாவானவர்யாகம்செய்கிறநாள்சமீபத்திருக்கிறதென்று தங்களையும்புத்திரமித்திரகளத்திராதிகளையும் பட்டணத்திலுள்ளசகலஜனங்களையுமழைப்பித்துக்கொண்டுவரச்சொன்னாரென்றுசொல் அதுகேட்டுகிருஷ்ணபவானும்நல்லதென்று சாத்தகியையும்கிருதவர்மனையு மழைப்பித்து ஓதம்பி மார்களே தருமராசாவானவர்நம்மையாகத்திற்கழைத்துவரச்சொன்னாரென்று வீமசேனன்வந்திருக்கிறானதலால்நீங்கள் நமதுசேனைகளையும்துராதுரைகளையும் பிரத்தியுமன்னன் அனிருத்திரன்சாம்பன்சாருகன்கேதன்முதலானகுமாரவர்க்கங்களையும்அவர்கள்ஸ்திரிகளையும்பிராயாணப்படுத்துக்கோளென்று சொல்லித்தன்னுடையபட்டஸ்திரீகள்எட்டுபேரையும் பதினாயிரத்தொருநூறுராஜகுமாரத்திகளையும் பிரயாணப்படச்சொலலித் தாம்வசுதேவரண்டைக்குப்போய்த் தெண்டனிட்டு அவரிடத்திற்செலவுகேட்க அவரும்கிருஷ்ணாஉன்னைவிட்டு எப்படியிருப்பேனென்றுசொல்ல அதற்குத்தகுந்த சம்மதிவசனஞ்சொல்லி அவரிடத்திலுஞ் செலவுபெற்றுக் கொண்டு வீமசேனனுடனே தாமும்ஒருவெள்ளைக்குதிரையின்மேலேறிக்கொண்டு துவாரகைவிட்டுவெளியேவந்துநின்றார் அப்போது தேவகிதேவியார் முதலான அந்தபுரத்து ஸ்திரீகளெல்லாரும் ரதங்களேறி நடந்தார்கள்சாத்தகிகிருதவர்மன் அவர்களுத்தாரப்படிக்குப் பிரத்தியுமன்னன் முதலானராசகுமாரர்களும் பின்னுமுண்டான உத்தவன் அக்குரூரன் முதலானவர்களும் தங்கள்தங்கள்ரதங்களிலேறி நடந்தார்க ளின்னமும்பலராமன்முதலாக துவாரகையிலுள்ள ஜனங்களெல்லாரும் நடந்

துவந்து கிருஷ்ணபகவானிடத்திற்சேர்ந்தார்க ளப்போதுபதினெட்டு வகை மேளவாத்தியங்களுந் தாம்தாமென்றுமுழங்கவும் சங்கீதமேளம் - வசந்தரிமேளம்- நாகசுரமேளங்கள் சப்திக்கவும்பாடகர்கள் கொண்டாடவும் ரம்மை ஊர்வசிக்குச்சரியான நாடகப்பெண்கள்நாட்டியம்பண்ணவும் இதுமுதலான சகலசம்பிரமத்துடனேயும் நடந்துவருகிறபோது கிருஷ்ணபகவான் வீமசேனனைப்பார்த்துச் சொல்லுகிறார். ஓ வீமசேனா நீ யந்தநாட்டியஞ் செய்கிறபெண்களைப்பார்க்கிறாயே அவர்களுனக்கு ஈடாஅவர்களை நீயேன்பார்க்கிறாய்உன்னாகாரத்துக்கும் உன்பெரிய சரீரத்திற்கு மவர்கள்ஈடுசெய்யமாட்டார்கள்உன்னைப்பார்த்துஅவர்கள் பயப்படுவார்கள் எனக்குமுதலாய்ப்பயமாயிருக்கிறது ஆகையினால் உனக்குத் தகுந்தவர்களாரென்று லதோபார்த்தாயோ நூற்றிருபது வயதுசென்று பற்களவிழுந்து தலையும் உடம்புந்திரைந்து ஸ்தனங்களுஞ் சரிந்துபழுத்தபழமாய் கெட்டிசரீரமாய் நல்லஸ்திரீகள்வருகிறார்கள் அவர்களிடத்திற்போயவர்கள் முகத்தைப்பார் உனக்குத்தகுந்தவர்க ளவர்களேயொழிய இவர்களீடுசெய்யமாட்டார்கள்இதுவுமல்லாமலும் உனக்குராக்ஷஸஸ்திரிகளைச் சேருகிறதேபிரியம் அப்படி ராக்ஷஸஸ்திரீகளைச் சேருகிறவன் பின்னும்ஒருத்தரைச்சேரக்கூடுமோவென்றுபரிகாசமாகச்சொல்ல அதுகேட்டு வீமசேனன் சொல்லுகிறான் ஓ கிருஷ்ணாஎன்னை இப்படிச்சொல்லுகிறீரே நீர்மகாசுத்தமோ முன்புதிருவிக்கிரமஅவதார மெடுத்தபோது உம்முடையசரீரத்தையு மும்முடைய ஆகாரத்தையும் சகலசனங்களுமறிந்திருப்பார்களப்படிப்பட்ட உம்முடைய ஆகாரத்திற்கும் பலத்திற்குந்த குந்தாற்போல் பூசகியென்கிறராக்ஷசிமேல்விழுந்து விளையாடியவள்முலையை வாயிலேவைத்துண்டு அவளைக்கொன்றவர் நீரல்லவோ அப்படி யெல்லா மும்மிடத்தி லநேகம் பிழைகளை வைத்துக்கொண்டு என்னைப்பரிகாசம் பண்ணலாமோவென்றுசொல்லவதற்கு ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியுஞ்சிரித்து இன்னமிப்படிப்பட்ட பரியாசவார்த்தைகளைஒருவர்க்கொருவர்வேடிக்கையாகப் பேசிக்கொண்டு கேளிக்கைபார்த்துக் கொண்டு வந்து ஒருதடாகத்தைக்கண் டவ்விடத்தில் தண்டுவிட்டுக் கூடாரங்களடித்துக்கொண்டு அந்ததடாகததை சுற்றிலுமிறங்கினார்கள்-அப்போது பிருந்தாவனத்திலிருக்கின்ற கோபாலர்க ளிந்தவிசேஷத்தையெல்லாம் கேள்விப்பட்டு நாம்கிருஷ்ணனைக்கண்டு வெகுநாளாச்சுதுநம்முடைய தோழனான கிருஷ்ணனைக்கண்டு பேசிவருவோம்- வாருங்களென்று ஒருவர்க்கொரு வரழைத்துக்கொண்டு பால்மோர், தயிர்குடங்களைக் காவடிகளில் காணிக்கையாக வெடுப்பித்துக்கொண்டு தலைச்சிகைகளை முடித்துவிட்டு தலையிலே கறுப்புகம்பளங்களை போட்டுக்கொண்டு கையிலேகோலுங்கயிறும் பிடித்துக்கொண்டு வந்து கிருஷ்ணமூர்த்தியைக்கண்டு தாங்கள் கொண்டுவந்தகாணிக்கைகளை கொடுத்துக் கிருஷ்ணமூர்த்தியினுடைய திருமேனிமுழுதும் நன்றாசப்பார்

ந்துத் தலையயசைத்து ஆச்சரியப்படச் சொல்லுகிறார்கள் ஓ கிருஷ்
ணா முன்னே நீ எங்களிடத்திலிருந்தாற்போ லிருக்கவில்லையே இது
வென்னதலையிலே கல்லுங்கறடும்போலிருக்கின்றது இது வென்னகா
திலேபச்சையும் வெள்ளையுமாயிருக்கின்றது இதுவென்னகழுத்திலே
கயிறுபோலே போட்டுக்கொண்டிருக்கிறாய் இதுகளினாலுனக்குத்தலை
நோகாதோ - காதறுந்துபோகாதோ கழுத்துநோகாதோ இதுஎதுநீ
வேறுவேஷம் போட்டுக்கொண்டிருக்கிறாய்நம்முடையவமிசம்போலி
ருக்கவில்லையே ராஜாக்கள்போ லிருக்கிறாயேயென்றுகேட்ககிருஷ்ண
மூர்த்தியுஞ் சிரித்துக்கொண்டு சும்மாயிருக்கப் பின்னுமந்தகோபாலர்
களங்கிருக்கிற யானை குதிரை-ஒட்டகங்களைப்பார்த்து இதேதுகிருஷ்
ணா நம்முடையமாடுகன்றுகள்போலிருக்கவில்லையே வென்றுசொல்ல
அதற்கு கிருஷ்ணமூர்த்தி ஒன்றுஞ்சொல்லாமல் சும்மாயிருந்துவிட்டு
சற்றுநேரம்பொறுத்து அவர்களுக்கு மவர்கள் ஸ்திரீகளும் வேண்டி
யவஸ்திராபரணங்களை வெகுமானமாககொடுத்து அவர்களையனுப்பி
விட்டுப் பின்பு கிருஷ்ணபகவான் வீமசேனனுடனே ஆலோசனைசெ
ய்து நான் முன்னேபோகிறேன் நீயிங்கேயிருந்து சேனைகளுடனே மெ
ள்ளவாவென்றுசொல்லி கிருஷ்ணபகவான் முன்னுதாக அஸ்தினா புர
த்திற்குவந்து தருமராசாவுக்கும் குந்திதேவிக்கும் தெண்ட னிட்டார்
அதுகண்டு அவர்களுங் கிருஷ்ணபகவானை யெடுத்து மார்போடணைத்
துக்கொண்டுயோகக்ஷேமங்களை விசாரிக்க கிருஷ்ணபகவானும்தமது
யோகக்ஷேமங்களைச்சொல்லஅதற்கு தருமராசாவும் சந்தோஷப்பட்டு
ஐயா கிருஷ்ணா நமது குமாரவர்க்கங்களும் ஸ்திரீசனங்களும் எங்கே
யென்றுகேட்க அதற்கு கிருஷ்ணதேவரும் ஐயா தருமநந்தனா நமது
சேனைகள் தாயார் ஷ்திரீஜனங்கள்பந்துவர்க்கங்கள்குமாரவர்க்கங்கள்
முதலான சகலமானபேரையும் யமுனாநதிக்கரையில் விட்டுவிட்டு நா
ன்மாத்திரம்முன்னுதாகவேவந்தேன் அவர்களும்இன்னேரம் வந்துசே
ருவார்களென்றுசொல்லஅதுகேட்டு தருமராசாவானவர் தம்பிமார்க
ளுடன் குந்திதேவி துரௌபதி சுபத்திரை முதலான ஸ்திரீசனங்களு
டனும் புறப்பட்டு அவர்களைஎதிர்கொண்டுபோய்த்தருமராஜாவானவ
ர்தேவகிதேவியாருக்கும் பலராமருக்கும் நமஸ்காரம்டண்ணி மற்றவ
ர்களையும் ஆதரணைசெய்து ஸ்திரீசெனங்களுக்கெல்லாம்வெகுமதிசெ
ய்து உபசாரவார்த்தைகள் சொல்லிப் பின்பு கிருஷ்ணபகவானுடனே
சகலமானபேருங் கலந்துபேசிக்கொண்டு சகலசம்பிரமத்துடனே தி
ரும்பிப் பட்டணத்திற்கு வருகிறபோது அதற்குமுன்னமே அந்த அஸ்
வமேதக்குதிரையும் தண்டுடனேகூடித் திரிந்துக்கொண்டு வெளியே
புறப்பட்டுவந்து அதையாவரும் பிடித்து கட்டாமலிருந்துவிட்டார்க
ள்தருமபுத்திரருங் கிருஷ்ணபகவானுடனே கூட சகலசேனைகளையுமந
டப்பித்துக்கொண்டு பட்டணம்போய்ச் சேர்ந்தார் அந்தச் சமயத்தில்
அந்த அஸ்வமேதக்குதிரையுங் கடைசியில் கொஞ்சம் சேனைகளுடன்
போகையில் அதுசேதி (அனுசாளுவனென்கிறராஜன்) தெரிந்து ஆ

லோசனைசெய்து நாம்இந்தக்குதிரையைப் பிடித்துக்கட்டினால் கிருஷ்ணதேவன் சண்டைக்குவருவான் அப்போதவன் நமதுதமயனைக்கொன்றபகையெல்லாந் தீரத்தக்கதாகஅவனுடனே போராடிப்பகையைமுடிக்கலாமென்றுநினைத்துக்கொண்டுஅந்தவனுசாலுவனும் மெள்ளமெள்ளவந்து குதிரையின்பிரகேபோகின்ற சனங்களையெல்லாம்அதட்டித்துரத்திவிட்டு அந்தக்குதிரையைப்பிடித்துக்கொண்டுபோய்ஓரிடத்தில் கட்டிவைத்துப் பின்புதன்சேனைகளையெல்லாம் மூஸ்திதுபண்ணிக்கொண்டு தானும் யுத்தசன்னத்தனாய் ஆயுத்தப்பட்டிருந்தான்.

## அனுசாலுவராஜன்யுத்தம்.

அந்தச்சேதியைக் குதிரையின்பிறகேவந்த சேனைகளெல்லாம் ஓடிவந்து தருமராசாவையும் கிருஷ்ணபகவானையும்பார்த்துநமஸ்காரம் பண்ணி ஓய்சுவாமி நாங்கள் அஸ்வமேதக்குதிரையைப் பத்திரமாய்க் காத்துக்கொண்டேயிருந்தோம் அங்ஙனமிருக்க நமது பட்டணத்திற்கு சமீபத்தில் அனுசாலுவனென்கிற ராசன்வந்து அந்தக்குதிரையைப்பிடித்துக்கொண்டு எங்களையும்நோகவெய்து துரத்திவிட்டுப்போனானென்றுசொல்ல அதுகேட்டு தருமராசாவும்சிந்தாக்கிராந்தனாய்விசாரப்பட்டுக்கொண்டிருந்தார் அதுகண்டு கிருஷ்ணமூர்த்தியும் தலையையசைத்து இதற்கு நாம் என்னசெய்கிறது அந்தஅனுசாலுவன்மகாபலவந்தன் வீராதிவீரன் அப்படிப்பட்டவனை ஒருவராலுஞ்செயிக்கமுடியாதேயென்றுசொல்லிக்கொண்டிருக்க அதுகேட்டுவிஸ்வகேதும் கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து ஐயாதேவகிநந்தனா தேவரீரிப்படிச்சொல்லலாமோஅந்தஅனுசாலுவன்பலத்தையெம்மாத்திரமென்று ஆலோசிக்கிறீர் இதோயென்னை யனுப்பிவையும் நான்போ யவனுடையகர்வத்தையடக்கிகுதிரையையும்விடுவித்துக்கொண்டு அவனையும்பின்கட்டாய்க்கட்டிக்கொண்டு வருகிறேன் அப்படிச்செய்யாமற்போவேனாகில் பிராமணஸ்திரீகளைச்சேர்ந்தவன் போகின்றகதியிலும்ருதுகாலமறிந்துபோகியாதவன் போகிறகதியிலும்போவேனென்று சபதம்பண்ணினான் அதுகேட்டு கிருஷ்ணபகவானும் சிரித்து ஓ விஸ்வகேதாநீ கொஞ்சமாகிலும் எண்ணிப்பாராமல்இப்படிப்பட்டபிரதிக்கினைசெய்துவிட்டாயே அந்தஅனுசாலுவனும் மஹாபலசாலி வீராதிவீரன் சத்துருசங்காரன் துன்மார்க்கன் அப்படிப்பட்டவனை நீ யெப்படி செயிக்கப்போகிறாயென்றுகேட்க அதற்கு விஸ்வகேதுவும் ஆலோசனைசெய்துஓ ஐயா ருக்மணிமனோகரா கபடநாடகசூஸ்திராவதாரி தேவரீரது கிருபாகடாக்ஷம் என்பேரில் பூரணமாயிருக்கும்போது எனக்கு ஜயமாகாதகாரியம் என்ன இருக்கிறது ஆகையினால் தேவரீர் ஆசீர்வாதம்பண்ணி அனுப்பிவைத்தால் சயம்பண்ணி வருகிறேனென்று சொல்ல அந்த தைரியவார்த்தைக்குச்சபாசென்றுமெச்சிகிருஷ்ணபகவானும்மகா சந்தோஷத்துடனே விஸ்வகேதுவைப்பார்த்து ஓ விஸ்வகேதா நீ தேவர்களுக்கெல்லாம் மிஞ்சினபலாஷ்டியனாய் அந்த அனுசாலுவனை

யுஞ்சயித்துவரக்கடவாயென்று தம்முடையபலத்தைநிறுத்திஆசீர்வா
தஞ்செய்து பிரத்தியுமன்னையுங் கூடகூட்டியனுப்பிவிட்டுத் தாமும்வீ
மசேனனுமாக ரதமேறிக்கொண்டு பின்னேநடந்தார்கள்,விஸ்வகேது
வும் பிரத்தியுமன்னனும்சிறிதுசேனைகளுடனேயுத்தசன்னத்தராய்ப்பு
றப்பட்டுப்போய் அனுசாளுவனுடைய சேனைகளுடனே எதிர்த்தார்க
ளப்போதுபிரத்தியுமனனும் ரோஷத்துடனே தன்னுடையவில்லிலே
அனேகமாயிரந் திவ்வியபாணங்களைப்பிரயோகஞ்செய்துஅனுசாளுவ
னுடைய சேனைகளெல்லாங் கண்டித்துச் சின்னபின்னப் படுத்துகிற
போது அதுகண்டு அனுசாளுவனும் கோபதீபனாய் எரிந்துவிழுந்து
தன்னுடையரதத்தைத்தாண்டிப் பிரத்தியு மன்னனைப்பார்த்து நில்லு
நில்லென்று அதட்டி அடா பிரத்தியுமன்ன உன்னைப்பார் உன்பலத்
தைப்பார் - சௌரியத்தைப்பார்-நீயாயென்னுடனேபோராடுகிறவன்
பெண்களுடனே எதிர்த்துநிற்கிற நீ என்னுடனே எதிர்த்துப் போரா
டமாட்டுவாயாயென்று மேகத்தொனிபோல்கர்ச்சித்து அனேகபாண
ங்களைத்தொடுத்துப்பிரயோகம்பண்ணிபிரத்தியுமன்னனைநோகச்செய்
தான் அதற்கவன்பயப்படாமல் ஓ அனுசாளுவா நீ மிஞ்சவேண்டாம்
என்னைக் கையிலாகாதவ னென்று நினைத்தாயோ நான் கரும்புவில்லி
னாலும் புஷ்பபாணத்தினாலும்பதினாலுலோகங்களையுஞ் செயித்தாலும்
இப்பொழுது என்கைபாணத்தினால் உன்னைக் கண்டதுண்டம் பண்
ணுகிறேனென்றுசொல்லி ஒரு தீட்சண்ணியமான பாணத்தையெடுத்
து தன்கைவில்லினிடமாகத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து அனுசா
ளுவன் பேரிலெய்தான் அதற்கு அனுசாளுவன் எவ்வளவுஞ் சட்டை
பண்ணாமல் மகாரோஷத்துடனே அதிசீக்கிரத்தில் ஐந்து குரூரபாண
ங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்தான் அதுகளுந்தகதகவென்றெ
ரிந்து கொண்டுவந்து பிரத்தியுமன்னனுடையமார்பிலேதைத்துமுதுகி
லுருவிப்போய் விட்டதுகள்,அதனாற்பிரத்தியுமன்னனும் ஆயாசத்துட
னே ரதத்தின்பேரில்விழுந்து மூர்ச்சையடைந்தான்- அதுகண்டு விஸ்
வகேதுவுங் கோபங்கொண்டு தன்னுடையரதத்தைத்தாண்டிவில்லைவ
ளைத்து பாணங்களைப்பிரயோகஞ்செய்து அனுசாளுவனை நோகவெய்
தான்-அந்தச்சமையத்தில் வீமசேனனும்வந்து கலந்துகொண்டுஉக்கி
ராகாரனாய் எரிந்துவிழுந்து தன்னுடைய ரதத்தைத்தாண்டிவிஸ்வகே
துவைப் பின்னுக்குத்தள்ளிவிட்டு தன்கைவில்லிலே தீட்சண்ணிமான
பாணங்களைத் தொடுத்து அந்த அனுசாளுவன் பேரில் பிரயோகஞ்
செய்தான் அதுகண்டனுசாளுவனசிரித்து வீமசேனனைப்பார்த்து அ
டா வீமா நீ கையிலாகாதசிறிதுபேர்களைச்செயித்தோமென்றுகர்வங்
கொண்டிருக்கிறாயல்லவா அந்தகர்வத்தை இப்போது வெளிப்படுத்தி
வைக்கிறேன் பாரென்றுசொல்லிமகா உக்கிராகாரத்துடனேஅக்கினி
க்குச் சமானமான மூன்று திவ்வியாஸ்திரங்களைத் தொடுத்துப் பிர
யோகஞ்செய்தா னந்த அஸ்திரங்களானது கரகரவென்றுசுழன்றுக்
கொண்டுவந்து வீமசேனன் மார்பிலே பட்டு முதுகிலுருவிப் போ

ய்விட்டது அதனால்வீமசேனனும் சுழல்காற்றடித்து மரம்விழுந்தது
போல ரதத்தின்பேரில்விழுந்து மூர்ச்சையடைந்தா னதுகண்டு கிரு
ஷ்ணபகவானும் தன்னுடையரதசாரதியாகியதாரனை எச்சரிக்கைசெ
ய்து தன்கையிலிருக்கிற சாரங்கமென்கிறவில்லைவளைத்துகுணத்தொ
னிசெய்து அனேகமாயிரம்பாணங்களைத்தொடுத்து அனுசாலுவன்மே
ரில் பிரயோகஞ்செய்யும்போது அனுசாலுவனும்மகாவீரத்துடனே
தன்னுடவில்லிலே அனேகபாணங்களைத்தொடுத்து கிருஷ்ணபகவா
ன்பிரயோகித்தபாணங்களை எல்லாம் பொடிபொடியாகத்தும்சப்படுத்
திவிட்டுகிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து ஓகிருஷ்ணா நீசூதினாலே என்த
மயனைக்கொன்றுவிட்டாயல்லவோ அந்தகர்வத்தை இப்போது அடக்
கிவிடுகிறேன் உனக்கும்சண்டைக்கும் எத்தனை தூரம் நீயோ என்னைசெ
யிக்கிறவன் காட்டிலேசஞ்சரித்துக்கொண்டுகாய் கனிகளைத்தின்றுத
பசுசெய்கிற யோகீஸ்வரர்களண்டைக்குப்போகாமல் என்முன்னேவ
ந்தாயல்லவோ ஆனாலினி என்னுடைய வல்லயத்தைப்பாரென்றுசொ
ல்லிமகாஉக்கிராகாரத்துடனே அனேகவிதசஸ்திர அஸ்திரங்களைப்பி
ரயோகஞ்செய்துகிருஷ்ணபகவான்விடுகிறபாணங்களையெல்லாம் நடு
ப்பாதியில் கண்டித்துவிட்டு மேலுமேலும் அனேகபாணங்களைப்பிர
யோகஞ்செய்துகிருஷ்ணபகவானுடைய ரதசாரதியாகிய தாரகனையு
ம்உதிரமயமாக்கி கருடக்கொடியையுங்கிழித்துகுதிரைகளையுஞ்சல்ல
டைக்கண்களாகத்துளைத்து அக்கிருஷ்ணதேவருடையமார்பையுங்கி
ழித்தான் அதனால்குதிரைகள் மெத்தவுங்கஸ்திப்பட்டு தலையைவளைத்
துக்கொண்டதுக ளதுகண்டுதாரகனும் கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்
து ஐயா கோபிகாரமணா எப்படிப்பட்டசண்டையிலும்நம்முடையகு
திரைகளுக்கு இப்படிப்பட்ட ஆயாசம்வந்ததில்லையே இப்பொழுது பூ
மியில்நிற்கமாட்டாமல் தத்தளிக்கின்றதே ஜகஸ்வாமி இதுவென்னபுது
மையாயிருக்கின்றதென்றுசொல்ல அதுகேட்டு கிருஷ்ணதேவருங்
கோபமிகுந்து நானந்ததுன்மார்க்கனை இந்தக்ஷணமே கொல்லுகிறே
னென்று அட்டகாசம்பண்ணி தமது திவ்யாஸ்தகத்தில் விளங்குகின்ற
சார்ங்கத்தினிடமாக அனேகஅஸ்திரங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்
செய்தார் அனுசாலுவனுமந்தபாணங்களையெல்லாம்கண்டித்து சீக்கி
ரமாகத்தன்னுடையவில்லிலே ஏழுநாராசந்தொடுத்துப்பிரயோகம்ப
ண்ணினனதுகள் ஒன்றோடொன்று உராய்ந்துக்கொண்டு எரிந்துபு
கைகளுடனேவந்து கிருஷ்ணபகவானுடைய மார்பிலேபட்டு முதுகி
லுருவிப்போய்விட்டதுக ளதனாலந்தபகவானும்மெத்தஆயாசத்துட
னேகையிலிருந்த சார்ங்கத்தைநழுவவிட்டுக்கொடிக்கம்பத் துடனே சா
ய்ந்துமூர்ச்சையடைந்தார் அதுகண்டு அனுசாலுவனுடைய சேனைக
ளெல்லாம்சிங்கநாதங்க ளட்டகாசஞ்செய்தார்களதுகண்டு விஸ்வகே
துவும் மகாதுவேஷத்துடனே எரிந்துவிழுந்து பற்களை நறநறவென்
றுகடித்துமீசைபடபடவென்று துடிக்கவும் உக்கிராகாரனாய்த்தன்னு
டையரதத்தைத்தூண்டி என்னுடையஆண்டவனுக்கு இப்படிப்பட்ட

ஆயாசம்வரலாகுமாவென்று கர்ச்சித்துதன்னுடைய வில்லிலேயதி கோரமாயிருக்கின்ற பாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்துஅனுசாலுவன்சரீரமுழுதுந்துளைத்து சாரதியையுங்குதிரைகளையும் ரத்தமயமாக்கினனதையெல்லாமநுசாலுவன்நிக்கிரகித்துநின்றுஅனேகசஸ்திர அஸ்திரங்களைப்பிரயோகஞ்செயதுவிஸ்வகேதுவை நோகப்பண்ணினான் இப்படிவிஸ்வகேதுவுமநுசாலுவனும்எதிரிட்டுமகாரோஷத்துவேஷத்துடனேசிங்கத்தோடுசிங்கமுஞ்சர்ப்பத்தோடுசர்ப்பமும்வியாக்கிரமத்தோடுவியாக்கிரமும்எதிர்த்தாப்போலும் (ஸ்ரீராமமூர்த்தியும்ராவணனும்எதிர்த்தாற்போலும்-தேவேந்திரனும்விருத்திராசுரனும்எதிர்த்தாற்போலும்எதிர்த்து திக்குகள்தோறும்பாணங்களை நிறைத்துஒருசாமமட்டும்போராடுகிறபோது அதிலே விஸ்வகேதுமிஞ்சி அநுசாலுவனகையிலிருக்கிற வில்லைக்கண்டித்துவிட்டுசாரதியுங்குதிரைகளையுங்கொன்று தேரையும் பிளந்து அநுசாலுவனுடைய சரீரத்தையுஞ் சல்லடைக்கண்ணாகத்துளைத்துவிட்டு ஜயாவென்றுசிங்கநாதம்பண்ணினான் அதற்கு அநுசாலுவனும்பயப்படாமல் கத்தியுங்கேடயமும் எடுத்துக்கொண்டோடிவந்துவிஸ்வகேதுவினுடையதேரின்பேரிலேறி விஸ்வகேதுவைக்காலினாலுதைத்தான் அதுகண்டுவிஸ்வகேதுவும்எரிந்துவிழுந்து இரண்டுபாணத்தைப்பிரயோகித்துஅவன்கையிற் பிடித்திருக்கின்றகத்தியுங்கேடகமும்பொடியாகும்படிசெய்துசரேலென்றுதேரைவிட்டுக்குதித்து அநுசாலுவனுடையசிகையைப்பிடித்துக்கொண்டுஅதிசீக்கிரமாகத்தன்னுடையவில்நாணியிற்சுருக்குப்போட்டுஅவனதுகைகளைப் பின்கட்டாய்ச்சேர்த்துக்கட்டிஅங்கேயிருந்துஇழுத்துக்கொண்டுவந்து கிஷ்ணமூர்த்தியினுடையபாதத்திற்போட்டான் அப்பொழுதந்தபகவானும் மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்து சமீபத்திலநிற்கிறவிஸ்வகேதுவையும் பாதத்தின்கீழவிழுந்து கிடக்கிற அநுசாலுவனையும்பார்த்து சந்தோஷப்பட்டு விஸ்வகேதுவையுங்கொண்டாடியநுசாலுவன்செய்கிறஸ்தோத்திரத்துக்குங்கிருபைகூர்ந்து திருவுளமிரங்கி அவன்கட்டையும் விஸ்வகேதுவினுடையகையினால்விடுவித்து அவன்செய்தபிழைகளை மன்னித்தருளினார்அதிலேவீமசேனனும் பிரத்தியுமனனும் மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்தார்கள் அதுகண்டுஅநுசாலுவன் அவர்களுக்கு நமஸ்காரம்பண்ணி வெகுபிரியவசனங்களைசொல்லி அவர்களிடத்திலும் விடை பெற்றுக்கொண்டு மறுபடியும் மூன்றக்ரோணிசேனைகளுடனும் சிறிதுகாணிக்கை கப்பங்களுடனும் அஸ்வமேதக்குதிரையுடனும் கூடவந்துகிருஷ்ணமூர்த்திவீமசேனன்விஸ்வகேதுபிரத்தியுமனன் இவர்களுடனே கலந்துகொண்டு பதினெட்டுவகை மேளவாத்தியங்களும் தாம்தாமென்று முழங்குகிறதாக சர்வாடம்பரத்துடனே அஸ்தினபுரத்திற்குவந்து தருமபுத்திரரைக்கண்டு அநுசாலுவனானவன்தான் தருமராசாவுக்குக் கொண்டுவந்த காணிக்கைகப்பங்களுடனே அந்த அஸ்வமேதக்குதிரையும் ஒப்புவித்து அவருடைய பாதத்தில் விழுந்து சாஷ்

டாங்கமாகத் தெண்டனிட்டான் அதுகண்டு தருமராஜாவுங் கிருபைகூர்ந்து தன்னுடைய தம்பிமார்களைப் போல அவனையும பார்த்து ஆதரணைசெய்தார்.

## அஸ்வமேதக் குதிரையை அனுப்புதல்.

இப்படியிருக்கிறகாலத்தில் அஸ்வமேதக்குதிரைவிடுகிறதற்குமுனைத்திருந்தசித்திராபர்வமும்வந்தது அப்போதுஸ்ரீவேதவியாசரும் அவிடத்திற்குயெழுந்தருளிவந்தார் அதைதெரிந்து தருமராசாவும் எதிர்கொண்டுபோய் நமஸ்காரஞ்செய்து அந்தமுனீஸ்வரரை அழைத்துவந்துஒர்ஆசனத்தில் எழுந்தருளச்செய்து அவருக்கு அர்க்கியபாத்திய ஆசனமுதலியசோடசவுபசார்ங்கள்செய்து தோத்திரம்பண்ணி அந்தவியாசபகவானுடைய அனுமதியினாலே இமோற்பர்வதத்தண்டையிலிருககிறதிரவியத்தைப்பொதிகளிலும்காவடிகளிலும்எடுப்பித்துக்கொண்டுவநது உக்கிராணத்தில் நிறைத்துவைத்து அதன்பிறகு ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி வேதவியாசர்இவர்களனுமதியின்பேரில்யாககுண்டம்வெட்டிவைத் தந்தயாகத்திற்குத்தகுந்த வஸ்துகளையுங் குறைவில்லாமல் அழைப்பித்துக்கொண்டு அந்தஅஸ்வமேதக் குதிரையையும்கங்கைமுதலியதீர்த்தங்களினால்ஸ்நானம்பண்ணுவித்துதருமபுத்திரருந் துரோபதிசமேதராய் ஸ்நானஞ்செய்துசபதபங்களைமுடித்துக் கொண்டுவந்துஅந்தயாககுண்டததில் அக்கினிபகவானைநிறுத்தி அந்த அக்கினிசாட்சியாகவியாசபகவான் மந்திரஞ்சொல்லதருமபுத்திரானவர் அந்தயாகதீட்சையைக் கைக்கொண்டு அஸ்வமேதக்குதிரையைக்கொண்டுவந்துநிறுத்தி அதற்கு (நவரத்தினமயமான) ஆபரணங்களைத்தரித்து கந்தபுஷ்பஅட்சதைகளால்மந்திரபூர்வகமாய்அந்தக்குதிரையைப்பூசித்து தன்னுடையவிருதாகிய கீர்த்திப்பிரதாபத்தைஒருதங்கபட்டத்திலெழுதிஅந்தபட்டத்தை அஸ்வமேதக்குதிரையினுடைய லலாடஸ்தானத்திற்கட்டி மற்ற ஐம்பத்தாறுதேசத்துராசர்களுடையவிருதுகளையெல்லாம் தண்டைகளிலெழுதி அந்தக்குதிரையினுடைய நாலுகால்களுக்கும்போடுவித்து யாககுண்டத்தையும்பிரதக்ஷணஞ்செய்வித்துசகலதேவதாமந்திர ஆவாகனமும்பண்ணி பதினெட்டுவகைமேளவாத்தியங்களுடனே அஸ்தினபுரத்தைப்பிரதட்சணம்பண்ணுவித்து குதிரையைவிட்டு அதன்பிறகே அர்ச்சுனன்விஸ்வகேதுவையும்பிரத்தியுமனனையும் மேகவர்ணனையும அனுசாளுவனையும் எவ்வற்ற சுகனையும் மூன்றுஅக்ரோணிசேனைகளையுங்கூட்டி தருமராசாவானவர் அர்ச்சுனனைப்பார்த்து ஓ அர்சசுனா பிரசாட்சயம்மெத்தவும் ஆகவொட்டாமல் அதிசீக்கிரத்தில் குதிரையை நடப்பித்துக்கொண்டுவாவென்றுஉத்தரவுபண்ணிஅந்தச்சமயத்தில் ஒவ்வொருபிராமணனுக்குயானைஒன்று குதிரைமூன்று தேர்ஏழு சேவகர்ஒன்பது ஸ்திரீகள்நாலு ஒருபாரந்தங்கம் இந்தவிதமாக இருபதினாயிரம் பிராமணர்களுக்குத் தானம்பண்ணினார்.

அப்பொழுது கிருஷ்ணபகவானும்அர்ச்சுனனைப்பார்த்துஓ அர்ச்சுனா நானுங்கூடவரவேண்டுமோ வென்றுகேட்கஅர்ச்சுனனுமஓகோ

பாலகிருஷ்ண தேவரீர்வரவேண்டியதில்லை இவிடத்தில் தானேயிருக்
து ஆசீர்வாதம்பண்ணிக்கொண்டிருந்தால் அதுபோதுமென்றுசொல்
லி அந்ததேவனுக்குதெண்டனிட்டு அவருடைய அனுமதிபெற்றுக்கொ
ண்டு தருமபுத்திராவீமசேனனை இவர்களுக்கு நமஸ்காரம்பண்ணி அ
வர்களிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு தேவகிதேவியாருக்கும்கு
ந்திதேவிக்கு தெண்டனிட்டு அவர்களிடத்திலும் செலவுவாங்கிக்கொ
ண்டு நகுலசகாதேவர்களைப்பார்த்து அவர்களையும் தமையனாரிடத்தில்
தானே பத்திரமாயிருக்கும்படிக் கட்டளையிட்டு வியாசபகவான்செய்
த ஆசீர்வாதமுங்கைக்கொண்டு அர்ச்சுனராசனும் காண்டீபபாணியா
ய்ரதாரூடனாய் சேனைகளுடனேயும் புறப்பட்டு சிங்கநாதம் சங்கநாதம்
வேணுநாதம் முதலானபலவிதவாத்தியங்களு முழங்கத்தக்கதாக அ
ண்டகடாகங்களுமதிரும்படிச்சயபேரிகையடித்துக்கொண்டுமகாவை
பவத்துடனே நடக்கும்போது அந்தஅஸ்வமேதக்குதிரையையும்தண்
டுவிட்டு தன்னிச்சையாக மேற்குமுகமாய்த் திரும்பிப்போகையில் அ
ந்தக்குதிரையானது மலசலாதிகளை விஷ்டித்தவிடத்திலும் அடிகள்
வைத்தவிடத்திலும் ஓமசாந்திகள் பண்ணுவித்து தானதருமங்களைச்
செய்துகொண்டு அந்தக்குதிரையானது தன்னிச்சையாகநடந்துவே
சாரிபடுத்துகொண்ட விடங்களில் தண்டுவிட்டிறங்கி அந்தயிடங்கள்
தோறுங்கோயில்குலங்கள் உண்டாக்கிவைத்தும் அந்தப்பிரகாரகம் அ
ர்ச்சுனராசனும் யுத்தசன்னத்தனாய்ச்சகலசேனாசமேதனாய் அந்தக்கு
திரையின்பின்னே பதினாயிரஞ்சேவகர்களைநிறுத்தி தன்னுடையரத
த்தைப்பிறகேநடத்திக்கொண்டுபோனான் அப்படிபோகிறபோது அந்த
க்குதிரையும்மகாகிருஷ்ணபதிபட்டணத்துக்கோட்டை வாசலுக்குச்
சமீபத்தில் ஒருமரத்தோரத்தில பச்சென்றபுல்லைக்கண்டு அந்தப்புல்
லைமேய்ந்துக்கொண்டிருந்தது அங்ஙனமிருக்கையி லந்தப் பட்டணத்
தையரசாட்சிசெய்கின்ற நீலத்துவசமகாராஜனுடைய குமாரனைபி
றவீரனென்கிறவன் தன்னுடையபட்டஸ்திரீயாகியமதனமஞ்சரியு
யுடனே கூடிவந்துமகாகோலாகலத்துடனே அவிடத்தில்ஒருமடுவில்
ஜலக்கிரீடைசெய்துவிளையாடிக்கொண்டிருக்கும்போது மதனமஞ்ச
ரியானவள் அந்தக்குதிரையைக்கண்டு ஆச்சரியப்பட்டு தன்புருஷனா
கிய பிறவீரனுக்குக்காண்பித்தாள் அந்தபிரவீரனும் குதிரையைப்பா
ர்த்து ஆச்சிரியப்பட்டு மடுவைவிட்டுவெளியேவந்து வஸ்திராபரணங்
களைஎடுத்து தரித்துக்கொண்டு அந்தக்குதிரையினிடத்திற்குப் போய்
அதினுடைய நெற்றியில் கட்டியிருக்கிற பொற்பட்டத்தைவாசித்துப்
பார்க்க அதில்எப்படியெழுதியிருந்ததென்றால் பரதவம்ச மென்கிற
திருப்பாற்கடலுக்குச்சந்திரனைப்போலவும்சத்துருக்களென்கிறராச
வம்சஅந்தகாரத்திற்குச் சூரியனைப்போலவும் விளங்குகின்றமகாகீர்
த்திப்பிரதாப சவுரியமுள்ள தருமராசா வானவர் அஸ்வமேத
யாகஞ்செய்யும்படி விட்டகுதிரையாகும் இந்தக்குதிரை யின்
பின்னேவருகிறவன் ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவனோடும் எதி
ர்த்துயுத்தஞ்செய்து ஜயமடைந்து அவரிடத்திற்பா

சுபதாஸ்திரத்தைப்பெற்றுக்கொண்டமகானுபாவன் பின்னும் தேவ
லோகத்துக்காண்டாவனத்தை அக்கினிதேவனுக்குத்தத்தம் பண்ணி
தேவேந்திரனைச்செயித்துதேவர்கள்- கந்தருவர்கள் யக்ஷர்கள்பன்ன
கர்-உரகர்- தயித்தியர் இப்படிப்பட்டவர்களையுமுறிய அடித்து அந்த
அக்கினிபகவானுக்குத்திருப்திபண்ணுவித்து அவரிடத்திற் காண்டீப
மும்அக்ஷய தூணியுமரதமும்பெற்றுக்கொண்டவீராதி வீரன்பின்னு
ம்தேவலோகத்து நாடகசாலையில அஸ்திரவித்தைபழகிதேவர்களுக்
குப்பயங்கரமானகாலகேயநிவாதகவசாளென்கிற ஒன்பதுகோடி ரா
க்ஷசவீரர்களையும் அதம்பண்ணிதேவர்களுக் கெல்லாம் நிற்பயமுண்
டாக்கிவைத்துதேவேந்திரன்கையில்தேவகிரீடமும்தேவசங்கும் பெ
ற்றசூராதிசூரன்இன்னுமிவ்வகைப்பட்ட அதிவீரபராக்கமசவுரியமு
டைய அருச்சுனமகாராசனென்றும் எழுதி அந்த அர்ச்சுன மகாராச
னைச்செயிக்கத்தக்க சாமார்த்தியமுள்ளவனும்க்ஷத்திரியவமிசத்திற்பி
றந்தவனும்முகத்திலேமீசைவைத்துக்கொண்டிருக்கிறவனும் ரணக்க
ளத்தில்முன்வைத்தகாலைப் பின்வாங்காமல்னின்று உண்மையாய்எதி
ரிட்டுயுத்தம்பண்ணுகிரவனுமானல் இந்தஅஸ்வமேதக குதிரையைப்
பிடித்துக்கட்டக்கடவனென்று எழுதியிருந்தது அதையெல்லாம்பிற
வீரனானவன் நன்றாகவாசித்துப்பார்த்து புன்சிரிப்பாகச்சிரித்துதலை
யையசைத்துஐயையோ அந்ததருமராசாவானவன் கொஞ்சமாகிலு
புத்தியில்லாமல் தானேவீரனென்றும் இந்தக்குதிரையின்பின்னேவ
ருகிற அருச்சுனனே மகாவீரப்பிரதாபசௌரியமுள்ளவனென்றும்
எவ்வளவும்பயமில்லாமல் எழுதினனல்லவா ஆனாலும் அவனுடைய
சவுரியத்தைச்சற்றேபார்ப்போமென்று சொல்லி அங்கேயிருந்தசே
வகர்கள்கையில் அந்தக்குதிரையைப்பிடித்துக்கொடுத்துபட்டணத்தி
ற்குள்ளே கொண்டுபோய்க்கட்டிவைக்கும்படி அவர்களுக்குத்திட்ட
ஞ்செய்துதன்னுடைய ஸ்திரீயையுங் கூட்டியனுப்பிவிட்டு பிறகு தா
னும்பட்டணத்திற்குப்போய் தன்னுடைய ரதகெசதுரக பதாதிகளை
யுங்கூட்டிக்கொண்டுவந்து யுத்தசன்னுத்தனாய்ரதாரூடனாய் வில்லைக்
குணத்தொனிபண்ணி அட்டகாசஞ்செய்து எதிரில்நின்ருன்.

(நீலத்துவசமகாராசன்யுத்தம்)

இந்தவிசேஷமெல்லாம் அநத அஸ்வத்தின்பிரகே நடந்துவந்த
சேவர்களால் பிரத்தியுமன்னன்-விஸ்வகேது-அருச்சுனன் முதலான
வர்களும் கேள்விப்பட்டுஆக்கிரவியாக்கிரம நிக்குரோதராய் எரிந்து
விழுந்து மகாரோஷத்துவேஷங்களுடனே வந்து பிறவீரனைக்கண்
டு ஓராஜகுமாரகா நீ என்விருதாவாக எங்களுடைய அஸ்வமேதக்கு
திரையைப்பிடித்துக்கொண்டுபோனாய் நீயோயெங்களோடெதிர்த்து
ச் சண்டைசெய்கிரவன்உம்மாலாகமாட்டாது வேண்டாம்வேண்டா
ம இன்னஞ்சிறிதுகாலம் இந்தப்பூமண்டலத்தில்நீ பிழைத்திருக்கவே
ண்டுமானல எங்கள்குதிரையைக் கொண்டுவந்து வொப்பிவித்துபோ

வென்றுசொல்ல அதுகேட்டுபிறவீரனும்மகாவுக்கிராகாரத்துடனே
தன்னுடையகையிலிருக்கின்ற வில்லிலேயனேகமாயிரம்பாணங்களை
த்தொடுத்து விஸ்வகேதுமுதலானபிரமுகாள்பேரில்பிரயோகஞ்செ
ய்து நோகசெய்கிறபோது பிரத்தியுமன்னனும்மகாரோஷத்துடனே
தனனுடையரதத்தைத்தூண்டிப் பிறவீறன்பேரிலெதிர்த்து அனேக
மாயிரமதிவ்யாஸ்திரங்களைப் பிரயோகம்பண்ணினனுகண்டுபிரவீர
னும்பயங்கொள்ளாமல் வீரசிங்கம்போலேஆக்கிரமித்து தனனுடை
யவில்லிலே கோடையிடிகளுக்குச் சமானமான அகோரபாணங்களை
த்தொடுத்துப்பிரயோகஞ்செய்து பிரத்தியும்னனுடையசாரதியை
யுங்குதிரைகளையுங் கொன்று அவனேறிக்கொண்டிருந்த ரதத்தையு
ம்பொடிபொடியாக்கி யவனையும்ரத்தமயமாக்கினன்- அதுகண்டுவிஸ்
வகேதுவுங் கோபதீப்தனாயெரிந்துவிழுந்து பிரவீரன்பேரில் சிங்கத்
தைப்போலயெதிர்த்துப்போராடுகிறபோது பிரவீரனனவன் மிஞ்சி
விஸ்வகேதுவின்பேரிலும் அனுசாளுவன் பேரிலும் எவ்வற்றுசுவ
ன்பேரிலுமேகவர்ணன்பேரிலும்அனேகமாயிரம்எண்ணிக்கையில்லா
தசஸ்திர அஸ்திரங்களைப்பிரயோகஞ்செய்து அவர்களுடைய சரீர
மெல்லாம் ரத்தமயமாகும்படி சல்லடைக்கண்களாகத்துளைத்துவிட்
டான் இப்படியிருக்க இந்தவிஸ்தாரமெல்லாம் நீலத்துவசமகாராஜ
ன்கேள்விப்பட்டுமகாகோபங்கொண்டு யுத்தசன்னத்தனாய் ரதாரூட
னாய் அனேகசேனைகளுடனே புறப்பட்டு பட்டணத்தைவிட்டுவெளி
யேவந்து அருச்சுனனுடனேஎதிர்த்துஅனேகவிதமான திவ்வியாஸ்
திரங்களைப் பிரயோகஞ்செய்து அந்தஅருச்சுனனையுமவனுடையசே
னைகளையும்நோகப்படுத்தி தானுமந்த அருச்சுனராசனுடையபாணாக்
கினியினால்வருத்தப்பட்டுதன்னுடையமருமகனாகிய அக்கினிதேவனை
நினைத்து அவனையழைப்பித்துஅந்தஅருச்சுனனையுமவனுடையசேனை
களையும் பஸ்மீகரப்படுத்திவிட்டுவாவென்று உத்தாரவுசெய்துஅந்தநீ
லத்துவசமகாராசனனவன் தன்குமாரனாகிய பிறவீரனையுங்கூடவே
யழைத்துகொண்டுதன்பட்டணத்திற்குப்போய்ச்சேர்ந்தான்பிற்பா
டு அக்கினிதேவனும் தன்னுடையமாமனார் சொல்லிப்போன கட்ட
ளைப்படியே மகாகோபதீப்தனாய் பிரபலாகாரமாய்விஸ்தீரணமானபு
கைகளுடனும் எரிகளுடனும் பிரகாசித்தெழும்பி ஜடஜடவென்கிற
தொனியுடனேபரவிவந்து அருச்சுன மகாராசனுடைய ரதகஜதுர
கபதாதிகளையெல்லாம் எரித்துச்சாம்பலாக்கிக்கொண்டுவருகிறபோ
து அருச்சுனமகாராஜனுங்கண்டு விசாரப்பட்டு தன்னுடைய கையிற்
பிடித்திராநின்ற காண்டீபத்தைரதத்தின் பேரிலூன்றிக்கொண்டுதன்
னுடைய கைகளைக்கட்டிக்கொண்டு அந்தஅக்கினிதேவனைப்பார்த்து
ஓ அக்கினிபுருஷா உமக்குப்பதினாயிரம்சரணம்சரணம்தேவரீர்பூர்வ
சினேகிதத்தைக் கொஞ்சமாகிலும் எண்ணிப்பாராமல் என்னுடைய
சேனைகளையெல்லாமிப்படிசாம்பலாக்கிவிடலாமாமுன்னாலே உமக்கு
ண்டான அசீர்ணரோகத்தைக்குறித்து தேவலோகத்துக்காண்டாவ
னத்தைத்தகனம்பண்ணுவித்து அந்தமுப்பத்துமுக்கோடி தேவர்களு

டனும் எதிர்த்துப்போராடினை என்னை உம்முடைய சிநேகனென்றெ
ண்ணிப்பாராமற்போனீரோ நான்செய்தநன்றியைமறந்துவிட்டீரோ
அதுவுமல்லாமல் தேவரீரடியேனுக்குக்காண்டீபமும் அக்ஷயதூணியு
ம்ரதமுங்கொடுத்துப்பாரதயுத்தத்தில் துரியோதனாதிகளைச் செயித்து
செயம்பொருந்தும்படிசெய்வித்த மகானுயாவர்நீரல்லவா அப்படிப்ப
ட்ட மகாபுருஷராகிய உமக்குஅனேகசரணஞ்சரணமமேலும் என்
னுடையநாமமாகியதனஞ்செயனென்கிறதிருநாமத்தைப்படைத்துகீ
ர்த்திபெற்றமகோத்தமனே உமக்கனேகஞ் சரணஞ்சரணம்இம்மவே
ளையில் என்னையும்என்னுடைய சேனைகளையும் வருத்தப்படுத்தாமல்
யானுகாத்தருளிரட்சியுமென்று அர்ச்சுனமகாராசன்தோத்திரஞ்செய்
ய அந்ததோததிரவசனங்களையனுவளவுஞ்சட்டைப்பண்ணாமல்அக்கி
னிதேவன் பின்னும்விஸ்திரணமாய்ப் பிரகாசித்தெரிந்துவிழுந்துசே
னைகளையெல்லாம்பஸ்மீகரப்படுத்திக்கொண்டுவருகையிலதை அர்ச்சு
னமகாராசன்கண்டுமகாகோபதீப்தனாய் எரிந்துவிழுந்துதன்னுடைய
தேரின்பேரிலூன்றிய காண்டீபத்தைக்கையிலெடுத்துக்கொண்டுவரு
ணாஸ்திரத்தைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்துசப்தமேகங்களுமொ
ன்றாகக்கூடி ஏககாலத்திலவருஷித்ததுபோல் மழைபொழிவித்தான்
அதையுஞ்சட்டைபண்ணாமல் விழுங்கிக்கொண்டு அக்கினிதேவன வ
ருகிறபோது அந்தஅர்ச்சுனராசனும்மகாரோஷத்துவேஷத் துடனே
தன்னுடையகாண்டீபத்தில்நாராயணாஸ்திரத்தைத்தொடுக்கவேண்டு
மென்றுநினைத்து அம்புறாத்தூணியிலிருந்தநாராயணாஸ்திரத்தைககை
யிலெடுத்தவுடனே அதுகண்டு அக்கினிதேவனும்பயமடைந்தவனாய்ந
டுநடுங்கிநின்று தன்னுடைய சுவாலையெல்லாம்தனக்குள்ளேயடக்கிக்
கொண்டுநர்வமடைங்கிஒருபிராமணனைப்போல்வந்துநின்று அர்ச்சுன
மகாராசனைப்பார்த்து ஓ அர்ச்சுனமகாராசனேநீர்தயவு செய்து என்
னைரட்சியும்அந்த அஸ்திரத்தைமாத்திரந் தொடுக்கவேண்டாம் நான்
என்னுடைய தீக்ஷண்ணியத்தினால் சகலசராசரங்களையும்பஸ்மீகரப்ப
டுத்துகிறவனானாலும இந்தநாராயணாஸ்திரத்திற் பிறந்த அககினிசுவா
லையானது என்னைபஸ்மீகரப் படுததிவிடும் ஆதலால் அந்த அஸ்திர
த்தை நீர்பிரயோகஞ்செய்யாமல் என்னைக்காப்பாற்றியருளவேண்டு
ம் நான் உம்முடைய சுரூபத்தையெண்ணிப்பாராமல என்னுடைய அ
ஞ்ஞானத்தினால் இப்படிசெய்தேன் இனிமேலும்முடைய சிநேகத்
தைவேண்டி உம்மிடத்தில் சரணாகதியென்றுவந்தடைந்தேன் ஆகை
யால் நான்செய்த குற்றங்களை யெல்லாம் மன்னித்து நீர்என்னைக்கா
த்துரட்சிக்கவேண்டும்மேலும் நீர்கிருஷ்ணபகவானுடைய சார்பிலே
யிருக்கிறீர் அப்படிப்பட்ட உம்மைச்செயிக்கிறதற்கு எவர்களாலுமு
டியாது அந்தகிருஷ்ணமூர்த்தியினுடைய ஹரியெனனுந்திருநாமத்தி
ன் பிரபாவத்தை அளவிட்டு பிரம்மதேவன்முதலிய தேவர்களாலும்
வர்ணிக்கக்கூடாது அஃதெப்படியென்றால்அந்தஹரியென்னும்மகாவ
க்கியமானது சத்தியமாகவுமதேவசாரமாகவும்மகாஅநதரங்கரகஸ்ய

மாகவும சகலசிவராசிகளுக்கு மாதாரமாகவும் விளங்கப்பட்டது அப்படிப்பட்டவாககியத்தை எத்தனே இழிகுலத்திற்பிறந்தவனுனலும திரிகரணசுத்தியாய் ஒருதரந்தியானஞ்செய்வாளுகில் அந்தபுண்ணியபுருஷன்பூலோகத்தில் அஸ்வமேதயாகமுதலான அனேகயாகங்களேச் செய்தபலனும் கோதானமுதலான சோடசமகாதானங்களேச் செய்தபலனும்பெற்று அந்தத்திலந்தஅரியென்னும் திருநாமத்தையுடைய ஸ்ரீமந்நாராயமூர்த்தி திருவடிகளிலுஞ் சேர்ந்து பரமபவுத்திரனுவாண் மேலும் கிருஷ்ணுவதாரமாகவந்து பாரதயுத்தத்தில் உமக்குரதசாரத்தியஞ்செய்தருளிய மகானுபாவனுடைய அந்ததிவ்வியநாமத்தைப் பயபக்தியுடன ஒருதரம நினேத்தாலு முற்கூறிய அந்த மகாபலன்களே யுண்டாகும் அல்லாமலுமந்தஅரிபக்தியுண்டாகியபுண்ணியபுருஷனுக்கும் அரிபக்தியில்லாதபிராமணனும் ஈடல்ல அப்படிப்பட்டஅரியையசேவிக்கிறதை விட்டு வேறுதேவதைகளேச் சேவிக்கிறவன் பிழைப்பு எப்படிப்பட்ட தென்றுல் தாகமெடுத்தவன் கங்காநதி யணடைக்குவந்தும் அந்ததிர்த்தத்தைச் சாப்பிட்டுதாகநிவர்த்திசெய்யாமலந்தீர்த்தத்தை விட்டுவிட்டு அப்பால் கிருஷ்ணவேணி தீர்த்தத்தைச் சாப்பிட்டதுபோலாகும் இந்ததிருஷ்டாந்தரத்தினுல்நாம்பிறந்தபயனேப்பெறும்படி அந்தஅரியையே சதாகாலமு மிருதய கமலத்திலவைத்துச சேவிக்கவேண்டும் அவருடைய திருவடிகளேயே கைகால்பரிசித்த பூசிக்கவேண்டும் அவருடைய திருவுருவத்தையேகண்களாற்பார்த்துசந்தோஷிக்கவேண்டும் அவ்ருடையபிரபாவசரித்திரங்களேயே காதுகளாலகேழ்விப்பட்டு மகிழவேண்டும் அவருடைய பாதகமலங்களின் திவ்வியபரிமளத்தையே நாசியினுலாக்கிராணித்து ஆனந்திக்கவேண்டும் அவருடையதிருநாமஸ்மரனேயே நாவினுல் துதித்துதிருத்தியிருப்தியை பெறவேண்டும் மப்படிப்பட்ட மகானுபாவனேயே தொழமையாகப் பெற்றிருக்கின்ற உமக்குஒருநாளுங்குறைவில்லே ஆதலால் ஓஅர்ச்சுனமகாராசனே நான் இப்போது பஸ்மீகரப்படுத்திவிட்ட உமமுடைய சேனேகளேயெல்லாம் எழுப்பிவிடுகிறேனதல்லாமலும் என்மாமனாகிய நீலத்துவசமகாராசனுக்கு முமக்குஞ் சமாதானம்பண்ணுவித்து யவரையும்உமக்குபடைத்துணேயாக்கி உம்முடையபிறகேவரும்படிசெய்விக்கிறேன் இப்பொழுது நீர்தயவுசெய்து என்னேரட்சிக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிற அக்கினிதேவனேப்பார்த்துஓயக்கினிபுருஷா நான் இந்நேரம்உன்னேலெகுவாய்வேண்டிக்கொணடு யனேகமாயிரஞ்சமாதானவார்த்தைகள்சொன்னுலுமதுகளேச்சற்றுகிலுமெண்ணிப்பாராமல் நிககிரகஞ்செய்துவிட்டு இப்போது உனககு ஆபத்துநேரிட்டவிடத்தில் என்னேவேண்டிக்கொள்ளுகிருய் இதுஎப்படியிருக் கிறதென்றுல் ஒருதிருடனுனவன் வழியேநடந்துபோகின்றவர்களே யடித்துப்பறிக்கவேண்டுமென்று நினேத்துஒருதடியைக் கையிலெடுத்துக்கொண்டு அவர்சமீபத்திற்போய்உடனே சமயமில்லாவிட்டால் கையிலிருந்ததடியைக் கக்கத்தில்வைத்

துக்கொண்டு அவர்களுக்குத் தெண்டனிட்டுக் கொஞ்சம் வெற்றிலை
பாக்குக்கொடுங்கோளென்று கேட்டதுபோ லிருக்கின்றதென்று அ
ர்ச்சுனராசனசொல்ல அதுகேட்டு அக்கினிபகவானு மனேகபிரியவ
சனஞ் சொல்லி அர்ச்சுனனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தன்னு
ல் படுசூரணமாய் இறந்துவிட்ட ரதகஜதுரக பதாதிகளை யெல்லாம்
பிழைக்கப் பண்ணுவித்து அர்ச்சுனராசனை அவ்விடத்திற்றானே நிறு
த்திவிட்டு தன் மாமனாராகிய நீலத்துவச மகாராச னிடத்திற்குப்
போனானென்று செயமுநீந்திரர் சொலல அதுகேட்டு ஜெனமேசெ
யமகாராஜாவுமாச்சரியபபட்டு செயமுனீந்திரர்க்குநமஸ்காரஞ்செய்
து ஓ ஐயாமுனிநாதரே அந்தநீலத்துவசமகாராசனுக்கு அக்கினிதே
வன் மருமகனானவிதம் எப்படி யதையடியேனறிந்துகொள்ளும்படி தி
ருவுளம்பற்றி யருளவேண்டு மென்று விண்ணப்பஞ்செய்ய அதுகே
ட்டு ரிஷிசிரேஷ்டராகிய செயமுனீந்திரர் சொல்லுகிறார்

(அக்கினிதேவன்வரலாறுகூறுதல்.)

கேளுமையா செனமேஜெய மகாராஜாவே அந்தமகா கிருஷ்ணம
தியென்னும் பட்டணத்தையாளுகிறநீலத்துவசமகாராசனுக்கு சுவா
லாதேவியென் கிறவளிடத்தில் சுவாகாயென்கிற ஒருபெண்பிரந்தது
அந்தப்பெண்ணை தாயுந்தகப்பனும் சந்தோஷத்துடனே மகாசெல்வ
மாகப்போஷித்துக்கொண்டுவருகையி லந்தப்பெண்ணானவள் பூர்வப
க்ஷசந்திரனைப்போலே நாளொருமேனியாய்ப்பொழுதொருவர்ணமா
யவளர்த்துப் பன்னிரண்டு வயதுள்ள பாலகுமாரியாய் எவ்வர்ணத்
தை யடைந்தாள் அதுதெரிந்து நீலத்துவசமகாராசனும் தன்குமார
த்தியாகிய சுவாகாதேவியைப்பார்த்து ஓ அம்மா புண்யவதீ நானஉன
க்குத்தகுந்த இவ்யபுருஷனை யயைப்பித்துவந்து உனக்குகல்யாணஞ்
செய்து வைக்கிறேன் இப்பொழுது எந்தராஜன் பெரில் உனக்குஅ
பேக்ஷ யிருக்கின்றது அதைச்சொல்லு மம்மாவென்று கேட்க அது
கேட்டுஅந்தசுவாகாதேவியும்தன்பிதாவாகியநீலத்துவசமகாராசனைப்
பார்த்து ஓஐயாஎனக்குப்பூலோகத்திலுள்ளராசாக்களும்வேண்டாம்
தெய்வலோகத்திலுள்ள தேவாகளும் வேண்டாம் அந்ததேவர்களுக்
குமுதன்மையாயிருக்கப்பட்ட அககினிதேவனை எனக்குபுருஷனாகப்
பண்ணுமென்று சொல்ல அதுகேட்டு நீலத்துவசமகாராசனும் ஓஅ
ம்மாபாககியவதி உனக்குப்பயித்தியங்கொண்டோ அந்தஅக்கினிதே
வனைக் கோரினாய் அவன் மூன்றுகாலுங் ஏழுநாக்குமாய் சர்வபக்ஷ
ணீகரனாய் மகாகுரோதியாய் எந்தவேளையும் எரிந்துகொண்டேயிரு
ப்பான் அப்படிப்பட்ட புருஷனை நீவிரும்புனாய் அவனைக் கனவிலும்
நீவிரும்பவேண்டாமென்று வெகுவாய்ச்சொல்ல அதுகேளாமல அ
ந்தசுவாகதேவியும் நானக்கினி புருஷனைத்தவிர வேறொருபுருஷனை வி
ரும்புகிறதில்லை யென்றுஉறுதிவார்த்தையாய்ச் சொல்லுவதுகேட்டு
நீலத்துவசமகாராசனு மப்படியேநலலதென்று சம்மதப்பட்டிருந்தா
ன் அதன்பின்பு சுவாகாதேவியுங் காட்டுக்குப்போய் அக்கினிதேவனை
நோககித்தபசுசெய்தாள் அதுதெரிந்து அக்கினிதேவனும் பிரத்திய

க்ஷமாகவந்து நீ என்னையழைபித்தகாரியம் என்னவென்றுகேட்க அ
தற்குசுவாகாதேவியும் ஓ அக்கினிபுருஷா நீர்என்னைக்கலியாணஞ்செ
ய்துக்கொள்ள வேண்டுமென்றுசொன்னாளதற்கு அக்கினிதேவனு
ஞ் சந்தோஷசரமா யப்படியேநல்லதென்று சம்மதித்து அவள்பிற
கேவந்து நீலத்துவசமகா ராசனைக்கண்டு அந்தராஜன்செய்த பூசை
யைக்கைக்கொண்டு அந்தநீலத்துவசமகாராசனைப்பார்த்து ஓராசேந்
திரா உன்குமாரத்தியாகிய சுவாகாதேவியை எனக்குபாணிக்கிரகண
ஞ் செய்துகொடுப்பாயாகில் நானின்றுமுதலாக உன்னுடையமாகிரு
ஷ்ணபதி பட்டணத்தில் தானேயிருந்துகொண்டு உனக்கு எதிராளி
யாய் சத்துருக்களாய்வருகிற ராஜகூட்டங்களையெல்லாம் பஸ்மீகரப்
படுத்தி உன்னை செயம்பொருந்தும்படிசெய்கிறேனென்று உறுதியா
கச்சொல்லி அந்தப்பெண்ணை அப்போதுதானே பாணிக்கிரகணஞ்
செய்துக்கொண்டு அதுமுதல் மாகிருஷ்ணபதிபட்டணத்தில் நீலத்
துவசமகா ராசனுடைய அரண்மனையில்தானே வாசமாயிருந்தான்
கேட்டீரோ ஜெனமேசெய மகாராசனேயென்று சொல்லிப்பின்னை
யும் செயமுனீந்திரானவர் பூர்வசரித்திரத்தைச் சொல்லுகின்றார்,

கேளுமையாஜனமேசெய மகாராசாவே இந்தப்பிரகாரம் அந்தஅக்
கினிதேவனும் அர்ச்சுனமகாராசாவுக்கு சமாதானவார்த்தைகள்சொ
ல்லி சினேகம்பண்ணிக்கொண்டு பிறப்பாடுதன் மாமனாராகிய நீலத்து
வசமகாராசனிடத்திற்குப்போய் அவரைக்கண்டுஐயா நீலத்துவசம
காராசாவே என்னால் அந்த அர்ச்சுனராசனை சயிக்க முடியாது உம்மு
டைய உத்தாரப்படிக்கு அந்த அர்ச்சுனராசனுடைய சேனைகளெல்லா
ம் எரித்து பஸ்மீகரப்படுத்துகிறபோது அர்ச்சுனராசனும் கோபித்து
அவன்கையிற்பிடித்திராநின்ற காண்டீபத்தில் நாராயணாஸ்திரத்தை
த்தொடுத்துப்பிரயோகிக்கும்படி பிரயத்தினஞ்செய்தானதுகண்டுநா
ன்பயமடைந்துயந்தவர்ச்சுனராசனுடனே சினேகம்பண்ணிக் கொ
ண்டுஎன்னுடையசுவாலையினா லெரிந்துபோய்விட்ட யவனுடையசே
னைகளையெல்லாம்பிழைக்கச்செய்துநான்மாத்திரம்சாகாமல் தப்பிப்
பிழைத்துவந்தேனேனென்று லந்தயர்ச்சுனராசன் வீராதிவீரன் அ
வனுடனெதிர்த்துப்போராடுகிறது ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவ
னுக்கும்சக்கியமல்ல யதுவல்லாமல தேவேந்திராதி தேவர் களையுங்
கெலித்தவன் அவன்என்னுடைய அசீரணரோகத்தை நிவர்த்திசெய்
தவன் அப்படிப்பட்ட மகானுபாவனுடனே நீர்துவேஷம் பண்ணும
லவனைச் சினேகம் பண்ணிக் கொண் டவனுடைய அஸ்வமேதக்குதி
ரையையும் காணிக்கைகப்பணங்களையுங் கொண்டுபோய் செலுத்தி ச
மாதானம்பண்ணிக் கொள்ளுமென்று சொன்னான் அந்தவார்த்தைக
ளை யெல்லாம் நீல த்து வ ச ம கா ரா ச ன கேள்விப்பட்டுமெ
ய்தானென்று சம்மதித்து அனேகமாயிரந் தங்கத்தட்டுகளும் நவர
த்தினங்களையும் ப ழ வ ங் க க ளை யும் எடுப்பித்துக்கொண்டு அந்
த அஸ்வமேதக் குதிரைக ளை யு ங் கூ ட் டி க் கொ ண் டு ச

லசேனைகளுடனே பட்டணத்தைவிட்டுபுறப்பட்டா னதுகேட்டு நீல
த்துவசமகாராசன் பெண்சாதியாகிய சுவாலாதேவியும் குருக்கேவந்
துமறித்துக்கொண்டு ஓ பிராணநாயகா நீர்இப்போதுநடக்கிறகாரியம்
எனக்குள்வ்வளவும்நன்றாயிருக்கவில்லை பூலோகத்தில் உத்தமக்ஷத்தி
ரியராயிருக்கப்பட்டவர்கள ஒருசங்கதியைபபற்றி ஏதாகிலும்சபதம்
பண்ணிக்கொண்டால் அதைத்தப்பிநடப்பார்களோ ஒருநாளும் சபத
ம்தப்பிநடவார்கள அப்படியாகமிஞ்சிவருங்காலத்தில தங்களுடையபி
ராணனைக்கொடுத்தாவது சத்தியத்தையேநிலைநிறுத்துவார்களப்படியி
ருக்கதேவரீர்க்ஷத்திரியவம்சத்திற்பிறந்தவராயிருந்தும அந்த அருச்சு
னனுடையகுதிரையைமுன்பின் எண்ணிப்பாராமல பதட்டமாகப்பிடி
த்துக கட்டிவிட்டு மறுபடியும்அவனோடெதிர்த்துப்போராடி திரும்
பவும் அவனை செயிக்கமுடியாமல்பயந்து ஓடிவந்து அபகீர்த்திக்குள்
ளாகி பின்னும் அவன்குதிரையையுங் காணிக்கைகப்பங்களும்கொண
டுபோய்க்கொடுத்து உபசாரவார்த்தைகள்சொல்லிசிநேகம்பண்ணிக்
கொள்ளுகிறதுராசநீதியா இந்தசங்கதியை உம்மைப்போன்றராசாக்
கள் கேள்விப்பட்டால் பரிகாசம்பண்ணமாட்டார்களோ இப்படிப்ப
ட்ட பரிகாசததுக்கிடமான காரியஞ் செய்கிறதைப்பார்க்கிலும்அந்த
அர்ச்சுனனுடனேஎதிர்த்துநின்றுயுத்தஞ்செய்துரணக்களத்தில மடி
ந்துபோனாலும் வீரசொர்க்கமுண்டாகும்அதனால்நல்லகீர்த்தியுமுண்
டு ஆகையால் நீர்எப்போதும்போலேஅந்த அஸ்வமேதக்குதிரையைஅ
ரண்மனையிற் கட்டிவிட்டு யுத்தசன்னத்தராய்ரணக்களத்திற்போய்அ
ர்ச்சுனனுடனேபோராடி அவனைக்கொன்று பேரும் பிரக்காதியும் ப
டைத்துக்கொள்ளுமென்றுசொலல அதுகேட்டு நீலத்துவசமகாராச
னும் அப்படியேநல்லதென்று சம்மதித்து திரும்பவும்அந்தக்குதிரை
யைக்கொண்டுவந்துதன்னுடைய அரண்மனையிற் கட்டிவைத்து தன்
னுடையமந்திரிபிரதானிகளையும் தம்பிமார்மாமன்-மைத்துனன்குமா
ரவர்க்கங்கள் பந்துவர்க்கங்கள் முதலானவர்களையுங்கூட்டிக்கொணடு
யுத்தசன்னத்தனாய் ரதாரூடனாய்ப்பட்டணத்தைவிட்டுப்புறப்பட்டுவ
ந்து அர்ச்சுனராசனுடையசேனைகளுடனேஎதிர்த்துஅனேகமாயிரம்
சஸ்திர அஸ்திரங்களையும் பிரயோகஞ்செய்தான்.

அதுகண்டு அருச்சுனராசனும் சற்றுநேரம்ஆலோசனைசெய்து
அந்தஅக்கினிதேவன் சமாதானம்பண்ணிவைக்கிறேனென்றுசொல்
லிப்போனதென்ன இவன்சண்டைக்குவநததென்ன அவன்பேச்சைக்
கேளாமல் நம்மை செயிக்கலாமென் றுநினைத்துவந்தவனாகவேண்டும்
ஆனாலும்ஆகட்டும் இப்போதுஎன்பாணமென்கிறசொல்லினாலேஇந்
தராசாவைக்கேட்பிக்கிறேனென்றுசொல்லிமகாரோஷத்துவேஷனா
ய்த் தன்னுடையகையிற்பிடித்திராநின்ற காண்டீபத்தில்தேவேந்திரா
திதேவர்கள்கொடுத்ததிவ்வியபாணங்களைத்தொடுத்து நீலத் துவசம
காராசவினுடையசேனைகளின்பேரிற்பிரயோகம்செய்துஅந்தசேனை
களெல்லாம் பெருங்காற்றினலடிபட்டமாந்தளிர்கள்போல்பூமியில்வி
ழுந் திறக்கும்படிசெய்தான் அதுகண்டு நீலத்துவசமகாராசனுமகோ

பங்கொண்டு அருச்சுனராசன்பேரில் தன்னுடைய ரதத்தைத்தூண்டி
அநேகமாயிரம்பாணங்களைப் பிரயோகஞ்செய்தான் அதுகண்டு அருச்
சுனராசனும் அதிகரோஷத்துடனே தன்னுடையகாண்டீபத்தில்குரூ
ரமானநாராசங்களைத்தொடுத்து பிரயோகம்செய்து அந்தநீலத்துவச
மகாராசனுடையமார்பிலே தைக்கும்படிசெய்தான் அதனால் அந்தநீல
த்துவசனும்ஆயாசமடைந்து தொப்பென்று தேரின்பேரில்விழுந்து
மூர்ச்சையடைந்தான் அதுகண்டு அவனுடையசாரதியும்தேரைநடத்தி
க்கொண்டு பட்டணமேபோய்ச்சேர்ந்தான் அப்பொழுதுசூரியபகவா
னும்மேற்குத்திசையில் அஸ்தமானமாகினர் உடனே சந்திரோதயமு
ண்டாயிற்று தடாகங்களிலுள்ள தாமரைப்புஷ்பங்களெல்லாம்மூடிக்
கொண்டது செங்கழுநீர்புஷ்பங்களெல்லாமலர்ந்து அதிலே நீலத்து
வசமகாராசனும்மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்துதன்னுடையரதசார
தியைப்பார்த்து ஓ சாரதிநீயேன் தேரைக்கொண்டுவந்துவிட்டாயெ
ன்றுகேட்க அதற்கு அந்தசாரதியும் தன்னுடை ராசனைப்பார்த்து ஐ
யாராசசேகராநீர்யுத்தமுகத்தில்நிர்வகிக்கமாட்டாமல்மூர்ச்சையடை
ந்து ரதத்தின்பேரில்விழுந்துவிட்டபடியினால்நான்ரதத்தைக் கொண்
டுவந்து விட்டேனென்றுசொல்லஅதுகேட்டுநீலத்துவசமகாராசனு
ம்சந்தோஷித்தனாய்த்தன்னைத்தானேநிந்தித்துக்கொண்டுஐயையோ
யென்மருமகனாகியஅக்கினிதேவன்பேச்சைக் கேட்டு சும்மாயிராமல்
பாதகியாகியபெண்சாதிபேச்சைக்கேட்டு பிள்ளைகளையும்தம்பிமார்க
ளையும்பந்துவர்க்கங்களையும்கொன்றுவிட்டேனென்றுசொல்லிமனந்
தளர்ந்துதன்பெண்சாதியாகியசுவாலாதேவியிடத்திற்குப்போய் அவ
ளைப்பார்த்துமகாகோபங்கொண்டுஅடிபசாசே,உன்னுடையபேச்சை
க்கேட்டு நான்யித்தியக்காரனாய்ப்போய்விட்டேன் இனிநீயிருந்தால்
என்னுடையஅரண்மனையும் ஆஸ்தானமும் அழிந்துபோம்,ஆகையா
ல் நீயிங்கேயிருக்கவேண்டாம்எங்கேயாகிலும்ஓடிப்போவென்றுசொ
ல்ல அதற்குஅந்த சுவாலாதேவியும் நானேன் என்வீட்டைவிட்டுப்
போவேன் நான்போகிறதில்லையென்றுசொல்லஅதுகேட்டுஅந்தராச
னும் அவளைஅடித்துக்கழுத்தைப்பிடித்து தள்ளிக்கொண்டு போய்ப்
பட்டணத்திற்குவெளியேதள்ளிவிட்டு பிற்பாடு அந்தநீலத்துவசமகா
ராசனும்தன்னுடையஅரண்மனைக்குவந்துஅஸ்வமேதக்குதிரையைப்
பிடித்துக்கொண்டுசிறிதுகாணிக்கைகட்பங்களையும்எடுத்துக்கொண்டு
போய் அந்தஅருச்சுனராசனுக்குமுன்பாகவைத்து அவனைத்தழுவிக்
கொண்டு ஓ அருச்சுனராசனே நான்உன்னுடையசினேகம்வேண்டி
வந்தேன்நானும் என்னுடைய புத்திரமித்திரகளத்திராதிகளும்உங்க
ளுடையஅடிமையாயிருக்கிறோமென்றுஅநேகஞ்சமாதானவார்த்தை
கள்சொல்ல அதுகேட்டுஅந்தஅருச்சுனராசனும்அப்படியே நல்லதெ
ன்று சம்மதித்துமாகிருஷ்ணபதிபட்டணத்துக்கதிபதியாகியநீலத்து
வசமகாராசனைப்பார்த்து ஓராசேந்திராநீர் எங்களுடையசினேகத

ருதவேண்டிவந்ததுமெய்யானால் எங்களுடனேகூடபடைத்துணையாய் வரவேண்டுமென்றுசொல்ல அப்படியேநல்லதென்று அந்த நீலத்துவ சனும் சம்மதித்துப்பட்டணத்திற்போய் மறுநாள் அந்தராசனும் தன்னுடைய சேனைகளுடனே புறப்பட்டுவந்து அர்ச்சுனராசனுடனே கலந்துகொண்டான் அதுகண்டு அந்த அர்ச்சுனராசனும் அஸ்வமேதகுதிரையைவிட்டு அதின்பிறகே சகல சேனாசமுத்திரங்களோடு மகாஆடம்பரத்துடனே பதினெட்டுவகை மேளவாத்தியங்களு முழங்கத்தக்கதாகநடந்தான்.

(சுவாலாதேவி உல்முகாராஜனிடத்திற்போனது.)

அப்பால் இவ்விடத்தில் அந்தசுவாலாதேவியானவள் தன்புருஷன் அடித்துத்துரத்திவிட்டபடியினால் மகா துக்கத்துடனேபோய் காசிபட்டணஞ்சேர்ந்து அந்தப்பட்டணத்தையரசாட்சிசெய்கின்றதன் தமையனாகிய உல்முகனென்கிற ராசனைக்கண்டு கூகாவென்று கூச்சலிட்டு மார்பில் அறைந்துக்கொண்டு அவன் பாதத்தில் விழுந்து கண்ணீர்தாரைதாரையாயொழுகும் படியாக அழுதாள் அதுகண்டு அந்த உல்முகனும் தன்தங்கையாகிய சுவாலாதேவியைப்பார்த்து ஓ அம்மா சுவாலாதேவிநீயேன் அழுகிறாய் உனக்கு என்னகுறைவுசொல்லென்று கேட்க அதுகேட்டு சுவாலாதேவியும் ஓ அண்ணா வீரா என்துக்கத்தையென்னவென்று சொல்லப்போகிறேன் நான் என்கணவனாகியநீலத்துவசமகாராசனுடனேஒருவார்த்தைசொன்னேன்அந்தவார்த்தைக்காகஅவர் என்மயிரைப்பிடித்து இழுத்து அடித்துத்தள்ளி எங்கே யாகிலும் போய்விடென்று என்னைஓட்டிவிட்டார் ஐயையோ இதென்னபாவம் என்முறையைக்கேட்டு அவரைத்தண்டனைகண்டனை செய்கின்றவர்கள்ஒருவரும் இந்தப் பூமியின்கண் இல்லையேயென்று மிகுந்த அழுகையுடனேசொல்ல அதுகேட்டு அந்த உல்முகனும்பதறிப் பேசாமல் தன்னுடைய தங்கையைப்பார்த்தம்மா அவரப்படிப்பட்டகஸ்திப்படுத்தினாலும் நீ இப்படித் தனிவழியாகவந்திடலாமோ புருஷனானவன் தன்னுடைய பெண்சாதியின்பேரில் கோபித்துக்கொண்டு ஒருவேளை அடித்தாலுந்திட்டினாலும் வீட்டுக்குள்ளேதானே யிருந்துக்கொண்டு சாதிக்கவேண்டுமேயல்லாமல் சமுசாரியானவள் இப்படிவரப்போகாது நல்லது நீ பேய் வேலைபண்ணி வந்துவிட்டாய் ஆனாலுமாகட்டும் மாமிவீட்டுப்பெண் தாய்வீட்டுக்குவரலாமா தாய்வீட்டுப்பெண் மாமிவீட்டுக்குப்போகலாம் ஆகையினாலதற்குத் தாழ்வில்லை ஓ அம்மாநீநம்முடையவீட்டில்தானே சுகமாயிரு உன்புருஷனுக்குக் கோபந் தீர்ந்து அவருன்னை அழைத்துக்கொண்டுபோகிறதற்குவந்தா லப்போது அவரிடத்தில் சகலதிட்டமும் பண்ணிக்கொண்டு பிற்பாடு உன்னை அனுப்பி வைக்கிறேனம்மா வென்றுசொல்ல அந்தவசனங்களைக் கேட்டு சுவாலாதேவியும் உல்முகனைப்பார்த்து ஓ அண்ணாவீ நான் என்புருஷனடித்துக் துரத்திவிட்டானென்று உன்னண்டைக்கு வந்தவளல்ல பூலோகத்தில் புருஷனானவன் ஸ்திரியின்பேரில் கோபித்துக்கொண்டா லங்

தஸ்திரியும் வீட்டில்தானே யிருக்கவேண்டுமேயல்லாமல் ஆனாலும் நீ யேன் இப்படிவந்தாயென்று கேட்பீராளுல்அதுவுஞ் சொல்லுகிறேன் கேளும் அஃதென்னவென்றால் அஸ்தினபுரத்தைஅரசாட்சிசெய்கின்ற தருமராஜாவானவர் அஸ்வமேதயாகம்பண்ணுகிறதற்கு பிரயத்தினப்பட்டுக் குதிரையைவிட்டு அந்தக்குதிரையின் பிறகே அவர்தம்பியாகிய அர்ச்சுனராசனையும் இன்னமுஞ்சிலபிரமுகாளையுஞ் சேனைகளையுங் கூட்டியனுப்பினார் மந்தக்குதிரையானது எங்களுடையமாகிஷ்மதிபட்டணத்திற்குச் சமீபத்தில் வருகிறபோது என்புருஷனுகிய நீலத்துவ்ச மகாராசன் அந்தக்குதிரையைப் பிடித்துக்கட்டிவிட்டு அவர்களபேரில் சண்டைக்குப் புரப்பட்டுப்போய் அவர்களுடைய சஸ்திர அஸ்திரங்களுக்கு நிர்வகிக்கமாட்டாமல் முறிந்துவந்தபிற்பாடு அவர்களைச் சமாதானம்பண்ணிக்கொள்ளும்படி நினைத்து சிலகாணிக்கைகப்பங்களையும் அஸ்வமேதக்குதிரையையும் கொண்டுபோகுஞ்சமயத்தில்எனக்குத்தெரிந்துநான்போயவரைப்போகவொட்டாமல்மறித்துக்கொண்டுஅவரைப்பார்த்து ஓ பிராணவல்லபா நீர் கொஞ்சமாகிலும்சவுரியபராக்கிரமயில்லாமல் இப்பொழுது இந்தக்குதிரையையுங் காணிக்கைகப்பங்களையும் அந்த அர்ச்சுன மகாராசனுக்குக்கொண்டுபோய்கொடுத்து சமாதானம்பண்ணிக் கொள்ளுகிறதைப்பார்க்கிலுமந்தவர்ச்சுனனுடனே சண்டைசெய்து யுத்தகளத்தில் இறந்துவிட்டாலு மதனால் உமக்கு வீரசொற்கமுண்டு உலகத்தில்கீர்த்திப்பிரதாபமுண்டென்று சொன்னேனதுகேட்டு என்புருஷனு மப்படியே நல்லதென்று சம்மதித்துப்புத்திரமித்திராதிகளுடனுங் கூடிக்கொண்டுப்போ யந்த அர்ச்சுனனுடனே போராடி யவர்களெல்லாரையும் பரிகொடுத்துத்தானும் மூர்ச்சையாயரண்மனைக்குவந்து பிற்பாடு என்னைப்பார்த்து அடி நீலி உன்பேச்சைக்கேட்டுக்கெட்டேனென்றுசொல்லி என்னையடித்துத்துரத்திவிட்டார் அதற்கு நான் விசாரப்படுவில்லை அந்த அர்ச்சுனராசனானவன்யாகம்பண்ணினால்சுகமாய்தன்பட்டணத்தில்மாத்திரங் குதிரையைச்சுற்றிவித்துயாகஞ்செய்துமுடிக்கவேண்டுமே யல்லாமல்இப்படிக்குச்சீமைகளின் பேரில்குதிரையைவிட்டு அந்தக்குதிரையினுடையநெற்றியில்விருதென்று வொன்றையெழுதிக்கட்டலாமோ அல்லாமலுமதையாராவதுவாசித்துப்பார்த்துகுதிரையைப்பிடித்துக்கட்டினு லவர்களையுமவர்கள்சேனைகளையுங்கொன்றுவிடலாமோஅதுவுமல்லாமல் என்னுடைய புத்திரபவுத்திராதிகளையும் பந்துவர்க்கங்களையு மவனேன் கொன்றுவிட்டான் ஆகையினு லந்தப்பகையானது என்மனதிலிருக்கின்றது நீ இப்பொழுதுதானே உன் சேனைகளுடனே யுத்தசன்னத்தனாய் ரதமேறிக்கொண்டு புறப்பட்டு அந்த அர்ச்சுனனுக்கெதிரேபோய் மறித்துக்கொண்டு பிரசண்ட யுத்தஞ்செய்து அந்தஅர்ச்சுனராசனையு மவன்சேனைகளையுஞ் சின்ன பின்னப்படுத்தி என்மனதையுஞ் சந்தோஷப்படுத்துமென்றுசொல்ல அதுகேட்டந்தஉல்முகனுந்தீர்க்காலோசனைசெய்து ஓ அம்மா அப்படியேநல்லது அந்த அர்ச்சுனராசன் நம்முடை பட்டணத்திற்குவந்தானேயாகி லப்பொழுது உன்கருத்தி

ன் படியே அவனோடுபோராடி அவனையும் மவன்சேனைகளையுந் தும்சப் படுத்திஉன்மனதைச் சந்தோஷப்படுத்துகிறேன் நீ இப்பொழுது அந்தப்புரத்திற்குப்போயிருஅம்மாவென்றுசொல்ல அதுகேளாமல்சுவாலாதேவியானவள் பின்னையுஞ் சலமாய்ப்பிடித்து ஓ அண்ணாவீ அந்த அர்ச்சுனனிங்கேவருகிறதேது நீ அவனைச்செயிக்கிறதேது அது விருதாவானவார்த்தை அப்படிச்சொல்லுகிறது எனக்குச்சம்மதமல்லநீ இந்தக்ஷணமேபோ யவனுடனேயோராடி அவனைக்கொன்றுலாச்சுது இல்லாவிட்டால் நான் உன்வீட்டிலுமிருக்கிறதில்லை எங்கேயாகிலும் போய்விடுகிறேனென்று ஓரேபிடியாய்ப்பிடித்துநிற்க அதுகண்டுஉல்முகனும் மகாகோபங்கொண்டு ஓ அம்மாநீஏன் என்பேச்சைக்கேளாமல் இப்படி சலமாய்ப்பிடித்துக்கொண்டு நிற்கிறாய் நீ எத்தனைகுரூரகர்மி இப்படிதானே அந்த நீலத்துவசனுடனேபோராடி அவனையுமவன்பந்துவர்க்கங்களையுங்கெடுத்து ஓண்டியாக்கிவிட்டாய் இப்போதுஎன்சேனைகளையுங்கொல்லுவிக்கத் துணிந்திருக்கிறாய் ஆகையினால் இனிமேல் உன் முகத்தைப்பார்க்கிறதில்லை அல்லாமலும் மாமியார்வீட்டிலிருந்து தனிவழியேவந்தவளை வீட்டில்வைத்துக்கொணடா னென்கிற அபகீர்த்தியும் எனக்குச்சம்பவித்தது நீ பிறந்தவீட்டிற்கும் புகுந்த வீட்டிற்கும் புழுவாய்த்தோன்றினாய் அடீதோஷி நீ இங்கேயு மிருக்க வேண்டாம் எங்கேயாகிலும்போய்விடென்று சொல்ல அந்தவசனங்களைச் சுவாலாதேவியுங்கேட்டு மகாதுக்கப்பட்டு ஓ அண்ணாவீ நான்பிறந்து உங்கள் இரண்டுவீட்டிற்கும்ஆபத்துநேரிட்டதல்லவோ ஆதலால் நான் எங்கேயாகிலும் போய்ச்சாகிறேன் இனியாகிலும் நீங்கள் சுகப்படுங்கோளென்றுசொல்லி அவ்விடம்விட்டு கங்காநதியில் விழுந்து சாவோமென்றெண்ணிக்கொண்டுகங்கைக்கரையோரமாய் வருகிறபோது தனக்குத்தானே யோசனைசெய்துகொண்டு அந்த அர்ச்சுனனைக் கொல்லுகிறதற்கு ஒருவகையுமில்லாமற் போச்சுதல்லவோவென்றுதாபத்திரியப்பட்டு பின்பு ஆலோசனைபிரந்து தான் செத்தாலும் அந்த அர்ச்சுனன் சாகிறதற்குஉபாயஞ்செய்துவிட்டுப் பிறகு தானுஞ்சாகிறதென்று நிச்சயப்படுத்திக்கொண்டு அந்தசுவாலாதேவியானவள்கங்கைகரையினோரமாய் நடந்துபோகையி லந்த நதியினுடைய திவலையானது வந்து இவள் காலிற்பட்டது அப்படிப்பட்டவுடனே சுவாலாதேவியானவள் தன்காலையுதறி ஐயையோ இந்தப்பாவியானகங்கைவந்துஎன்காலைத்தீண்டினாளே இதற்கென்னசெய்வேன் முன்னமே நான் நினைத்தகாரியம் ஆகாமலிருக்கின்றது அதுவும்போதாமல் எனக்குஇதுவும் ஒருகர்மம் வந்து சம்பவித்ததே இதற்கென்ன பரியாயஞ்செங்கிறது நான்எந்த இடத்திற்குப்போய் ஸ்நானம்பண்ணி இவளைத் தீண்டினபாதகத்தைப் போக்கடித்துக்கொள்ளப் போகிறேன் நானறியாமல் இந்தநோஷியாகிய கங்கைக்கரையினோரமாய் வந்துவிட்டேனே இவளைப் பரிசித்ததினால் மகத்தாகியபாதகம் வந்து அநுசரித்ததேஇ

தற்கென்னசெய்யப் போகிறேனென்று விசாரப்பட்டுக்கொண்டிருக்க அந்தசமயத்தில் வெகுதூரத்திலிருந்து புறப்பட்டு அந்தக்கங்காநதியில் ஸ்நானம்பண்ணிபிர்மஹத்திமுதலியமகாபாதகங்களை யெல்லாம் பரிகரித்து பரமபவுத்திரராகும்படிவிரும்பிவந்ததபோதனர்கள்பிர்மரிஷிகள் முதலானசகலமானஜெனங்களுமந்தபாதகியாகியசுவாலாதேவிசொல்லுகிற பாபவார்த்தைகளையெல்லாங்கேட்டு பயங்கொண்டு அந்தப்பயித்தியக்காரர்களுமவள்சொன்னவார்த்தைகளைச்சூதென்றெண்ணமல் உண்மையாகநினைத்துக்கொண்டுஐயையோநாங்களிந்தசவிஸ்தாரந்தெரியாமல் வெகு தூரதேசங்களிலிருந்து அலைச்சல்பட்டுவந்துசேர்ந்தோமேபென்று தாபத்திரியப்பட்டுக்கொண்டு தாங்கள்கொண்டுவந்தமடிசஞ்சிகளைமேலே போட்டுக்கொண்டு பூசைபொட்டளங்களையெடுத்துத்தூக்கிக்கொண்டு அந்தக் கங்காதீர்த்தத்தைவிட்டுவிலகியப் புறத்திற்போய் நின்றார்கள் அப்பொழுதந்த கங்காதேவியானவள் சண்டாளியாகிய சுவாலாதேவிசொன்னவசனங்களையுங்கேட்டுஉண்மையென்றுநம்பிப் புத்தியில்லாத அந்தப்பழிக்காரரிஷிகள் முதலிய சகலசனங்களுஞ்சொல்லிக்கொண்டவசனங்களையுங் கேள்விப்பட்டு நடுநடுங்கி மிகுந்தவிசாரமடைந்துஐயையோசகலபாவங்களும் என்னைக்கண்டமாத்திரத்திற் பறந்துபோய்விடுமே அப்படிப்பட்டஎன்னை இந்தச்சுவாலாதேவியானவ ளிப்படிச்சொல்லுவானேன் ஆனாலும் நம்மையறியாமற்படிக்கு எனனபாதகம் வந்திருக்கிறதோ அதைத்தெரிந்துகொள்ளவேண்டுமென்று ஆலோசித்து அந்தக்கங்காதேவியானவள் ஸ்திரீரூபந்தரித்துக்கொண்டு வெளியேவந்து அந்தச்சுவாலாதேவியைப்பார்த்து ஓ அம்மா சுவாலாதேவி நீ என்னைப் பாபிஷ்டியென்றுசொன்னயே நான் என்னபாபம்பண்ணினேன் சகலலோகங்களிலுள்ளவர்களுஞ் செய்கிற பாபங்களை யெல்லாந்தொலைப்பித்து அவர்களைப் பரிசுத்தர்களாகச் செய்கிற என்னை இப்படிச் சொல்லலாமா, அதை எனக்குச் சற்றே தெரியப்பண்ணும் அம்மாநான்கங்காதேவியென்று பிரியவசனமாகச் சொல்ல அதுகேட்டு அந்தச்சுவாலாதேவியும் யவளை ரோஷிணுற்போலதூரஇடைந்துநின்று அடிபாதகி, நீ அப்பாலேபோடி, உன்னைப்பார்த்தபேர்களுக்கும் அனேகம்பாவமுண்டு, உன்னுடனேபேசவும்போகாது அடிபாபிஷ்டி., அப்புரத்தேபோடியென்று அதட்டிச் சொல்ல அதுகேட்டு கங்காதேவி மெத்தவும்பயமடைந்து அடியம்மா சுவாலாதேவி உனக்குச்சரணஞ்சரணம் நான்செய்திருக்கிற பாதகமின்னதென்றெனக்குக் கிஞ்சிற்றுகிலுந் தோற்றவில்லை, அதை எனக்கு நன்றாய்த்தெரியும்படிச்சொல்ல வேண்டுமம்மாவென்றுமெத்தவுந்தாபத்திரியமாய்க்கேட்க அதற்குச்சுவாலாதேவியும் தன்பகையைமுன்னிட்டுக்கொண்டுவந்த கங்காதேவியைப்பார்த்து அடிதங்காநீபண்ணினபாதகமுனக்குத்தெரியாதோ நீ மறந்துபோய்விட்டாயோ ஆனால்சொல்லுகிறேன்கேள் நீ பெற்றபிள்ளைகளைக்கொன்றுவிடுகிறவள்குழந்தையாயிருக்கிறபோதுகழுத்தைப்பிசைந்துதண்ணீரில்போட்டுக் கொன்றபாவி

நீயல்லவோ பெற்றபிள்ளைகளைக் கொன்றுவிடுகிறபாபிகள் இந்தப்பூ
லோகத்தில் எவர்களாகிலு முண்டோ, அதுவல்லாமல் கடைசியில்உ
னக்குஒருபிள்ளை பீஷ்மனென்பவன் உப்புபானையைப்போல தப்பிப்
பிழைத்திருந்தா லவனையுங்கபடத்தினால் சிகண்டி கொன்று விட்டா
னென்றுபேர்வைத்து அந்த அர்ச்சுனமகாராஜன் கொன்று விட்டுப்
போனான் அப்படிஉன்பிள்ளையைக்கொன்ற அந்த பகையாளியாகியஅ
ருச்சுனராஜன் சுகமாயிருக்க நீசற்றாகிலும்விசாரமில்லாமலிருக்கிறா
யாகையினாலும் பிள்ளையில்லாதவர்கள் பாபிஷடிகளென்று தருமசா
ஸ்திரங்கள் சொல்லுகின்றபடியினாலும் உன்னைப்பாதகி என்றுசொ
ன்னேனென்றுசொல்ல.அதுகேட்டுக்கங்காதேவியுமெய்தானென்று
சம்மதித்து மகாபோகங்கொண்டவளா யந்தசுவாலாதேவியைப்பார்
த்துஅடியம்மா இந்தச்சங்கதியை இதுவரையிலும் நானறியமாட்டே
ன்இப்பொழுது நீசொல்லக்கேட்டேன் ஆகையினால் என்புத்திரனா
கிய பீஷ்மனைசுகொன்றஅந்த அருச்சுனனும் இன்னம் ஆறுமாதத்தி
ற்குற் அவன்பிள்ளைகையினால் இறந்து போகக்கடவதென்று சாபமி
ட்டாள் அதுகேட்டு சுவாலாதேவியும்மகாசந்தோஷப்பட்டு ஓகங்கா
தேவி இனிமேல் நீ புண்ணியவதியென்றுசொல்லிவெகுவாய்த்தோத்
திரஞ்செய்துஅந்தப்பாதகியும் கங்காதீர்த்தத்தில்ஸ்நானம் பண்ணினா
ள்இதுசங்கதிகளைக் கேட்டுககொண்டு அங்கிருந்தபிர்மரிஷிகள் முத
லானசகலஜனங்களும் சந்தேகந்தீர்ந்து அந்தநதியில்ஸ்நானம்பண்ணி
தங்கள் தங்கள் இருப்பிடதிற்குப்போனார்கள் அதன்பிறகு சுவாலா
தேவியும் இனியெப்படியாகிலும அந்தஅருசுசுனனைக்கொன்றுபகை
யைமுடிக்கிரதே எனக்குக்கீர்த்தியென்று சொல்லியவிடத்திலக்கினி
யைவளர்த்திக்கொண்டு அந்த அக்கினியில்விழுநதுசரீரத்தைவிட்டுஅ
ஸ்திரவுருவமெடுத்துமணிபுரமென்னும்பட்டணத்தையரசாட்சிசெய்
கின்றபப்பரவாகனுடைய அம்புறாத்தூணியிற்போய் புகுந்துக்கொண்
டு அருச்சுனன் எப்பொழுதுவரப்போகிறானென்றுசமயம்பார்த்துக்
கொண்டிருந்தாள்கேட்டீரோ ஜெனமேஜெயமகாராசாவே இதுவரை
யில்சுவாலாதேவியினுடைய சவிஸ்தாரஞ்சொன்னோமல்லவோ இனி
மேலஅஸ்வமேதக்குதிரையின் பிறகேபோகிற அருச்சுனராஜனுடைய
சரித்திரத்தைச்சொல்லுகிறோம்கேளுமையாவென்று ஜெயமுனீந்தி
ரனென்னுமகாரிஷியானவர்சொல்லதொடங்கினார்சேளும்ஜெனமே
செயமகாராசாவே அப்பாலந்தஅஸ்வமேதக்குதிரையானது தெற்குமு
கமாய்ப்போகிறபோதுஅந்தக்குதிரையைச்சூழ்ந்து பதினாயிரஞ்சேவ
கர்கள் பாதுகாத்துக்கொண்டுபோனார்கள் அவர்களுக்குப்பிறகேஅரு
ச்சுனராசன விஸ்வகேதுபிரத்தியுமன்னன் மேகவர்னன்அனுசாலு
வன்எவ்வலற்ஞசுவன் -நீலத்துவசன இவர்களுடனேசகலசேனசமுத
திரங்களும் புடைசூழந்து வரத்தக்கதாகநடக்கிறபொழுது அந்தக்கு
திரையும் நடந்துவனங்கள் வனாந்திரங்கள் காடுகள் செடிகள் ஆறுக
ள் கழிகள்மடுக்கள் தேசங்கள் பட்டணங்கள்மலைகள் மேடுகள் பள்

ளங்கள்இதுமுதலிய இடங்களெல்லாங்கடந்துபோய் விந்திய பர்வதத்திற்குச் சமீபத்தில்நடக்கையில் சரீரம்தினவெடுத்தபடியினால் அவிடத்தில் பெரியபிர்மாண்டமாகிய குத்துக்கல்லைக்கண்டு அஸ்வமேதக்குதிரையானது அந்தக்கல்லின்பேரில் தன்னுடையசரீரத்தினவு அடங்கும்படியாகத் தேய்த்துக்கொண்டது- அதனாலந்தக்குதிரையுங்கல்லோடுகல்லாய் ஒட்டிக்கொண்டு கொஞ்சமாகிலும் கைகால்முதலிய அவயவங்களையசைதற்கிடமில்லாமல்அங்கேதானே பெருமூச்செறிந்து நின்றுவிட்டது,

அதுகண்டு அந்தக்குதிரையின் பிறகேவந்தசேவகர்களெல்லாம் பயந்து இதுஎன்னகாரணமென்று கையைமுறித்துக்கொண்டு அந்தக்குதிரையினண்டைக்குப்போய் அதையதட்டியும் அடித்தும் இழுத்தும், குந்தத்தினால் இடித்தும் இப்படி அநேகவிதமான உபத்திரவஞ்செய்தார்கள் அப்படிச்செய்தும் அந்தக்குதிரையானது எவ்வளவும் அசையாமல் கல்லைப்போலிருந்தது அதுகண்டு அந்தச்சேவகர்களெல்லாரு புகவும்பயந்தோடிவந்து அருச்சுனமகாராசனைக்கண்டு தெண்டனிட்டு ஐயா கிரீடி நாங்கள்குதிரைமுன்னே நடத்திக்கொண்டு எல்லோரும்சாக்கிரதையாகப் பின்னே நடந்துபோகையில் அந்தக் குதிரையானது விந்தியபர்வதத்திற்குச்சமீபத்தில் ஒருகுத்துக் கல்லைக்கண்டு அதிலுராந்துக்கொண்டு அந்தக்கல்லோடுகல்லாய்ஒட்டிக்கொண்டுபோய்விட்டது இதைக்கண்டுநாங்கள்வெகுபிரயாசைப்பட்டு அடித்தும்பார்த்தோம் இழுத்தும்பார்த்தோம் அதைஎன்னசெய்தும் கல்லோடேகல்லாய் ஒட்டிக்கொண்டிருக்கிறதேயல்லாமல்சற்றாகிலும் அசையவில்லைசுவாமீயென்றுசொல்ல அதுகேட்டு அருச்சுனமகாராசனும்மனஸ்தாபமடைந்துஐயையோ இதுயென்னபாவம் தருமநந்தனர்செய்கிற யாகத்திற்கு விக்கினம்நேரிட்டதல்லவோ வென்றுதனக்குத்தானே நினைத்துவிசாரப்பட்டுக்கொண்டு அந்தகுதிரையினண்டைக்குவந்து அதைப்பார்த்துஆச்சரியமடைந்து இதென்னவிபரீதமுண்டாயிற்றென்று சொல்லி அங்கிருந்தசேகவர்களைவிட்டு இழுக்கச்சொல்லியும் அடிக்கச்சொல்லியும் இப்படிநானாவிதமானதந்திரயுக்திகளைச்செய்தும்அந்தக்குதிரையானது அசையாமல்கல்லைப்போல்யிருந்துவிட்டது அதுகண்டு அர்ச்சுனராசனும் சிந்தாக்கிராந்தனாக யோசனைசெய்து இதுஎன்னகாரணத்தினாலேயோ இப்படியிருக்கின்றது ஒன்றுந் தெரியவில்லை இதில்ஏதோ ஒருவிந்தையுண்டாயிருக்கும்போலேதோற்றுகின்றது அந்தவிந்தையை இந்தவனாந்திரத்திலிருந்து தபசுசெய்கிறயோகீஸ்வரர்களைக்கண்டுசேவித்து அவர்கள் முகாந்தரமாயிந்தவகையைத்தெரிந்துக்கொள்ளவேண்மென்று நினைத்துத்தன் கூடயிருக்கின்றசேனைகளையெல்லாம் அவிடத்தில்தானே நிறுத்திவிட்டங்கிருக்கிற காய்கனிகளைக்கொள்ளையிடாமலும் புஷ்பங்களைப் பறிக்காமலும் பத்திரமாய்க் காத்துக்கொண்டிருக்கும்படிசேனைகளுக்கெல்லாந்திட்டஞ்செய்துவிட்டு விஸ்வகேதுஎவ்வாற்றானுசுவனை நீலத்துவசன் அநுசால்வன் இவர்க

ள் நால்வரையுந் தன்னோடழைத்துக்கொண்டுஅர்ச்சுனமகாராஜனுன
வன் அந்தவனத்திற்குட்புகுந்துபோ யங்கேயிருக்கிற விசித்திரங்களை
யும்புலிகளும்மான்குட்டிகளும் ஒன்றுக்கொன்று விரோதமில்லாமல்
கலந்து விளையாடுகிறதையும் மயில்களும்பாம்புகளும்ஒன்றாய்க்கூடிசி
னேகித்திருக்கின்றதையும் சிங்கங்களும்யானைகளும்கூடிக் கொண்டுப
நடிக்கின்றதையும வண்டுகளுந்தும்பிகளும்சுகந்தமாகியபுஷ்பங்களை
ப்பறித்துக்கொண்டுவந்து ரிஷிகளிடத்தில்கொடுத்துதேவதார்ச்சனை
பண்ணுவிப்பதையு மின்னமுமிப்படிப்பட்ட அனேகவிசித் திரமான
வதிசயங்களைப்பார்த்தாச்சரியகரமாய் ஒருவர்க்கொருவர்சந்தோஷப்
பட்டுக்கொண்டுவன்னிமரங்கள்பனைமரங்கள்மாமரங்கள் பலாமரங்க
ளீச்சமரங்கள் அரசமரங்கள்சந்தனமரங்கள்வேங்கைமரங்களின்னு
மிப்படிப்பட்ட அனந்தவிதமான விருக்ஷங்களும்பூத்துக்காய்த்தும்பழு
த்து மலங்காரமாயிருக்கின்றதைப்பார்த்துச் சந்தோஷமடைந்துபின்
னையும்மல்லிகைமுல்லை இருவாட்சிசண்பகம்தாமரைசாமந்தி மருகொ
ழுந்து பாரிசாதம் கொன்றை இன்னும் இப்படிப்பட்ட அநேகவகை
யான புஷ்பசாதிகளும் புஷ்பித்ததிலுண்டானதேனைகள்பெருகிஆறு
யோடுகிறதையும்பார்த்து சந்தோஷப்பட்டுக்கொண்டுநடந்தார்கள்,

அங்கேஒருபூமியில் புலியாசனம் பரப்பிஅதன்பேரில் உட்கார்ந்
துகொண்டு கிருஷ்ணஜலத்தைத் தரித்து சரீரமுழுதுவிபூதியை உத்
தூளித்துக்கொண்டு உருத்திராக்ஷமாலிகா லங்கிருதராய் சிவந்தசடா
பாரத்தை யுடையவராய்ச் சபமாலிகையைக்கையினிடமாய்பிடித்துக்
கொண் டிரண்டுகண்களையும் ஊர்த்துவமாகத்திரும்பி இரண்டுபுசங்க
ளினிடத்திலும் யோகதண்டத்தையூன்றிக்கொண்டுஉலககர்த்தாவாகி
யபரப்பிரமத்தினுடையஉபயபாதங்களையும் இருதயகமலத்தில்நிறுத்
திக்கொண்டு நிவாததீதமபோலஅசையாமலிருந்துசெபம்பண்ணுகிற
சௌபரிமகாரிஷியைக்கண்டு அர்ச்சுனமகாராஜனும் மிகுந்தபயபத்தி
விசுவாசத்துடனே அந்தமுனீஸ்வரரைப் பிரதக்ஷணம்செய்து சாஷ்
டாங்கதண்டன்சமர்ப்பித் திரண்டுகைகளையும் அஞ்சலியாகசசிரசின்
மேல்கூப்பிக்கொண்டுஅந்தமுனிசிகாமணியைப்பார்த்துஓபிராணபுரு
ஷஓமகானுபாவா ஓசுவாமிதேவரீருடையதரிசனத்திற்கு தருமநந்த
னருடைய தம்பியாகிய அர்ச்சுனன் வந்திருக்கிறேன ஆதலால்தேவரீ
ரதுதிருஷடியினலபார்த்து அடியேனுடைய மனோதுக்கத்தை நிவர்
த்திசெய்துரட்சிக்கவேண்டும் சுவாமியென்று அநேகவிதமாகத்தோ
த்திரஞ்செய்தான்.

அப்படித்தோத்திரமபண்ணுகிற அர்ச்சுனனுடைய முறையைசம
ம்பண்ணிக்கொண்டிருக்கிற சௌபரிமகாமுனிவருங்கேட்டுகண்களை
விழித்து அர்ச்சுனனைப்பார்த்து ஓ அர்ச்சுனநீசர்வாங்கிரியாய் சர்வசி
வதயாபரனாய் விளங்கப்பட்ட லோககர்த்தாவாகிய பரமசிவனோடு எ
திர்த்துப்போராடிச் செயங்கொண்ட வீராதிவீரனென்கிறகீர்த்திப்

பிரதாபம்பொருந்திய தருமநந்தனருடைய தம்பியான அர்ச்சுனன் நீகர
னே அப்படிப்பட்ட மகானுபாவனாகிய உன்னைக்காணவேண்டுமென்
று நெடுநாளாய்க்காத்துக்கொண்டிருந்தேன் இன்றைக்கு உன்னைக்க
ண்குளிரப்பார்த்துசந்தோஷிக்கும்படிதெய்வங்கூட்டிவைத்ததென்று
சொல்லி அர்ச்சுனராசனுக்கும் ஒருகிருஷ்ணாசனம்போடுவித்து அதன்
பேரில்உட்காரப்பண்ணி கனிவர்க்கங்களையும்தேனையும் புசிக்கும்படி
கொடுத்துஉபசாரஞ்செய்துநீர்என்னிடத்திற்குவந்த காரியமென்ன
வென்றுகேட்கஅதுகேட்டு அர்ச்சுனராசனும்அந்தசௌபரிரிஷியைப்
பார்த்துஓஐயாமுனிநாதாஎன்தமயனாராகியதருமராசாவானவர் அஸ
வமேதயாகம்பண்ணும்படி நினைத்துக்குதிரையைப்பூமிப்பிரதக்ஷிண
ம்பண்ணிக்கொண்டுவரச்சொல்லிஎன்னை அனுப்பிவைத்தார் நானுமவ
ருடையகட்டளைப்படி இந்தமட்டுக்கும்அந்தக்குதிரையைக்காப் பாற்றி
க்கொண்டுவந்தே னிப்போதுதேவரீருடையஆசிர்மத்தில்வந்துஒருகு
த்துக்கல்லுடனேஉராசந்துக்கொண்டு அந்தக்கல்லோடுகல்லாய்ஒட்டிக
கொண்டது அதை அநேகயுக்திகளினால்சேவகர்களைக்கொண்டு அதட்
டியும் அடித்தும்இடித்தும்இழுத்தும்பார்த்தோம்அது எந்தவிதத்திலு
ம் அசையவில்லைஆகையால் இதென்னகாரணமோவென்று சம்சயங
கொண்டு தேவரீருடைய பாதத்தில்விழுந்துசரணமடைந்துதெரிந்து
கொள்ளவேண்டியவந்தேனென்று விண்ணப்பஞ்செய்தான் அதுகே
ட்டு அந்தச்சௌபரிரிஷியுஞ்சிரித்து அர்ச்சுனனைப்பார்த்து அதற்குஒ
ருகதையுண்டு அதைச்சொல்லுகிறேன்சாவதானமாய்க்கேளுமென்று
அந்தக்குத்துக்கல்லுடனே குதிரையொட்டிக்கொண்ட விர்த்தாந்தத்
தைச் சொல்லுகிறேன்கேளுமையா அர்ச்சுனா பூர்வத்திலந்தக் குத்து
க்கல்லின் சமீபத்தில் சண்டிகவுசிகரென்னும் பெயருடைய ஒரு மு
னீஸ்வரர் ஆசிர்மங் கட்டிக் கொண்டிருந்தார் அவரிடத்திற் உத்தா
லக னென்னும் பெய ரையுடைய ஒருவன் சிஷனாயிருந்து பணிவி
டை செய்துக் கொண்டு வந்தான் அங்ஙனம் செய்து வருகின்ற கால
த்தில் ஒருநாள் அந்த சண்டிக வுசிக ரிஷியானவர் தீர்த்தயாத்திரை
பண்ண வேண்டுமென்று உத்தேசங் கொண்டு சிலரிஷியீஸ்வரர்களு
னே கூடிப்போனார் அதுகண்டு அவருடைய சிஷனாகிய உத்தாலகனு
ம் தனது ஆசிரியர் பின்னாகவே நடந்து போனான் அப்படிக்கு ஆஆ
சிரியவரை விடாமல் அவன்தொடர்ந்து நடப்பதைசண்டிககவுசிகமு
னிவரும் திரும்பிப்பார்த்து ஓ உத்தாலகா நீ எங்களோடுகூட சிரமப்
பட்டுக்கொண்டு தீர்த்தயாத்திரை செய்யவேண்டாம் நீ யிவ்விடத்தி
ல்தானே நின்று கலியாணஞ் செய்துக்கொண்டு சகலசவுக்கியங்களை
யும் அநுபவித்து சுகமாயிருவென்று சொல்ல அதற்கு அந்த உத்தா
லகனும் சம்மதப்படாமலிருந்தான் அதுகண்டு அந்த சண்டிகவுசிகரு
ம் அவனுக்கு அபேக்ஷைவரும்படி அநேக பிரியவசனங்களைச்சொ
ல்லி அவனை சம்மதப் படுத்திப் பின்பு ஒருபிராமணன் வீட்டில் ச
ண்டிகை யென்கிறபெண்ணை விசாரித்து அந்த உத்தாலகனுக்கு கலி
யாணம் பண்ணுவித்து நீங்கள் சுகமாய் வாழ்ந்திருங்க ளென்று அவர்

களிருவருக்கும் ஆசிர்வாதஞ்செய்து அவர்களை அங்கேதானேயிருத்தி விட்டுபிற்பாடு அந்த ரிஷிஈஸ்வரர்களுடனேசேர்ந்து தீர்த்தயாத்திரைக்குப் போய்விட்டார் அதன்பிறகு அந்த உத்தாலகனுஞ் சண்டிகையுங் கூடியிருந்து சமுசாரஞ்செய்துவருகிறநாளில் அந்தஉத்தாலகன்தன்பெண்சாதியாகிய சண்டிகையைப்பார்த்து அடிபெண்ணேஎனக்கு பசிக்கிறது சமையல்பண்ணென்றுசொன்னால் அவள்சோற்றுப்பானையை உடைத்தெறிந்து அவனைப்பார்த்துநீபானைகொண்டுவந்தால்சமைக்கிறேனென்று சொல்லுவாள்பின்னையும் அவன் போசனஞ்செய்யவேண்டும அக்கினிகொண்டுவாவென்று சொன்னால் வீட்டிலிருக்கிற நெருப்பிலுந்தண்ணீர்வார்த்து ஆற்றிவிட்டுநெருப்பில்லையென்றுசொல்லுவாள் அதுவுமல்லாமல் சாணமெடுத்துவந்து வீடுமுழுதும்சுத்தி பண்ணென்று சொன்னால்எங்கேபார்த்தாலும்குப்பையுங்கூளமுங்கும்பல்கும்பலாகக்குவித்து எச்சிலையுமிறைந்துவைப்பாள்வஸ்திரத்தை தோய்த்து உலாத்தச்சொன்னால் நனைத்துப்போடுவாள் போசனம்பண்ண இலைகொண்டுவாவென்றுசொன்னால் இலையைக்கிழித்துப்போடுவாளிந்தப்பிரகாரம் அந்தச்சண்டிகையானவள் நாள்தோறுமகடவிகடமாகச்செய்துவருகிறபோது உத்தாலகனும்சிர்வகிக்கமாட்டாமல்விசனப்பட்டு ஐயையோ இப்பசாசானவள் எனக்கென்றுஎங்கேயிருந்துவந்தாள் தெய்வமேயென்றுதுக்கித்துக்கொண்டிருக்கையில் அந்தச்சண்டிகவுசிகமுனிவருந் தீர்த்தயாத்திரைபண்ணிவிட்டுமறுபடியு மிந்தஉத்தாலகனிருக்குமிடத்திற்குவந்து சேர்ந்தார்அதுகண்டு உத்தாலகனும்தன்னுடையஆசிரியருக்குச்சாஷ்டாங்கதண்டன்சமர்ப்பித்துஓ ஐயாகுருநாதாதேவரீர்தீர்த்தயாத்திரைக்குப்போம்பொழுதுபலவிதகாரமாயடியேனுக்குக்கலியாணஞ்செய்துவைத்தபெண்சாதியின் வாழக்கைப்பாட்டினா லடியேன்படுகிற மனோதுக்கத்தை இன்னபடியென்று சொல்லிமுடியாது ஆனாலும் கொஞ்சம்சொல்லுகிறேன்கேளுமென்றுசிலசெய்திகளைச்சொல்லி விண்ணப்பஞ்செய்தான் அதுகேட்டு அந்தசண்டிகவுசிகமுனிவரும்ஆலோசனைசெய்து ஓ உத்தாலகா நீ உன்பெண்சாதியைஒன்றுசெய்யச்சொன்னால் அவள்ஒன்றுசெய்கிறாளல்லவோஆனால்நீ அதற்கொருதந்திரஞ்செய்யவேண்டும அஃதென்னவென்றால்உனக்குஅவளால்ஆகவேண்டியகாரியத்தை வேண்டாமென்றுசொல்ல அதைஅவள்வேண்டுமென்றுமறித்துச்செய்வாள்அதுவேஉபாயமென்றுஉத்தாலகனுக்குச் சொல்லிவிட்டு சண்டிகவுசிகமுனிவருந் தன்னுடைய ஆசிரமத்திற்குப்போய்விட்டார்பிற்பாடு அந்தஉத்தாலகனும் தன்னுடையகுருவாக்கியப்படிபெண்சாதியையழைத்து ஓ பெண்ணே யெனக்குபோசனம்வேண்டாமென்றுசொல்லஅதிசீக்கிரத்தில்சமையல்செய்து அவனுக்குஉபசாரமாகப்படைப்பாள நெருப்பு வேண்டாமென்றுசொன்னால்நெருப்புகொண்டுவருவாள்வஸ்திரத்தை நனைத்துக்கொண்டுவாவென்றால் உலர்ந்தவஸ்திரத்தைக்

கொண்டுவந்துகொடுப்பாள்ஒருபதார்த்தமும் வேண்டாமென்றுசொன்னால் சகலபதார்த்தங்களும் சமைத்துவைப்பாள்ஸ்திரீசையோகஞ்செய்யத்தகாதபுண்ணியதினங்களில் வேண்டினவன்போல் சைகைபண்ணினால் வேண்டாமென்று விலகிப்போயிருப்பாள்செய்யத்தகுந்தநாள்களில வேண்டாமென்றுசொன்னால் வேண்டுமென்றுகூடியிருப்பாள்வீடுசுத்திசெய்யவேண்டாமென்றால்வீடெல்லாம் நன்றாயலங்கரித்துவைப்பாள்இந்தப்படிநாள்தோறும்அந்தஉத்தாலகன் தனக்குவேண்டியவைகளையெல்லாம்வேண்டாமென்றுதந்திரமாகச்சொல்லஅதற்குஅந்தச்சண்டிகையும்வேண்டாமென்றவைகளை வேண்டுமென்றுமாறாகச்செய்துவருவாள் இந்தப்பிரகாரம்அவர்களிருவருங்கூடி இல்வாழ்க்கைசெய்துக்கொண்டுவருங்காலத்தில்அந்தஉத்தாலகனுடையதகப்பனாருக்குத்திதிவந்தது அன்றைக்கும் அவன்தன்னுடையபெண்சாதியாகிய சண்டிகையை அழைத்து அவளைப்பார்த்து அடிபெண்ணே என்தகப்பனுக்கு இன்றையதினம் திதிவந்தது அதற்குநாமென்ன செய்யப்போகிறோம்ஒன்றுஞ்செய்யவேண்டாமென்றுசொல்லஅவளும் அதுகேட்டு நீர்என்னகாரியஞ்சொன்னீர் இதுஎனக்குநன்றாயிருக்கவில்லை பிள்ளையிருந்தால்தகப்பனுக்குதிவசங்கொடுப்பிக்கவேண்டாமோ நாம்சம்பிரமாய்க்கொடுக்கவேண்டுமென்றுசொன்னாள் அதற்குஒருவனுக்குமாத்திரஞ்சாருஞ்சாதமுமாய்ச்சமைத்துப்போடென்றுசொல்ல அதற்கு அவள் சம்பிரமாய்ப்பத்துபேருக்கு சாப்பாடுபண்ணவேண்டுமென்றுசொல்லஅதுகேட்டுஅவனும் நல்லதுபொழுதுபோனபின்பு ஆகட்டுமென்று சொல்லஅதிசீக்கிரத்தில்பண்ணவேண்டுமென்றுசொல்லிஉதயகாலத்திற்கேவீடுவாசல்சுத்திபண்ணி பதினைந்துநாழிகைக்கெல்லாம் சகலபதார்த்தங்களோடும்அன்னம் சமைத்துவைத்து பத்துபேர் பிராமணர்களை அழைத்துத்தன்புருஷன்கையினால்அவர்களைப்பூசைபண்ணுவித்து பிண்டபிரதானமும்பண்ணுவித்து பிற்பாடு உத்தாலகன் அவர்களுக்குச்சாதத்தைக்கொஞ்சமாகப்படையென்றுசொல்லஅவளும் விஸ்தாரமாகத்திருப்திபோசனமாய்சகலபதார்த்தங்களையும் படைத்து அவர்கள்போசனம்பண்ணி எழுந்துகைகால்சுத்திசெய்துகொண்டபின்பு அவர்களுக்குத் தாம்பூலம் புஷ்பம் சந்தனமும் விஸ்தாரமாகக் கொடுத்து அவர்களுக்கு உபசாரஞ்சொல்லிஅனுப்பிவிட்டுப் பின்புஉத்தாலகன் அண்டை அசலிலுள்ளவர்களையும் அழைத்துச்சாப்பாடுபடைக்கவேண்டாமென்றுசொல்ல அவளும்அதென்னபரியாசமென்றுசொல்லி அந்ததெருவிலிருக்கிறவர்களையெல்லாம் குழந்தைக்குட்டிகளுடன்அழைத்துக்கொண்டுவந்து போஜனம்படைத்துஅவர்களைத்திருப்திபண்ணி அனுப்பினாள்பின்பு உத்தாலகனும் அவளை அழைத்து அடிபெண்ணேஎனக்குக்கொஞ்சமாகபோசனம் படையென்றுசொல்ல அதற்கு அவளும்இதென்னபரியாசமென்றுசொல்லி சகலபதார்த்தங்களும்நெய்தயிர்பணியாரவகைகளும்பத்துபேருக்காகும்படிஅந்த உத்தாலகனுக்குப்படைத்தா

ள் அதுகண்டு அவனும் தனக்குள்ளேதானே சந்தோஷப்பட்டுக்கொ
ண்டுவயிறுநிறைய திருப்தியாகச்சாப்பிட்டெழுந்து போகிறவன்பெ
ண்சாதியினுடைய குணத்தைதெரிந்தவனாயிருந்தும் மறந்துவிட்டுஅ
வளையழைத்து அடிசண்டிகா இந்தப்பிண்டப்பிரதானமபண்ணின அ
ன்னத்தைக்கொண்டுபோய் கஙகையில்போட்டுவாவென்றுசொன்னா
ன் அதுகேட்டு அவளும்பிண்டப்பிரதானம் பண்ணின அன்னத்தை
யெடுத்துக்கொண்டுபோய் வீதியினிடமாகக் குப்பைகளின்பேரில்வி
ழுந்துபுரண்டுகொண்டிருக்கிற நாய்களுக்கு முன்பாக வைத்தாள் அ
தைக்கண்டு அந்தநாய்கள் ஓடிவந்துதின்றுவிட்டதுகள் அதுகண்டுஉ
த்தாலகன் மிகுந்தகோபங்கொண்டு அடிபாவி துன்மார்க்கி கெடுத்தா
யே உன்னால்எந்நுடையபிதிர்க்களெல்லாம்நரகத்தில்விழுந்தார்களே
இதற்கெப்படிஅடிதோஷியென்றுசொல்லிநீர் இந்ததோஷத்தினால்கு
த்துக்கல்லாய் விழுந்துகிடக்கக் கடவாயென்றுசாபமிட்டான் அதுக
ண்டு அந்தச்சண்டிகையானவள்பயந்துதன்புருஷனாகிய உத்தாலகனை
ப்பிரதக்ஷணஞ்செய்து தண்டனிட்டுஐயாபிராமணோத்மா தேவரீரடி
யாளுடைய துர்க்குணத்தைக் கண்டு இப்படிப்பட்ட சாபங்கொடுத்தீ
ரே இந்தசாபமானது எந்தநாளில்எனக்குவிமோசனமாகுமென்றுஇ
ரக்கமாககேட்க அதற்கந்தஉத்தாலகனும் நீஅனேககாலமிப்படிக்கு
த்துக்கல்லாகவே கிடந்துபின்பு தருமபுத்திரானவர்அஸ்வமேதயா
கஞ் செய்கிறதற்கும் பிரயத்தினப்பட்டுக்குதிரையைவிட்டுஅதன்பிற
கே அவர்தம்பியாகிய அருச்சுனனைக்கூட்டியனுப்பிவைப்பார்அப்பொ
ழுதந்தக் குதிரையையும் பூமிபிரதக்ஷணம்பண்ணிக்கொண்டுதிக்குவி
ஜயஞ்செய்துவருகையில் குத்துக்கல்லாய்க்கிடக்கிறஉன்பேரில்விழுந்
துஉராய்ந்துக்கொண்டு கல்லோடுகல்லாயொட்டிக்கொள்ளும் அது
சேதியை அருச்சுனராசன் கேள்விப்பட்டுவந்து உன்னைப் பிடித்துக்
கொண்டு அந்தக்குதிரையையிழுப்பானன் அப்போதுகுதிரையும் வி
டுதலையாகின்றது நீயும்சாபவிமோசனமாகிஎன்னிடத்துக்குவந்துசே
ருவாயென்று உத்தாலகனென்னும்பிராமணன்சொல்லியனுப்ப இவ
ளும்வந்து குத்துக்கல்லாய் விழுந்துகிடக்கின்றாள் கேட்டீரோ அரு
ச்சுனமகாராஜனேஆதலாலந்தக்கல்லோடுகல்லாய் நீங்கள்விட்டதுஅ
ஸ்வமேதக்குதிரையும ஒட்டிக்கொண்டதுநீஇந்தட்சணமே அந்தக்கு
த்துக்கல்லினிடத்திற்குப்போய் அந்தக்கல்லை ஒருகையினால்பிடித்துக்
கொண்டு குதிரையை ஒருகையினால்பிடித்திழுத்தால்அந்தக்குதிரையு
மெழுந்திருக்கும் அவளும்சாபவிமோசனமாகுமென்றுசௌபரிமகா
ரிஷியானவர் சொல்லஅதுகேட்டு அர்ச்சுனனும்சந்தோஷசித்தனாய்
எழுந்திருந்து அந்தமகாரிஷிக்குச் சாஷ்டாங்கதண்டன் சமர்ப்பித்து
அவரிடத்தில் அனுமதிபெற்றுக்கொண்டுவிஸ்வகேதுமுதலான அந்த
நால்வர்களுடனும் அந்தவனத்தைவிட்டு வெளியேவந்துகுதிரையினி
டத்திற்குப்போய்அந்தக்குத்துக்கல்லை ஒருகையினாற்பிடித்துக்கொண்
டுமற்ற ஒருகையினால் அந்தக்குதிரையைப்பிடித்திழுக்க அதனாலந்த

க்குதிரையும் வெளியேவந்துசரீரத்தை நீமிர்ந்துஅனுமானித்தது அ ந்தக்கூத்துக்கல்லான ஜண்டிகையும்முன்போல ஸ்திரீரூபந் தரித்து வந்துஅர்ச்சுனராசனிடத்தில் செலவுவாங்கிக்கொண்டுஉத்தாலகனி டத்திற்குப்போய் சேர்ந்தாள்பிற்பாடுஅர்ச்சுனமகாராசனுங்குதிரை யைவிட்டுச்சகலசேனாசமூகங்களோடுநடக்கும்போது அந்தக்குதிரை யானதுசெண்பகாபுரமென்கிறபட்டணத்திற்குமூன்றுயோசனைதூர த்தில்நடந்தது அப்போதுஅந்த செண்பகாபுரத்தையாளுகின்ற அம் சத்துவமகாராசாவினுடையவேவுக்காரர்களபார்த்தந்தக்குதிரையினு டையசேதியெல்லாந் தெரிந்துஓடிவந்து அந்தஅம்சத்துவமகாராசா வுக்குத் தண்டனிட்டுஐயாராசேந்திரா அஸ்தினாபுரத்தையாளுகின்ற தருமராசாவானவர்அஸ்வமேதயாகஞ்செய்யும்படிபிரயத்தினப்பட்டு க்குதிரையைவிட்டாராம்அந்தக்குதிரையும் அர்ச்சுனராசனும்இன்னு ம்சிலசேனைகளும் நம்முடையபட்டணத்திற்கு மூன்று யோசனைசமீ பத்தில்வருகின்றதென்று சொல்லிப்போனார்கள் அதுகேட்டுஅம்சத் துவமகாராசனுஞ்சந்தோஷப்பட்டுமந்திரிகளையழைத்து ஓமந்திரிமா ர்களே நாம்தருமராசாவானவர்விட்ட குதிரைப் பிடித்துக்கொண்டு அதன்பிறகேவருகிற அருச்சுனராசனையும் எதிர்த்துப்போராடி நன் றாய்ப் பூசைபண்ணினோமேயானால் அந்த அருச்சுனனையுங் குதிரை யையுங்காப்பாற்றிங்கொள்ளுகிறநிமித்தம்கிருஷ்ணமூர்த்திவருவார அ வரைப் பிடித்துக்கொள்ளலாம்இது நன்றாயிருக்கிறதென்றுசொல்ல அதற்கு அவர்களும் ஆலோசித்து அப்படிசெய்யலாமென்று சொன் னார்கள் அதுகேட்டுஅந்தஅம்சத்துவமகாராசனும் அங்கிருக்கிற சே னைகளைப்பார்த்து ஓ ராசாக்களேமந்திரிகளேசேனாதிபதிகளே நீங்க ளெல்லாரும் என்னுடையவார்த்தையைக்கேளுங்கள் அஃதெந்நவெ ன்றால், நம்முடைய பட்டணததிலுண்டான சகலஜெனங்களும் வில் லைப்பிடித்தவர்கள் ஆயுதத்தைப் பிடித்தவர்கள்எவர்களோஅவர்களெ ல்லாரும் அவ்வவர்கள் சேனைகளுடனேரணக்களத்திற்குயுத்தசன்னு த்தர்களாய்ஆயுத்தப்பட்டுவந்துசேரவேண்டும்அப்படிவந்துசேராமல் என்னுடைய ஆக்கினையைத்தள்ளி நடந்தார்களாகில்அவர் எவ்வகைப் பட்டவர்களாயிருந்தாலும் அவர்களைக்கொண்டுபோய்ஊருக்கப்புறம் காய்ந்துக்கொண்டிருக்கிற எண்ணெய்க்கொப்பரிகையில்தள்ளிவிடுகி றதென்று திட்டஞ்செய்து சங்கிலிகீதர்களென்கிற பிராமணர்களைய ழைப்பித்து அவர்களிடத்தில் தம்முடையமுத்திரைமோதிரத்தையுங் கொடுத்தனுப்பினார் அவர்களுமந்தப்பிரகாரம் எண்ணெய்க்கொப்பரி கையண்டையிற்போயிருந்தார்கள், அப்படிக்கட்டளையிட்ட அம்சத்து வமகாராசன் எப்படிப்பட்டதன்மையை யுடையவனென்றால்.

(அம்சத்துவமகாராஜன் யுத்தம்.)

அஸ்திரசஸ்திரவித்தைகளில் மகாவல்லமையை யுடைத்தானவ ன்சத்தியசந்தனன்ஸ்ரீமந்நாராயணருடையதிவ்வியநாமத்தைக்கனவி

னுமறவாதவன் சகலசீவர்களிடத்திலும் பூததயவுள்ளவன் அகண்டித
வீரபராக்ரம துரந்தரன் அஷ்டலட்சுமீவிலாச போகபாக்கியங்களுமு
டையவன் தருமநீதியில் எமதர்மராசனுக்குச் சமானமானவன் இப்ப
டிப்பட்டகுணாதிசயங்களை யுடையவனாகிய அந்தஅம்சத்துவ மகாராச
னானவன் முன்சொன்னபடியே திட்டஞ்செய்து பட்டணமுழுதும்
பறையறைவித்து யுத்தசன்னத்தனாய்நவரத்தினமயமான தேரின்மே
ரிலேறி மந்திரி பிரதானிகளுடனே புறப்பட்டுபட்டணத்திற்குவெளி
யேவந்து தண்டுவிட்டிறங்கினான் ,அந்தராசாவினுடையபிள்ளைகள்நா
ல்வரில் மூன்றுபேர்மாத்திரம் இரதமேறிக்கொண்டு தாங்கள்தங்கள்
சேனைகளுடனே புறப்பட்டு நடந்தார்கள் பின்னும் ரதக்கார் யானைக்
காரர் குதிரைக்காரர் காலாள்களாகிய நால்வகைச்சேனைகளில்ஒருவ
ராகிலும்பட்டணத்திலகிலாமல் எல்லாரும் ரணக்களத்திற்குநடந்தார்
கள் அப்பொழுது அந்தராசாவினுடையகுமாரனான சுதர்மனென்கிற
வன் அவனுடைய பிதாவிலும்மகாசத்தியவந்தனன் தருமமாகியபாச
த்திற்கட்டுப்பட்டவன் வேதவொழுக்கைக் கடவாதவன் விஷ்ணுவினு
டைய திருவடிககமலங்களில் அத்தியந்தப்பிரீதிவிசுவாசமுடையவன்
இப்படிப்பட்ட சற்குணசம்பன்னனான அந்தராசகுமாரன்தன்னுடை
ய பிதாவின்கட்டளைப்படி ரணக்களத்திற்குப போகவேண்டுமென்று
ஆயுத்தப்பட்டுயுத்தசன்னத்தனாய் ரதமேறிக்கொண்டு புறப்பட்டுத்த
னபெண்சாதியாகிய பிரபாவதிக்குச்சொல்லிவிட்டுஅவளிடத்திற்சே
லவுவாங்கிக்கொண்டு போகலாமென்றுநினைத்து அவளரண்மனைக்கு
ப்போய் அவளைப்பார்த்து அடிபெண்ணே பாக்கியவதி தருமராசாவா
னவர் அஸ்வமேதயாகஞ்செய்கிறதற்குப் பிரயத்தினப்பட்டுக்குதிரை
யைவிட்டுஅந்தக்குதிரையின்பிறகேஅருச்சுனராசனையுங்கூட்டியனுப்
பியிருக்கிறார் ஆகையினாலந்தஅஸ்வத்தைப்பிடித்துக்கொண்டுஅதன்பி
ன்னேவருகிற அர்ச்சுனனுடனேபோராடவேண்டுமென்றுஆயுத்தப்
பட்டுஎன்பிதாவானவர் வாய்ப்பறையாக வில்லைப்பிடித்தவர்கள்ஆயுத
த்தைப்பிடித்தவர்கள்முதலானபட்டணத்திலுள்ளசகல செனங்களும்
யுத்தசன்னத்தராய் அவ்வவர்கள்சேனைகளோடும்வந்துரணக்களத்தி
ற்சேரவேண்டியது அப்படிவந்துசேராதவர்கள்எவர்களாயிருந்தாலு
ம்அவர்களை எண்ணெய்க்கொப்பரிகையில்தள்ளிவிடுகிறதென்றுகட்ட
ளையிட்டுப்போனார் ஆதலால் அவருடையகட்டளையைக்கடவாமல்நா
னும்போகவேணும் எனக்குச்செலவுகொடுத்தனுப்பென்றுகேட்கஅ
துகேட்டந்தப்பிரபாவதியும் தன்புருஷனைக்கண்டமாத்திரத்தில்காம
விகாரமிஞ்சினவளாய் அதிகவபேக்ஷைகொண்டுஇதற்கெப்படியென்
றுஎழுந்திருந்து தன்புருஷனுக்குநமஸ்காரம்பண்ணிஓபிராணநாயகா
நீரென்னவார்த்தை சொன்னீர்பிதாவினுடைய ஆக்கினைப்படிரணக்
களத்திற்குப் போகிறேனென்று சொல்லுகிறீரே அதுகூடாது இன்
றையத்தினந்தேவரீர் என்னுடனேகூடியனுபவித்து என்னபேட்சை
யைத்தீர்க்கவேண்டும் மன்மதனுடைய பாணாக்கினி மிகுந்துஎன்னை

த்தகிக்கின்றது இதை என்னாற்சகித்துமுடியவில்லையென்றால் இ ன்றைபதினம் அடியாளும் ருதுஸ்நானம் பண்ணியிருக்கிறேன் ஆத லால்இப்பொழுதுஎன்னைகூடியநுபவித்துச்சந்தோஷப்படுத்துமெ ன்று இரக்கமாகச்சொன்னாள்அதுகேட்டு அந்தராசகுமாரனும்தன் பெண்சாதியைப்பார்த்து ஓ பிராணநாயகிநீகொண்டிருக்கிறஎண்ண மானது இகபரசவுக்கியமில்லாமற்போகத்தக்கதாகவிருக்கின்றதுஎத் தனைமூடபுத்தியுடையவர்களாயிருந்தாலும் பகற்காலத்தில்ரதிகேளி செய்வார்களோஅப்படிச்செய்தால்நரகவாதனைவருமல்லவோஇதுவு மல்லாமலும் உன்கருத்தின்படியே இன்றையதினம் உன்னிடத்திலி ருந்துவிட்டால் என்பிதாவினுடைய ஆக்கினைதப்பாது ஆதலால்நீயி னைத்தகாரியம்இன்னம்ஒருவேளையில் ஆகட்டுமென்றுசொல்லஅதற் கு அவளும்சம்மதப்படாமல்புருஷனைப்பார்த்து ஓ பிராணநாயகாநீர் என்விருப்பதகின்படி பகற்பொழுதிற்செய்யாவிட்டாலும்இன்னுஞ் சற்றுநேரத்தில் பொழுதுபோகின்றது ராத்திரிக்கிருந்து என்னுட னேகூடிச் சகலசவுக்கியங்களையு மநுபவிததுவிடிந்தபின்பு யுத்தகள த்திற்குச்சுகமாய்ப்போகலாமென்று மருந்துச்சொன்னாள்அதுகேட் டுச் சுதர்மனுஞ்சம்மதப்படாமல் அவளைப்பார்தது ஓ சவுந்தரியவதிநீ சொன்னபடியே ராத்திரிக்குக் கேளிவிலாசமாயிருந்து அநுபவித்து உன்னுடைய விரகதாபத்தைத் தீர்த்தேனாகில் விடிந்தபின்பு எனக்கு அரசன் ஆக்கினைப் படிககு எண்ணை கொப்பரிகையில் விழ வேணடி வருமே அதற்கென்னசெய்யலாமென்றுகேட்க அதுகேட்டபிரபாவ தியும் ஓ பிராணநாயகா நீரிப்பொழுதுசொன்னவார்த்தை உண்மை யேயாம்நான் இன்றைக்குத்தான் ருதுஸ்நானம் பண்ணி பரிசுத்தமா யிருக்கிறேன் இன்றையத்தினம் நீர் என்னுடனே கூடாமற்போனால் உமக்குப் புருஷஹத்தியாதோஷமும்யமவாதனையுமுண்டாகுமே ஆகை யினால்உமக்குஎது யுத்தமா யிருக்கின்றதோ அந்தப்படிச செய்யுமெ ன்றுசொல்ல, அதுகேட்டுச் சுதர்மனும் அற்பசுகத்தைவிரும்பினால் கற்பத்துக்கும் வருமென றறிநதவனா யிருந்தும் பெண்சாதிசொன்ன வார்த்தையுமெய்தானென றுஆலோசனைசெய்துஇன்றையத் தினம்அ ரசன் ஆக்கினையைக் கடந்துநடந்தால்நாளையத்தினம்எண்ணெய்கொ ப்பரிகையில் தள்ளுவார்கள் அங்ஙனம் தள்ளினவுடனேஇந்தசரீரத் தைவிட்டுத தேவசரீரம் பெற்றுக்கொண்டுசகலசம்பிரமத்துடனேசு வர்க்கத்திற்குப் போயிருந்து இந்திரபோகத்தையாகிலு மநுபவிக்க லாம் அரசனுக்கினைக்கடவாமல் பெண்சாதியினுடைய சொல்லைக்க டந்து நடப்போமானால் புருஷஹத்யா தோஷமும் நரகவாதனையுமு ண்டாகுமாதலால் அரசனுடைய ஆக்கினையைத்தள்ளிப்பெண்சாதியி ன்விருப்பத்தின்படிசெய்கிறதே உத்தமமென்றுநினைத்து அந்தப்படி யே அன்றிராத்திரியிருந்து அந்தப்பிரபாவதியுடனே கூடிசரசசல்லா ப விநோதவிலைகளை யனுபவித்து அவள்மனதைச் சந்தோஷப்பண் ணுவித்து மறுநாள் விடியக்காலையிலெழுந்து ஸ்நானம்பண்ணிஜபத

பங்களை முடித்துக்கொண்டு ஓமசாந்திசெய்து சூரியபகவானுக்குஅர்க்கியங்கொடுத்துபிராமணர்களுக்குத் தானங்கொடுத்து அவர்களுடையஆசிர்வாதங்களைக்கைக்கொண்டு யுத்தசன்னுத்தனாய்ப் புறப்பட்டுரணக்களத்தைநோக்கிவருகையிலதற்குமுன்னமே அம்சத்துவசமகாராஜனானவன் தன்னுடைய சேனைகளெல்லாம் வந்துசேர்ந்தபிறகுஎண்ணிக்கை பார்க்கும்பொழுது தன்பிள்ளைகள்நால்வரில்மூன்றுபேர்மாத்திரம்வந்திருந்தாகளதுவுமல்லாமல்எழுபதுபேர்சேனாதிபதிகளும் ஒவ்வொருசேனாதிபதிக்கு எழுபத்தோராயிரம் போகளும் எழுபத்தோராயிரம் யானைகளும் லட்சங்குதிரைகளும் லட்சங்காலாள்களும்எழுபதுசேனாநாயகருமாக எண்ணிக்கைபார்த்துகொண்டு தன்னுடையகுமாரனாகிய சுதர்மனென்கிறவனைக்காணாமல் சிந்தாக்கிராந்தனாய் மந்திரிகளைப்பார்த்து ஓமந்திரிகளே கேட்டீரோ என்னிடையஆக்கினைப்படிக்கு நம்முடைய பட்டணத்திலுண்டானசனங்களும் என்குமாரர்களில் மூன்றுபேரும் வந்திருக்கிறார்கள் இன்னொருகுமாரனாகிய சுதர்மன் மாத்திரம்வரவில்லை பார்த்தீர்களோ நம்முடையதகப்பன்நம்மையென்ன செய்யப்போகிறானென்று நினைந்து அந்தசுதர்மன் அசட்டை யாயிருந்துவிட்டதுபோல்தோன்றுகிறது அப்படியிருந்தால் நம்முடைய ஆக்கினைத் தப்பிப்போகுமோ பூலோகத்தில் அரசாட்சி செய்கின்ற அரசர்களுக்கு உறவினரென்றும் சினேகரென்றும் பிள்ளைகளென்றும் பட்சபாதமுண்டோ அப்படியிருக்க அந்தபயித்தியக்காரனானசுதர்மன் பேய்வேலைபண்ணிக் கொண்டான் ஆதலால் நீங்கள் இந்தட்சணமே என்குமாரனான சுதர்மனைப் பிடித்துக்கட்டிக்கொண்டுபோய்ச் சங்கிலிகிதர்கள்வசத்தில்ஒப்பிவித்து எண்ணெய்க் கொப்பரிகையில்தள்ளிவிட்டுவாருங்களென்றுசொல்லியனுப்பினார்.

அதுகேட்டு அந்தமந்திரிகளும் அப்படியேநல்லதென்றுபோம்பொழுது அவர்களுக்கு எதிராகத்தேரேறிக்கொண்டு வருகிற ராசகுமாரனைப்பார்த்துவிசாரப்பட்டு ஓராசநந்தனா நீர் உமதுபிதாவினுடையஆக்கினையைக் கடந்து நடக்கலாமா நேற்றையதினம் நீ ஏன்வரவில்லை நேற்றையதினஞ்செய்தகாரியம் இன்றைக்ககுச்செய்யலாகாதோசத்தியந்தவறாதவராய் விஷ்ணுபக்திடையவராய்புண்ணியபுருஷராய்விளங்கப்பட்டநீர் இப்படிப்பட்ட பேய்வேலைசெய்துவிட்டீர் ஆதலால் உம்முடையபிதாவாகிய அம்சத்துவமகாராஜனானவர் எங்களையனுப்பி உம்மைக்கட்டிக்கொண்டுபோய் எண்ணெய்க்கொப்பரிகையிற்றளளிவிடும்பக்கட்டிக்கொண்டுபோய் எண்ணெய்கொப்பரிகையிற்றள்ளிவிடும்படி கட்டளையிட்டார் அதற்கெப்படியென்று விசாரப்படுகிற மந்திரிகளைப்பார்த்துச் சுதர்மனானவன் தேரைவிட்டிழிந்து ஓபுண்ணியவான்களாகிய மந்திரிமார்களே கேளுங்கள் நீங்கள்என்னைக்கொண்டுபோய் எண்ணெய்க்கொப்பரிகையில் தள்ளுகிறதற்கு முன்பின் யோசனைபண்ணவேண்டாம் இந்தசரீரமோநிலையாமையென்னும்பெயரையுடையதுஇது பிதாவினுடைய ஆதீனமாயிருக்கப்பட்டதுஆகையினால் இந்தசரீரத்தை அவர்என்னசெய்யவேண்டுமென்றாலும் செய்துக்

கொள்ளலாம் இதுவுமல்லாமல் பராபரவஸ்துவாகியஸ்ரீமந்நாராயணமூர்த்திக்குச் சரியாய்விளங்கப்பட்ட என்பிதாவினுடைய ஆக்கினை தப்புமோ அதுதப்பாது என்னுடையசரீரம் விருதாவில்போகாமல் பிதாவுக்குப் பிரீதியாய்போகிறது எனக்குமெத்த சந்தோஷம் அல்லாமலும்இந்தசரீரம்எத்தனைநாளைக்கிருந்தாலும்சுதந்தரமில்லாமல் இரவலாகவிருக்கின்றபடியினால்நீங்கள்என்னைக்கட்டிக்கொண்டுபோய்அந்தச்சங்கிலிகிதர்கள் வசத்திலே ஒப்பிவித்து எண்ணெய்க் கொப்பரிகையில்தள்ளிவிடச்செய்யுங்கோளென்று மகாதயிரியத்துடனேசொல்லஅதுகேட்டு அநதமந்திரிமார்களும் விசாரப்பட்டு பகவத்சங்கற்பத்தினால் இப்படிசமபவித்ததென்று துணிந்து குதிரைக்கயிற்றினால்சுதர்மனைப்பிடித்துக்கட்டிக்கொண்டுபட்டணத்திற்குப் புறம்பாககாய்ந்துக்கொண் டிருக்கிற எண்ணெய்க் கொப்பரிகை யண்டைக் குக்கொண்டுபோய்அவிடத்தில்பமகிங்கிலியர்கள்போலப்பார்க்கப்பயங்கரமாயிருக்கப்பட்டசங்கிலிகிதர்களென்கிறபிராமணர்கள்வசத்தில்ஒப்புவித்துஓசங்கிலிகிதர்களே இவன்ராசனாக்கினையைத் தள்ளிநடந்தபடியினால்இவனை எண்ணைக்கொப்பரிகையில் தள்ளும்படி அம்சத்துவமகாராசனானவர்கட்டளையிட்டார்ஆதலால்நீங்களிவனைப்பிடித்துத் தள்ளிவிடுங்கோளென்று சொல்லிப்போனார்கள்.

அதுகேட்டு அந்தசங்கிலிகிதர்களென்கிறஇரண்டுபிராமணர்களுமனஸ்தாபப்பட்டுசுதர்மனைப்பார்த்து ஓராசகுமாரகாநீர்என்னகாரணத்தினால் அரசாக்கினையைக்கடந்து நடந்தீர் ஸ்திரீசையோகம்பண்ணவேண்டுமென்கிற விருப்பமிருநதால் அதற்குகால மில்லையோ நம்முடையதகப்பனார்தானே நம்மையென்னசெய்யபோகின்றாரென்றுஎளிதாகநினைத்திருந்தீரோ இப்படிநினைந்திருக்கலாமோ அது என்னவென்றால்ராசாவினுடையசினேகமும் நாகப்பாம்பினுடைய விஷமும் துர்ச்சனசாவகாசமும் பகையாளிகளுடையவிருந்தும் சற்சனருடையதுவேஷமும் ஒருவேளைப்போலிருக்கமாட்டாது ஆதலால்தேவரீர் சகலநியாயங்களுந்தெரிந்திருந்தும்இப்படிச்செய்துக்கொண்டால்நாங்கள்யென்னசெய்யப்போகிறோம் உபசாரவார்த்தைமாத்திரம் சொன்னோமேயல்லாமல்உம்மைஎண்ணைக்கொப்பரியில் தள்ளாமலிருக்கக்கூடுமோ அப்படிநாங்கள்தள்ளாமலிருப்போமானால் உன்பிதாவானவர்எங்களைத்தள்ளுவிப்பார் ஆகையால்நாங்கள் அரசனாக்கினைகடந்துநடக்கமாட்டோம் இதற்கெப்படியென்றுகேட்கஅதற்குச்சுதர்மனு ஆலோசனைசெய்துசங்கலிகிதாகளைப்பார்த்துஓஐயமாரே நீங்கள மிகவும்புண்ணியவான்கள் அதுஎப்படியென்றால எவர்களானாலும்ஒருகுற்றஞ்செய்தால் அவர்களுடைய குற்றத்தைப்பரிகரித்து புண்ணியலோகங்கொடுக்கப்பட்டவர்கள் ஆதலால்நீங்க ளிப்போதுஒருஆலோசனையுஞ்செய்யாமல் என்னை எண்ணெய்க்கொப்பரிகையில்தள்ளிநான்செய்தபாவத்தைப்போக்குவித்து என்னைப்பரிசுத்தனாகச்செய்யுங்கோளென்று வேண்டிக்கொண்டான் அதற்குஅந்தச்சங்கிலிகித

ர்கள் மனம்வாராமல் ஆலஸ்யமாயிருந்தார்கள் அதுகண்டு அந்தச்சுதர்ம னும் நானே குதிக்கிறேனென்றுதுணிந்து அரையில்தரித் திருக்கிறவ ஸ்திரத்தை நன்றாகவரிந்துகட்டிக்கொண்டுசர்வசீவதயாபரமூர்த்தியா கிய (ஸ்ரீகிருஷ்ணபகவானை) மனதினிடமாகத்தியானஞ்செய்து ஹரி ஹரிகிருஷ்ணா,தேவகினந்தனா,கோவிந்தா அச்சுதா,பரந்தாமா,கோபி காரமணா, விருஷிகேசா, கேசவா,ஸ்ரீமந்நாராயணா, அடியேனைரக்ஷித் து என்னுடைய அஞ்ஞானத்தைநிவர்த்தித்து தேவரீருடைய உபயபா தாரவிந்தங்களைத்தந்து ரட்சிக்கவேண்டுமென்றுதோத்திரம்பண்ணிக் கொண்டு அந்தக்கொப்பரிகையைமூன்றுதரம்பிரதக்ஷணஞ் செய்துகி ழக்குமுகமாகநின்று உயரஎழும்பி அக்கினிச்சுவாலையாய் எரிந்துகொ ண்டிருக்கிற அந்த எண்ணெய்க்கொப்பரிகையில் தொப்பெனறுகுதித் தான் அந்தச்சமயத்தில் தேவேந்திராதிதேவர்கள் ஆகாசமார்க்கத்தில் வந்துநின்று சுதர்மனுடையபக்திக்குமெச்சிக்கொண்டாடினார்கள் அந் தசுதமர்னும் எண்ணெயில்விழுந்து வாடாமல் வதங்காமல்எவ்வளவுந் தாபமில்லாமல் மகாசீதளமாய் ஒருவிசாலமானதடாகத்தில்விகசித்தி ருக்கிற செந்தாமரைப் புஷ்பம்போலவும் திருப்பாற்கடலிலுதயமான சந்திரனைப்போலவும் பிரகாசித்து அந்தஎண்ணெய்க்கொப்பரிகையில் ஆனந்தத்துடனே நீந்துவிளையாடிக்கொண்டிருந்தான்.

அதுகண்டு அந்தச்சங்கிலிக்கிதர்களிருவரும் ஆச்சரியப்பட்டுஇதேது புதுமையாயிருக்கின்றது இதுவரையிலிந்த எண்ணெயில் எவர்கள்வி ழுந்தாலும் அவர்கள் நீராய்ப்போவார்கள் அப்படியிருக்கஇதுஆச்சரி யகாரியமாயிருக்கின்றதுஅல்லதுஇந்தஎண்ணெய் நன்றாய்க்காயவில்லை யோஅதையுந் தெரிந்துகொள்ளவேண்டுமென்று ஆலோசித்து ஒரு தேங்காயைக்கொண்டுவந்து அந்த எண்ணெயிற்போட்டார்கள் அந்த தேங்காயானது விழுந்து உள்ளேபோய்ப் படீலென்றுவெடித்துகிக் கென்றெரிந்து ஆகாயத்திலெழும்பிப்போய்விட்டது அதுகண்டு அந் த சங்கிலிகிதர்களிருவருஞ் சந்தோஷித்தராய் சுதர்மனைப்பார்த்துஅ ரிபக்தியுள்ளவன்பெரியோர்கள்சேவையுள்ளவன்பிதா வினுடையசொ ல்லைக்கடவாதவனுதலா லிவன் இப்படிசுகமாயிருக்கின்றான் மேலும்பூ லோகத்தில் சத்தியசந்தனர்களா யிருக்கப்பட்ட நல்லோர்களுக்குஎந் தகாலத்திலுங் கேடுவருகிறதில்லையென்று வேதஞ்சொல்லுகிறபடியி னால்இந்தராசகுமாரன் அகிலாண்டகோடிபிர்ம்மாண்டநாயகராகியஸ்ரீ மந்நாராயணமூர்த்தியினுடைய பரிபூர்ணகடாட்சத்தினால்இப்படி நிர் ப்பயமாய் விளையாடிக்கொண்டிருக்கிறான் அதுவல்லாமல்நம்முடைய கையினால் இவனைப்பிடித்துத் தள்ளவில்லையென்று நம்மிருவரையும்இ ந்த எண்ணெய்க்கொப்பரிகையில் தள்ளுவிப்பார் ஆகையால் நாம்அத ற்குமுன்னதாகவேவிழுந்து அந்த்தோஷத்தைப்பரிகரித்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய திருவடிகளைத் தியானித்துக்கொண்டுஜரே லென்றெழும்பிக்குதித்தார்கள் அங்ஙனங்குதித்த அவர்களும் ஒருவே

தனையுமில்லாமல் தண்ணீரில் நீந்துகிறதுபோல விளையாடிக்கொண்டி ருந்தார்கள்.

அதுகண்டு ஆகாயவாணியு மெச்சிக்கொண்டாடினள் தேவேந்திர ன்முதலான தேவர்களும் பாரிசாதபுஷ்பங்களைச் சலசலவென்று அந் தமூவர்பேரிலும் வருஷித்தார்கள் தேவதுந்துமியுந்திம்திம்மென்றுமு ழங்கியதுதும்புருநாதர்கள் கந்தருவர்கள் பாடினார்கள் யக்ஷஸ்திரிகள் கூத்தாடினார்கள் இப்படி சகலவைபவத்துடனே அந்தமூன்றுபேரும் பிரகாசித்துககொண்டிருப்பதை மந்திரிகள்கண்டு ஆச்சரியப்பட்டு ஓ டிவந்துஅந்த அதிசயமெல்லாம்அமசத்துவமகாராச னிடத்திற்சொன் னார்கள் அதுகேட்டு அந்தராசனும் அதிசயப்பட்டு மகாசந்தோஷத்து டனே மந்திரிகளைப்பார்த்து ஓமந்திரிகளே நீங்கள்போய் அந்த மூன் றுபேரையும் இவ்விடத்திற்கு அழைத்துவாருங்களென்றுஉத்தரவுசெ ய்தார் அதுகேட்டு அவர்களும் எண்ணெய்க்கொப்பரிகையினிடத்திற் குப்போய் அவர்களைப்பாரத்து உங்களைராசாவானவர்அழைத்துவரும் படி கட்டளையிட்டாரென்று சொல்ல அதற்குஅந்த மூன்றுபேறும்ந ல்லதென்று வெளியேவந்து மங்களஸ்நானம்பண்ணி ஜபதபங்களைமுடி த்துக்கொண்டு திவ்வியமாகிய வஸ்திராபரணங்களைதரித்துக்கொண்டு ரதாரூடர்களாய் சகலசேனைகளும் புடைசூழ்ந்துவரும்படிசகலசம்பிர மத்துடன்அமசத்துவமகாராசன் இருக்குமிடத்திற்கு வந்துசேர்ந்தார் கள் அதுகண்டு அம்சத்துவமகாராசனும் அந்தசங்கிலிகிதர்களென்கிற பிராமணர்களிருவருக்கும் நமஸ்காரம்பண்ணினார் அப்பொழுது சுதர் மனும் தேரைவிட்டிழிந்து தன்பிதாவுக்கு மூன்றுதரம் பிரதட்சணஞ் செய்துசாஷ்டாங்கதண்டன் சமர்ப்பித்தான் அதுகண்டு அம்சத்துவ மகாராசனும் தன்குமாரனாகிய சுதர்மனையெடுத்துமார்போடணைத்துக் கொண்டுஉச்சியைமுகந்து முத்தமிட்டு அப்பா புத்திரரத்தினமே உ ன்னால் எனக்குச் சகலபிரதிஷ்டையுங் கீர்த்தியுமுண்டாச்சுது ஆனா லும் - நீ நேற்றையதினம் வராமற்போன தென்னவென்றுகேட்க அ தற்கு அந்தச் சுதர்மனுமிராத்திரியிருந்துவந்தசங்கதிகளைச் சொல்லவ துகேட்டு அந்த இராசனும்மகிழ்ச்சிகொண்டு அந்தக்ஷணமே கங்காதீர் த்தமுதலான திவ்வியதீர்த்தங்களை அழைப்பித்து பிரம்மசொரூபமா க விளங்கப்பட்ட பிராமணர்களால்மந்திரபூர்வகமாய்அந்தச்சுதர்மனு க்கு அபிஷேகம்பண்ணிவைத்துஇந்தச் சண்பகாபுரத்திற்கு நீரே அர சனென்று சகலசம்பிரமத்துடன் மகுடஞ்சூட்டிவைசதார் பிற்பாடு சுதர்மனும் பட்டாபிஷேகனாய் சகலவேடிக்கையுடனிருந்துக்கொண்டு தன்னைவந்து சேவித்துக்கொள்ளுகிற மகுடமண்டலீகருக்கெல்லாம் ஆஞானைசொல்லி மகா உச்சாகத்துடனே சேனாதிபதிகளைப்பார்த்து அர்ச்சுனராசனுடைய அஸ்வமேதகுதிரை எவ்விடத்தில் வருகின்றது அதைப்பிடித்துக்கொண்டு வாருங்கோளென்று உத்தரவுசெய்துஆயிர ம் ரதக்காரர்களையனுப்பஅவர்களுமப்படியேநல்லதென்றுபோய்அந்த க்குதிரையைப் பிடித்துக்கொண்டு வந்துவிட்டார்கள்அதுகண்டு சுதர்

மறும் அந்தக் குதிரையைப்பார்த்து இனிமேல் என்கையி லகப்பட்ட குதிரையை அந்த அர்ச்சுனன் விடுவித்துக்கொண்டுபோய்தருமராசாவினுடைய கையினால் யாகம்பண்ணுவிக்கப் போகிறானே அது அந்த க்கிருஷ்ணபகவானுக்கே பிரசித்தமாகத்தெரியவரும்அதுவுமல்லாமல் அர்ச்சுனனுக்குப் பாத்தியப்பட்டு தேவேந்திராதி தேவர்க ளெல்லாரும் ஒருமுகமாகக் கூடிவந்துகுறுக்கேவிழுந்து குதிரையைப்பிடிப்பார்களானாலும் அவர்களையும் என்னுடைய குரூரபாணங்களினால் கண்டதுண்டம் பண்ணுகிறேனென்றுசொல்லிப்பிறபாடு அந்தக்குதிரையையும் தனதகப்பனான அம்சத்துவமகாராசாவையும்சேனைகளுக்குமத்தியில் நிறுத்தி தன்னுடைய சேனைகளெல்லாம் பத்மவியூகமாகநிறுத்தினான் முதன்மையாக யுத்தசன்னத்தனாய் கனகமயமான ஒரு திவ்விய ரதத்திலேறிக்கொண்டு கோதண்டத்தைக் கையிலே பிடித்துநின்றுமகாஉச்சாகத்துடனே ரணபேரிகைமுதலானதுகளையு முழக்குவித்தான்இவ்விடத்தில் இப்படி நடந்துகொண்டிருக்க அவ்விடத்தில் அந்த அஸ்வமேதக்குதிரையைக் காத்துக்கொண்டு பின்னாலே நடந்துவந்த சேவகர்களெல்லாம் அந்தஆயிரம்ரதக்காரர்களால் அடிபட்டுநொந்துஓட்டமெடுத்து அர்ச்சுனனிடத்திற்குப்போய் சுவாமி நம்முடைய குதிரையானது அம்சத்துவமகாராசனிடத்தில் அகப்பட்டுக் கொண்டதென்று முறையிட்டார்கள் அதுகேட்டு அர்ச்சுனராசனும் மகாரோஷத்துவேஷத்துடனே அந்த சேவர்களைப்பார்த்து ஓ சேவர்களேநம்முடைய குதிரையைப் பிடிக்கிறவனும் இருக்கின்றானோ அல்லது பயமில்லாமல் எவனாகிலும் ஒருவன் பிடித்துகட்டுவானேயாகில் அவனுக்கு யமலோகமேகதியென்பது இந்தப்பூமண்டபத்தில்எவர்களு மறியார்களோ ஆனாலுமாகட்டும் இப்பொழுதே அவனுடையகர்வத்தையுமடக்கிவைக்கிறேனென்று உக்கிராகாரத்துடன் சொல்லி அதன்பின்பு பெரியகாட்டைப்போல விஸ்தீரணமாய் நெருங்கியிருக்கின்ற சதுரங்கபலசேனைகளுடனும் விஸ்வகேதுமுதலான துரைகளுடனும் புறப்பட்டுச் சிங்கநாதங்கள் அட்டகாசங்கள்முழங்கவும் ஏழாவரங்கள்கர்ச்சிக்கவும் ரதத்தொனிகள் படபடாகாரங்கள்செய்யவும் நடக்கிற அதிர்ச்சியினால் பூமியதிர்ந்து பத்தல்பத்தலாய் வெடிக்கவும்அஷ்டகுலபர்வதங்களும் அஷ்டதிக்குகளும் நடுநடுங்கவும் அஷ்டகஜங்களும் வீரிட்டோடவும் சேனைகளுடைய பாததூளியினால்சமுத்திரமுழுதும்சேராய்ப்போகவும்மகாஆவாரத்துடன் அதிவேகமாய்நடந்துசுதர்மனுடைய சேனைகளிருக்குமிடத்திற்குச் சமீபமாகவந்து நின்று அர்ச்சுனராசனும் கண்டுவிட்டிறங்கி எதிராகவிருக்கின்ற சேனைகளையும் அந்தச்சேனைகளுக்கு மத்தியிலிருக்கப்பட்ட அம்சத்துவமகாராசனையும் அஸ்வமேதக குதிரையையும் முதன்மந்திரியாயிருக்கின்றசுதர்மனைப்பார்த்து எவ்வளவும் முன்பின்யோசித்துப்பாராமல் இந்தக்ஷணமே என்னுடைய பாணங்கினிபால்பஸ்மீகரப்படுத்திவிடுகிறேனென்றுசொல்லிதன்னுடைய சேனைகளையும் பத்மவியூகமாகநிறுத்தி தன்னுடைய ரதத்தை

யுமுன்னேநிறுத்தி தன்கையினிடமாகப் பிடித்திராநின்ற அக்கினிதே
வன்கொடுத்தகாண்டீபத்தைக்குணத்தொனிபண்ணி சாரதியையுமெ
ச்சரித்து ரதத்தையும் வேகமாகநடத்தினான் அதுகண்டு பிரத்தியுமன
னுஞ்சிரித்து அர்ச்சுனராசனைப்பார்த்து ஓ ஐயா அர்ச்சுனதேவரீர்இந்
தக்கொஞ்சஞ்சேனைகளை ஒரு பொருட்டாகநினைத்து யுத்தத்திற்குப்
போகவேண்டுமோ இப்படியாகதேவரீர்எதிர்த்துப்போகின்றதையோ
சித்துப்பார்க்குமிடத்தில் மின்மினிப் புழுக்கள்பேரில் சூரியபகவான்
எதிர்த்துப்போகின்றதுபோ லிருக்கின்றதேயல்லாமல் வேறல்ல ஆத
லால் தேவரீருக்குத்தெரியும்படிஎங்களுடையசௌரியத்தையும்பராக்
கிரமத்தையும் வில்வித்தையையும் என்றைக்குக் காண்பிக்கப்போகி
றோம் எங்களுடைய கீர்த்திப்பிரதாபமானதுஎன்றைக்குப்பிரகாசமா
கப்போகின்றது தேவரீர் சற்றேநில்லும் என்னுடைய வீரப்பிரதாபத்
தைப்பாரும்என்னுடைய சஸ்திரஅஸ்திரங்களுக்குஇந்தராசனையும்சே
னைகளையும்இரையாக்கிவைக்கிறேனென்றுஆக்கிருஷமாகச் சொல்லிக்
கொண்டிருக்கையில் வீராதிவீரனான விஸ்வகேதுவும அந்தஅர்ச்சுன
ராசனைப்பார்த்து ஓ ஐயாதேவரீர் இந்தச்சேனைகளை ஒருபொருளாய்நி
னைத்து சண்டைக்குப் போகவேண்டுமோ சின்னமுளையைப்பிடுங்கிப்
போடுகிறதற்குப்பெரிய கோடாலிதேடவேண்டுமோ ஆகையினால்தே
வரீர்போகவேண்டாம் சற்றுநேரம்நில்லும்நான்போய் இந்தராசனையும்
சேனைகளையும் என்னுடைய சஸ்திரஅஸ்திரங்களினால் சின்னபின்னம்
பண்ணுகிறேனென்று சொல்லித் தன்னுடையரதத்தைஅதிவேகமாக
த் தூண்டித் தன்கையிலிராநின்ற கோதண்டத்தில் அதிதீட்சணியமா
ன அனேகமாயிரம் பாணங்களைத் தொடுத்துப்பிரயோகஞ்செய்தார் அ
ந்தப் பாணங்களானது இரச்சலிட்டுக்கொண்டு வந்து சுதர்மனுடைய
சேனைகள்பேரில் விழுந்துதைக்கிறபோது அந்தச் சேனைகளுடைய த
யிரியங்களெல்லாம் நிறைந்த தடாகத்திலிருக்கின்ற தாமரைப்புஷ்ப
ங்களின் வாசனைநீங்குவதுபோலப் போய்விட்டது அதுகண்டு விஸ்வ
கேதுவும் அனேகமாயிரம் பாணங்களை மேன்மேலாகப் பிரயோகஞ்
செய்து சுதர்மனுடைய சேனைகளையெல்லாம் பின்னிட்டோடும்படியா
கச் சின்னபின்னப்படுத்தினான் அதுகண்டு சுதர்மனும் ஓடிப்போகின்
ற தன்னுடைய சேனைகளையெல்லாம் நிறுத்தி அந்த விஸ்வகேதுவுக்
கெதிரே தன்னுடைய ரதத்தைத்தூண்டி விஸவகேதுவைப்பார்த்துஓ
ராசகுமாரகா நீ பதறவேண்டாம் அந்தஅர்ச்சுனராசன்முன்னதாகவ
ந்தால் அவனை நிறுத்திவிட்டு நீ முதன்மையாகவந்து எதிர்த்தாயே நீ
மகாவீரன்தான் உன்னுடையபலத்தை ஒரு நிமிஷத்திலறிகிறேன் ஆ
னாலும் உன்னுடைய குலங்கோத்திரமறிந்துகொள்ளாமல்உன்னோடுச
ண்டைபண்ணக்கூடாதுஆதலால் உன்பேரென்ன உன்பிதாவின்பே
யரென்ன உனக்கு ஆசிரியரெவர் உன்னுடையவம்சமென்ன அதை
யெனக்குச் சற்றே தெரியப்படுத்தவேண்டுமென்றுசொல்ல அதுகே

ட்டு விஸ்வகேதுவுஞ்சுதர்மனைப்பார்த்து ஓ ராசனந்தனே என்னுடைய குலங்கோத்திரங்கேட்கவேண்டுமோ ஆனால் சொல்லுகிறேன் கேளும்-நான் சகலசீவராசிகளுக்கும் ஆனந்தத்தையுண்டாக்குகிறவராய்ஸ்ரீமந்நாராயணமூர்த்திக்கு நேத்திரமாய் திருமூர்த்திஸ்வரூபமாய்தாமரைக்குச்சிநேகிதராய் சகலதேவர்களுக்கும் பிராமணர்களுக்கும் ஆதாரமானதெய்வமாய்விளங்கப்பட்ட சூரியபகவானுடையபேரன்மகாதான விநோதியாகியகர்னமகாராசனுடையகுமாரன்என்பேரோவென்றால் சகலவீராதிவீரர்களையெல்லாஞ்செயித்த விஸ்வகேதுவென்று சொல்லுவார்கள் அதுவுமல்லாமல் பரமாத்துமனாகியஸ்ரீகிருஷ்ணமூர்த்தியே எனக்குஆசாரியருந் தெய்வமாயிருக்கிறவர் நான் அந்த பகவானுடைய அனுக்கிரகத்தினாலேயே சகலசத்துருக்களையும் துமசப்படுத்துகின்றதென்று சொல்லிப்பின்னையும் அந்தசுதர்மனைப்பார்த்துநான் என்னுடைய விருத்தாந்தமெல்லாம் விவரமாகச்சொன்னேனல்லவோ உன்னுடைய விருத்தாந்தத்தையும் எனக்குத்தெரியும்படி சற்றேசொல்லென்று கேடக அதுகேட்டு சுதர்மனும் விஸ்வகேதுவைப்பார்த்து ஓ விஸ்வகேதா என்னுடைய குலங்கோத்திரஞ்சொல்லுகிறேன் கேளும்நான் பரவாசுதேவரான ஸ்ரீகிருஷ்ணமூர்த்திக்கு அடிமையாயிருக்கப்பட்டஅம்சத்துவமதாராசனுடையகுமாரன் என்பேர்சுதர்மனென்று சொல்லுவார்கள் இனிமேல் உன்னுடனேஎதிர்த்துநின்று போராடுகிறதற்கு எனக்குத்தகும் எதோபார்ப்போம்வாவென்றுசொல்ல அதுகேட்டு விஸ்வகேதுவுந்தன்னுடையகோதண்டத்தினிடமாக கோடையிடிக்குச் சமானமான குரூர பாணங்களைத்தொடுத்துச் சுதர்மனுடைய சேனைகளையெல்லாம தத்தளிக்கப்பண்ணி அவனுடைய ரதசாரதியையும் குதிரைகளையும் நோகச்செய்து கொடியையுமறுத்து வில்லையுங்கண்டித்து அவனையுஞ்சல்லடைக்கண்களாகத்துளைத்து சரீரமுழுதும்ரத்த மயமாக்கினன் அதற்குஅந்தச்சுதர்மனும் சற்றுநேரம் ஆயாசமாயிருந்து உடனே மகாகோபதீப்தனாய் வேறொருவில்லையெடுத்து அநேகமாயிரம் பாணங்களைத்தொடுத்து விஸ்வகேதுவின்பேரில் பிரயோகஞ்செய்தான் அதனால்விஸ்வகேதுவும்நொந்து ஆக்கிரம நிககிரோதனாய் அதிசீக்கிரமாகத்தன்னுடையவில்லிலே அதிதீட்சண்ணியமான கோடாகோடிபாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்து சுதர்மனுடையரதத்தையும் சக்கைச்சக்கையாய்ப்பிளந்து சாரதியுங் குதிரைகளையுங் கொன்று அவன்கையிலிருக்கின்றவில்லையுங்கண்டித்து அவனுடைய மார்பையும்பத்தலாக்கிழித்து ரத்தமயமாக்கினன் அதனால் சுதர்மனும்ஆயாசமடைந்து மகாரோஷத்துடனே வேறொருவில்லையெடுத்து வளைத்துக் குணத்தொனிப்பண்ணி அந்தவில்லினிடமாக சூரியகிரணம்போலஅதிதீக்ஷண்ணியமான பாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ் செய்துவிஸ்வகேதுவினுடைய சாரதியையும் அதம்பண்ணிக் குதிரைகளையுங் கண்டித்து அவனுடைய மார்பிலும் ஐந்து பாணங்கள் தைக்கும்படிசெய்தான் அதனால் விஸ்வகேதுவும் நிர்வகிக்க மாட்டாமல் மெத்த

வும் ஆயாசப்பட்டு தேரின்பேரில்தொப்பென்றுவிழுந்து மரணத்திற்குச்சரியான மூர்ச்சையடைந்தான் அதுகண்டு பிரதித்யுமன்னுங்கோபமிகுந்து நெறநெறவென்றுபற்களைக்கடித்துக்கொண்டுமீசைபடபடவென்றுதுடிக்கும்படி அதிகரோஷத்துடனே தன்னுடையரதத்தைத்தூண்டி சாரதியையு மெச்சரித்து வில்லைக்குணத்தொனிபண்ணி அனேகமாயிரம் அளவிரந்தபாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்து சுதர்மனுடையசேனைகளையெல்லாம் சூழ்ந்துகொண்டு தேர்களையெல்லாங் குதத்துக்கால்வேறுகொடுங்கைவேராகசக்கைசக்கையாகப்பேர்த்தெறிந்து ஆனைகளையெல்லாம் காலவேறுவால்வேறுமஸ்தகம்வேறுதுமபிக்கைவேறு தந்தங்கள்வேறாகவிழும்படிசெய்துகுதிரைகளையெல்லாங் கண்டதுண்டம்பண்ணி காலாட்களையெல்லாம்கால்வேறுகைவேறுதலைவேறு மாமிசம்வேறு எலும்புவேறாகக்கண்டித்துஎங்கேபார்த்தாலும்பிணமலைகளாகக்குவித்துரத்தவெள்ளம் ஆறாகவழிந்தோடும்படிசெய்து மகா ஆகரோஷத்துடனே சிங்கநாதம்பண்ணினான் அதனால்சுதர்மனுடையசதுரங்கபலசேனைகளுமநிர்வாகஞ்செய்யமாட்டாமல் இறந்தவர்கள்போகமற்றவர்களெல்லாருமபயங்கொண்டு ஓட்டமெடுக்கத்தொடங்கினார்கள் அதுகண்டுசுதர்மனும்மகாரோஷத்துவேஷத்தையுடையவனாய் ஓடிப்போகின்ற தன்னுடைய சேனைகளைப்பார்த்து நீங்களேன் பயந்தோடுகிறீர்கள் இந்தப்பிரத்தியுமனனுடையசேனத்தை ஒருநிமிஷத்திலே கண்டிக்கிறேன் நீங்கள் ஓடிப்போகவேண்டாமென்றுகையமர்த்திஎல்லாரையுநிறுத்திதன்னுடையரதத்தை அதிவேகமாகத்துரத்தி அந்தபிரத்தியுமனனைப்பார்த்துஓமனம்தாநீஎன்கையிலேவிழுகிறாய் சற்றேபொறுத்திரு உன்னுடைய பாணத்தையும்உன்னுடையவில வின்திரத்தையும் உன்னுடையசௌரியபராக்கிரமதிடத்தையு நினைத்துப்பார்க்குமிடத்தில் எனக்குமிகவும்நகைப்புவருகிறது உன்னுடைய யுத்தத்தையும் வெண்டுகளேமெச்சவேண்டும் என்றுன்னை யெதிர்த்துநிர்வகிக்கமாட்டாய்முன்புபரமசிவனுடைய நெற்றிக்கண்ணால எரிந்து சாம்பலானபொழுதேஉன்னுடைய கர்வமெல்லாம் அடங்கிப்போச்சுதே இன்னமும்வெட்கமில்லாமல் ஆண்பிள்ளையாகவந்து என்முன்னே எதிர்த்துநிற்கிறாயல்லவா ஆனாலுமென்ன இப்பொழுது ஒருநொடிக்குள்ளே என்னுடைய பாணாக்கினியினால் உன்னைப்பஸ்மீகரப்படுத்திவிடுகிறேன் உன்னை ஒருபொருளாக எண்ணி நானுன்னையெண்ணுகிறதில்லை ஏனென்றாலுன்பிதாவாகியகிருஷ்ணபகவானை என்பிதாவாகிய அம்சத்துவமகாராஜன் இருதயகமலத்திற் கட்டிவைத்துக்கொண்டிருக்கிறார் அப்படிக்கொத்தமகானுபாவனுடைய புத்திரனாகிய என்னுடைய சவுரியபராக்கிரமத்தைககாண்பிக்கிறேன் நீசற்றுநேரம் நில்லென்றுசொல்லிதன்னுடைய ரதத்தையும் அந்தப்பிரத்தியுமன்னனுடைய ரதத்திற்குநேராகத் தூண்டினான்,

இப்படியாகச்சொன்னவசனங்களையெல்லாம்பிரத்தியுமன்னன் கேட்டுக்கொண்டிருக்கின்றதென்றுசிரித்து அந்தச்சுதர்மனைப்பார்த்து ஓசுதர்

மாநீயென்னைச் சவுரியமில்லாதவனென்று சொன்னுயல்லவோ நான் இதுவரையில்ஒருகருப்புவில்லினாலும்ஐந்து புஷ்பபாணங்களினாலும் வண்டுகளையே நாணியாகக்கொண்டீரேழு பதினாலுலோகங்களையுஞ் செயித்தேன் இப்போதுவயிரமானவில்லும்எழுகுபாணமுண்டானால் எப்படியாகவேண்டும் அதையுஞ்சற்றுநேரத்தில் நீயேபாக்கப் போகிறுயென்று சொல்லிபிரத்தியு மன்னனவன காலாக்கினிருத்திரனைப் போலெரிந்துவிழுந்து தன்னுடைய வில்லினிடமாகவச்சிராயுக்தத்திற்குச்சமானமான அனேகமாயிரப்பாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து சுதர்மனுடையதேரையும் தும்சப்படுத்தி அவனுடைய தேர்ப்பாகனையுங் குதிரைகளையுங்கொன்று அவனையும்நோகவெய்தான் அதனால்சுதர்மனனவன் மெத்தவும் இளைப்படைந்துமகாரோஷத்துவேஷத்துடனே மனோதயிரியம்விடாமல் வேறே ஒருதேரிலேறிக்கொண்டு வில்லைக்குணத்தொனிபண்ணி அந்தவில்லினிடமாக அனேமாயிரந் தீக்ஷண்ணியமான திவ்வியபாணங்களைத்தொடுத்துபிரத்தியுமனன்பேரிற்பிரயோகஞ்செய்து அவனைநோகவெய்தான் அதுகண்டு அந்தப்பிரத்தியுமனனும் பயப்படாமல்நின்று தன்னுடையவில்லிலே காளகூடவிஷத்துக்குச் சமானமானதிவ்வியபாணங்களைத்தொடுத்துச்சுதர்மன்பேரில்பிரயோகஞ்செய்துஅவனுடையரதசாரதியையுங்கொன்றுகுதிரைகளையுங்கண்டித்துவில்லையும் தும்சப்படுத்தித்தேரையுஞ் சக்கைசக்கையாகப்பிளந்து அவனையுஞ் சல்லடைக்கண்களாகத்தொளைத்துசரீரமுழுதும் ரத்தமயமாக்கினன் அதுகண்டு சுதர்மனனவன் தயிரியம்விடாமல் ஒருகத்தியும்கேடயமும் எடுத்துக்கொண்டுதேரைவிட்டுப் பூமியிற்குதித்து வருகையில்அதைப் பிரத்தியுமனன் கண்டு இரண்டு அர்த்தசந்திரபாணத்தால் அந்தக்கத்தியையுப் கேடயத்தையும் பொடிப்பொடியாக்கினன் அதற்கும்பின்னிடாமல் மறுபடியும் ஒருகதாயுதத்தை யெடுத்துக கொண்டுவருகையில் அதைப்பிரத்தியுமனன் பார்த்துத்தானும் ஒருகதாயுதத்தைஎடுத்துக்கொண்டுதேரைவிட்டுப் பூமியில்குதித்து அந்தச்சுதர்மனுடனே சிங்கம்எதிர்த்ததுபோல எதிர்த்துநின்று இரண்டுபேரும்சமமாய் கதாயுதத்தினால் பராக்கிரமத்துடனேபோராடினார்கள் அதனால இரண்டுபேர்கையிலுமிருந்தகதாயுதங்களும்பொடியாகிவிட்டது அதுகண்டுபிரத்தியுமனனும் சுதர்மனனும் வேறொருகத்தியுங் கேடயமும் எடுத்துக்கொண்டு இரண்டு வியாக்கிரமத்தைப்போல ஆக்கிரமித்து நின்றுஒருவர்க்கொருவர்செலிக்கவேண்டுமென்கிற ஆசையினால் ஒருவரையொருவர் கட்டிப்பிரண்டும்வெட்டியும் குத்தியும் தள்ளியும் முட்டியும்இடித்தும் இழுத்தும் இந்தவிதமாகவெகுநேரம் போராடிப்பின்பு ஒருவருடையகத்திவெட்டிஒருவர் பேரில்விழுந்து அந்தஇரண்டுபேரும மூர்ச்சையடைந்தார்கள்.

அதில்அந்தச்சுதர்மன்மாத்திரம் சற்றுநேரத்தில் மூர்ச்சைதெளிந்தெழுந்துமகாஆக்குரோஷத்துடனே வெறொருதேரிலேறிக்கொண்

டு வில்லைக்குணத்தொனிபண்ணி அர்ச்சுனராசனுடையசேனைகள்பே
ரில் எதிர்த்தான் - அதுகண்டு கிருதவர்மனும் எதிர்த்துசுமர்மனுட
னேசற்றுநேரம்போராடி அவனுடைய பாணக்கினிக்குநிர்வாகம்செ
ய்யமாட்டாமல் நொந்து தேரைவிட்டுக்குதித்துஓடிப்போனான் அதுக
ண்டு சுதர்மனுஞ்சிரித்துதன்னுடையரதத்தைச்சக்கிராகாரமாய்சுற்றி
க்கொண்டுவந்து அனுசாளுவனுடனேசிலநேரம்போராடிஅவனையும்
மூர்ச்சிக்கப்பண்ணுவித்துப் பின்புஎவ்வர்ணுசுவனுடனே சிலநேரம்
போராடி அவனோடும்சற்றுநேரம் யுத்தம்பண்ணி அவனையும் மூர்ச்
சையடைவித்து அப்புறம்நீலத்துவசமகாராசனுடனேஎதிர்த்துயுத்த
ஞ்செய்து அவனையும்மூர்ச்சிக்கப்பண்ணுவித்து அந்தச்சுதர்மனனவ
ன்தாமரைதத்டாகததிற்புகுந்தஆனையைப்போலஆக்கிரமிததுஎங்கே
பார்த்தாலும் சுதர்மனுகப்பிரகாசித்து நின்றுரதகஜதுரகபதாதிகளா
கியநால்வகைச்சேனைகளையுஞ் சின்னபின்னமாய்க கண்டதுண்டப்ப
டுத்தி எந்தவிடத்திலும் பிணமலைகளாகக்குவிததுரத்தவெள்ளமான்
து ஆறுய்ப்பெருகியோடும்படியெய்து பின்னையும்வில்லைப்பிடிததுவ
ந்துதன்னை எதிர்ததவர்களை எல்லாம் அதம்பண்ணிமருந்துக்காகிலும்
ஒருவரையும்விடாமற்படிக்கு கொன்றுவிட்டுஎங்கேபார்ததாலும்யம
னுடைய வண்டகசாலையைப்போலவும் வேடனனவன் மாமிசக்குப்
பையைப் போட்டுவைத்ததுபோலவும்அருச்சுனனுடைய சேனைகளை
களையெல்லாம் மூலைக்குமூலை ஓதுக்கிசிங்கநாதம்சங்கநாதம் அட்டகா
சம்முதலானவைகளைச்செய்துமகா உச்சாகத்துடனேதன்னுடையர
ததைததூண்டி அர்ச்சுனராசன்பேரில் எதிர்த்துநின்று தன்னுடை
யவில்லினிடமாக அக்கினிச்சுவாலையைவீசுகின்ற அனேகமாயிரம்பா
ணங்களை எடுத்து இதுபத்து இது நூறு இது ஆயிரம்இதுபதினாயிரம்இ
துலட்சம் இதுபததுலட்சமெனறுகணக்குவழக்கில்லாமற்றொடுதது
ப்பிரயோகஞ்செய்து இருநூறுபாணததினால் அருச்சுனராசனுடைய
மார்பையும பத்தலாகக்கிழித்து நூறுபாணத்தினால்அனுமக்கொடியை
யும்அறுத்து நூற்றைம்பதுபாணத்தினால் குதிரைகளையும்ரத்தமயமா
க்கிநூறுபாணத்தினால் சாரதியையுமநோகப்பண்ணிஅருச்சுனனுடை
யரதத்தையும் மிஞ்சிவரமொட்டாமல் சிக்குப்படுத்தி கியாவெனறு சி
ங்கநாதம்பண்ணினான் அதுகண்டு அருச்சுனராசனும்மகாகோபதித்த
னாய்இரண்டுகண்களிலும் குபீல்குபீலென்று நெருப்புப்பொறிகள்பற
க்கவும் பல்லுகளை நறநறவென்றுகடித்துக்கொண்டுமீசைபடபடவெ
ன்றுதுடிக்கவும சரீரமுழுதும் வெயர்க்கவும் பிரளயகாலருத்திரனைப்
போலநின்றுஅட்டகாசம்பண்ணிஅந்தச்சுதர்மனைஉறுமிப்பார்த்து தன்
கையிற் பிடித்திராநின்ற காண்டீபமென்கிற வில்லைவளைத்துக்குணத்
தொனிபண்ணித் தனக்குஅஷ்டதிக்குப்பாலகர்கள்கொடுத்திருக்கின்
றஅதிதீக்ஷண்ணியமான அஸ்திரங்களை அந்தவில்லினிடமாகச்சந்தித்
துப்பிரயோகஞ்செய்தான் அந்தஅஸ்திரங்களானதுகிருஷ்ணசர்ப்பம்
போல் இரைசசலிட்டுப் புகைகளுடனும்எரிகளுடனும் ஒன்றோடொ

ன்று உராய்ந்துக்கொண்டுவந்துசுதர்மனுடையகைவில்லைக்கண்டித்து ரதசாரதியையுங்குதிரைகளையுஞ் சின்னாபின்னப்படுத்திக்குடையையும்கொடிச்சிலைகளையுந் துண்டித்து அவனுடையசரீரமெல்லாஞ் சல்லடைக்கண்களாகத்துளைத்து அவனையும் பிரம்மிக்கும்படிச்செய்துவிட்டது அதனால் அந்தச்சுதர்மனானவன் மிகவும்நொந்து மகா ஆயாசப்பட்டுசற்றுநேரம்கொடிஸ்தம்பத்தின்பேரில் மூர்ச்சையாய்விழுந்துதிரும்பவும் ஆயாசந்தீர்ந்து எழுந்திருந்து உக்கிராகாரனாய்வேறொருரதத்திலேறிக்கொண்டு திகுதிகுவென்று எரிகிறஅக்கினிக்குச்சமானமாய்தங்கக்கட்டுகளுடனே கூடியிருக்கின்ற ஒருவில்லையெடுத்துஅந்தவில்லைக்குணத்தொனிபண்ணிஅந்தவில்லினிடமாக அதிகோரமானபாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து அர்ச்சுனராசனைநோகச்செய்தான் அதனாலந்த அர்ச்சுனராசன்மெத்தவும்நொந்து தயிரியத்தைவிடாமல் காண்டீபத்தில் ஒரு அக்கினியாஸ்திரத்தைத்தொடுத்து சுதர்மன்பேரில் பிரயோகஞ்செய்தான் அதுகண்டு சுதர்மனும்ஒருவருணாஸ்திரத்தையெடுத்து அபிமந்திரித்துத்தன்னுடையவில்லினிடமாகத்தொடுத்து அர்ச்சுனன்பேரில் பிரயோகஞ்செய்தான் அந்தஅஸ்திரமானது மின்னிக்கொண்டுவந்து சப்தமேகங்களுமொன்றாகக்கூடிஏககாலத்தில் வருஷித்ததுபோல் ஜலத்தைவருஷித்தது அந்தஅக்கினியாஸ்திரத்தினுடையசுவாலையெல்லாந் தணித்துவிட்டது அதுகண்டுஅர்ச்சுனராசன் திரும்பவும்அனேகமாயிரந்திவ்வியபாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்தான் அதுகண்டு சுதர்மனும் அந்தப்பாணங்களிலொன்றாகிலும் தன்னுடைய தேரினிடத்திற்குவரவொட்டாமல்கண்டித்துவிட்டு சண்டப்பிரசண்டனாய் தன்னுடைய வில்லைவளைத்துஅநேகஅஸ்திரங்களைச் சந்தித்துதேவர்கள்முதலானவர்களுக்குந்தெரியவொட்டாமல் மழைவாரியிறைத்ததுபோல்அர்ச்சுனராசன்பேரில் பிரயோகஞ்செய்து அர்சுனராசனைக் காண்டீபத்தைப் பிடிக்கவொட்டாமலும்அஸ்திரங்களை யெடுக்கவொட்டாமலும் கால்கைகள்அசைக்கவொட்டாமலும் செய்தான் அதனால் அர்ச்சுனராஜன் மெத்தவுந்தாபமடைந்து சுதர்மனுடைய ஆண்மைக்குமெச்சி தலையைஅசைத்துஓ ஓராசகுமாரகாஉன்னை நான்மெச்சினேன்பளாபளாஉன்பாணத்தினுடைய சுறுக்கேசுறுக்குநான்பாரதயுத்தத்தில்வீஷடுமாசாரியர்துரோணாசாரியர்-கன்னன்-சல்லியன் முதலானவீராதிவீரர்களுடனும்போராடினேன் அவர்கள் பிரயோகித்தபாணங்களினுடையசுறுக்கும்இதற்கீடல்லஅதுவுமல்லாமல்ஒருகாட்டில்பன்றிநிமித்தமாய்பரமேஸ்வரன்வேடனாகவந்துஎன்னுடனேபோராடிஅவர்பிரயோகஞ்செய்தபாணங்களினுடைய சுறுக்கும்இதற்கீடல்லஆதலால் உன்னையே மெச்சினேன் நீகற்றிருக்கிற வில்வித்தையே வில்வித்தைஉன்னுடையசவுரியபராக்கிரமம் இந்தப்பூலோகத்திலொருவர்க்காகிலு முண்டோவென்றுமெச்சிச்சொன்னான் அதுகேட்டுச் சுதர்மனும் அர்ச்சுனனைப்பார்த்து ஓ அர்ச்சுனா நீயோ என்னைமெச்சுகிறவன் இனிமேல் உன்னைச்

சாகஅடிக்கிறபோதுஉன்னைக்காப்பாற்றவேண்டுமென்றுஸ்ரீகிருஷ்ணபகவான்வருவார் அந்தப்பகவானல்லவோ என்னுடையஆண்மையைக்கண்டுமெச்சவேண்டும் அப்போதல்லவோஎனக்குச்சந்தோஷமுண்டாகும் ஆகையினால் அந்தப்பகவானையும்இன்னஞ்சற்றுநேரத்தில்வரப்பண்ணுகிறேன் நீயும் அனேகயுத்தத்தில்கைகண்டிருக்கிறாயல்லவா அந்தவில்வித்தையெல்லாம்என்முன்னேகாண்பியென்றுசொல்லித்தன்னுடையவில்லிலே ஒருசுழல்பாணமென்கிற திவ்வியாஸ்திரத்தையெடுத்துத்தொடுத்துப்பிரயோகம்பண்ணினான்அந்த அஸ்திரமானது றிவ்வுறிவ்வுமென்றுசுழன்றுக் கொண்டுஓடிவந்து அர்ச்சுனருடையரதத்தின்பேரில்விழுந்துஅந்தஅர்ச்சுனனுடையரதசாரதியுந்தலையுடைந்துசெத்தான் அதுவுமல்லாமல் அந்த அஸ்திரமகிமையினால் அர்ச்சுனனுடையரதமானதுகரகரவென்கிறஓசையுடனேகுலாலனுடையசக்கரஞ்சுழல்வதுபோல குதிரைகளோடுஞ்சுழலத்தலைப்பட்டது அந்தச்சுழலினால் அர்ச்சுனன் மகாபயங்கரமடைந்து தன்கையிலிராநின்ற காண்டீபத்தைத் தேரின்பேரில் வைத்துவிட்டு கொடிஸ்தம்பத்தைக் கெட்டியாகக்கட்டிப்பிடித்துக்கொண்டு ரதத்தைநிறுத்துகிறதற்குச்சக்தியில்லாமல் பிரமித்துநின்று தன்னுடைய இஷ்டதெய்வமானஸ்ரீகிருஷ்ணபகவானை இருதயகமலத்தில்நினைத்துஓதுவார்கபுரிவாசாபுண்ணியபுருஷா-வாசுதேவதனயா-தேவகிநந்தனா-மாதவா-வைகுந்தவாசா-ஜனார்த்தனா-அப்பிரமேகா-இருஷிகேசா-கோபிகாரமணா-ருக்மணிமனோகரா-புருஷோத்தமா-அரி-அரீ-கோவிந்தா-முகுந்தா- சேவா- ஸ்ரீகிருஷ்ணா வாசுதேவா வாரும்வாரும்நான்அனாதியாய்சகலசேனைகளையும் பறிகொடுத்துவிட்டு தனியே ஒண்டியாய்அகப்பட்டுநிற்கிறேன்என்னுடைய சரீரத்தில் பிராணன்நிற்கவில்லைஓகோபாலமூர்த்தி நான் தேவரீரைவிட்டுவந்தஅன்றுமுதல்இதுபரியந்தமும்எந்தவிடத்திலும் ஒருஅதிசயங்கண்டதில்லை தேவரீரிலலாதபிழைப்புமஒருபிழைப்போ ஓசுவாமி நீர்சீக்கிரமாகவந்து என்னைக்காப்பாற்றிரட்சியும்ரட்சியுமென்றுமுறையிடுகிறபோது சகலபுவனகர்த்தாவாகியும்சர்வசீவதயாபரனாகியும்சர்வாந்தரியாமியாதியும் சர்வபரிபூரணராகியும்சர்வவியாபகராகியும்விளங்கப்பட்டஸ்ரீமந்நாராயண மூர்த்தியேபாரதயுத்தநிமித்தம்ஒருவடிவம்போலஎழுந்தருளிஸ்ரீகிருஷ்ணதேவரென்று பெயர்வைத்துக்கொண்டுஅஸ்தினாபுரத்தில்தருமபுத்திரரோடுபேசிகொண்டிருக்கிறஅந்தகிருஷ்ணபகவானுடைதிவ்வியகரணத்தினிடமாக அருச்சுனராசனுடையமுறையானது கேட்டவளவில்அந்தபகவானும்திடுக்கிட்டெழுந்திருந்து தருமபுத்திரருக்குச் தெரியவொட்டாமல் அவ்விடத்திலிருக்கிறதுபோலவே மாயாவினோதமாகப்புறப்பட்டுமனோவேகத்திலும் அதிவேகமாகநடந்துகாதுகளில் அணிந்திருக்கிறநவரத்தினகுண்டலங்கள் தளதளவென்று நாலுதிக்குகளிலும் பிரகாசிக்கவும் தலைமுடியில் சொருகிகொண்டிருக்கிற மயிற்பீலிகள் அசைந்தாடவும்கழுத்தினிடமாகத் தரித்திருக்கின்ற முத்துமாலைகள்நவரத்தினமாலைகள்ஒ

ன்றோடொன்றுசிக்குப்படவும் புசங்களில்தரித்திருக்கின்றவாகுவலயங்கள்தகத்தகாயமாய்ப்பிரகாசிக்கவும்புஜத்தின்பேரில்போட்டுக் கொண்டிருக்கின்ற பீதாம்பரதொங்கலானதுநழுவிநிலத்தில் வீழவும்முகாரவிந்தத்தில்முத்துகளைப்போல்குறுவேர்பிரகாசிக்கவும்அரையிலும் திருவடிகளிலும் அணிந்திருக்கின்ற மணிகள்தண்டைகள்சதங்கைகள் கணீல்கணீலென்று சப்திக்கவும் வருகின்றவேகத்தினால், பூமிகிடுகிடுவென்றுநடுங்கவும் இப்படி அனந்தகோலாகலமாகவந்துசேர்ந்து சக்கரம்போல்சுழலுகின்ற அர்ச்சுனராசனுடையரதத்தின்பேரில் நின்றுகொண்டு அர்ச்சுனராசனைப்பார்த்துஓ அர்ச்சுனாநீபயப்படாதே இதோநான்வந்திருக்கிறேன் நீ தேவர்கள்ராட்சதாகள்முதலானவர்களுக்கும்பயப்படாதவீராதிவீரனச்சுதேஅப்படிப்பட்டசுத்தவீரனாகியநீ இன்றையத்தினம்இந்தச்சுதர்மனால் சிக்குப்பட்டுபிரமித்து நின்றாயோ நல்லது நீபயப்படவேண்டாமென்று அபயாஸ்தங்கொடுத்து அந்தபகவானானவர் அர்ச்சுனனுடைய ரதத்தைசுழலவொட்டாமல்துதித்துபூமியின்பேரில் நிறுத்திஅர்ச்சுனராசனிடத்திற்குவந்துஅவனை மார்போடுதழுவிக்கொண்டுஅவனுடையசரீரமுழுதுந்தமதுதிவ்வியஸ்தங்களினாற்றுடைத்து ஓ அர்ச்சுனாஉனக்கு இத்தனை ஆபத்துவந்து நேரிட்டதோஉன்னுடைய சேனைகளெல்லாமடிந்துபோய்விட்டதோவென்று சொன்னார் அதுகேட்டு அர்ச்சுனராசனும்ஓஜயாகிருஷ்ணா தேவரீரிருந்தால்எனக்கு ஒருஆபத்தும்வராதுதேவரீரில்லாமற்போனபடியினால் இப்படிப்பட்ட ஆபத்துநேரிட்டது இனிமேல் என்னுடையசவுரியபராக்கிரமத்தைப்பாரும் அந்தசுதர்மனையும் அவன் சேனைகளையும் ஒருநொடிக்குள்ளேகண்டதுண்டம்பண்ணிவிடுகிறேனென்றுசொல்லித்தன்னுடையகாண்டீபத்தைக்கையிலெடுத்துக்கொண்டுரதத்தின்பேரில்உச்சாகத்துடனேநிற்க அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவானுந்தேரைவிட்டிழிந்து குதிரைகளிடத்திற்குவந்துஅந்தக்குதிரைகளின்பேரில்தைத்திருக்கின்றஅஸ்திரங்களையெல்லாம்பிடுங்கியெறிந்து சரீரமுழுதுந்தடவிக்கொடுத்து அதுகளின்ஆயாசத்தைத்தீர்த்துஎப்போதும்போலகுதிரைகளைரதத்திற்பூட்டிதம்முடையவலதுகையிற் சவுக்கைப்பிடித்துக்கொண்டுரதத்தின்பேரிலேசாரத்தியஞ் செய்யும்படிஉட்கார்ந்தருளினார் அதுகண்டுஆகாசமார்க்கத்தில்நிற்கின்றமுப்பத்துமுக்கோடிதேவர்களும்அநேகமாயிரந்தோத்திரஞ்செய்துஓபுராணபுருஷா கபடநாடகசூஸ்திராவதாரி தேவரீர் இந்த அர்ச்சுனன்பேரிலவைத்தகிருபை எங்கள்பேரில் வைக்கலாகாதோஅதுவுமல்லாமல் தேவரீர்ஒருபுத்திரனைப்பெற்றுசாம்பவமூர்த்திக்குச்சாரத்தியஞ் செய்யும்படி அமர்த்திவைத்து இந்தஅர்சசுனனுக்குச்சாரதியாய்அமர்ந்தீரோவென்று அநேகவிதமாகக்கொண்டாடிபாரிசாதபுஷ்பங்களை அந்த பகவானுடையசிரசின்பேரில்சலசலவென்றுவருஷித்தார்கள் அப்பொழுது அர்ச்சுனனும்தன்னுடையகாண்டீபத்தைக்குணதொனிபண்ணி தேவதத்தமென்கிறசங்கத்தையும்வாயினிடமாகவைத்துஆரம்பமென்

னுபூரித்தான் அதிலே அந்தரதத்திற்சாரதியாய்எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானும் தம்முடையபாஞ்சசன்னியமென்னும்சங்கத்தைத்தாமரையையொத்த வாயினிடமாகவைத்து அண்டகடாகங்களுமதிரும்படிமுழக்கியருளினார் துவசமாகிவிளங்குகின்ற அநுமாரும்ஆகாவென்றுஅட்டகாசம்பண்ணினார் ரதத்திற்பூட்டியிருக்கின்றகுதிரைகளும் அநுமானித்தனுகள் இந்தப்படியாக அர்ச்சுனராசன் மகாசந்தோஷஉச்சாகத்துடனே சுதர்மன்பேரில் எதிர்த்துநின்றான்.

அதுகண்டுசுதர்மனுஞ்சிரித்து அர்ச்சுனனைப்பார்த்து தலையையசைத்து ஓ அர்ச்சுனா நீ பதறவேண்டாம் நீமகா வீராதிவீரன் முப்பத்துமுக்கோடிதேவர்களையும்தேவேந்திரனையுங்கெலித்தவன் காலகேயநிவாதகவசாளென்கிறவறுபதுகோடிராக்ஷதவீரர்களையுங்கொன்றுசயம்பெற்றவன் ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவனோடும்போராடிஅவரைச்சயித்து அவரிடத்தில்பாசுபாதாஸ்திரம்பெற்றவன்வீஷ்மாசாரியார் துரோணாசாரியார்முதலானவர்களோடும்போராடிச்செயமபண்ணினவன் சித்திரசேனனென்கிறகந்தர்வனுடனேபோராடிக்கெலித்தவன இப்படிஅனேகயுத்தத்தில்கைகண்ட சூரனீயல்லவோ அதுவல்லாமலுன்னிடத்திலக்கினிதேவன்கொடுத்தஅக்ஷய தூணிரதமிருக்கின்றது அந்தவலிமையினால் என்பேரில் அநேகபாணங்களைப் பிரயோகஞ்செய்தாய் அதுகளையெல்லாம்நான்கண்டித்துவிட்டேன்ஆனால்ஒருபிரயோசனமில்லை இனிமேல் இத்தனைபாணத்தினால் என் சிரசைக்கண்டிக்கிறேனென்று பிரதிக்கினை பண்ணென்றுசொலவிவிட்டு ஸ்ரீகிருஷ்ணபகவானைப்பார்த்துஓபுண்டரீகாக்ஷாமகானுபாவா தேவரீர் இந்தஅர்ச்சுனனுக்குச் சகாயமாய்வந்ததினால இவன் என்னையென்னசெய்யமாட்டுவான்அதுவல்லாமல்தேவரீர்இந்தஅர்ச்சுனனுடைய ரதத்தினபேரிலிருக்கிறீர்என்னுடைய இருதயகமலத்திலுமிருக்கிறீர் ஆனபடியினால் ஓ சுவாமிபக்தவச்சலாபரமதயாளா நான் இந்தஅர்ச்சுனனைச்சயிக்கமாட்டுவேனோசொல்லுமையாவென்றுநமஸ்காரம்பண்ணினான்அதுகேட்டு கிருஷ்ணபகவானும் சுதர்மனைப்பார்த்து ஓசுதாமா நீயேசயிக்கப்போகிறாய்பயப்படவேண்டாமென்றுசொன்னார் அந்தவார்த்தையை அர்ச்சுனராசன்கேட்டுமெத்தவுங்கிலேசப்பட்டுஐயாகிருஷ்ணாதேவரீர்என்னுடையபட்சமாயிருந்து என்பகையாளியைப்பார்த்துநீயேசயிக்கப்போகிறாயென்றுஎப்படிச்சொல்லுகிறீர்அப்போதுஎனக்குஅபசயமோ இப்படிப்பட்ட நடக்கைகளுக்கோ நானும்மையழைப்பித்தது சொல்லுமையாவென்றுகேட்கஅதற்குகிருஷ்ணபகவான்சிரித்து அர்ச்சுனனைப்பார்த்து ஓகிரீடிநானப்படிசொன்னேனென்றுநீசந்தேகபடவேண்டாம்நீயும்செயிக்கப்போகிறாய் நானிருக்கும்பொழுதுஉனக்குஒருகுறைவுவருமோகிருஷ்ணார்ச்சுனர்களிருவரும்ஒருதேரினபேரிலிருந்தால்அவர்களுக்குமுன்னேஎதிர்த்துநின்றுஎவர்களும்நிர்வகிக்கமாட்டாரென்பது பிர்மாதிதேவர்களுக்குந்தெரியாதோ அதைநீயறியமாட்டாயோ அதல்லாலஉனக்குஅபசயம்வருகிறதில்லையென்று சொல்

லஅந்தவசனங்களை அர்ச்சுனராசன்கேட்டுமகாசந்தோஷசித்தனுய்உ ச்சாகத் துடனின்று அந்தசுதர்மனைப்பாரதது அர்ச்சுனராசன்சொ ல்லுகிருன்.

ஓராசகுமாரகா என்னுடையவார்த்தையைக்கேளும் அஃதென்ன வென்றல் பிர்மாதிதேவர்கள் உனககுச்சகாயமாகவந்தபோதிலும்அ வர்களையெல்லாம்அகமபண்ணிஉன்னுடையசிரசையும் மூன்றுபாண த்திஞல் ஒருக்ஷணப்பொழுதில் கண்டித்துவிடுகிறேன் அப்படிச்செய் யாவிட்டால்நான் இதுவரையில்செய்தபுண்ணியங்களனைத்தும்அசுரா திகளுடையபங்காக்கி என்னுடையகீர்த்திகளெல்லாம்பூமியினபங்கா கக்கி நானும்என்சந்ததியிலுள்ளவர்களுங்ககாதிர்த்தத்தில்காராம் பசு வைக்கொன்றவர்கள்போகின்ற கதியிலும்போகக்கடவோமென்றும கத்தாகிய சபதம்பண்ணினுன் அதுகேட்டுச்சுதர்மனுஞ்சிரித்து அர்ச் சுனனைப்பார்த்து ஓ அர்ச்சுனு நீ பிரயோகஞ்செய்கிற மூன்றுபாணத் தையும நான்கண்டித்துவிடுகிறேன் அப்படிகண்டிக்காவிட்டால்நான் செய்தபுண்ணியங்களெல்லாம்அசுராதிகளுடையபங்காக்கிநானும்என் னுடைய சந்ததியிலுண்டான பிதிர்க்களுமகொடிதாகிய நரகத்தில்வி ழுக்கடவோமென்று சபதம்பண்ணினுன அப்பொழுதுஆகாசமார்க்க த்தில் இயக்கர்கின்னரர்கிம்புருடர்கருடகாந்தருவர் சித்தவித்தியாத ரர்ஏகாதசருத்திரர்துவாதசாதித்தர்கள் முதலானமுப்பத்துமூக்கோ டிதேவர்களும் தேவேந்திரனும்வந்திருந்து அர்ச்சுனராசன்செய்தபிர திக்கினையையும் சுதர்மன்செய்தபிரதிக்கினையையுங்கேட்டு ஆச்சரியப் பட்டுஒருவர் ஒருவரைப்பார்த்துஓதேவர்களே இந்தஅருச்சுனராசனு ம்சுதாமனுஞ் செய்துக்கொணடசபதவாாதைகளைக்கேட்டீர்களோ அதுவுமல்லாமல் அர்ச்சுனனுடையரததிலும் கிருஷ்ணதேவர்எழு ந்தருளியிருக்கிருர் இந்தச்சுதர்மனுடைய மனோரதத்திலும் அந்தபக வானேஎழுந்தருளியிருக்கிருர் ஆதலால்இவர்களிருவரும் பக்தாகளா னபடியினல்இவர்களில் எவரைக்கெலிப்பிப்பாரோ அதுதெரியவில்லை எல்லாஞ் சற்றுநேரத்தில் தெரியவருகிறதென்று பேசிக்கொண்டி ருந்தார்கள்.

அப்போது சுதர்மனும்கோபதிபதனுய் ஆக்கிரமித்துதன்னுடை யவில்லினிடமாகக்காளகூடவிஷத்திற்குச் சமானமானஆயிரந்திவ்ய பாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்தான் அந்தபாணங்களான து அதிதீக்ஷண்யமாய்ஒன்றேடொன்றுஉராய்ந்துக்கொண்டுவந்துகி ருஷ்ணபகவானுடைய இரணடிபுஜத்திலும்இரண்டுபாணங்தைத்துப் பின்புறததில் உருவிப்போய்விட்டது மற்றபாணங்களெல்லாம்அர்ச் சுனராசனுடைய ரததைதசசூழ்ந்துகொண்டு அந்தரததைநானூறு விற்கடைப்பிரமாணததில் கொண்டுபோய் விட்டுவிட்டது அதுகண் டுஅர்ச்சுனராசனும்மகாஆக்ருஷததுடனேகிருஷ்ணபகவானைப்பார்த துஜயாகிருஷ்ணமூர்ததி இப்பொழுதுநம்முடையரததைப்பின்னுக் குப்போகவொட்டாமல்முன்னுக்குததள்ளிசெவ்வையாகநிறுததுமெ ன றுசொன்னன்அது கேட்டு கிருஷ்ணமூர்ததியும் அர்ச்சுனராசனைப்

பார்த்து ஓ அர்ச்சுனா பிரதிக்கினைபண்ணுகிறதற்கும் பேச்சுகள் பேசுகிறதற்கும் துரைத்தனஞ்செய்கிறதற்கும் காரியம்கொண்டு போகிறதற்கும் நீயேயெசமானாயிருக்கிறாய் நடந்துசாகிறதற்கும் தெப்யை படுகிறதற்கும் காரியங்களைச்செவ்வைப்படுத்துகிறதற்கும் என்னை ஏற்படுத்துகிறாய பளாபளா இது நன்றாயிருக்கிறதென்றுமனவருத்தங்கொண்டவர் போலச் சொல்லியருளினார் அந்தவார்த்தைகளைக்கேட்டு அர்ச்சுனராசனும் சிரித்து கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்துஐயா எங்கள்குல தெய்வமே தேவரீருடைய திருமேனியில பாணம்பட்டதோ அதனால் தேவரீருடைய சரீரப் வலிககின்றதோ நல்லது ஆகட்டுமெபக்தசனங்களைரட்சிக்கிறது இன்னங்கொஞ்சத்தி லிருக்கிறதோ அல்லாமலுந் தங்களுக்கு எத்தனை ஆபத்துவந்துசம்பவித்தாலும் அதைப்பாராமல் தம்மைநம்பினபேர்களுக்கு ஒருஆபத்துவரவொட்டாமல் பாதுகாத்துரட்சித்தருளுவது பெரியோர்களுடைய கடமையாகுமென்றுமெத்தவும் இரக்கமாகச்சொன்னான்.

அதுகேட்டுகிருஷ்ணபகவானும் புன்சிரிப்பாகச்சிரித்து அர்ச்சுனனைப்பார்த்து ஓ அர்ச்சுனா நீஇப்பொழுது சற்றாகிலும் யோசித்துப்பாராமல் பதட்டமாகப் பிரதிககினைசெய்துவிட்டாயே அப்படி முடிக்காவிட்டால் உங்கள் சந்ததியிலுண்டான பிதிர்க்களெல்லாரும் அதோகதியில்விழுவார்களே அதற்குஎன்னசெய்யலாம் அல்லாமலும் அந்தசுதர்மனுடைய சிரசை மூன்றுபாணத்தினால் கண்டித்துவிடுகிறேனென்று சபதம்பண்ணிக்கொண்டாயே அப்படிக்கண்டிக்கமாட்டுவாயோ அல்லது அவனைக்கண்ணெடுத்துப்பார்க்கமாட்டுவாயோ அவன் மகாவீராதிவீரன் சத்தியசந்தனன் தருமசொரூபன் ஏகபத்தினிவிரதனாச்சுதே அப்படிப்பட்ட மகாபுருஷனை நீஎப்படிக்கொல்லமாட்டுவாய் அதுவுமல்லாமல் ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவனானவர் தம்முடையபக்தனென்றுநினைத்துஉனக்குச்சகாயமாய்சகல பூதகணங்களுடனே எழுந்தருளிவந்தாலும் அல்லது தேவேந்திரனானவன் தன்னுடையபுத்திரனென்று நினைத்துஉனக்குச்சகாயமாய்சகலதேவகணங்களுடனேபுறப்பட்டுவந்தாலும் அல்லது நம்முடைய மச்சுனனாச்சுதேயென்றுஉனக்குச்சகாயமாய்என்னுடையபலத்தையெல்லாங்கொடுத்தாலும் நீ அந்தசுதர்மனுடையசிரசைக்கண்டிக்கமாட்டாய் இப்படியிருக்க நீயும்யோசனைபண்ணாமல என்னோடுஞ்சொல்லாமல் விருதாவாகப் பகறிபிரதிக்கினைசெய்துகொண்டாயென்றுசொல்லியருளினார் அதுகேட்டு அர்ச்சுனராசனுமசிந்தாக்கிரந்தனாய்விசாரப்படடுத்தன்கையிலிருந்தகாண்டீபத்தைத்தேரின்பேரில்போட்டுவிட்டுஇரண்டுகைகளையும் அஞ்சலியாகக்கூப்பினின்று அந்ததேவனைப்பார்த்து-ஓகிருஸ்ணா-துவாரகாபுரிவாசா தேவகினந்தனா வசுதேவகுமாரா வாசுதேவா கம்சசம்மாரா கைலாசபதிமித்திரா கௌரிசகோதரா-ஹரிமுகுந்தா கோபாலா கோவிந்தா ருக்மணிமனோகரா வனமாலிகாபரணா சங்குசக்கராயுதா தாமோதரா-கேசவா-என்னைரட்சியும-ரட்சியும் நானறியாமல்சபதமபண்ணிவிட்டேனாதலால் அந்தச்சபதத்தைமுடித்துஎன்னைரட்சிக்கவே

ண்டும் பக்தவச்சலாவென்று தோத்திரஞ்செய்து அந்த கிருஷ்ணபக வானுடைய திருவடிக்கமலங்களில் அடியற்றமரம்போல்விழுந்து எனக்கு அபயஸ்தங்கொடுத்தருளவேண்டும் சுவாமிஎன்றுவெகுநேரம்வேண்டிக்கொண்டான் அதுகண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானும் திருவுளமிரங்கிச்சந்தோஷகரமாய் அந்தஅர்ச்சுனனைப்பார்த்து ஓ அர்ச்சுனா நீவே செயிக்கமாட்டுவாய் நீபயப்படவேண்டாம்நான்வந்துகுறுக்கேவிழுந்தமட்டும் அந்த காரியம் நிறைவேறுமற்போனால் உலகத்தில்எனக்கு அபகீர்த்தியலலவோ ஆதலால்நானே முன்னின்று உன்னுடையபிரதிக்கினையை முடித்துவைக்கிறேன் எழுந்திருந்துகாண்டீ பத்தையெடுத்து பாணத்தைப்பிரயோகம்பண்ணென்று உறுதிவார்த்தையாகத் திருவாய் மலர்ந்தருளினர்.

அதுகேட்டு அர்ச்சுனராசனும் சந்தோஷகரமாய்எழுந்துநின்று ஸ்ரீகிருஷ்ணபகவானைப்பார்த்து ஓ சுவாமிசனார்த்தனா இப்பொழுது அடியேன்செய்த பிரதிக்கினை தேவரீர்செய்தபிரதிக்கினையல்லவாமேலும்அடியேன்பெறுகின்ற சயாபசயங்கள் தேவரீருடைய செயாபசயங்களேயல்லாம் வேறல்லவேயென்று பிரியவசனமாகச்சொல்லிஅந்த பகவானுடைய அனுமதியின்பேரில்மகாஉச்சாகத்துடனேமுகாரவிந்தமானதுசந்திரவிம்பமபோலபிரகாசிக்கத்தக்கதாகநின்றுதன்னுடைய தூணிரத்திலிருக்கின்ற அதிதீக்ஷண்யமான ஒருதிவ்வியபாணத்தையெடுத்துஅக்கினிதேவன்கொடுத்தருளிய காண்டீபத்தினிடமாகவைத்து அபிமந்திரித்துசுதர்மனுடைய கழுத்துக்குநேராகக்குறிவைத்துப்பிடித்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைப்பார்தது ஐயாகிருஷ்ணமூர்த்திஇதோபாணந்தொடுக்கிறேன் பாருமென்றுசொல்ல அதுகண்டு கிருஷ்ணபகவானும் அர்ச்சுனனைப்பார்த்து ஓ அர்ச்சுனா இந்தபாணம்வெட்டுண்டுபோம் இதற்குப்பலன் போதாதுநான்இதற்குப்பலனுண்டாகச் செய்கிறேன் அஃதெப்படியென்றால்முன்புதேவேந்திரனானவன்கோபாலர்பேரில் கோபித்துக்கொண்டு ஏழுநாள்பரியந்தம் இரவுபகலும் கல்மழையைப்பெய்வித்தான் அப்பொழுதுஅந்தகோபாலர்களெல்லாரும் அதற்குச்சகிக்கமாட்டாமல்பசுக்களகன்றுகள் பிள்ளைகளுடனும் தத்தளித்து மகாபிரயாசமடைந்துஎன்னைக்குறித்துவேண்டிககொண்டார்கள அந்தச்சமயத்தில்அவர்களுக்குச்சகாயமாயிருந்துகோவர்த்தனகிரியை ஒருவிரலிலெடுத்துக் குடையாகப்பிடித்து அவர்களையெல்லாங்காத்துரட்சித்தேன் அந்தப்புண்ணியத்தையெல்லாம் இந்தபாணத்துக்குக்கொடுத்தேன்ஆதலால்இப்போதுசந்தேகப்படாமல்பிரயோகம்பண்ணென்றுசொல்லியருளினர் அதுகேட்டு அர்ச்சுனனும் அப்படியேநல்லதென்று அந்தபாணத்தை அதிதேவதாபிரதிதேவதா மந்திரங்களுடனே அபிமந்திரித்து பிரயோகம்பண்ணினன் அந்தபாணமானதுகாளகூடவிஷம்போல மகாஉக்கிராகாரத்துடனேபார்க்கப் பயங்கரமாய்காகரவென்றுசுழன்றுவிரைச்சலிட்டுக்கொண்டுசுதர்மனுடையகழுத்திற்குநேராகவருகையிலதுகண்டுசுதர்மனும்கைகொண்டிசிரித்

து இந்தபாணமானது மகாமகிமையுடனேவருகிறதென்றுசொல்லித
ன்னுடைய தூணிரதத்திலிருந்த அதிதீக்ஷண்யமான ஒருதிவ்யபாணத்
தையெடுத்துதன்கையிற்பிடித்திராநின்ற வில்லினிடமாகதொடுத்து
ஏகமனதாயிருந்துக்கொண்டு நான்இந்தச்சரீரமெடுத்தநாள்முதல் இ
துபரியந்தம் சத்தியந்தவராமலும் பிதாவாக்கியங்கடவாமலும்இருந்த
துமெய்யானல் இந்தபாணமானது அந்த அர்ச்சுனன்பிரயோகஞ்செய்
தபாணத்தைக்கண்டித்து விடக்கடவதென்றுசொல்லிப் பிரயோகஞ்
செய்தான்அதுவும்மகாவேகத்துடனேதிகுதிகுவென்றுஎரிந்துக்கொ
ண்டுவந்து அர்ச்சுனன்விட்டபாணத்தைஇரண்டுதுண்டமாய் கண்டித்
துவிட்டது அதுகண்டு அர்சுனராசனும்சிந்தாக்கிரந்தனாய்ஸ்ரீகிருஷ்
ணமூர்த்தியைப்பார்த்து ஐயாதேவகிநந்தனா தேவரீருடைய அனுமதி
யின்பேரில் நான்லட்சியம்வைத்துப் பிரயோகஞ்செய்தபாணமானது
விருதாவாகவெட்டுண்டுபோச்சுதேயென்றுமனஸ்தாபமாகச் சொல
ல அதுகேட்டு கிருஷ்ணபகவானும்அர்ச்சுனனைப்பார்த்துஓகிரீடிஉன
க்குப்பாணம்போய்விட்டதென்கிற விசாரமாயிருக்கின்றதுயெனக்கு
ப்புண்ணியம்போய்விட்டதென்கிற விசாரமிருக்கின்றது இதற்கு நா
மென்னசெய்யலாம் ஆனாலுமாகட்டும்இன்னமும் ஒருபாணத்தையெ
டுத்துப்பிரயோகம்பண்ணென்று சொல்லியருளினர் அதுகேட்டுஅர்ச்
சுனராசனும் மகாரோஷத்துடனேவேறே ஒருகொடூரமான அஸ்திர
த்தையெடுத்து காண்டீபத்தினிடமாகத்தொடுத்துக் கிருஷ்ணபகவா
னுக்குக்காண்பித்தான் அந்தபகவானும் சற்றுநேரம்யோசனைபண்ணி
அர்ச்சுனனைப்பார்த்து ஓ அர்ச்சுனா இந்தஅஸ்திரமும் வெட்டுண்டுவிழு
ந்துபோம் ஆயினும்நான இதற்குப்பலனுட்டாககி வைக்கிறேன் அஃ
தெப்படியென்றால் பூர்வத்தில்நான்பரசுராம அவதாரமெடுத்துப்பஞ்
சாசதகோடி பூமண்டலத்தையும் என்னுடையவசமாக்கிக்கொண்டுபி
ன்பு அந்த பூமண்டலத்தைக்கசியப் பிர்ம்மாவுக்குத் தாரை வார்த்துக்
கொடுத்தேன் அந்தப்புண்ணியத்தை இந்தப் பாணத்துக்குத் தத்தஞ்
செய்துவிட்டேன் இப்பொழுது நீசந்தேகப்படாமல்பிரயோகம்பண்
ணென்றுசொல்லியருளினர்.

அதுகேட்டு அப்படியேநல்லதென்று அர்ச்சுனராசனுஞ்சந்தோ
ஷகரமாய் அந்தபாணத்தைஅபிமந்திரித்துப்பிரயோகம் பண்ணினன்
அந்தப்பாணமானதுகாலாக்கினியைப்போல் திகுதிகுவென்றெரிந்து
க்கொண்டு நெருப்புப்பொறிகள் பறக்கும்படிதுரிவேகமாய்இரைச்ச
லிட்டு வருகையில் அதுகண்டுசுதர்மனும் ஒருதீக்ஷண்யமான பாணத்
தையெடுத்துத் தன்னுடையகோதண்டத்தினிடமாகக்கொடுத்துநான்
என்னுடைய பிதாவையே தெய்வமென்று கருத்தில்நினைத்திருப்பது
வும அகிலாண்டகோடிபிர்ம்மாண்டநாயகராகியஸ்ரீமந்நாராயணமூர்த்
தியைச் சதாகாலமும் என்மனதில்தியானம்பண்ணிக்கொண்டிருப்ப
தும்உண்மையானல இந்தபாணமானது அர்ச்சுனராசன்பிரயோகஞ்
செய்தபாணத்தைக்கண்டித்துவிடக்கடவதென்று பிரயோகம்பண்ணினன்

அதுவும் மகாஉக்கிரத்துடனேஜ்வாச்சலிட்டுக்கொண்டு சிவசுப்பிர
மணியக்கடவுளுடைய கையிலிராநின்ற சத்திவேலைப்போலவும்பி
ர்ம்மதண்டம்போலவும் அதிவேகமாகவந்து அர்ச்சுனராசனால் விடு
பட்டபாணத்தை இரண்டு துண்டமாகக்கண்டித்துவிட்டு அதினோடு
ம்போகாமல் கிருஷ்ணபகவானுடையவலதுபுஜத்தில்வைத்துப்பிற
கேயுருவிப்பெரியோர்களை நோகப்பண்ணினவன் அதோகதியில் வி
ழுவானென்பதுபோல அந்தபாணமானது பூமியிலுருவிப்போய்
விட்டது அர்ச்சுனராஜன் துக்காக்கிராந்தனாய்மெத்தவும்விசாரப்பட்
டுகிருஷ்ணதேவனைப்பார்த்து ஐயாகிருஷ்ணமூர்த்தி நான்பிரயோ
கஞ்செய்த பாணமெல்லாம் விருதாவாய்ப்போய்விட்டதே அதுவு
மல்லாமல் பிரதிக்கினைபண்ணிக்கொண்ட மூன்றுபாணத்தில்இரண்
டுபாணம்போய்விட்டது இன்னம் ஒருபாணமிருக்கின்றது அதினா
லாகிலும் சுதர்ம்மனுடைய சிரசைக்கண்டிக்கும்படி செய்யவேண்
டும் சுவாமியென்று விண்ணப்பஞ்செய்தான் அந்தவார்த்தைகளைக்
கேட்டுக்கிருஷ்ணதேவரும் அர்ச்சுனனைப்பார்த்து ஓஅர்ச்சுனா உன
க்குப்பாணங்கள்போய்விட்டதென்றும் பிரதிக்கினைநிறைவேறவில்
லையென்றும் விசாரமாயிருக்கின்றது எனக்குச் சரீரமுழுமையும்
நோகின்றதென்றும் புண்ணியமெல்லாம் விருதாவிற்போய்விட்ட
தென்றும் விசாரமாயிருக்கின்றது ஆனாலுமாகட்டும் இன்னமும் ஒ
ருபாணத்தையெடுத்துப் பிரயோகம்பண்ணென்று சொல்லியருளி
னாதுகேட்டுஅர்ச்சுனராஜனும் அப்படியேநல்லதென்று பர்வதமு
தலானதுகளையுந் துளைக்கப்பட்டதாகியும் தகத்தகாயமாய்மிகுந்த
கூர்மையுள்ளதாயு மிருக்கப்பட்டமெத்தவும்மகிமையுள்ள ஒருதிவ்
வியபாணத்தையெடுத்துக்காண்டபத்திற்றொடுத்துஸ்ரீகிருஷ்ணபக
வானுக்குக்காண்பித்தான்-அதுகண்டு அந்தபகவானும் சுதர்ம்மனைக்
கொல்லவேண்டுமென்றுநிச்சயித்துக்கொண்டு அர்ச்சுனனைப்பார்த்
துஓஅர்ச்சுனாமுன்பு ஸ்ரீராமாவதாரமெடுத்தபொழுது ஏகபத்தினி
விரதனாயிருந்துராவணசம்ஹாரம்பண்ணி தேவர்களுக்குச் சகாய
ம்பண்ணினேன் அந்தப்புண்ணியமெல்லாம இந்தபாணத்திற்குத்த
த்தஞ்செய்தேன் அதுவுமல்லாமல்அப்பொழுது பதினோராயிரம்வ
ருஷம்ராச்சியபரிபாலனம்பண்ணி கோதானம் பூதானம் கன்னிகா
தானமுதலான மகாதானங்கள்பண்ணின புண்ணியங்களையும் இந்த
பாணத்திற்குத் தத்தஞ்செய்தேனென்றுசொல்லிப் பின்னையும் தே
வதைகளையும் இந்திரன்முதலான அஷ்டதிக்குப்பாலகர்களையும் அ
ந்தபாணத்தைபாதுகாக்கும்படி ஆவாகனம்பண்ணி மத்தியில்தன்
னுடையசத்தியைநிறுத்தி அடியில்ருத்திரமூர்த்தியை ஆவாகனம்ப
ண்ணிவெகுமகிமையுண்டாக்கிஓ அர்ச்சுனா நீசந்தேகப்படாமல்பிர
யோகஞ்செய்வாயாகில் இந்தபாணமானது சம்சயமில்லாமல் சுதர்
ம்மனுடைய சிரசைக்கண்டித்துவிடுமென்று திருவாய்மலர்ந்தரு

ளினார் அதுகேட்டு அர்ச்சுனனுஞ்சரீரப்புளகிக்க மகாசந்தோஷமம் டைந்து அந்தபாணத்தை அதிதேவதாபிரதிதேவதா மந்திரங்களு டனே அபிமந்திரித்து சுதர்ம்மனுடையசிரசுக்குச்சரியாய் பிடித்து ப்பிரயோகம்பண்ணினான்; அதுவுங்காண்டீபத்திலிருந்து விடுபட் டுபூமியாகாசமெங்கும் நிறைந்து அனேகமாயிரம் இடிகளுடனும் மின்னல்களுடனும் பளிச்சுபளிச்சென்று மகாதளதளப்புடனேபி ரமாண்டகடாகங்களும் பிளக்கத்தக்கதாக எரிந்து புகைந்து ஜடஜ டவென்கிற தொனியுடனே நெருப்புப்பொறிகளை வாரியிறைத்து க்கொண்டு நாராயணாஸ்திரத்திற்கும் பிர்மாஸ்திரத்திற்கும் சக்ராயு தத்திற்கும் சூலாயுதத்திற்கும பாசுபதாஸ்திரத்திற்கு மிஞ்சினதாய் யிருந்தஉக்கிராகாரத்துடனே சுதர்மனுடையசிரசு எங்கேயென்று சமீபித்துவருகையில் ஆகாசவாசிகளாகிய தேவேந்திராதி தேவர்க ளெல்லாரும்பயந்து நின்றார்கள் அப்போது சுதர்மனும் அந்தபா ணத்தைக்கண்டு சிரித்து யிந்தபாணம்அனேகமகிமையுடனே அதிக குரூரமாய் வா கின்றது அப்படிவந்தாலுமென்னவென்று சொல்லி த்தன்னுடைய வில்லினிடமாக ஒருபாணத்தைத்தொடுத்து அபிமந் திரித்து நான்சரீரமெடுத்ததுமுதல் இதுபரியந்தமும் ஏகபத்தினி விரதனா யிருப்பது என்னுடையஸ்திரீயைத்தவிர மற்ற ஸதிரீகளை யெல்லாம் கிருஷ்ணபகவானுடைய பிராணநாயகியாகிய ருக்ம ணி தேவியைப்போலக் காண்பதும் கிருஷ்ணமூர்த்தியினுடைய உபயபாதங்களை எந்நேரமும் இடைவிடாமல் தியானித்துக்கொ ண்டிருப்பதும் சினேகருக்குவஞ்சனை துரோகஞ் செய்யாமலிருப் பதும அந்தக்கிருஷ்ணபகவானுடைய பக்தசனங்களுக்கு தொண் டுசெய்வதுண்மையானா லிந்தபாணமானது அதோவருகிறபாணத் தைக்கண்டிக்கக்கடவதென்று சொல்லிப் பிரயோகம் பண்ணினான் அதுவும்புறப்பட்டு அதிவேகமாய் மகாகுரூரத்துடனே வந்துஅர் ச்சுனராசன் பிரயோகம்பண்ணினபாணத்தை இரண்டுதுண்டமாக க்கண்டித்துத் தள்ளிவிட்டுப்பின்னையும் அந்தபாணமானதுஅதிவே கமாகவந்து சுத மனிருக்கிறதற்கு ஸ்தானம் உண்டாக்கிவைத்ததெ ன்று சொல்லும்படியாக கிருஷ்ணபகவானுடைய மார்பையுந்து ளைத்துக்கொண்டுபோய்விட்டது அதுகண்டு அர்ச்சுனராசனுஞ்சிந் தாக்கிராந்தனாய் மெத்தவும்பிரலாபித்தான் அப்பொழுது கிருஷ்ண தேவரும்அர்ச்சுனனைப்பார்த்து ஓஅர்ச்சுனாநீ பயப்படவேண்டாம் சுதர்ம்மனுடையசிரசை அந்தபாணமே கண்டிக்கிறது நீசற்றுநேர ம்பார்த்திருவென்று சொல்லியருளினார் அதுகேட்டு அர்ச்சுனனுந் துக்கந்தீர்ந்துசந்தோஷமாயிருந்தான் அந்தச்சமயத்தில்முன்புசுத ர்மனுடையபாணத்தினால் வெட்டுண்டுவிழுந்துபோன அர்ச்சுனனு டையபாணத்தின் அடித்துணுக்கையானதுகருடனைப்போல எழும் பிறிவ்வுறிவ்வென்று அதிதீட்சண்யமாகவந்து மகாகுண்டலங்களும்

மாணிக்கக்கிரீடமும்விளங்கத்தக்கதாகசந்திரவிம்பம்போற்பிரகாசித்துக்கொண்டிருக்கிற சுதர்மனுடையசிரசைக் கண்டித்துப்போய்விட்டது அப்பொழுதுஅந்தச்சிரசானது அதிவேகமாய் ஆகாசமார்க்கத்திலெழும்பி கிருஷ்ணபகவானைப்பார்த்து அரி அரி கோவிந்தா அச்சுதாபரந்தாமா-விஸ்வரூபா- விருஷிகேசா-அகிலாண்டகோடிபிர்ம்மாண்டநாயகா-அநாதரக்ஷகா-அப்பிரமேயா - பக்தஜனபரிபாலகா-பரமபுருஷா-கோபிகவல்லபா-குஞ்சரரக்ஷகா- ருக்குமணிமனோகரா-ஓசுவாமி ரட்சியுமையாவென்று முறையிட்டுக்கொண்டுவந்து அந்தபகவானுடைய ஸ்ரீபாதாரவிந்தங்களில்விழுந்து அப்படிச்சுதர்மனுடையசிரசானது ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய திருவருககமலங்களில் வந்துசேர்ந்தபின்பு அவனதுசரீரத்திலிருந்து சுயமபிரகாசமாகியஒருஜோதியானது வெளிப்பட்டுவந்து கிருஷ்ணமூர்த்தியினுடைய திவ்வியசரீரத்திற்புகுந்து அவரது திருமேனியில்அபின்னமாகக்கலந்துவிட்டது.

அதுகண்டு தேவேந்திராதி தேவர்களெல்லாரும் ஆச்சரியகரமாய்ச்சந்தோஷிப்பட்டு அந்தஅரியினுடையமகிமையைப் பிர்ம்மதேவன்முதலானவர்களு மறியமாட்டார்களென்றுசொல்லி கிருஷ்ணபகவான்பேரில் பாரிசாதபுஷ்பங்களைச் சலசலவென்று வருஷித்தார்கள்தேவதுந்துபியும் திம்திம்மென்று முழங்கிற்று அப்பொழுதுகிருஷ்ணமூர்த்தியும் தம்முடையதிருப்பாதகமலங்களில் விழுந்தசுதர்மனுடைய சிரசைத்தமதுதிவ்வியாஸ்தங்களினால்எடுத்துஅம்முகாரவிந்தத்தைப்பீதாம்பரத்தினாற் றுடைத்து சுதர்மனுடையபக்திவிசுவாசத்திற்கு அனேகவிதமாய்க்கொண்டாடி அந்தச்சிரசைஅர்ச்சுனராசனுடையகையிலே கொடுத்தருளினார் அர்ச்சுனராசனும்அந்தச்சிரசைப்பார்த்து மெத்தவும் துக்காக்கிராந்தனாய் தாபந்திரியப்பட்டு திரும்பவும் கிருஷ்ணமூர்த்தியினுடைய திவ்வியாஸ்தத்திற்கொடுத்தான் அந்தபகவானும்அதைக்கையினால்வாங்கி அம்சத்துவமகாராஜனுடையதேரின்பேரில் போட்டருளினார் அதுகண்டு அம்சத்துவமகாராசனும் சிந்தாக்கிராந்தனாய்சுதர்மனுடைய சிரசைக்கையிலெடுத்துக்கொண்டு ஆ குமாரகா-சத்தியசந்தனே - நீ அர்ச்சுனனுடையபாணத்தினால் வெட்டுண்டுயிறந்தாயோ ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய திருவடிக்கமலங்களில்ஐக்கியமாகிப்போய்விட்டாயோ ஆ புத்திரசிகாமணியேயென்று விசாரப்பட்டுத்திரும்பவும் அந்தச்சிரசைக் கிருஷ்ணபகவானுடைய ரதத்தின்பேரில் போட்டுவிட்டுமகாதுக்காக்கிராந்தனாயிருந்தான் அதுகண்டு அந்தபகவானும் அந்தச்சிரசைத்தம்முடைய திவ்வியாஸ்தங்களினாலெடுத்து அதைப்பார்த்து இந்தச்சிரசானதுசூரியார்ப்புதமாகக் கடவதென்றுஆகாசத்தில்விட்டெறிந்தார் அப்பொழுதுஅந்தச்சிரசானது கிருஷ்ணபகவானுடைய திருவுளப்பிரகாரம் அதிவேகமாய்ப்போய் சூரியமண்டலத்திற்பு

ருந்து சூரியபகவானுடனே கலந்துபோய்விட்டது. கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜாவே அந்தச்சுதர்மனுடைய பாக்கியமேயா க்கியம் எப்படிப்பட்ட தபோதனர்களுக்கும் அந்தபகவானுடைய திருவடிக்கமலங்களைக்கண்டு தரிசிப்பது அருமையாயிருக்கும் அப் படியிருக்கச் சுதர்மனானவன் அந்தபகவானுடையதிருமேனியில்அ பின்னத்துவமாகக்கலந்துபோனான் அவனுடையபாக்கியத்தைநாம் எப்படிஅளவுபடுத்திச் சொல்லப்போகிறோமென்றுசொல்லி ஜெய முனீந்திரானவர் அப்பால்நடந்த சரித்திரத்தைச் சொல்லுகிறார்.

கேளுமையா ஜெனமேஜெய பூபாலகா இந்தவிதமாகச்சுதர்ம ன்விழுந்ததனைப்பார்த்து அம்சத்துவ மகாராசனானவன் மிகவும்பி ரலாபித்து விசாரப்பட்டுக்கொண்டிருந்தான்-அதுகண்டு இரண்டா வதுபுத்திரனாகிய சுதர்த்தனென்கிறவன் தன்னுடைய பிதாவாகிய அம்சத்துவ மகாராசனிடத்திற்குவந்து விழுந்து சாஷ்டாங்கமாக தெண்டனிட்டெழுந்து நின்று ஓஐயா தேவரீர் இப்படிவிசாரப்பட லாமோ என்தமையனான சுதர்மன்வீராதிவீரனாய் ரணக்களத்தில் நின் றுயுத்தஞ்செய்து தேவேந்திராதி தேவர்களெல்லாரு மெச்சும்படி தான்பண்ணினபிரதிக்கினையை நிறைவேற்றிஅகண்டிதவீரபராக்கிர மனாய் கிருஷ்ணபகவான்செய்த புண்ணியங்களையெல்லாம் வியர் த்தமாக்கிஅவருடையமகிமையினால் வெட்டுண்டுவிழுந்து அவரது திருமேனியிற்கலந்துபோனான் அந்தச்சிரசும் சூரியாற்புதமாய் சூ ரியபகவானுடன் அயிக்கியமாய்விட்டது அப்படிப்பட்ட மகானு பாவனாகியஎன்தமையனைகுறித்து நீவிசாரப்படவேண்டாம் தேவரீ ர்இப்பொழுது எனக்குச்செலவுகொடுத்தனுப்பும் நான்போய்அந் தக்கிருஷ்ணார்ச்சுனர் இருவர்களையுஞ்செயித்துவருகிறேனென்று அ னேகவிதமாய் வேண்டிக்கொண்டான்-அதுகண்டு அம்சத்துவ மகா ராசனும் சற்றேமனந்தெளிந்து தன்குமாரனாகிய சுதர்த்தனையணை த்துமார்போடுதழுவிக்கொண்டு அப்பாபுத்திரரத்தினமே உன்னு டையமனோபீஷ்டப்பிரகாரம் ரணக்களத்திற்போய் யுத்தம்பண் ணென்றுசெலவுகொடுத்தனுப்பினான் அதுகேட்டுச்சுதர்த்தனும் நல் லதென்றுபிதாவினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு யுத்தசன்னத் தனாய்ப்புறப்பட்டு நவரத்னமயமான ஒருதிவ்விய ரதத்திலேறிக் கொண்டு காலாக்கினிருத்திரனைப்போலச் சண்டப் பிரசண்டனாய் எதிர்ந்துவிழுந்து அட்டகாசம்பண்ணிகுமுகுமுவென்று வில்லைக்கு ணத்தொனிசெய்து அந்தவில்லினிடமாகப் பர்வதமுதலானதுகளை யும் துளைக்கத்தக்கதாகிய அனேகமாயிரந்திவ்வியபாணங்களைப் பிர யோகம்பண்ணிஅர்ச்சுனராசனுடைய சேனைகளெல்லாம் சின்னாபி ன்னமாய்க்கண்டதுண்டங்களாய் பொடிப்பொடியாய்க்குப்பல்குப் பலாய் தூள்தூளாகச்செய்து ரதகஜதுரக பதாதிகளை யெல்லாம் சால்மாடுதலைமாடாய்சாயத்துக்கொண்டு எங்கேபார்த்தாலுஞ் சுதர்

திதனாய்த்திரிந்து சக்ராகாரமாய்ச்சுழன்று மகா ஆகருஷித்துட
னே வருகிறகதை கிருஷ்ணமூர்த்தியானவர் கண்டு தலையசைத்
து அர்ச்சுனனைப்பார்த்து ஓ விஜயகாண்டீபதாரனாகிய அர்ச்சுனனேகண்
டாயோ இதோவருகிறவன் வீராதிவீரன் சுதர்மனைப்பார்க்கிலுமச
வுரியபராக்கிரமத்திலும் வில்வித்தையிலும் அதிகவல்லபத்தையுடை
யவன் அதுவுமல்லாமல் விஷ்ணுபக்தியுடையவன் துற்சனபரிபாலக
ன் சற்சனகண்டிதன் மகாதனவினோதி இப்படிப்பட்ட குணாதிசங்க
ளையுடையவன் இவனைஜெயிக்கிறதற்கு ஸ்ரீகயிலாசபதியாகிய சாம்பவமூர்
த்தியினாலுமுடியாது, இப்படிப்பட்ட வீராதிவீரன் முன்னே நீ எதிர்த்
து நின்று எத்தனை முயற்சிபண்ணினாலும் நிறைவேறமாட்டாது அவ
ன் வருகிற உக்ராகாரத்தைப்பார்த்தால் உன்னையும் என்னையும் நல்லபூ
சனைபுரிவான்போலத் தோன்றுகின்றது ஆதலால் இந்தவேளையில் இ
வன் முன்னேநில்லாமல் நம்முடைய ரதத்தைத்திருப்பிக்கொண்டு
அப்புறம் தூரத்திற்போய் மறைந்திருந்தால் இரண்டுபேரும் பிழைக்
காலம் நாம்ஜீவனோடேபிழைத்திருந்தால் அனேகஞ்சுகங்களையடை
யலாமென்றுசொல்ல அந்தவார்த்தைகளைக்கேட்டு அர்ச்சுனனும் ச
ம்மதப்படாமல் கிருஷ்ணபகவானைப்பார்த்து ஐயா கிருஷ்ணதேவரீ
ர் இப்படிச்சொல்லுவானேன் என்னுடைய பாணாக்கினியினால் இந்த
ராஜகுமாரனைப் பஸ்மீகரப்படுத்திவிடுகிறேன் நீ ஏன் இப்படிப்ப
ட்டயோசனைபண்ணுகிறீர் இதோ சற்றுநேரத்தில் என்வில்வித்தை
யைக் காண்பிக்கிறேன் நீரேபார்த்து மெச்சப்போகிறீராகையினால்
பின்னுக்குத்திருப்பவேண்டாம் ரதத்தை முன்னுக்கு நடத்துமெ
ன்றுசொல்ல அதுகேட்டு அர்ச்சுனனைப்பார்த்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்
தியுஞ் சிரித்து அர்ச்சுனா நீ பயித்தியங்கொண்டுபேசுகிறாய் நான்சொ
ல்லுகிறவார்த்தை உனக்குஎன்றைக்கும் பரிகாசமாயிருக்கின்றது அ
ப்படியோசனை பண்ணவேண்டாம் இந்த உக்ரத்திற்குத் தப்பிப்பி
ழைத்துக்கொண்டு பிற்பாடு அவனுடனே எதிர்த்துப்போராடலாம்
இப்போதவனுடைய குரூரதிருஷ்டிக்கு ஹரிபிர்மாதிகளும் நின்றுஈ
டுசெய்யமாட்டார்களே நீயோ நின்று ஈடுசெய்கிறவன் ஆகையினால்
ரதத்தைத்திருப்பிக்கொண்டு போகிறேனென்று கூற அதற்கு அர்ச்
சுனராசனும் சம்மதப்பட்டு கிருஷ்ணபகவானைப்பார்த்து ஓ பரம
புருஷா உம்முடையவார்த்தைக்கு எதிரிருக்கின்றதோ உமதுதிருவு
ளப்படியே ரதத்தைத்திருப்புகிறதாகக்காண்பியாமல் பின்னுக்குத்
தானே ஓடிப்போகிறசேனைகளை மடக்கிறதுபோல ரதத்தைக்கொ
ண்டுபோவென்றுசொல்ல அதுகேட்டு கிருஷ்ணதேவரும் அருச்சு
னராசனுடைய ரதத்தைத்திருப்பி மூன்றுயோசனை தூரத்திற்கொ
ண்டுபோய்நிறுத்திவைத்துக்கொண்டிருந்தார், அந்தவேளையில் சுதர்
த்தனும் தன்கைகொண்டமட்டும் பாணங்களைப்பிரயோகம்பண்ணி
அர்ச்சுனனுடைய சேனைகளையெல்லாம் உருவத்தெரியவொட்டாம

திசெய்து பூதப்பிரேதபசாசகணங்களுக்கும் டாகினிசாகினிகளுக்கு ம் நாய்நரிகூளி கழுகுகளுக்கும் உதிரமாமிசங்களினால் திருப்தியடையப்பண்ணுவித்து பிரளயகாலருத்திரனைப்போலவும் அகோரவீரபத்திரனைப்போலவும் பிரவேசித்து எந்தயிடத்திலும் அர்ச்சுனனைத்தேடிக் காணுமற்படிக்கு தன்னைக்கண்டு ஓடிப்போகிறசேனைகளையெல்லாம் ஓடவேண்டாமென்று கையமர்த்திநிறுத்தி அந்தச்சேனைகளைப்பார்த்து ஓ சேனைகளே ஓராசாக்களே கேட்டீர்களோஎன் பகையாளியாகிய அர்ச்சுனனெங்கேயிருக்கிறான் அவனைக்காண்பியுங்கோள் அக்கினிதேவன்நிமித்தமாய்க் காண்டாவனத்தைத்தகனஞ்செய்துமுப்பத்துமுக்கோடி தேவர்களோடும் போரானடி வீரனைக்காண்பியுங்கோள்காலகேய நிவாதகவசாளென்கிறராக்ஷதவீரர்களைக்கெலித்து தேவேந்திரனுடைய இரத்நாசனத்திலிருந்ததனஞ்சயனைக்காண்பியுங்கோள் கயிலாசபதியாகிய சாம்பசிவமூர்த்தியோடு பாசுபதாஸ்திரத்துக்காகக் கட்டிப்புரண்ட வீராதிவீரனைக் காண்பியுங்கோள் பாரதயுத்தத்தில் வீஷ்மாசாரியார் துரோணாசாரியார் முதலானசுத்த வீரர்களுடனெதிர்த்துப்போராடின கிரீடியைக்காண்பியுங்கோள் அவனெங்கேயிருக்கிறான் அவனை என்கண்குளிரப்பார்க்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டுவந்துமூன்றுயோசனை தூரத்திலிருக்கின்ற அர்ச்சுனராசனைக்கண்டு புன்சிரிப்பாகச் சிரித்துரதத்தின்பேரில் ஒன்றுந்தெரியாதவனைப்போலிருக்கிற கிருஷ்ணதேவனைப்பார்த்து ஓஜநார்த்தனா ருக்மணிமனோகரா ஓசுவாமிதேவரீர் என்னகாரியஞ்செய்தீர் நவரத்னத்தைக்கொடுத்து எச்சங்காயையவாங்கிக்கொண்டதுபோல தேவரீர்சம்பாதித்த புண்ணியங்களையெல்லாம்வியர்த்தமாக்கி எனதமயனுடைய சிரசைவாங்கிக் கொண்டீர் அதனால்உமக்குவந்தபிரயோசனமென்ன அதைச்சொல்லுமையாவென்று சொல்லிப்பிற்பாடு அர்ச்சுனனைப்பார்த்து ஓஅர்ச்சுனா நீசெய்தவேலைக்கு உன்னைக்கொஞ்சத்திலே விடுகிறதில்லை நீயெங்கே தப்பிப்போகிறாய் என்தமயனைக்கொன்றபழிக்குப் பழிவாங்காமற்போவேனோ சற்றுநேரம்பதறாமல் ஓடிப்போகாமல் என்முன்னே நில்லு,உன்னைக் கண்டிக்கிறேனென்று சொல்லி சுதர்த்தனனவன் மகாஆக்கிரவியாக்ரம நிக்குரோதனாகத்தன்னுடைய வில்லைக்குணத்தொனிபண்ணி அநேகமாயிரம் அதிதீட்சண்யமான பாணங்களைத் தொடுத்துப் பிரயோகஞ்செய்து இருநூறுபாணத்தினால் அர்ச்சுனனுடைய சரீரமுழுதுஞ் சல்லடைக்கண்களாகத்துளைத்து ரத்தமயமாக்கி நானூறுபாணத்தினால் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய மார்பையும் பத்தலாகக்கிழித்து அவசமாகவிளங்குகின்ற அனுமானுடைய கர்வத்தையுமடக்கி எண்பதுபாணத்தினால் குதிரைகளையுஞ் செவந்தநிறமாக்கி அர்ச்சுனனுடைய ரதத்தைமிஞ்சிவரவொட்டாமல்சிக்குப்படுத்திவிட்டு சிங்கநாதம்பண்ணினான் அதனால்அர்ச்சுனன் மிகவும்நொ

ந்து ரோஷிதாம்பிராட்சகனாய் காலந்தாகனைப்போல்ஆக்கிரமித்து
நின்று அனேகமாயிரம்பாணங்களை யெடுத்துத்தன்னுடைய காண்
டீபத்தினிடமாகத்தொடுத்துச் சுதர்த்தன்பேரில்பிரயோகம் பண்
ணினான் அதுகண்டு சுதர்த்தனும்மகாகோபதீப்தனாய் எரிந்துவிழு
ந்து அர்ச்சுனராசன் பிரயோகஞ்செய்த பாணங்களையெல்லாம் நடு
பாதியில்கண்டித்துவிட்டுகிருஷ்ணார்ச்சுனர்களிரண்டுபேரையும்கால்
கைகள் ஆடவொட்டாமலும்ரதத்தை நடத்தவொட்டாமலும்பிரம
மிக்கப்பண்ணினான், அதனால் ஸ்ரீகிருஷ்ணபகவானும் மெத்தவும்ஆ
யாசமடைந்து அர்ச்சுனனைப்பார்த்துஓ அர்ச்சுனா நீ அசட்டையா
யிருக்கவேண்டாம் சாக்கிரதையாயிருந்துபோராடி இந்தத்துன்மா
ர்க்கனைக்கொல்லென்று சொல்லியருளினார் அதுகேட்டுஅர்ச்சுனனு
ம்உக்ராகாரனாய்ப் பற்களைநறநறவென்றுகடித்து மீசைபடபடவெ
ன்றுதுடிக்கும்படித் தன்னுடையகாண்டீபத்தைக் குணத்தொனிப
ண்ணிசூரிய பாணங்களைப்போல்அதி*தீக்ஷண்யமாய்விளங்குகின்ற
க்ரூரபாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்துசுதர்த்தனுடை
யரதசாரதியையுங் குதிரைகளையும்நோகப்பண்ணிசுதர்த்தனையுஞ்ச
ல்லடைக்கண்களாகத் துளைத்துரத்தமயமாக்கினான் அதனால்சுதர்த்த
னும்மிகுந்த பிரயாசமடைந்துபூமியில்நிற்கமாட்டாமல்தன்னுடை
யரதத்தைச் சாரதிகுதிரைகளுடனே ஆகாசமார்க்கத்தில் கொண்டு
போய்நிறுத்திஅவிடத்திலிருந்துதன்னுடையவில்லினிடமாகஅனே
கமாயிரம்பாணங்களைத் தொடுத்து நிவ்வுறிவ்வென்று கிருஷ்ணார்ச்
சுனர்கள்பேரில்பிரயோகம்பண்ணுகையில் அர்ச்சுனனும்மகாஆக்ரு
ஷித்துடனேஎதிர்த்துநின்றுசுதர்த்தனுடையபாணங்களையெல்லாம்
தூம்சப்படுத்தி அவன்பேரிலும் அனேகமாயிரம்பாணங்களைப்பிர
யோகஞ்செய்தான் அதுகளையெல்லாஞ் சட்டைபண்ணாமல்மிஞ்சி
னவனாய் ராமலட்சுமணர்கள்பேரில்பாணப்பிரயோகஞ்செய்தமே
கநாதனைப்போலவும் சுதர்த்தனென்கிற மேகமானது விடுபட்டுசர
வருஷம் வருஷிக்கிறதுபோலவும் கிருஷ்ணார்ச்சுனர்களிருவர் பேரி
லும் பாணவருஷங்களைவருஷித்தான் அதுகண்டு அர்ச்சுனனும்மகா
ரோஷித்துவேஷித்துடனே சுதர்த்தனுடைய பாணங்களையெல்லா
ங்கண்டித்துவிட்டு பின்னையும் அநேகமாயிரம்பாணங்களைத் தன்
டோபதண்டமாய்ப் பிரயோகஞ்செய்கிறபோது சுதர்த்தனும்பய
ப்படாமல் எதிர்த்துநின்று மகாகோபசீப்தனாய் எரிந்துவிழுந்துத
ன்னுடைய கோதண்டத்தினிடமாகஒருதிவ்விய பாணத்தைத்தொ
டுத்து பிரயோகப்பண்ணினான் அதுவும்வடவாமுகாக்கினிபோலதி
குதிகுவென்று எரிந்துக்கொண்டுவந்துஅர்ச்சுனனுடையமார்பிலே
தைத்து முழுகிஉருவிப்போய்விட்டது அதனால்அர்ச்சுனனும்மெ
த்தவும்ஆயாசமடைந்தான் அப்பொழுதுசுதர்த்தன் பின்னையும்தன்
னுடையவில்லினிடமாக பிர்ம்மசக்கரமென்கிற ஒருக்ரூரபாணத்

தையெடுத்துத்தொடுத்துப் பிரயோகம்பண்ணினான் அதுவும்அதிவேகமாய்ப்பிரவுறிவ் வென்கிறசத்தத்துடனேவந்துஅர்ச்சுனனுடையரதத்தின்பேரில்தாக்கின வளவில் அந்தரதமானது கிருஷ்ணார்ச்சுனர்களிருவருடனும் துவசமாகிய அநுமாருடனும் குடைகொடிச்சிலைகள் குதிரைகள்வண்டிகளுடனும் கிறுகிறுவென்றுகுயவனுடையசக்கரம்போலச் சுழத்தலைப்பட்டது இதுகண்டுதேவேந்திராதிதேவர்களெல்லாம் சுதர்த்தனுடைய சவுரியபராக்கிரமத்திற்குமெச்சிசந்தோஷிப்பட்டார்கள் அப்படிஅண்டகடாகங்களும் அதிரத்தக்கதாக அர்ச்சுனனுடையரதமானதுசுழலுகிறபோது அதனால்பூமியானது அறுப்புண்டு பாதாளபரியந்தம் பள்ளமாய்அந்தப்பள்ளத்தில்கிருஷ்ணார்ச்சுனர்களுடனும் குதிரைகளுடனும்அந்தரதமானது இறிந்து அநுமக்கொடிமாத்திர மேலேநின்றது அதுகண்டுதுவசமாகிய அநுமாரும்மகாகோபங் கொண்டு இப்படிப்பட்ட ஆபத்துவேளைக்குஉதவிசெய்யாமல் நாம்என்னகாரியத்திற்கு இருக்கிறோமென்று சீக்கிரமாக நிலத்திற்குதித்துத்தன்னுடையவாலைவளர்த்திஅந்தரதத்திற்கு மூன்றுசுற்றுச்சுற்றிக்கொண்டுஇரண்டு கால்களையும் பூமியிலூன்றிக்கொண்டு ரதம்பூமியிலிறங்காமல்கெட்டியாய் இழுத்துப்பிடித்துக்கொண்டிருந்தார் அந்தச்சமயத்தில் கிருஷ்ணபகவானும் அர்ச்சுனனைப்பார்த்துஓ அர்ச்சுனாநீசும்மாயிராமல் துன்மார்க்கனாகிய சுதர்த்தன்பேரில் பாணப்பிரயோகம் பண்ணென்றுசொல்ல அதுகேட்டு அர்ச்சுனனும் கிருஷ்ணபகவானைப் பார்த்துஜயா ஜனார்த்தனாஎன்னுடைய நாவுவறளுகின்றது தலையைச்சுழற்றுகின்றதுசரீரம் நடுங்குகின்றது அந்தச்சுழற்சி நிற்கட்டுமென்றுசொன்னவளவில் கிருஷ்ணமூர்த்தியும் அர்ச்சுனனைப்பார்த்து ஓ அர்ச்சுனா எனக்குஅப்படிப்பட்ட பிரயாசமாகத்தான் இருக்கிற தென்றுசொல்லியருளினார் அதினாலேஅந்தபாணத்தி னுடையசுறுக்கு அடங்கிமெதுவுபட்டது அதுதெரிந்து அநுமாரும் ரதத்தைதூக்கியெடுத்துப்பூமியின்பேரில் செவ்வையாகநிறுத்தினார் அதற்கு கிருணபகவானுஞ்சந்தோஷமடைந்து ஓ அர்ச்சுனாஇந்தஅநுமந்தன்மெத்தநல்லவன்உபகாரிமகாவித்துவான் இவன்பூர்வத்தில்ஸ்ரீராமமூர்த்திக்குச்சகாயமாகயிருந்து ராவணாதிராட்சதர்களை யெல்லாம்சங்கரித்து கீர்த்திபெற்றமகாநுபாவன் இப்பொழுது நமக்குச்சகாயமாயிருந்துபூமியில் முழுகிப்போகிற ரதத்தையும் எடுத்துவைத்தமகாபுருஷன் இவன் நம்முடைய பிராணசிநேகனென்றுசொல்லி அனேகவிதமாகக் கொண்டாடி அநுமாரை மார்போடு தழுவிக்கொண்டார்.

அநுமாரும் அந்தபகவானுக்கு நமஸ்காரம்பண்ணி அவரது செலவுபெற்றுக்கொண்டு முன்போலேவேகொடியினிடமாகப்போய்விளங்கியிருந்தார் அப்போது கிருஷ்ணபகவானும அர்ச்சுனனை

ன்சரிக்கைபண்ணி சுதர்த்தன்பேரில் பாணப்பிரயோகஞ்செய்யும்படி உத்தரவுசெய்தருளினார் அதுகேட்டு அர்ச்சுனனும் நல்லதென்று தன்னுடையகாண்டீபத்தைக் குணத்தொனிபண்ணி அதிதீக்ஷண்யமான பாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து ஆகாசவீதியிலிடமாகவிற்கிறசுதர்த்தனுடையரதத்தைச் சாரதிகுதிரைகளுடனே பொடிப்பொடியாகததும்சப்படுத்திவிட்டு அவனையுமோகஞ்செய்தான் அதற்குச்சுதர்த்தனுமபயப்படாமல் பூமியிற்குதித்து வேறேதொருதேரிலேறிக்கொண்டு அர்ச்சுனராசனுடனே எதிர்த்தான் அதுகண்டு அர்ச்சுனராசனும் தன்னுடையகாண்டீபத்தைக் குழுகுழுவென்று குணத்தொனிபண்ணி அதினிடமாக ஒருதிவ்வியபாணத்தையெடுத்துப் பிரயோகஞ்செய்யும்பொழுது அந்தஅர்ச்சுனனைப்பார்த்து ஓ அர்ச்சுனா உன்னிடத்திலக்கினிதேவன் கொடுத்தஅக்ஷயதூணிரமிருக்கின்றதென்று நினைத்து எண்ணிறந்தாவர்கபாணங்களையெல்லாம் பிரயோகம்பண்ணுகிறாய் அப்படிசெய்யாமல் இனியாகிலும் இந்தபாணத்தினால் என்னுடைய சிரசைக்கண்டிக்கிறேனென்று பிரதிக்ஞைபண்ணென்றுசொல்ல அதுகேட்டு அர்ச்சுனனும் அந்தப்பிரகாரம ஆலோசனைசெய்து சுதர்த்தனைப்பார்த்து ஓசுதர்த்தா நீசொன்னபடியே அகிலாண்டகோடி பிரமாண்டநாயகராகிய கிருஷ்ணதேவருடையதிருவடிசாட்சியாக இந்தஒருபாணத்தினால் உன்னுடைய சிரசைக்கண்டிக்கிறேனென்று மகத்தாகிய சபதம்பண்ணினான் அதுகேட்டுசுதர்த்தனும அர்ச்சுனனைப்பார்த்து ஓ அர்ச்சுனா நான் சரீரமெடுத்துதெளிவுண்டான அதுமுதல்இதுபரியந்தமும் வைஷ்ணவமதசித்தாந்தப்பிரகாரம் ஆசாரநித்தியத்துடன் நடந்துவருகிறது உண்மையானால் உன்னுடைய அஸ்தத்திற்பிடித்திருக்கிற காண்டீபத்தினுடையநாணியையுமறுத்து உன்கைப்பிடியையும்விடப்பண்ணுகிறேனென்றுசொன்னான் அதுகேட்டு அர்ச்சுனனுமந்தபாணத்தை யதிதேவதா பிரதிதேவதா மந்திரங்களுடனேயபிமந்திரித்துச் சுதர்த்தனுடையசிரசுக்குநேராகலட்சியம்வைத்துப் பிரயோகம்பண்ணினான் அந்தயிரண்டு பாணங்களும் அதிகோரமாய்ப்பிரளயகாலாக்கினியைப்போலச்சீறிகதிர்த்து ஒருசாமமாய் இரண்டுசிங்கங்கள்போலவும் இரண்டுசர்ப்பங்கள் போலவும் இரண்டுவியாக்கிரமங்கள்போலவும் இரண்டு சூரியர்கள்போலவும் இரண்டுகாலாக்கினிகள்போலவு மிரண்டுகாளகூடவிஷங்கள்போலவும் இரண்டுசூலாயுதங்கள்போலவும் இரண்டு வச்சிராயுதங்கள்போலவும்இரண்டுயமதண்டங்கள்போலவும இரண்டுசக்கராயுதங்கள் போலவுமொன்றுக்கொன்றுமேதாக்கி ரோஷத்துவேஷங்களுடனே நெருப்புப்பொறிகளை வாரியிறைத்துக்கொண்டு ஒன்றினோடொன்று முட்டியுநட்டியும இடித்தும்இப்படி நானாவிதமாக இரண்டுபாணங்களும் வெகுநேரம்போராடிக் கடைசியில்ஒன்றுக்கொன்றுகதிகள்தப்பி மிஞ்சிக்கடக்கஅதில்சுதர்த்தனுடையபாணமானது அதிவேகமாகவந்து அர்ச்சுனன்கையிலிருக்கின்ற காண்டீபத்தினுடைய நாணியைப்பட்டென்று அறுத்துவிட்டது அப்படிநாணியறுந்தவுடன் காண்டீபமானதுசகளமாகநீண்டு அர்ச்சுனன்கையிற் பிடித்திருந்தவிசையோடு தேரின்பேரில் விழுந்துவிட்டது அதனாலர்ச்சுனனுங்கைசோர்ந்து மெய்சோர்ந்து மெத்தவும் ஆயாசத்தையடைந்தான் அப்படியிருக்க, அர்ச்சுனனுடையபாணமான

ஆகாகாவென்று சுழன்றுக்கொண்டுவந்து சுதர்த்தனுடைய சிரசைக்க
ண்டித்துத் தள்ளிவிட்டது அந்தச்சிரசுகருப்பென்று ஆகாசமார்க்கத்தி
லெழும்பிசிகைகோதம அட்டகாசத்துடன் முறையிட்டுக்கொண்டுவந்து
ஆசகுனனுடைய சிரசின்பேரில் தொப்பென்றுவிழுந்து மறுபடியுமெ
ழும்பி கிருஷ்ணபகவானுடைய சிரசின்பேரில்விழுந்து அங்கேயிருந்து
மறுபடியும் எழும்பி அந்தபகவானுடைய பாதாரவிந்தங்களினிடமாக வி
ழுந்தது அதைக்கண்டுகிருஷ்ணபகவானும் சிரித்துசுதர்த்தனுடையசிரசை
தமதுதிவ்யஹஸ்தங்களினும் பிடித்துக்கொண்டு அர்ச்சுனனைக்கொண்டு
காதுசெவிடுபட்டுஆயாசப்படைந்து கிருஷ்ணன்றலைமைப்பார்த்து ஓஜபா
தேவாதிதேவா எனக்குமெத்தவுமதிபயமாயிருக்கின்றதென்றுசொல்ல
அதுகேட்டு அந்தபகவானும் தமதுபாதத்திலவிழுந்துகிடக்கிற சுதர்த்த
னுடையசிரசைக்கையிலெடுத்து தமதுபீதாம்பரத்தொங்கலினால் முகத்
தைத்துடைத்து அவனுடையபக்தியையும்சவுரியபராக்கிரமத்தையும அ
ர்ச்சுனனுக்கு வர்ணித்து அந்தச்சிரசை அர்ச்சுனனுடையகையிற் கொ
டுத்தருளினார் அர்ச்சுனனுமந்தசிரசை வாங்கிப்பார்த்து அனேகவிதமாக
க்கொண்டாடி திரும்பவுங்கிருஷ்ணபகவானுடையகையிற் கொடுத்துவி
ட்டான் அந்தபகவானும் சுதர்த்தனுடையசிரசைக்கையிலேவாங்கிக்கொ
ண்டு இதையாமெங்கேபோடுகிறது இவன்மகாபுண்ணியபுருஷன் சத்தி
யசந்தனச்சுத்தயென்று திருவுளஞ்செய்து கருடனை நினைத்தருளின
வளவில் அதுதெரிந்துகருடபகவானும் க்ஷீர சமுத்திரத்தைவிட்டுஓடி
வந்து கிருஷ்ணபகவானுடைய பாதத்தில்விழுந்து நமஸ்காரம்பண்ணி
எழுந்துநின்று ஓ ஸ்ரீமந்நாராயணா தேவாதிதேவா இப்பொழுது தேவரீர்
அடியேனிடத்தில் தக்காரியம என்னவென்றுவிண்ணப்பஞ்செய்ய அதுக
ண்டு கிருஷ்ணமூர்த்தியும் சுதர்த்தனுடையசிரசைக் கருடனுடையகை
யிற்கொடுத்து இந்தச்சிரசைப்பிரயாகை தீர்த்தத்திற்கொண்டுபோய் வி
ட்டுவிடென்றுகட்டளையிட்டு அனுப்பினார்,

அப்படியேநல்லதென்று கருடபகவானும் கிருஷ்ணமூர்த்தியினி
டத்திற் செலவுபெற்றுக்கொண்டு ஆகாசவீதியிலெழும்பி அதிவேகமா
ய்ப்போகும்போது ஐந்துமுகங்களையும் திரிநேத்திரங்களையுமுடையவ
ராகியும் சிரசினிடத்திற்கங்காதேவியையும் நெற்றியில் அர்த்தசந்திரனை
யும்வைத்திருக்கின்றவராகியுமிடதுபாகத்தில் பார்வதிதேவியையுடை
யவராகியும்வலக்கரத்திற் சூலத்தையும்இடக்கரத்தில்மானையும்யேந்தியி
ருக்கின்றவராகியும் அரையில் புலித்தோலைத்தரித்திருக்கின்றவராகியும்ச
ரீரமுழுதும் விபூதியையுத்தூளித்துக்கொண்டுருத்திராக்ஷமாலிகையு
ஞ்சிரமாலிகையும் அணிந்திருக்கின்றவராகியும் காதுகளிலும் கைகளிலு
ம்நாகப்பாம்புகளைப் பூஷணமாகப்பூண்டிருக்கின்றவராகியும் பின்னையு
ம்சரீரமுழுதும் வாசுகிமுதலானசர்ப்பங்களை ஆபரணமாக அலங்கரித்தி
ருக்கின்றவராகியும விளங்கப்பட்டபரமசிவனானவர் கேளிவிலாசமாக
கைலாசத்தைவிட்டு ரிஷபவாகனரூடராய் எழுந்தருளிவிநாயகர் வீரபத்
திரர்சண்டேஸ்வரர் சுப்பிரமணியர்பிருங்கிரிஷி முதலான சிவகணங்கள்
புடைசூழ்ந்துவரவும் பிர்ம்மாதிதேவர்கள் சேவித்துநிற்கவும் நாரதர்மு
னீஸ்வரர்தோத்திரம்பண்ணவும் ஊர்வசி அரம்பைமுதலான தேவஸ்திரி
களுமஉருத்திரகணிகையர்களும் பரதநாட்டியம்செய்யவும், இதுமுதலா

னைசகலசப்பிரமத்துடனே கருடபகவானுக்கெதிர்ப்பட்டு அந்தகருடன்கையிலெடுத்துக்கொண்டுபோகிற சுதர்த்தனுடையசிரசைப்பார்த்துசம்மோடுகூடவருகின்றபிருங்கிரிஷியை அழைத்துஓபிருங்கி, அதோசுதர்த்தனென்கிறபக்தனுடையசிரசைக் கருடனெடுத்துக்கொண்டு போகிறான்நீபோயதை வாங்கிக்கொண்டுவாவென்று கட்டளையிட்டருளினார், அதுகேட்டுபிருங்கிரிஷியும் அப்படியேநல்லதென்று அதிசீக்கிரமாகக் கருடனைக்கண்டுஓகருடா நீபோகவேண்டாம நீகொண்டுபோகின்றசிரசைனைகையிலேகொடுத்துவிட்டுப் போவென்று சொல்ல, அந்தவார்த்தைகளைக்கேட்டுகருடபகவானும்திரும்பிப்பார்த்து புன்சிரிப்பாகச்சிரித்துநாம்இந்தச்சிரசைஇந்தகட்டுவனுக்குக் கொடுக்கப்போகிறேனோவென்றுதன்னுடைய செட்டைகளினால்வீசினான் அதிலுண்டான காற்றினாலடிபட்டுவேசாறி பிருங்கிரிஷியும பூமியில்விழுந்து மூர்ச்சையடைந்துசற்றுநேரத்தில் தெளிந்தெழுந்திருந்து வந்து சாம்பசிவமூர்த்திகளுக்குதண்டனிட்டு ஓதேவாதிதேவா நான் அந்தக்கருடனுடைய செட்டையினாலடிபட்டுநொந்துதப்பிப்பிழைத்து வந்தேனென்றுசொன்னார் அந்தவார்த்தையைக்கேட்டு பார்வதாதேவியும்புன்னகைகொண்டு சாம்பமூர்த்தியைப்பார்த்து ஓபிராணவல்லபா இந்தபிருங்கியை எம்மாத்திரஞ் சேவகனென்றுநினைத்தீர் ஒருபட்சியினாலடிபட்டுநொந்து அதனுடனேஎதிர்த்துப்போராடமுடியாமல் வேசாறிஓடிவந்துவிட்டானே பார்த்தீரோ ஆகையினால்உனக்கு எம்மாத்திரஞ்சேவகமுண்டோ சேவகர்களுக்கும்அம்மாத்திரஞ்சேவகமுண்டு அதெப்படியென்றால்தேவரீருக்கு ஆபரணங்களோ சர்ப்பங்கள்மாலைகளோடு எலும்புகள்சிரசில் தரித்திருப்பதோ திரிலோகங்களிலும் பிரவேசிக்கின்றநீர் அரையிலுடுக்கின்ற வஸ்திரமோபுலித்தோல்புஜத்தின்பேரில் அணிகின்றபட்சைவடமோ யானைத்தோல் சரீரமுழுதும பூசுகின்றசுகந்தமோ விபூதிதூளிதம் எந்நேரமும்உட்கொள்ளுகிறதோ நஞ்சாபவம் ஏறுகின்றவாகனமோ எருது எப்போதும்இருக்கின்றஸ்தானமோ சர்வசூனியமானபூமிபக்கத்திற்சேவித்திருக்கின்றவர்களோ பூதப்பிரேதபைசாசகணங்கள் சாப்பிடுகின்றதோ ஆலகாலவிஷம இப்படிப்பட்ட வைபவத்தையுடையஉமக்குச் சேவகவிருமுண்டோவென்று பரிகாசவார்த்தையாகச்சொன்னாள், அந்தவசனங்களையெல்லாங் கேட்டு சாம்பமூர்த்தியும் புன்சிரிப்பாகச்சிரித்து தம்முடையகுமாரனாகியசுப்பிரமணியக்கடவுளையழைத்து ஓகுமாரகா அதிசீக்கிரத்திற்போய அந்தகருடனெடுத்துக்கொண்டுபோகின்ற சிரசைவாங்கிக்கொண்டுவாவென்றுகட்டளையிட்டனுப்பினார் அதுகேட்டுசுப்பிரமணியரும்நல்லதென்று மயில்வாகனரூடராய் எழுந்தருளிவேலாயுதத்தைக்கையிற்பிடித்துக்கொண்டு மகாஉக்கிரகாரத்துடன் நடந்துபோய்கருடனைக்கண்டுஓகருடா-நீ அந்தச்சிரசைக் கொண்டுபோகவேண்டாம் நில்லுநில்லென்றுசொல்ல அதுகேட்டுகருடபகவானுந்திரும்பிப்பார்த்துநாமபதுஆண்டவனுடையகட்டளையைத்தள்ளி இந்தச்சிரசைஇவனிடத்திற்கொடுக்கப்போகிறேனோவென்று அதிசீக்கிரமாகநடக்க அதுகண்டு சுப்பிரமணியக்கடவுளும் மகாஆக்ரகத்துடனேஙியாவென்று அட்டகாசம்பண்ணினார், அந்தஅதிர்ச்சியால்கருடபகவானும் நிலைகெட்டு திசைதடுமாறிபிரயாகைதீர்த்தத்திற்குச் செல்லுகின்றவழிதப்பிவெகுதூரம் திரிந்

துவேசாறிபிரயாகைநதியைக்காணுமல் அலைந்து அந்தச்சுதர்த்தன்செய்
தபுண்ணியபலத்தினால்பிரயாகையைக்கண்டு கருடபகவான்சந்தோஷித்
தசீக்கிரத்தில் அந்தநதியினிடமாக சுதர்த்தனுடையசிரசை எறிந்துவிட்
டுத்திவேகமாகத்தன்னிருப்பிடத்திற்குப்போய்விட்டார், அதைக்கண்டுசுப்
பிரமணியக்கடவுளும தண்ணீரில்விழப்போகிற அந்தச்சிரசைக்கெட்டி
யாகப்பிடித்துஎடுத்துக்கொண்டுவந்து சாம்பவமூர்த்தியினிடத்தில் ஒப்
பிவித்தார்சாம்பவமூர்த்தியும் அந்தச்சிரசைத் தமதுதிவ்வியாஸ்தத்திலே
நதிக்கொண்டுபார்வதாதேவியைப்பார்த்து ஓபிராணநாயகி இந்தச்சிரசை
ப்பார்த்தாயோ இந்தச்சுதர்த்தன் முன்ஜென்மத்திலநமக்குப்பயபக்திவிசு
வாசத்துடன் அன்புசெய்தவன் அதுவுமல்லாமல் இவன் விஷ்ணுவினு
டையபக்தன் விபரீதவிரக்தசத்தியசாதனன் இவனுடையசீவனானது ஸ்ரீகி
ருஷ்ணதேவருடன்கலந்துபோய்விட்டது ஆதலாலநான் இந்தசிரசைதத
ரித்துக்கொள்ளுகிறேனென்றுதமது மார்பினிடமாகத் தரித்திருக்கின்ற
சிரமாலிகையிலகோர்வையாகதரித்துமகாசந்தோஷத்துடனே சகலபூத
கணங்களுடனும ரிஷிகணங்களுடனும் கயிலாசபர்வதத்திற் கெழுந்தரு
ளினார்.

இவ்விடத்தில் கிருஷ்ணார்ச்சுனர்களிருவர்பேரிலும் தேவேந்திராதி
தேவர்கள் பாரிசாதபுஷபங்களைச் சலசலவென்று வருஷித்தார்கள் அப்
பொழுதுகிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் தேவதத்தமென்னுஞ்சங்கத்தையு
ம்பாஞ்சசன்னியத்தையும்பம்பமென்று முழக்குஞ்செய்தார்கள் அவச
மாகிவிளக்குகின்றதுமாகும் அட்டகாசம்பண்ணினார் அதைத்திருட்டி
யிருக்கின்றகுதிரைகளும்எழாவகைச்செய்து அந்தவேளையிலே அம்
சத்துவமகாராசனும்தன்னுடையபுத்திரர்களாகிய சுதர்மனும்சுதர்த்தனு
ம்ரணகளத்தில்மடிந்துபோனதைக்கண்டு துக்காக்கிராந்தனாய் விசாரப்ப
ட்டுச்சற்றுநேரத்தில் மனந்தெளிந்துதெரிபடாமல் நம்முடையகுமா
ரர்கள்மோக்ஷபதத்தைப்பெற்றார்கள் அவர்களைக்குறித்துநாம் விசாரப்ப
டவேண்டியகாரணமென்னவிருக்கின்றதென் றெண்ணிக்கொண்டுகிரு
ஷ்ணார்ச்சுனர்கள்பேரில் எரிந்துவிழுந்து மகாகோபத்தனாய் என்பகை
யாளியான அந்த அர்ச்சுனனைக்கண்டித்து என்மனத்துக்கத்தைநிவர்த்தி
செய்துகொள்ளுகிறேனென்று ஒருதேரிலேறிக்கொண்டு யுத்தசன்னத்
தனாய்ப்புறப்பட்டு ரணகளத்தைநோக்கிவருகையில் அதைக்கண்டுகிருஷ்
ணபகவானும் அர்ச்சுனனுடனேகூட சீக்கிரமாகத்தேரைவிட்டிழிந்து அ
ம்சத்துவமகாராசனுக்கு எதிர்கொண்டுநின்றார் அதைக்கண்டு அந்தராசனு
ம்கோபத்தைவிட்டுசந்தோஷத்துடனே தன்னுடையரதத்தைவிட்டிழிந்
து எதிரேவந்தான் அப்பொழுது கிருஷ்ணபகவானும் அம்சத்துவமகாராச
னையணைத்து மார்போடுதழுவிக்கொண்டு ஐயா உம்முடையபுத்திரர்களிரு
வரும்விருதாவாகயுத்தகளத்தில்மடிந்துபோனார்களேயென்று தாமும்வி
சாரப்பட்டுப்பின்பு ஸ்ரீமந்நாராயணமூர்த்தியுடனேகலந்துபோனவர்களை
க்குறித்து நீர்விசாரப்படவேண்டாமென்று அந்தராசனுடைய துக்கத்
தையும்நிவர்த்திசெய்து சந்தோஷப்படுத்தினார் அதைக்கண்டு அர்ச்சு
னனும் அந்தராசனைத்தழுவிக்கொண்டு சிநேகம்பண்ணிக்கொண்டான்
அப்பொழுது அம்சத்துவமகாராசனும சந்தோஷமாய்த் தன்னுடை

பட்டணத்திலிருந்து அநேககாணிக்கைகளுடனும் அஸ்வமேதக் குதிரையும் அழைப்பித்து கிருஷ்ணபகவானுடைய பாதத்தில் விழுந்து நமஸ்காரம்பண்ணி எழுந்திருந்து அந்தபகவானைப்பார்த்து ஐயா கிருஷ்ணமூர்த்தி அடியேன்தேவரீருடையபாததரிசனையைப்பிரத்தியக்ஷமாகக் கண்டுகளிப்பதற்கு ஏதுவில்லாமல் கெடுவானாய் எப்பொழுது கிடைக்குமென்று தாபத்திரியத்துடன் சதாகாலமும் தேவரீருடையபாதத்தையே தியானித்துக்கொண்டிருந்தேன் அங்ஙனமிருக்க இந்தஅஸ்வமேதக்குதிரையானது விடுபட்டுவந்ததென்கிற சேதிதெரிந்தவுடனில் இதைநாம்பிடித்துக்கட்டி அர்ச்சுனனையும் கோபப்பண்ணினால் அவனிமித்தமாய் கிருஷ்ணபகவான் எழுந்தருளிவருவார் அதுமூலனிலையில் அவரைக்கண்டு தரிசனம்பண்ணி நம்முடைய கோரிக்கையை ஈடேற்றிக்கொள்ளலாமென்று தீர்க்கயோசனைசெய்து இந்தக்குதிரையைப் பிடித்துக் கட்டிவைத்தேன் இப்பொழுது தேவரீருடைய பாததரிசனையைக்கண்டமாத்திரத்தில் என்னுடையசென்மம் சாபல்லியமாச்சுது என்கோரிக்கையும் ஈடேறிவிட்டதென்று அநேகவிதமாகத் தோத்திரம்பண்ணினான் அந்தவார்த்தைகளையெல்லாம் தோத்திரப்பிரியராகிய கிருஷ்ணபகவானும் சந்தோஷமாகக்கேட்டுக் கிருபைகூர்ந்து ஹம்சத்துவமகாராசனைப்பார்த்து ஓ ராசேந்திரா நான் அஸ்தினாபுரத்திற்குப் போகவேணும் நீ உம்முடைய சேனாசமுத்திரங்களுடனேகூட அர்ச்சுனனுக்குச் சகாயமாயிருந்து அஸ்வமேதக்குதிரையைப் பாதுகாத்துக்கொண்டு போகவேண்டுமென்று திருவாய்மலர்ந்தருளினார் அதுகேட்டு அம்சத்துவமகாராஜனும் கிருஷ்ணபகவானைப்பார்த்து ஓ சுவாமி அடியேன்தேவரீருடைய உத்தாரப்படியே அஸ்வமேதக்குதிரையைப் பாதுகாத்துக் கொண்டுவந்து தருமபுத்திரருடைய யாகத்தைநிறைவேற்றிவைக்கிறேனென்றுசொல்லிப் பின்னையும் ஒருவர்க்கொருவர் சமாதானமானவிதங்களாகப் பேசிக்கொண்டிருக்கையில் முன்பு யுத்தகளத்தில் மூர்ச்சையடைந்திருந்த விருஷகேது பிரத்தியும்னன் நீலத்துவசன் அனுசால்வன் மேகவர்ணன் கிருதவர்மன் முதலானவர்களும் மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்து கிருஷ்ணமூர்த்திக்கு நமஸ்காரம்பண்ணிச் சந்தோஷகரமாயிருந்தார்கள், பின்னையும் ரதகஜதுரகபதாதிகளாகியசதுரங்கசேனைகளும் மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்தது அப்பொழுது அம்சத்துவமகாராசனானவன் கிருஷ்ணார்ச்சுனர்களிருவரையும் சகலதுரானுகானையும் சகலசேனைகளையும் சம்பகாபுரத்தில்சகலசம்பிரமத்துடன் அழைத்துக்கொண்டுபோய் ஸ்நானம்பண்ணுவித்து போசனமுதலான உபசாரணைகள்செய்வித்து அஞ்சுநாள்மட்டுக்கும் தன்னுடைய அரண்மனையில்மகாபிரியத்துடன் உபசரித்துக்கொண்டிருந்தார் அதின்பிறகு கிருஷ்ணபகவான் அம்சத்துமகாராசனிடத்திலும் அர்ச்சுனனிடத்திலும் செலவுபெற்றுக்கொண்டு தாருகனைவிளித்து ரதத்தைக் கொண்டுவரும்படிச்சொல்லி அந்தரதத்தின்பேரி லெழுந்தருளி அஸ்தினாபுரத்திற்குப்

ர்தா அந்தஇரண்டுதடாகத்திலும் என்ன விநோதமிருந்தது அதைச்சற்
றேதெரியச்சொல்லவேண்டுமென்று கேட்டவளவில் செயமுனீந்திரர்
திருவுளம்பற்றியருளுகிறார்.

கேளுமையா ஜெனமேஜெயமஹாராசாவே அந்தவனத்தில் பார்வதாதேவியாரும சாம்பவமூர்த்தியைத் தனக்குப் புருஷனாகவேண்டுமென்று நினைத்து தவஞ்செய்துகொண்டிருக்கும்பொழுது அவ்விடத்தில் உக்கிரசேனனென்கிற ஒரு ராக்ஷதன்வந்து பார்வதாதேவியினுடைய சவுந்தரியத்தைப்பார்த்து உலகமாதாவென்று நினையாமல் ஒரு பெண்ணாகநினைத்து மோகாந்தகாரனாய் துர்ச்செய்கையைக்கருதினான் - அதுதெரிந்து பார்வதாதேவியாரும மகாகோபங்கொண்டு அந்ததுன்மார்க்கனாகிய ராக்ஷதனைப் பெண்வடிவாகப் பண்ணிவிட்டு பின்னையுமின்றுமுதல் இந்தவனத்திலுள்ள தடாகத்திலெண்பத்துநான்குலக்ஷம்சீவராசிகளில் பிறந்துள்ள ஆண்சீவர்கள்வந்து தண்ணீர்குடித்தால்பெண்சீவர்களாகிப் போகக்கடவதென்று சாபமிட்டருளினார் - அந்தசாபத்தினால் அர்ச்சுனன்விட்ட அஸ்வமேதக் குதிரையானதுவந்து தண்ணீர்குடித்தவுடன் பெண்குதிரையாகி விட்டது - அப்பால் அந்தக்குதிரையானது மறுபடியும் வேங்கைப்புலியான சரித்திரத்தையுங்கேளும் - அஃதெப்படியென்றால் அலக்கிரனென்கிற பிராமணன் ஒருவன் தீர்த்தயாத்திரைசெய்யும்படி நினைத்துப் பிரவேசித்து அங்கங்கேயுண்டானபுண்ணியதீர்த்தங்கள்தோறு முழுகிக்கொண்டுவந்து அந்தகவுரிதேவிவனத்திலும ஒரு சுனையைக்கண்டு அந்தச்சுனையில் ஸ்நானம்பண்ண வேண்டுமென்றுநினைத்து அதிலிறங்கிஸ்நானம்பண்ணுகையில் அதிலிருந்துகொரமான முதலைவந்து அந்தப் பிராமணனைப்பிடித்துக்கொண்டுமகாசங்கடப்படுத்த அதனாலந்தப் பிராமணன் மெத்தவும்பிரயாசமடைந்து சரீரம்சோர்ந்து வேசாறி அவனதுநல்வினையினால் அந்தமுதலையின் பிடியை மெள்ளத்தப்புவித்துக்கொண்டுகரையில்வந்துமகா ஆக்குரோஷத்துடனே இன்றுமுதல் எவர்களாகிலு மிந்தச்சுனையிலிறங்கினாலும் தண்ணீர்குடித்தாலும் புலியாகக்கடவதென்று சாபமிட்டான் அதனால் அஸ்வமேதக் குதிரையானது அந்தச்சுனையினிடத்தில் தண்ணீர்குடித்து வேங்கைப்புலியாகிப்பின்பு கிருஷ்ணபகவானுடைய கிருபாகடாக்ஷத்தினால் எப்போதும்போல ஆண்குதிரையாச்சுது கேட்டீரோ செனமேஜெயமகாராசாவே அப்பால் அர்ச்சுனராசன் அவ்விடத்திலிருந்துகுதிரையை விட்டு தானும்சகலசேனாசமுத்திரங்களுடனே புறப்பட்டுரதாரூடனாய் நடக்கும்பொழுது அந்தத்திசையிலுள்ளமனிதர்களில் மிருகசாதிகளைப்போல் ஒருவருக்கும் தெரியாதபாஷைகளைப்பேசிக்கொண்டு நான்குசிரசும்மூன்றுசிரசும நான்குபாதமும்மூன்றுபாதமும் உள்ளவர்களாய்விசித்திரரூபமாய்ச் சிறிதுபேரிருக்க அவர்களைக்கண்டு ஆச்சரியப்பட்டுக்கொண்டு அப்பால்நடக்கையில் அங்கேசிறிதுபேர்கள் பிரம்மாண்டமான ஒருபெ

ரியநூலாவிருக்ஷத்தின்மேலிருந்து சம்சாரம்பண்ணிக்கொண்டு யிருக்
சதிரருக்குப்பயந்து பூமியிலிறங்காமலிருப்பதையுங்கண்டு ஆச்சரியித்து
அப்பால் அநேகதூரம்நடந்துபெண்மலையாளத்திற்குச்சமீபமாகப்போ
கும்பொழுது அஸ்வமேதக் குதிரையானது விடுபட்டு அந்தப்பட்டணத்
திற்குள்ளேபோய்நுழைந்தது அதுசேதியைவேவுகார ஸ்திரீகள்தெரிந்
தோடிவந்து ராசநீதிவழுவாமலும் ஒரு ஆண்பிள்ளைகளில்லாமலும்மத
னமஞ்சரியென்கிற சேனாபதியுடனே சிங்காசனத்திலுட்கார்ந்து இரு
பதினாயிரம ரதங்களும்ஐம்பதினாயிரம் யானைகளும், லட்சங்குதிரைகளு
ம் அநேகமாயிரம்பெண்சேனைகளும் புடைசூழத்தக்கதாகவிருந்து அந்த
ப்பெண்மலையாளத்தை அரசாட்சிசெய்துகொண்டு வருகின்றபிரலாவ
தியென்னும்பெயரையுடைய பெண்சாதியைக்கண்டுதண்டனிட்டு அ
ம்மா இன்றையதினம்நம்முடையபட்டணத்திற்குள் அர்ச்சுனமகாராசன்
விட்ட அஸ்வமேதக்குதிரையானது வந்துநுழைந்தது அதைப்பிடித்துக்
கட்டுகிறதோவிட்டுகிறதோ வென்றுகேட்டார்கள் அதுகேட்டு அந்தப்பி
ரலாவதியும்தன்னுடைய சேனாதிபதியாகிய மதனமஞ்சரியுடனே ஆலோ
சனைசெய்து அவர்களைப்பார்த்து, அர்ச்சுனராசனுடைய சாமார்த்தியம் எ
ம்மாத்திரம் அதுநமக்குத் தெரியாதேயிருக்கிறது நீங்கள்போய் அந்தக்கு
திரையைப்பிடித்துக்கட்டிவிட்டு நம்முடைய சேனைகளெல்லாம யுத்த
ஞ்செய்வதற்கு ஆயத்தப்படும்படி பறையறைவியுங்கோளென்று செல
வுகொடுத்தனுப்பினாள்.

## பிரலாவதியுத்தம்.

அதுகேட்டு அப்படியேநல்லதென்று அந்தவேவுகாரர்ஸ்திரீகளும்
அதிசீக்கிரமாகவந்து அஸ்வமேதக்குதிரையைப்பிடித்துப்பட்டணத்திற்
கட்டிவைத்துப்பிற்பாடு சகலசேனைகளும் ஆயுதங்களுடனே இன்றைதி
னம்யுத்தத்திற்கு ஆயத்தமாகப் புறப்பட்டுவரவேண்டுமென்று பறைய
றைவித்தார்கள் அதுசேதியைக்கேட்டுராஜாக்கினைப்படியேநடக்கவே
ண்டுமென்று அந்தப்பட்டணத்திலுள்ள ரதகெஜதுரகபதாதிகள் முத
லானதுகளுடனே சகலபெண்சேனைகளும்யுத்தசன்னத்தராய்ப் பட்ட
ணத்தைவிட்டுப் புறப்பட்டு வெளியேவந்துதண்டுவிட்டிறங்கினார்கள்பி
ரலாவதியென்கிற பெண்ணரசியானவள்மதனமஞ்சரியென்கிறசேனாதி
பதி முதலான சகலபெண்சேனைகளுடனேயும் அநேக சஸ்திர அஸ்திர
ங்களையெடுப்பித்துக்கொண்டுயுத்தப்பிரமுகியாய் ரதாரூடியாயப்புறப்ப
ட்டுவெளியேவந்து தண்டுடனேசேர்ந்து ரணபேரிகை யறைவித்தாள்
இப்படியிருக்க அவ்விடத்தில் அர்ச்சுனராசனும் குதிரைபிடிபட்டுப்போ
னசேதியைக்கேட்டு மகாகோபத்துடனே சகலசேனைகளோடு அதிசீக்கி
ரமாகவந்து அந்தப்பெண்சேனைகளை எதிர்த்துநின்று அநேகமாயிரம்பா
ணங்களைப்பிரயோகஞ்செய்து அந்தச்சேனைகளையெல்லாம் கைகாலாட
வொட்டாமல் சின்னபின்னப்படுத்த அதுகண்டு அந்தப்பெண் சேனைக

ரும் தங்கள்தங்களுடையவில்லுகளை வளைத்து அளவிறந்தபாணங்களைத்
தொடுத்துப்பிரயோகஞ்செய்து அர்ச்சுனராசனுடைய சேனைகளையெல்
லாம் சின்னாபின்னமாகக்கண்டிதது நோகப்பண்ணினார்கள்- அதில்சிறி
துபெண்கள் இரண்டியோசனை மூன்றுயோசனை நிகளமாய் வளர்ந்திருக்
கின்ற தங்களுடையஸ்தனங்களின் கச்சுகளை அவிழ்ந்துவிட்டு மச்சக்கூ
ட்டங்கள்பேரில் வலைக்காரன் வலைவீசுகிறதுபோல அர்ச்சுனன் சேனை
களைவிசிறி அடித்துஒவ்வொருஅடிக்கு ஆயிரம்இரண்டாயிரம் சேனைக
ளைப்பொடியாக்கித் தள்ளினார்கள் இப்படி நானாவிதமாக அர்ச்சுனனுடை
யசேனைகளை அந்தப்பெண்சேனைகளும் சூழ்ந்துக்கொண்டு துரத்தியடித்
து மூலைக்குமூலை ஓடுக்குகிறதைக்கண்டு அம்சத்துவமகாராசன்முதலா
னவீராதிவீரர்களெல்லாம வெட்கப்பட்டு தலைசாய்த்துக்கொண்டார்க
ளப்படி அர்ச்சுனனுடைய சேனைகளெதிர்த்துநின்று யுத்தஞ்செய்து நிர்
வகிக்கமாட்டாமல் பின்னுக்குநிடைந்து பே கிறதைக்கண்டு பெண்சே
னைகளெல்லாருங் கைகொட்டிச்சிரித்துச் சிங்காதங்கள் அட்டகாசங்க
ள்பண்ணிக்கொண்டு மிஞ்சிவந்து அர்ச்சுனராசன்பேரி லெதிர்த்தார்க
ளதுகண்டு அர்ச்சுனனும்ஆச்சரியப்பட்டு இதுயென்னவிபரீதம்நாம் இ
ப்படிப்பட்ட யுத்தத்தை ஒருநாளுங்கண்டதுமில்லை கேட்டதுமில்லை இ
துமகாவேடிக்கையாயிருக்கிறது - நாம் பெண்கள்பேரில் பாணப்பிர
யோகஞ்செய்கின்றதெப்படி நல்லதுநாமேபோய எல்லாச்சேதியுந்தெரி
ந்துகொள்ளலாமென்றுலோசித்து தன்னுடைய ரதத்தைப் பிரலாவதி
பேரில்அதிவேகமாகத் துரத்தி அவளைப்பார்த்துஓபெண்ணரசி நீசங்க
ளுடனே எதிர்த்துச் சண்டைபண்ணுவாட்டுவாயோ தேவேந்திராதிதே
வர்கள்முதலானபேர்களும் எங்கள்முன்னே எதிர்த்து நிர்வகிக்கமாட்
டார்களே நீயோநிற்கின்றவளாதலால் நீசண்டைபண்ணவேண்டாம் சு
மாதானமாய்க் குதிரையைக்கொண்டுவந்து ஒப்பிவித்துசுகமாய் உன்னு
டைய பட்டணத்திற்குப்போவென் றுசொன்னான் அதுகேட்டுஅந்தப்பி
ரலாவதியும் புன்சிரிப்பாகச்சிரித்து, அர்ச்சுனனுடைய சவுரியபராக்கிர
மத்தையும் சௌந்தரியத்தையுங்கண்டு மோகித்து ஓசுவாமி நீர் நல்லவார்
த்தைசொன்னீர் நாங்கள் உங்கள்முன்னேஎதிர்த்து நிற்கமாட்டோமெ
ன்றுநினைத்தீரோ அப்படிநினைப்பதைவிட்டுவிடும உம்மைப்பார்த்தாலெ
னக்குச் சண்டைபண்ணுகிறதற்கு மனமில்லை ஆகையால் நான் இரண்டு
வார்த்தையாகச் சொல்லுகிறேன் கேளு மவையென்னவென்றால் இப்
பொழுது சர்வாடம்பரத்துடனே என்னைக்கலியாணம்பண்ணிக்கொண்
டுஎன்னுடனேகூடிச் சகலபோகங்களையுமனுபவித்திருந்து பிறகு என்
னுடையசேனைகளையும் சீர்மைபூமிகளையும் பண்டிபண்டாரங்களையும் உ
ம்முடைய வசம்பண்ணிக்கொண்டு அப்பால் அஸ்வமேதக்குதிரையையு
ம்நடத்திப் பூமிப்பிரதட்சணஞ்செய்வித்து சந்தோஷமாய்தருமபுத்திரர்

செய்கின்றயாகத்தை நிறைவேற்றிவையும் அப்படிச்செய்ய மனமில்லா
விட்டால் என்னுடனேஎதிர்த்துப் போராடி என்னைச்செயித்துக் குதி
ரையை விடுவித்துக்கொண்டுபோமென்றுசொன்னாள்- அதுகேட்டு அர்
ச்சுனனுஞ்சிரித்து பிரலாவதியைப்பார்த்து ஓ பிரலாவதி நீநல்லவார்த்
தைசொன்னாய் நான்வந்தகாரியமென்ன அஸ்தினாபுரத்திலென்தமைய
னாகிய தருமபுத்திரர்யாகதீட்சையைக் கைக்கொண்டிருக்க அதைநினை
யாமல்நானிவ்விடத்தில் உன்னைக் கலியாணம்பண்ணிக்கொண்டு உன்
னோடுகூடிச் சகலபோகபாக்கியங்களையு மனுபவித்துக்கொண்டிருப்பது
மதர்மமோ அதுகூடாது நீகுதிரைக்கொண்டுவாது ஒப்புவித்தாலாச்சுது
இல்லாவிட்டால் சண்டைக்குவாவென்றுசொல்ல அதுகேட்டு பிரலாவ
தியுங்கோபித்து தன்னுடையவில்லினிடமாகச் சிறிதுபாணங்களைத்தொ
டுத்து அர்ச்சுனன்பேரில் பிரயோகம்பண்ணினாள் - அர்ச்சுனனுங்கோப
ங்கொண்டு தன்னுடையகாண்டீபத்தில் அனேகபாணங்களைப்பிரயோகி
த்து அந்தபாணங்களையெல்லாம் நடுவீதியிற்கண்டித்துத்தள்ளி பின்னை
யுமேழாறுதிவ்வியபாணங்களைத் தொடுத்துப் பிரயோகஞ்செய்துபிரலா
வதியினுடைய மார்பிலேதைக்கும்படிசெய்தான் அதனால் அவளுங்கொ
ந்துமகாரோஷத்துடனே ஏழுபாணங்களைத்தொடுத்துப் பிரயோகித்து
அர்ச்சுனனுடையமார்பில்தைக்கும்படிசெய்து அட்டகாசம் பண்ணினா
ள் இவ்விதமாகவெகுநேரம் அர்ச்சுனராஜனும் பிரலாவதியும்ஒருவர்க்
கொருவர் தோல்வியடையாமல் சிங்கமும்சிங்கமும்எதிர்த்ததுபோலெ
திர்த்துப் போராடுகிறபோது அர்ச்சுனராஜனும் ஒருமோகனாஸ்திரத்தை
எடுத்துத்தொடுக்க அதுகண்டு அவளும் ஒருதிவ்வியபாணத்தைத்தொடு
த்துப்பிரயோகித்து அர்ச்சுனனுடைய காண்டீபத்திற்றொடுத்த அந்த அ
ஸ்திரத்தை இரண்டுதுண்டமாகக் கண்டித்துவிட்டாளதைக்கண்டு அர்
ச்சுனராசனும் அவளுடையசாமார்த்தியத்திற்கு மெச்சிப் பின்னையு மகா
ரோஷத்துடனே அநேகமாயிரம் குரூரபாணங்களையெடுத்துத்தொடுக்க
ப்போகையில் ஆகாசவாணியுங்கண்டு அசரீரியென்றுரைத்து அர்ச்சுனனை
ப்பார்த்து ஓ அர்ச்சுனா வீராதிவீரா நீஇவளுடனே எத்தனைநாள் போரா
டினாலும் இவள்பின்னிடுகிறவளல்லநீவிருதாவாகப்போராடுகின்றாய் இ
வள்மெத்த வல்லமையுள்ளவள் மந்திரதந்திரங்களில் மிகுந்தவள் ஆ
கையினால்நீஇவளுடனே சிநேகம்பண்ணி இவளைக்கலியாணம்பண்ணி
க்கொண்டு இவள்மனதைச்சந்தோஷப்படுத்திவைத்து உன்னுடைய கு
திரையை மெள்ளவிடுவித்துக்கொண்டுபோவென்றுசொல்ல- அந்தவார்
த்தையைக்கேட்டுத் தனக்குத்தானே ஆலோசனைசெய்து இதுவுமெய்தா
னென்று நினைத்துதன்கையிற்பிடித்திருந்த காண்டீபத்தைரதத்தின்மே
லில்வைத்துவிட்டு அந்தபிரலாவதியைப்பார்த்து ஓபெண்ணரசி உமக்கு
ம்நமக்கும் துவேஷம்வேண்டாம் இந்நேரம் உன்னுடைய வில்வித்தை
யைத் தெரியவேண்டிப் போராடினேனல்லாமல் வேறல்ல ஆதலாலிந்த
மட்டுக்குஞ்சண்டைநிறுத்திச் சமாதானமாய் உன்னுடையமனோ

கடப்படியே உன்னைக்கலியாணஞ்செய்து சதிகேளியில் உன்மனதைச்சந்தோஷப்படுத்தி வைக்கிறேனென்று சொல்ல, அந்தவார்த்தையைக்கேட்டு அவளுஞ்சந்தோஷமடைந்து தன்னுடைய சேனைகளையெல்லாம் அனுப்பிவைத்துப் பட்டணமுழுதும் நன்றாயலங்கரிக்கும்படி திட்டம்பண்ணினாள், அவர்களும் அந்தஉத்தாரப்படியேபோய் சகல சம்பிரமத்துடன் பட்டணமுழுதும் குபேரனுடைய அளகாபுரியைப்போல நவரத்நமயமாயலங்கரித்துப் பதினெட்டுவகை மேளவாத்தியங்களும் தாம்தாமென்று முழங்கத்தக்கதாக சர்வாடம்பரத்துடனே பிரலாவதியினுடையகலியாணபேரிகை யறைவித்தார்கள் அப்பொழுதுபிரலாவதியும்மதனமஞ்சரியென்கிற சேனாபதியுடனும் சகலசேனைகளுடனும் மகாவைபலத்துடனே அர்ச்சுனராசன் அம்சத்துவராசன் முதலான ராஜகூட்டங்களையும் சேனாசமுத்திரங்களையும் பட்டணத்திற்குள்ளே அழைத்துக்கொண்டுபோய் அவரவர்களுக்குத் தகுந்தவிடுதிகள் விடுவித்துப் போசனமுதலானசர்வஉபசாரங்களும் நடப்பித்தாள், பிற்பாடுபிரலாவதியும் நல்லசுபமுகூர்த்தலக்கினத்தில் அர்ச்சுனராசனைக்கலியாணஞ்செய்துகொண்டு அன்றையதினம் சகலசம்பிரமத்துடனே சப்பிரமஞ்சத்தின்பேரில் அர்ச்சுனராசனோடுகூடி மகாலீலாவிநோதமாகச் சகலசுக்கியங்களையு மனுபவித்திருந்து பொழுதுவிடிந்தபின்பு பிரலாவதியும்சந்தோஷித்து அர்ச்சுனராசனுக்குவேகுமானம் உன்னதமான ஆடையாபரணங்களும்சவாதினங்களுங்கொடுத்து அஸ்வமேதக்குதிரையையும் சிறிதுஸ்திரீசனங்களையுங் கூட்டியனுப்பி நாங்களும் தர்மபுத்திரர்செய்கிற யாகத்திற்கு வருகிறோமென்றுசொல்ல அதுகேட்டு அர்ச்சுனராசனும் பிரலாவதியைப்பார்த்து ஓபெண்ணே நீயுமுன்னுடைய சேனைகளும் யாகத்திற்குவந்துசேரவேண்டுமென்று உபசாரமாகச்சொல்லி அவளிடத்தில்செலவுவாங்கிக்கொண்டு அந்தப்பெண்மலையாளத்தைவிட்டுப் புறப்பட்டுக்குதிரையைவிட்டு அந்தக்குதிரையின்பிறகே அர்ச்சுனமகாராஜனு மவர்தாருஞ் சகலராசகூட்டங்களும் ரதகஜதுரகபதாதிகளாகிய சதுரங்கபலசேனைகளுடனும் நடந்தான்.

## பீஷணன் யுத்தம்.

அப்பாலக்குதிரையானது வடக்குமுகமாகத்திரும்பி மேற்குசமுத்திரக்கரையோரமாகநடந்து பகாசூரன்பிள்ளையான பீஷணனுடையபட்டணத்துக்குச் சமீபமாகவந்தது, அதுகண்டு அங்கிருந்தராக்ஷதர்கள் அக்குதிரையைப்பிடித்துக்கொண்டுபோய்த் தங்கள்ராசனாகிய பீஷணனிடத்தில் ஒப்பிவித்தார்களப்பொழுது அந்தபீஷணனும் குதிரையினுடைய லலாடத்தில்கிருநாவொளிபாகக்கட்டியிருக்கின்றபட்டத்தை வாசித்துப்பார்த்து சந்தோஷப்பட்டு இந்தக்குதிரையின் பின்னே வருகிறவன் என்பகையாளியாகிய வீமசேனனுடையதம்பியல்லவா, ஆகையினால்நானவனுடனேபோராடி ஜெயிக்கிறேனென்று [illegible]

அதிசீக்கிரமாகவெழுந்திருந்து தன்னுடைய ரதகஜதுரகபதாதிகளான ரா
க்ஷசச்சேனைகளோடும் ராட்சசஸ்திரீகளோடும் சண்டைக்கு ஆயுத்தமா
கப்புறப்பட்டு பட்டணத்தின் வெளியேவந்து தண்டுவிட்டிறங்கினுளவ்
விடத்தில் அர்ச்சுனராசனும்இந்தச்சங்கதிகளெல்லாம் குதிரையின்பிற
கேவந்த சேவகர்களால்கேள்விப்பட்டு அம்சத்துவசன் நீலத்துவசன் அ
னுசாளுவன் எவ்வற்றுசுவன் விஸ்வகேதுபிரத்தியுமனன் அனிருத்திர
ன்சாத்தகிகிர்தவர்ம்மன் மேகவர்னன்முதலான ராசவர்க்கங்களுடனே
சகல சேனுசமுத்திரங்களுடனுமதிவேகமாகவந்து ரணபேரிகை யறை
வித்துராட்சசக்கூட்டங்களுடனே எதிர்த்துப்போராடி மகாரோஷத்து
வேஷங்களுடனே நானாவிதபாணங்களினுலும் பலவகை ஆயுதங்களினு
லுமிரண்டிலட்சம் ராட்சசசேனைகளையும் அம்சப்படுத்திச்சின்னபின்ன
ப்படுத்தும்பொழுது அதுகண்டுராக்ஷசஸ்திரீகளும்மிஞ்சிஉலக்கைகளை
க்கையிலெடுத்துக்கொண்டு ராஜகூட்டங்கள்பேரில் விழுந்து ரதங்களை
யெல்லாம்பொடிபொடியாக்கி ஆனைகளையெல்லாம் துண்டந்துண்டமா
க்கிக் குதிரைகளையெல்லாம் சின்னபின்னமாக்கிக் காலாள்களையெல்லா
ம்-கால்வேறு-கைவேறு-தலைவேருகக் கண்டித்து இந்தப்பிரகாரம்-அர்ச்
சுனனுடையநால்வகைச்சேனைகளையும் அதம்பண்ணிஎங்கேபார்த்தாலு
ம்ராட்சசஸ்திரீகள்மயமாய்ச் சுழன்றுதிரிந்து அம்சப்படுத்துகிறபோது
அர்ச்சுனனுடையசேனைகளெல்லாரும் அவர்களுக்குமுன்னேநின்றுயி
வாகம்பண்ணமாட்டாமல் மனங்கலங்கி மகாபயமடைந்து நான்குதிக்கி
லுஞ்சிதறியோடிப்போனார்கள அதுகண்டு அர்ச்சுனராசன் முதலானதுராது
ளாகளெல்லாருமெ இர்த்துநின்று அவர்களுடையவில்லைக் குணதொ
ணிபண்ணி அநேகமாயிரம் பாணங்களைப்பிரயோகஞ்செய்தார்கள்-அதுக
ளையெல்லாம் எவ்வளவுஞ்சட்டைபண்ணுமலந்த ராட்சசஸ்ரீகளெல்லா
ருமிஞ்சிப்போராடுகின்றதை அர்ச்சுனராசனுடைய ரதத்திற்கொடியாக
விளங்குகின்ற அநுமாரானவர்கண்டு இதுஎன்ன விபரீதமென்றுசற்று
நேரம்ஆலோசனைசெய்துநாம் இந்தச்சமயத்தில் முனைந்துபோராடாவி
ட்டால்நம்முடையசேனைகள் நிற்கமாட்டாதென்றுநினைத்து அதிசீக்கிர
த்தில் ரதத்தைவிட்டுமகாகோபத்துடனே தொப்பென்று பூமியிற்குதித்
து அஷ்ட திசைகளும்செவிடுபடும்படி அட்டகாசம்பண்ணித் தம்முடை
யவாலைவளர்த்திக் கையிற்பிடித்துக்கொண்டு ராட்சசஸ்திரீகளைப்பார்த்
து ஓராட்சசஸ்திரிகளே நீங்கள்பதறுநீர்கள்பதறுநீர்கள் உங்களுடை
யவமிசத்திற்கு யமனுன அனுமந்தனென்று என்னை அறியுங்கோள்
இதோ யமதண்டத்தைப்போலவும், காளகூடவிஷத்தைப்போலவும்.
வடவாமுகாக்கினியைப்போலவும், காட்டுத்தீயைப்போலவும் சூரியகி
ரணத்தைப்போலவும் பிரகாசிக்கின்ற என்வாலைப்பார்த்தீர்களோ வெ
ன்றுகாண்பித்து வாலைவிசிறி அடித்து ஒவ்வொருஅடிக்கு நூறுபேர்வி
ழுந்திறக்கும்படிசெய்தும் நசுக்கிச்சாய்ப்பண்ணிக் கடித்தும் இடித்தும்
தள்ளியும் கிள்ளியும்உதைத்தும்சதைத்துப்பிறியும் பூறியும முட்டியும

தட்டியும் இழுத்தும் கிழித்தும் முறித்தும் கடித்தும் தூக்கி எறிந்தும் மிதித்தும் இந்தவிதமாய் அநுமாரானவர் மகா ஆக்குருஷத்துடனே சண்டப்பிரசண்டனாக எரிந்துநின்று வடவாமுகாக்கினியானது சமுத்திரசலத்தைக் கிரகித்ததுபோல ராட்சசஸ்திரீகளில் ஒருத்தியாகிலுந்தப்பிப் பிழைத்துப்போகவொட்டாமல் மடக்கி எல்லாரையும் பூமிக்கிரையாகச் செய்துவிட்டு எப்பொழுதும்போல அநுமாரானவர் அர்ச்சுனனுடைய கொடியினிடமாகப்போய் விளங்கியிருந்தார்,

அதுகண்டு அர்ச்சுனனுடையசேனைகளெல்லாம் மகாசந்தோஷகரமாய் அட்டகாசங்கள்சிங்கநாதங்கள் பண்ணிக்கொண்டுவந்து ராட்சசசேனைகள்பேரிலெதிர்த்தார்கள் அப்பொழுது அம்சத்துவசன் முதலானபிரமுகாளுமெதிர்த்து குரூரமாகிய அனவிரதபாணங்களைப்பிரயோகஞ்செய்து ராட்சசசேனைகளெல்லாம் சின்னபின்னமாகக்கண்டித்துத் தள்ளி பூதப்பிரேதகணங்களுக்குத் திருப்தியாக விருந்துசெய்வித்தார்கள் அதுகண்டு இந்தராட்சசர்களெல்லாம் பின்னிடாமல் முனைந்துமகாடக்ராகாரத்துடனே ஆனைகள்பேரிலும் புலிகள்பேரிலும் கரடிகள்பேரிலும் நாய்கள்பேரிலும் காக்கைகள்பேரிலும் பருந்துகள்பேரிலும் மற்றுமுண்டான அநேகசீவசெந்துக்கள்பேரிலும் ஏறிக்கொண்டு எமகிங்கிலிபர்களைப்போல கதை-சூலம்-கதை-சக்கரம்-பரசு-பட்டையம் அங்குசம்பிண்டி-பாலம் முதலான முப்பத்திரண்டு ஆயுதங்களையும் அர்ச்சுனனுடையசேனைகள்பேரில் நிவ்வுறிவ்வென்று பிரயோகம்பண்ணிவருகிறார்கள் அதுகண்டு அர்ச்சுனராசனும் தன்னுடையகாண்டீபத்தைத்குணதம்தொனிபண்ணி அதிதீட்சண்யமான அஸ்திரங்களைப் பிரயோகஞ்செய்து ராட்சசர்கள்விட்ட அஸ்திரங்களையெல்லாம் பஸ்மீகரப்படுத்தி அவர்களையுஞ்சின்னபின்னமாகக்கண்டித்து கால்மாடுதலைமாடாய கால்வேறு கைவேறு உடல்வேறுகாலும்புவேறு சதைவேறாகப்பண்ணி ஒருவனாயாகிலுந் தப்பிப்போகவொட்டாமல் தும்சப்படுத்திவிட்டு இயாவென்றுசிங்கநாதம்பண்ணினனதுகண்டு பீஷணனுந்தன்னுடைய ரதத்தை அர்ச்சுனராஜன்பேரில் நடத்தி அநேகமாயிரம் குரூரபாணங்களைப் பிரயோகஞ்செய்து அர்ச்சுனனுடையமார்பையும் பததலாக்கிழித்து சாரதிகுதிரைகளையும் சோகப்பண்ணிகொடியாகிய அநுமாரையும்பததலாக்கி அதுடனேபோகாமல் அம்சத்துவசனுடைய மார்பையுங்கிழித்து நீலத்துவசனையும் பிரமிக்கப்பண்ணிஎவ்வற்றுசுவனையும் காலகைஆடவொட்டாமல்செய்து அநுசாலுவனையுஞ் சல்லடைக்கண்களாகத்துளைத்துவிஸ்வகேதுவையும் ரதமயமாக்கிபிரசுயுமனனுடையதலையையுமுடைத்துசாத்தகியினுடைய புசங்களையுங்கிழித்து கிர்தவர்மனையும பாதாதிகேசபரியந்தம் துளைத்துவிட்டு மேகவாணனையும் சுபீலென்று ரத்தகைக்கப்பண்ணி இந்தவிதமாக பீஷணனானவன் அதிகரோஷத்துவேஷத்துடனே அர்ச்சுனன் முதலான அராதுனாகளையுஞ் சிக்குப்படுத்துகையில் அர்ச்சுனராசனும் ஆக்கிரவிபாக்கிரமசிகரோதனாகக் கோபங்கொண்டு மகாடக்ராகாரனாய்த் தன்னுடையகாண்டீபத்தினிடமாக அநேகபாணங்

களைக்கெடுத்து பீஷணனுடைய சாரதிகுதிரைகளையுங்கொன்று ரதத்
தையுந் துண்டுதுண்டாகப் பேர்த்தெறிந்து அந்தராட்சதனையுஞ் சல்ல
டைக் கணைகளாகத் துளைத்துவிட்டானதற்குமவன் சற்றாவும் பயப்
படாமல் ஆகாயத்திலெழும்பி மேகமண்டலத்தில் மறைந்து சற்றுநேரத்
திற்குள்ளே அவனுடைய மாய்கையினாலேமுப்பத்துமுக்கோடி தேவா
களையுமுண்டாக்கி அக்கினிபகவான்முதலான திக்குப்பாலகர்களையும்
உண்டாக்கி அந்தப்பீஷணனும் தேவேந்திரனைப்போல வெள்ளையானை
யின்மேலேறிக்கொண்டு சகலதேவர்களுந் தன்னைச்சேவித்து வரத்த
க்கதாக வச்சிராயுதத்தைக் கையிலேபிடித்துக்கொண்டு அர்ச்சுனராசன்
முதலான பிரபுக்களுக்குமுன்பாகவந்துநின்று அவர்களைப்பார்த்து ஓ
மானிடர்களே நாங்கள் தேவர்கள் நாங்களும் ராட்சசர்களுந்தாயாதியா
னபடியினால் எங்களுக்குள் ஒருவர்க்கொருவர் போராட்டமிருந்தபோ
திலும் நாங்களும் அன்னியருக்குமாத்திரம் இடங்கொடுக்கிறதில்லை நீங்க
ளெங்களுடைய தாயாதிகளைக் கொன்றுவிட்டபடியினால் நாங்கள் அவ
ர்களுக்குப் படைத்துணையாயிருந்து உங்களைக்கண்டிக்கிறதற்குவந்தோ
ம் இதோசற்றுநேரத்தில் பாருங்களென்றுசொல்லி அந்தமாயாதேவர்கள்
சகலமானசஸ்திர அஸ்திரங்களையும் தொடுத்துப்பிரயோகஞ் செய்தார்க
ள் அதுகண்டு அருச்சுனராசனும் திகைத்துச்சற்றுநேரம்ஆலோசனைசெ
ய்து இதுராட்சசமாய்கையல்லாமல் உண்மையானதேவர்களல்லவென்
றுநிச்சயித்துக்கொண்டு தன்னுடைய காண்டீபத்தைவளைத்து ஒருகந்த
ர்வாஸ்திரத்தை எடுத்துத்தொடுத்துப் பிரயோகம்பண்ணினான் அஸ்தி
ரமானது புறப்பட்டுச் சிறுசிறுவென்று சுழன்றுக்கொண்டுவந்து முப்
பத்துமுக்கோடி மாயாதேவர்களையும்திக்குப்பாலர்களையும் தேவேந்திர
னையும் துரத்தியடித்து அந்தமாயா விலாசங்களையெல்லாம் ஒருக்ஷண
நேரத்தில் அதம்பண்ணிவிட்டது அதுகண்டு உண்மையானதேவேந்தி
ராதிதேவர்களும் மனங்கலங்கிதம்மைப்போல வடிவெடுத்துப்போன
மாயாதேவர்களைக்கண்டித்த அஸ்திரமானது தங்கள்பேரிலும் எதிர்த்து
எங்கேவருகின்றதோவென்று மகாபயங்கரமடைந்து மேகமண்டலத்தி
ல்மறைந்து பார்த்துக்கொண் டிருந்தார்கள் அந்தச்சமயத்தில்சூரியபகவா
னானது சற்றுசந்தர்களெல்லாரும்பார்த்து ஒளித்துக்கொண்டார்களே
இனி நாமாத்திரமிருந்தால் அந்த அஸ்திரமானது நம்முடையபேரிலும் எ
திர்த்து எங்கேவருகின்றதோவென்றுபயந்து ஒளித்துக்கொண்டதுபோ
லமேற்கு திசையில் அஸ்தமானமாகினார் அப்பொழுதுசெய்த நன்றிய
றியாதவர்மூடர்களாகிய அஞ்ஞானிகள் இருதயம்போலபூதலமிருளானது
உலகமுழுதுமூடிக்கொண்டது அந்தஇருட்டுவேளையில் பீஷணனும
கா ஆக்ரோஷத்துடன் அந்தகாரகவசந்தொடுத்துக்கொண்டு அந்தரவீதி
யில்நின்று தன்னுடையமாய்கையினாலே புலிகள்கரடிகள் ஓநாய்கள் உடும
புகள்முதலான மிருகசாதிகளையுஞ் சிருஷ்டித்து அர்ச்சுனராசனுடை

யசேனைகள்பேரில் ஏவினான் அதுகளெல்லாம் அர்ச்சுனராசனுக்கண்
டித்துவிட்டு பிஷணனைக்காணாமல் அர்மித்துத்தன்னுடையகாண்டீபத்
தினிடமாகநாராயணாஸ்திரத்தைத் தொடுக்கவேண்டுமென்று நினைத்த
மாத்திரத்தில் மேகவர்ணனும்அதுதெரிந்து அர்ச்சுனராசனைப்பார்த்து ஐ
யாகிரீடிதேவரீர்இந்தத்துர்மார்க்கனுக்காகநாராயணாஸ்திரத்தை எடுத்து
த்தொடுக்கவேண்டாம் சின்னஞ்சிறுபூனையைக்கிள்ளிப்போடுகிறதற்குபெரிய
கோடாலிவேண்டுமோ ஆதலால் எனக்குச்செலவு கொடுத்தனுப்பும்நான்
போய் அந்தத்துர்மார்க்கனைக்கொண்டு வருகிறேனென்றுசொல்ல அ
துகேட்டு அர்ச்சுனராசனும் அப்படியேநல்லதென்றுசெலவு கொடுத்த
னுப்ப அந்தமேகவர்ணனும் தனுசாஸ்திரத்தைத்தொடுத்தும்பே தன்
டத்தைக் கையிலெடுத்துக்கொண்டு ஆகாசமார்க்கத்திலெழும்பிபீஷண
ன் தொடுத்துக்கொண்டிருக்கிற அந்தகாரகவசத்தைப் போக்கடித்து அ
வனுடனே எதிர்த்துஇரண்டுபேரும் போராடுகிறபோது பிஷணனுடை
யதெப்பையினால்கோத்து மேகவர்ணனும் பூமியில்விழுந்து மூர்ச்சைய
டைந்து சற்றுநேரத்தில் தெளிந்து எழுந்திருந்து ஆகாசத்திலெழும்பிம
றுபடியும் அந்த பீஷணனுடனே எதிர்த்துஇரண்டுவீரரும் கையினால்
போராடி அங்கேயிருந்து பூமியில்வந்து ஒருவர்க்கொருவர்சமமாகக்குத்
தியும் வெட்டியும்சலிப்படைந்து இரண்டுபேரும் மூர்ச்சையாகி விழுந்
தார்கள் அதில்பிஷணனுஞ் சற்றுநேரத்தில் மூர்ச்சைதெளிந்தெழுந்திரு
ந்துதாராருடனாய் அர்ச்சுனனிடத்திற்போய் அர்ச்சுனனைப்பார்த்து ஓஅ
ர்ச்சுனா உன் தமயன் வீமசேனன் வயிற்றுச் சோற்றுக்காக என் தகப்பனை
க்கொன்றானல்லவோ நான் இப்பொழுது உன்னைக்கொன்று அந்தப்பழி
யைத்தீர்த்துக்கொள்ளுகிறேன் நீசாக்கிரதையாயின்றுபோராடென்று
சொல்ல அந்தவார்த்தைகளைக்கேட்டு அர்ச்சுனராசனுங்கோபித்து அந்த
ராட்சசனைப்பார்த்து ஓ பீஷணா உன் தகப்பனை என் தமயன் கொன்றான
ல்லவோ அதமுறைமை தப்பாமல்உன்னைநான்கொல்லவேண்டும் ஆக
லால்நீசாச்சரிக்கையாயிருந்துபோராடென்றுசொல்ல அந்தச்சமயத்தில்
ஒருமாயாசன்னியாசிவந்து அர்ச்சுனனைப்பார்த்து ஆசீர்வாதம்பண்ணினா
ன் அதுகண்டு அர்ச்சுனராசனும் யதார்த்தசந்நியாசியென்றுநினைத்துஇர
ண்டுகைகளையுங் கூப்பித்தண்டன் சுவாமியென்றுநமஸ்காரஞ்செய்தான்
அதுகண்டு அந்தமாயாசந்நியாசியும் அர்ச்சுனனைப்பார்த்துஅர்ச்சுனா நீஎ
ன்னைத்தண்டம் போட்டாய் நீபயித்தியக்காரவேலைசெய்துவிட்டாய் அஃ
தென்னவென்று கேட்பாயாகில் நீ குதிரையின்பிறகேவந்துவிட்டாயல்
லவோ உடனே கிருஷ்ணமூர்த்தியும்சுதர்த்தனும் சண்டைபண்ணின
விடத்திற்குவந்து விட்டாரல்லவோ அந்தசமயம்பார்த்து அரியோதனாதி
களென்கிறராட்சசர்கள் அஸ்திநாபுரத்திற்குப்போய் தருமராசனையும்
திரௌபதியையும் எடுத்துக்கொண்டு எங்கேயோபோய்விட்டார்கள் அ
ந்தசேதியைஸ்ரீகிருஷ்ணதேவன் கேள்விப்பட்டுவந்து அவர்களைத்தேடி
க்கொண்டு திரிகிறார் இப்படியிருக்கும்போது என்னயாகம்என்னகுதி

னா என்னசன்னைட்மேலும் இந்தராக்ஷசன் மகாதுன்மார்க்கன் இவனு
டனே வீணைப்போராட்டம இந்தசண்டையைவிட்டு உன்தமயனையுந்தி
ரௌபதியையுந் தேடப்போவென்றுசொல்ல அர்ச்சுனராசனும் அந்தமா
யாசன்னியாசியினுடைய வார்த்தைகளைக்கேட்டுச்சலியவென்றுரைத்து இரா
க்ஷசமாய்கையென்றுநினைத்து அந்தமாயாசன்னியாசியைஇரண்டுதுண்ட
மாகக்கண்டித்துவிட்டு அப்பால் அந்தபீஷணனுடனே எதிர்த்துச்சற்று
நேரம் போராடிகடைசியில் அவனுடையசாரதியையுங் குதிரைகளையுங்
கண்டித்து ரதத்தையும்பொடியாக்கிப் பின்பு ஒருதிவ்விய பாணத்தினா
ல்பீஷணனுடைய சிரசையுங்கண்டித்து தள்ளிப்பிற்பாடுதேவதத்தத்தை
யெடுத்துவாயினிடமாக வைத்துப் பமபம்மென்று அஷ்ட திசைகளுஞ்
செவிடுபடும்படியூதினான் அதுகண்டுமற்றராசாக்களனைவரும் அவர்களு
டையசங்கங்களையெடுத்து ஊதினார்கள் அப்பொழுது அங்கேயிருந்த
ராக்ஷசசேனைகளெல்லாரும்பயந்து ஓடிப்போய்விட்டார்கள் அதன்பிற
கு அர்ச்சுனராசனும் அம்சத்துவசன் முதலானபிரமுகருடனேயும்சது
ரங்கபலசேனைகளுடனேயும் அந்தப்பட்டணத்தினுட்பிரவேசித்துராக்ஷ
சர்களுடைய அரண்மனைகளெல்லாஞ் சேனைகளுக்குக் கொள்ளைகொடு
த்து பீஷணனுடைய அரண்மனையிலிருந்த அபரிமிதமான திரவியங்களை
யெல்லாம் சேர்ப்பித்துப் பொதிபொதியாகக்கட்டி எழுநூறுயானைகள்
பேரிலும் பதினாயிரங் குதிரைகள்பேரிலும் அஸ்தினபுரத்திற்கு அனுப்
பிவைத்துப் பிற்பாடு அஸ்வமேதக் குதிரையைவிட்டு அதின்பிறகே அர்
ச்சுனராசனானவன் ரதாரூடனாய்ச் சகலசேனாசமுத்திரங்களும் புடை
சூழ்ந்துவரத்தக்கதாக நடக்கும்போது அந்தக்குதிரையானது பாண்டி
யநாட்டுக்குச் சமீபத்திலிருக்கிற மணிபுரமென்னும்பட்டணத்துக்கோ
ட்டைவாசற்படி யோரத்தில் பச்சென்றபுல்லைக்கண்டு மேய்ந்துக்கொ
ண்டிருந்தது கேட்டீரோ ஜனமேஜயமகாராசாவே அந்தமணிபுரமா
னது எப்படிப்பட்டதென்றால் இந்திரநீலரத்தினத்தினால் கல்லுகளடுக்
கித்தங்கத்தினால் சேறுசெய்து அரமனைகள் ஆஸ்தானங்கள் மெத்தைகள்
மேடைகள்கட்டிவிளங்கப்பட்டது குடிகள்வசிக்கிறவீடுகளுநவரத்
தினமயமாகவும் சுவர்ணமயமாகவும்சகலவேடிக்கைகளுடனேயும்விள
ங்கப்பட்டது அல்லாமலும் கோபுரங்களுடைய உயர்ச்சியைக்கண்டுசூரி
யபகவானும் பக்கமாகச்சாய்ந்துபோவார் அவ்வகைப்பட்டவிசித்திரங்
களுடனே விளங்குகின்ற மணிபுரத்தை அர்ச்சுனராசன்கண்டு அம்ச
த்துவசராசனைப் பார்த்து ஓராசேந்திரா இதனைசம்பிரமத்துடனே பிர
காசிக்கின்ற இந்தப்பட்டணத்திற்கு அரசன்யாவன் அவன்பெயரென்
ன அவன் எவ்வளவுசாமார்த்திய முள்ளவன் அதுவுமக்குத் தெரிந்திருக்
குமல்லவோ சற்றேசொல்லுமென்று கேட்க அதுகேட்டு அம்சத்துவச
னும் அர்ச்சுனனைப்பார்த்து ஓகிரீடி இந்தப்பட்டணம் மணிபுரமெ
ன்னும் பெயரையுடையது இதற்கு அரசன் வீராதிவீரனானபப்ரவா
கன் அவன் மகாசவுரியபராக்கிரம முள்ளவன் அவன் உமதுடைய

குமாரன்தான் அஃதெப்படியென்றால் நீர் தீர்த்தயாத்திரை வந்தபொழுது பாண்டியராஜன் குமாரத்தியான சித்திராங்கதையினிடத்தில் உமக்குப்பிறந்தவன் மகாவீரஉத்தமனுடன் ஆகையினால் நம்முடைய குதிரையானது அவனுடைய பட்டணத்திற்குப்போகாமற் போனாலாச்சுது அப்படியில்லாமற்போய் நமதுகுதிரை யவன்கையி லகப்பட்டுக்கொண்டால் அப்புறம் ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவன்வந்தபோதிலும் குதிரையை விடுவிக்கக்கூடாதென்று சொல்லிக்கொண்டுநடக்கையில் இதற்குள்ளே அவ்விடத்தில் பப்பிரவாகன் சேனாதிபதியான சுமுத்தியென்கிறவன் சாரிமார்க்கமாய் கோட்டைவாசல் ஓரமாய்வருகிறபோது அஸ்வமேதக்குதிரையைக்கண்டு ஆச்சரியப்பட்டு அதைப்பிடித்துக்கொண்டு கோட்டைக்குள்ளே கொண்டுபோய் நவரத்தின கசிதமானமண்டபத்தில் சகலராஜகூட்டங்களுடனேகொலுவாயிருக்கின்ற பப்பிரவாகனைக்கண்டு தெண்டனிட்டு ஐயாராஜநந்தனா இந்தக்குதிரையானது நமது கோட்டைவாசலின் ஓரத்தில்வந்து புல்லை மேய்ந்துக்கொண்டிருந்தது அதைக்கண்டுநான் பிடித்து வந்தேனென்றுசொன்னான் அதுகேட்டுப் பப்பிரவாகனும்சிம்மாசனத்தைவிட்டெழுந்திருந்து வந்து குதிரையினுடையலாயத்திற்கட்டிருக்கின்ற விருதாவொளியை வாசித்துப்பார்த்தது தலையையசைத்துப்புன்சிரிப்பாகச்சிரித்து சேனாதிபதியைப்பார்த்துஓசுமுத்தி இதுஆருடையகுதிரையென்றிருக்கிறாய் என்னுடைய பெரியதகப்பனாராகிய தருமபுத்திரரானவர்யாகஞ்செய்யநினைத்து அவர்விட்டகுதிரையாக்கும் இந்தக்குதிரையின்பிறகே அகண்டித வீரபராக்கிரமசாலியான என்தகப்பனாராகிய அர்ச்சுனமகாராஜன்வருகிறார் நானும்அவரைப்பார்க்கவேண்டுமென்று நெடுநாளாய்க் கோரிக்கொண்டிருந்தேன் அந்தக்கோரிக்கை இன்றையத்தினம் ஈடேறியதென்று சந்தோஷகரமாய்ச் சொல்லிக்கொண்டிருக்க அதிலேமேற்குத்திசையில் சூரியபகவான் அஸ்தமானமாகினான் அப்போழுது பப்பிரவாகனும்தன்னுடையசேனாதிபதியைப்பார்த்து ஓசுமுத்திஇப்பொழுது அஸ்தமான்மாகிவிட்டதே ஆதலால் ராத்திரியப்பொழுதுக்கு இந்தக்குதிரையைப் பத்திரமாக நம்முடைய குதிரைலாயத்தில்கட்டிவைபொழுதுவிடிந்தபின்பு என்தகப்பனிடத்தில்குதிரையைக்காணிக்கையாகக்கொண்டுபோய்வைத்து அவரைச் சந்தோஷப்படுத்தி அழைத்துக்கொண்டுவந்து இந்த மணிபுரத்தை அவருக்கேபட்டங்கட்டிவைத்து நான் அவரை சேவித்துக்கொண்டிருக்கவேண்டும் ஆதலால் நீ அதிசாக்கிரதையாய் காணிக்கையாகக்கொண்டுபோகிறதற்கோ அநேக மாயிரந்தங்கத் தட்டுகளில்பட்டு பட்டாவளிகளும் நவரத்னபரணங்களும்மாணிக்கப்பதக்கங்களும் முத்துத்தாழ்வடங்களும் கந்தபுஷ்ப பரிமளமாலைகளும்கர்ப்பூரதாம்பூலமும்நல்லருசிகரமானபழவகைகளும் தேங்காய்களும பால் தயிர் நெய்களும் பணியாரவகைகளும் இன்னமுண்டான உச்சிதவஸ்துக்களும் முஸ்திதுபண்ணி இதுவல்லாமல் பதினெட்டுவித மேளவாத்தியங்களையும் நாட்டியப்பெண்களையும் ரதகஜதுரகபதாதிகளுமாகிய நால்வகைச்சேனைகளையும்ரா

த்திரிக்குத்தானே எச்சரிக்கையாய் ஆயுத்தப்படுத்திவையென்று உத்தாரம்பண்ணியனுப்பினான்.

அதுகேட்டுசுமித்தியும் அப்படியேநல்லதென்று போய்ச்சகல வஸ்துக்களையும் சேனைகளையும் டூஸ்திதுபண்ணிவைத்தான். பின்புமறு நாள்காலமே பப்பிரவாகனுமெழுந்திருந்து நித்தியகருமங்களைமுடித்துக்கொண்டு சர்வாலங்கிருதனாய் சகலசேனைகளுடனும் சகலவஸ்துவாகனாதிகளுடனும் அஸ்வமேதக்குதிரையுடனும் டூஸ்திதாகப் புறப்பட்டு மணிபுரத்தைவிட்டு வெளியேவந்து பதினெட்டுவகை மேளவாத்தியங்களும் தாம்தாமென்றுமுழங்கத்தக்கதாக சர்வாடம்பரத்துடனேவந்து இதற்குமுன்னமே குதிரைப்பிடிபட்டுப் போச்சுதென்று சேதிகேட்டு மகாகோபங்கொண்டு யுத்தத்திற்கு ஆயுத்தமாயிருக்கின்ற அர்ச்சுனமகாராசனைக்கண்டு அவருக்குத் தான்கொண்டுவந்த குதிரைமுதலான சகலவஸ்த்துக்களையுங்காணிக்கையாகவைத்துசாஷ்டாங்கமாகவிழுந்துதெண்டனிட்டு இரண்டுபாதங்களையும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு ஓ ஐயா சவுரியபராக்கிரமமான தேவரீருடைய குதிரையென்றறியாமற் பிடித்துக்கொண்டு பின்பு விருதாவொளியை வாசித்துப்பார்த்துத் தெரியவந்ததனால் உம்முடையபாதத்திற் கொண்டுவந்து ஒப்புவித்தேன் அந்தப்பிழையைத்தேவரீர் மன்னித்தருளவேண்டும் அல்லாமலும் பிள்ளையானவன் தகப்பனுக்கு எத்தனை குறைசெய்தாலும் பொறுத்தருள வேண்டுவதல்லாமல் கோபிக்கக்கூடாதல்லவா அதனால்தேவரீர்புத்திரனாகிய என்பேரில் குறைவையாமல் கிருபாதிருஷ்டிவைத்து நான் கொண்டுவந்த வஸ்துக்களையுங் கைக்கொண்டு என்னையும் என்னுடைய சீமை பூமிகளையும் உம்முடைய ஆதீனப்படுத்திக்கொண்டு என்பேரில் துவேஷமில்லாமல்ரட்சித்தருளவேண்டுமென்று அநேகவிதமாகத்தோத்திரம்பண்ணுகிறபோது அம்சத்துவமகாராஜனும் அர்ச்சுனனைப்பார்த்து ஓ அர்சுனா புத்திரன்பேரில் துவேஷம்வேண்டாம்தயவுசெய்துரட்சியுமென்று வெகுபிரியவசனமாகச்சொல்லவும் பினனையும்விஸ்வகேது பிரத்தியுமனன் அனுசாலுவன் எவ்வற்றுசுவன் நீலத்துவசன் முதலானராசர்களும் அர்ச்சுனனைப்பார்த்துப் பப்பிரவாகன்பேரில் கோபம் வேண்டாம்சிநேகமாகின்றதே நல்லதென்று அநேகவிதமாகச்சொல்லவும் அவர்கள்சொல்லையுங்கேளாமல்தேவர்களானாலும் விதிமுறையைத் தள்ளக்கூடாதபடியினால் அர்ச்சுனராசனும்ஆக்ருஷத்துடனே பப்பிரவாகனைக்காலினால் உதைத்துத் தள்ளிவிட்டு அவனைப்பார்த்து அடா பப்பிரவாகா நீஒருக்ஷத்திரியனோகுதிரையைப்பதட்டமாகப்பிடித்துக்கொண்டு பின்பு அநேகஞ்சேனைகள் வந்திருக்கிறதைக்கண்டுபயந்து சரணமடையவந்தாயோ நீஒருசேவகனா, நீ எனக்குப்பிறந்தவனல்ல உன்னுடையதாயார் உன்னை வைசியனுக்குப் பெற்றிருக்கவேண்டும் அப்படியில்லாமல் நீ எனக்குப்பிறந்திருந்தால்உனக்குச்சவுரியபராக்கிரமமுண்

டாயிருக்காதோ வென்றுசொன்னான் அந்தவசனங்களையெல்லாம்பப்பி ரவாகன்கேட்டு மகாகோபதிப்தனாய் அர்ச்சுனனைப்பார்த்து ஐயாகுந்தி நந்தனா தேவரீர் எத்தனையானாலும் இப்படிப்பட்ட வசனங்களைச் சொல்லலாகுமோ சற்றாகிலும் எண்ணிப்பாராமல் என்தாயாரையுந் தூஷிக்கலாகுமோ ஆனால்நான் வைசியனுக்குப் பிறந்ததும் க்ஷத்திரியனுக்குப்பிறந்ததும் இன்னுஞ்சற்றுநேரத்தில் தெரியவருகின்றது ஆதலால்உம்முடைய சேனைகளையெல்லாம் சண்டைக்கு முஸ்தீதுபண்ணிக்கொள்ளுமென்றுசொல்லி அஸ்வமேதக்குதிரையையும்காணிக்கைகப்பங்களையும் மணிபுரத்திற்கு அனுப்பிவிட்டுத்தன்னுடையசேனாதிபதியானசுமுத்தியையழைத்து ஓ சுமுத்தி நீ போய்நம்முடைய சேனைகளையெல்லாம் யுத்தத்திற்கு ஆயுத்தப்படுத்திவையென்று கட்டளையிட்டனுப்பிவிட்டுப் பின்பு பப்பிரவாகனும் தேரின்மேலேறிக்கொண்டு மதுராபுரிக்குப் போய்த் தனது யிஷ்ட தேவதையான சொக்கநாதருடைய கோயிலுட்புகுந்து அந்தஸ்வாமிக்கு பிரதட்சண நமஸ்காரம்பண்ணி பூசைசெய்து இரண்டுகையுஞ் சிரசின்பேரில் அஞ்சலியாகவைத்துக் கொண்டு அந்த சொக்கலிங்கத்தைப் பார்த்து அனேகவிதமாக தோத்திரம் பண்ணி அப்பால் உலகமாதாவான மீனாட்சியம்மன் கோயிலுக்குப் போய்பிரதக்ஷணநமஸ்காரம்பண்ணி பூசைநெய்வேத்தியங்கள்செய்துமுடித்துக் கைகளைகட்டிக் கொண்டு அந்தமகாதேவியைப்பார்த்து ஓ அம்மா மகாதேவி சச்சிதானந்தி சங்கரி சாம்பவி சர்ஜீவ தயாபரிசர்வலோகரட்சகமயேஸ்வரி கங்காதரி நீலகண்டாயி நிர்மலி சதுர்வேத வந்திய நாயகி மகாபரமேஸ்பரி சாலோகசாமீப சாயுச்சியகாரணி நாராயணி மாதங்கி வராகி பர்வதராஜபுத்ரி பக்தவச்சலிபரமதயாளி திரிசூலி ஸ்ரீ அகிலாண்டகோடி பிர்மாண்டநாயகி துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனி அடியேனைரட்சியும்ரட்சியும் அடியேனுக்குவந்து சம்பவித்த ஆபத்தைத்தீரும் அம்மாவென்று இப்படி அநேகமாகத் தோத்திரம் செய்தான் அதுகண்டு அந்தமகாதேவியும் மனமகிழ்ந்து பப்பிரவாகனை வாரும் பிள்ளாயென்று சமீபத்திலழைத்துத் தன்னுடைய விபூதியை நெற்றியிலேதரித்து சகலபீடைகளும் பரிகாரமாகவேண்டுமென்று ஆசீர்வாதம் பண்ணிப் பின்னையும் பப்பிரவாகனைப்பார்த்து அப்பாநீ முன்னதாகப் புறப்பட்டு சண்டைக்குப்போவாயாகில் உனக்குமுன்னமே நானும் உனக்குத்தெரியாமல்வந்திருந்து அர்ச்சுனனுடைய சேனைகளெல்லாங் கண்டிக்கிறேன் பயப்படாதேயென்று ஆதரித்து அப்பொழுதே அந்தமகாதேவியும் வெள்ளைக்குதிரையின்பேரில் ஏறிக்கொண்டுமுப்பத்திரண்டு ஆயுதங்களையுந்தாங்கிக்கொண்டு பினாகபாணியாய் பூதவேதாளகணங்களுடனே புறப்பட்டு பப்பிரவாகனுடனே நடந்து அவன்கண்ணுக்குத்தெரியாமல் மாய்கையாய்மறைந்துபோனாள்.

# பப்பிரவாகன் யுத்தம்.

பப்பிரவாகனும் மனோவுச்சாக சந்தோஷத்துடனே நவரத்தினமயமான தேரிலேறிக்கொண்டு தன்னுடைய சேனைகளின் சமீபத்தில்வந்து தனதுசேனாதிபதியாகிய சுமுத்தியைப்பார்த்து நீங்கள் இப்பொழுதுபின்னிடாமல் யுத்தம்பண்ணுங்கோளென்று உத்தரவு பண்ணினான் அதுகேட்டுசுமித்தியும் அப்படியேநல்லதென்று ஏழுகோடி ரதத்தையும் ஒருஅற்புதம்பானைகளையும்இரண்டுஅற்புதம்குதிரைகளையும்மூன்று அற்புதம்காலாள்களையும் காலசக்கிரகவியூகம்போல அணியணியாக வகுத்து ரணபேரிகைவெண்கலப்பேரிகை முதலானதுகளை அண்டகடாகங்களுமதிரும்படி யறைவித்தான் பப்பிரவாகனும் தன்னுடையசேனைகளுக்குமுன்பாக யுத்தசன்னத்தனாய் கனகரத்தின மயமான தேறிலேறிக்கொண்டு மகாஉக்கிராகாரத்துடனே நின்றான்.

அப்பொழுது அர்ச்சுனனும் அதுதெரிந்து தன்னுடைய சேனைகளையெல்லாம்ஏவினமாத்திரத்தில்அர்ச்சுனனுடையசேனைகளும் பப்பிரவாகனுடையசேனைகளும் எதிர்த்து ஒருவருக்கொருவர் மகாரோஷத்துவேஷங்களுடனே போராடுகிறபோது ரதக்காரர்களுடனே ரதக்காரர்களெதிர்த்து அவர்களுடையவில்லைவளைத்து அனேகமாயிரந் திவ்வியபாணங்களைப் பிரயோகஞ்செய்துபோராடினார்கள், யானைக்காரர்களுடனே யானைக்காரர்களெதிர்த்து ஒருவர்க்கொருவர் ஆக்ருஷத்துடனே சஸ்திர அஸ்திரங்களினால் போராடினார்கள் குதிரைக்காரர்களுடனே குதிரைக்காரர்களெதிர்த்துகத்திகளினால்ஒருவருக்கொருவர்வெட்டிக்கொண்டு போராடினார்கள் காலாள்களுடனே காலாள்களெதிர்த்து கத்தி சூலம் கதை தோமரம பிண்டிபால முதலான முப்பத்திரண்டுஆயுதங்களினாலும் போராடினார்கள் அப்படி போடுகிறபோது இரண்டுசேனைகளிலும் அநேகஞ்சேனைகள் மடிந்துவிட்டதுஎங்கேபார்த்தாலும் பிணமலைகளாகக்குவிந்து ரத்தவெள்ளம் ஆறுகப்பெருகியோடியது அதுகண்டு பப்பிரவாகனுந் தன்னுடைய ரதத்தைத்தூண்டி அர்சுனனுடையசேனைகளை யெல்லாம் கண்ட துண்டங்களாக்கும் பொழுது அனுசாளுவன்கண்டு கோபதீப்தனாய் எரிந்துவிழுந்து தன்னுடைய ரதத்தைத்தூண்டி வில்லைக்குணத்தொனிபண்ணி அனேகமாயிரம் பாணங்களைப்பிரயோகஞ்செய்துபப்பிரவாகனுடையமார்பிலேதைக்கும்படிச்செய்தான் அந்தவருத்தத்தைப் பப்பிரவாகன் எவ்வளவும் சட்டைபண்ணாமல் ஒருதிவ்வியபாணத்தைஎடுத்துப்பிரயோகஞ்செய்துஅனுசாளுவனைநோகப்பண்ணி மேலும்அனேகமாயிரம்பாணங்களையெடுத்துவில்லினிடமாகச்சந்தித்து எய்கிறபோது அந்தபாணங்கள்வந்து சுறுக்குசுறுக்குமென்றுதைக்க அதனால்அனுசாளுவனுமிரவகிக்கமாட்டாமல்மிகவும் நொ

ந்து ரதத்தின்பேரில் விழுந்து மூர்ச்சையடைந்தான் அதுகண்டு பிரத்தியுமனனும் மகாரோஷத்துடனே பப்பிரவாகன்பேரில் ரதத்தைத்தூண்டித் தன்னுடைய வில்லிலே அதிதீட்சண்யமான பாணங்களைப்பிரயோகஞ்செய்து பப்பிரவாகனை நோகப்பண்ணி சாரதியையுங் குதிரைகளையும் ரத்தமயமாக்கிரதத்தையும் அப்புரம் இப்புரம்போக வொட்டாமல்சிக்குப்படுத்திப்பின்னையும் அனேகஅஸ்திரங்களைப்பிரயோகம்பண்ணினான் அதுகளையெல்லாம்பப்பிரவாகனும்ஒரு அர்த்தசந்திர பாணத்தினால் நடுப்பாதியில்கண்டித்துவிட்டு பின்னையுஞ் சூரிய கிரணங்களைப்போல அதிதீட்சண்யமான அனேகபாணங்களைத்தொடுத்துப்பிரயோகம்பண்ணினான் அதுகளும்ஒன்றோடொன்றுஉராய்ந்துக்கொண்டு நெருப்புப் பொறிகளைக் குபீல்குபீலென றுகக்கிக் கொண்டு அதிவேகமாகவந்து பிரத்தியுமனனுடையசரீரமுழுவதும்சுருக்குசுருக்குயென்றுதைக்கும்போது ஸ்ரீஹரிகுமாரனாகியபிரத்தியுமனனும் ஆயாசமடைந்து அபிரியம்விடாமல் ஆக்கிரவியாக்கிரமநிக்ரோதனாய் பல்லைநறநறவென்று கடித்துக்கொண்டு வில்லை குணதொனி பண்ணி அந்தவில்லிலே காலகூடவிஷத்தையொத்த அநேகபாணங்களைச்சந்தித்துப்பிரயோகம்பண்ணி பப்பிரவாகனுடைய சாரதியையும் குதிரைகளையும் அதஞ்செய்துரதத்தையுஞ் சக்கை சக்கையாகப்பேர்த்தெறிந்து பப்பிரவாகனையும்கால்கை ஆடவொட்டாமல் சல்லடைக் கணகளாகத்துளைத்து விட்டான் அதனால்பப்பிரவாகனும் மிகவும்நொந்து மூர்ச்சையடைந்தான் சேனைகளெல்லாரும் சிதறி ஓடிப்போனார்கள் அப்பொழுது பிரத்தியுமனன் மிஞ்சிதன்னுடைய ரதத்தைச் சக்கிராகாரமாய்த் திருப்பிக்கொண்டு பப்பிரவாகனுடைய சதுரங்கபலசேனைகளையுஞ் சின்னபின்னமாகக்கண்டித்துஎங்கேபார்த்தாலும்பிணமலைகளாகக்குவிக்கும்போது சேனைகளெல்லாம் நாலுமூலையிலும்ஓட்டமெடுக்கத் தலைப்பட்டதுகளதுகண்டு பிரத்தியுமனன் ஓடிப்போகின்ற வர்களையும் ஓடவொட்டாமல் மடக்கிமடக்கிக் கொல்லுகையில் பப்பிரவாகனும் மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்துமகாகோபதீபனாய் எறிந்துவிழுந்து வேறேஒரு தேரிலேறிக கொண்டு வில்லைகுணத் தொனிபண்ணி ஓடிப்போகின்ற தன்னுடைய சேனைகளையெல்லாம்பயந்துபோகாதீர்களென்றுகையமர்த்திநிறுத்திபிரத்தியுமனனுடனே எதிர்த்துப்போராடிதன்னுடையபாணாக்கினியினால் அவனைநோகச்செய்து அவனதுரதத்தையும் பொடிபொடியாகச்செய்து விட்டான் அதுகண்டுபிரத்தியுமனன் வேறேஒருதேரிலேறிக் கொள்ள அதனையும்பொடியாக்கி விட்டான் அதனால் பிரத்தியுமனனும் கோபதீப்தனாய் வேறேஒருதேறிலேறி வில்லைவளைத்துக் குணத்தொனி பண்ணி அதிதீக்ஷண்யமானபாணங்களைப்பிரயோகஞ்செய்துப்பப்பிரவாகனுடையகைவில்லைக்கண்டித்து அவனதுரதத்தையும் பொடியாக்கி விட்டான் அவன்மறுபடியும் ஒருதேறிலேறினான தனையும் பொடியாக்கி விட்டான் அப்படி நாறுதேர்மட்டும்பொடிபொடியாய் வெட்டுண்டுமக மேருவைப்போல குப்பல்குப்பலாக்குவிய அதுகண்டு கடைசியில் ஒருதேறிலேறி வில்லைக்குணத்தொனிபண்ணி அந்தவில்லினிடமாக ஆளவிருந்த பா

ணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து பிரத்தியுமனனுடைய சரீரம்முழுதும் சதைசதையாகப்பேர்த்தெரிந்து அவன்ரதத்தையுந்தூளாககிவிட்டானப்பொழுது பிரத்தியுமனனுங் கோபங்கொண்டு பாதசாரியாய ஒருக்தாயுதத்தை எடுத்துக்கொண்டு வந்திரண்டு பேரும் எதிர்த்து மகாரோஷத்துடனேபோராடி பின்னையும் சத்தி சூலம் சக்கரம் கட்கம்தோமர முதலான ஆயுதவகைகளினாலும்வெகுநேரம்போராடிகடையில் ஒருவர்கொருவர் சட்டிகளினால்குத்தியும் வெட்டியும் இடித்தும் அடித்தும் தட்டியும் முட்டியும் உதைத்தும் சதைத்தும் இப்படிநானாவிதமாகப் போராடி இரண்டுபேரும் மூர்ச்சையடைந்தார்கள். அதிலேபப்பிரவாகன்மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்து ஒருதேறிலேரிக்கொண்டு உக்கிராகாரனைப் தன்னுடைய வில்லைக் குணத்தொனிபண்ணி அர்ச்சுனனுடைய சேனைகளின் பேரில்கவிந்து பாணங்களைப் பிரயோகித்து சேனைகளையெல்லாம்கால்மாடுதலைமாடாகச்செய்யும்போது அம்சத்துவமகாராஜனுங்கண்டு ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் அர்ச்சுனராஜனைகடபிடத்தில்லுபவித்துப்போயிருக்கலாம் இப்படி பார்த்துக் கொண்டிருக்கிறது தருமமல்லவென்று தன்னுடையதேரைத்தூண்டி பப்பிரவாகன்பேரிலநேகபாணங்களைப் பிரயோகம்பண்ணி அவனதுசாரதியைக்கண்டித்தான் சாரதியிறந்துபோகவே ரதத்தைக்குதிரைகள் இழுத்துக்கொண்டோடிப்போய்விட்டது அதுகண்டு அம்சத்துவசனும் பப்பிரவாகன்சேனைகளபேரிலவிழுந்து ரதங்களைப்பிளந்தும் குடைகளையறுத்தும் கொடிக்கம்பங்களைவெட்டியும் வில்லுகளைக்கண்டித்தும்குதிரைகளைக்கொன்றும் ரதக்காரர்களை அதம்பண்ணியும் ஆனைகளைக்கொன்றும்மாவெட்டியர்களைத் தள்ளியும் ரவுக்கர்களைத் தட்டியும் காலாள்களைக் கண்டதுண்டஞ்செய்தும் கவசங்களைகிழித்தும் கிரீடங்களையுடைத்தும் கத்திகளைநுறுங்கடித்தும்கெதைகளை துண்டித்தும் தோமரங்களைக் கண்டித்துமிப்படிசின்னபின்னப்படுத்தியெங்கே பார்த்தாலும் ரத்தப்பிரவாகமாய்ப்பூதவேதாளகணங்களுக்குத்திருப்திசெய்வித்து ஒருகொடிக்குள் ஒரு அக்ரோணிசேனைகளைத்தும்சப் படுத்தி விட்டான அதிலேபப்பிரவாகனும்வேறேஒருசாரதியை அமர்த்திக்கொண்டு யுத்தசன்னத்தனாய்மகாரோஷத்துடனேவந்து அம்சத்துவசனுடனேஎதிர்த்து அநேகதிவ்வியபாணங்களைப்பிரயோகித்து இவன்கைவில்லையுங்கண்டித்துசாரதியையுந் துண்டித்து குதிரையுமதம் பண்ணித் தேரையும் பத்தலாகப்பிளந்து அர்ச்சுனராஜனுடைய மார்பிலும் ஒன்பது குரூரபாணங்களைத்தைப்பிக்க அதனாலவன் மெத்தவுநொந்து தேரின்பேரில்விழுந்து மூர்ச்சையடைந்தான் அதுகண்டு எவ்வார்ணசுவன் குமாரனாகிய சுவேதன்னென்கிறவன் மகாரோஷத்துடனேவந்து பப்பிரவாகனுடனே எதிர்த்துப்பாணப்பிரயோகம்பண்ணுகையில் அதுகண்டு பப்பிரவாகனுங் கோபங் கொண்டு தன்னுடைய வில்லிலே அதிதீட்சண்யமான பாணங்களைத்தொடுத்துப்பிரயோகித்து சுவேதனுட தேரையும் சாரதியையும் குதிரைகளையும் தும்சப்பண்ணி அவன்கைவில்லையுங்கண்டித்து பின்னையும் ஒரு திவ்வியபாணத்தினால் சுவேதனுடைய சிரசையுங்கண்டித்து [illegible]டான் அதுகண்டு எவ்வார்ணசுவனும் தன் குமாரனைக் கொன்று

விட்டானேயென்று ஆக்கிரகித்து தன்னுடையரதத்தைத்தூண்டி சிறு
நுபாணங்களைப் பப்பிரவாகன்பேரில் பிரயோகம் பண்ணினானதுகளை
யெல்லாம் பப்பிரவாகன் கண்டித்து ரோஷத்வேஷனாய்த் தன்னுடைய
வில்லிலே பயங்கரமான பாணங்களைச் சந்தித்து எவ்வற்றைசுவனை வி
யர்த்தனுக்கி நோகப்பண்ணி அவனை மூர்ச்சையாய்விழத்தள்ளி அப்பா
ல் நீலத்துவசனுடனேபோராடி அவனையும்மூர்ச்சையாய் விழத்தள்ளி
ப்பின்னையும் கிருதவர்மன் சாத்தகி அனிருத்திரன் மேகவர்ணன் முத
லானதுணைகளையெல்லாம் ரத்தமயமாக்கி மூர்ச்சையாய் விழத்தள்ளிப்
பின்னையுங்காலாந்தகனைப்போலச் சிதறிவிழுந்து அர்ச்சுனனுடைய சே
னைகளையெல்லாம்பாய்க்கிடையாய் விழத்தள்ளி அர்ச்சுனன்பேரிலும்மன
திர்த்துவருகையிலதுதெரிந்து அர்ச்சுனனும் சிந்தாக்கிராந்தனாய்விசார
ப்பட்டு ஒகுமாரகா விஸ்வகேதா இந்த பப்பிரவாகனுடைய சவுரியபரா
க்கிரமத்தைப்பார்த்தாயோ நாமிரண்டுபேர்மாத்திரம்தப்பியிருக்கிறோ
ம் மற்றவாகளெல்லாம் விழுந்து விட்டார்கள் நாமும் மடிந்து போகிற
வேளைவந்துசம்பவித்தது தருமபுத்திரர்செய்கிறயாகமும் நிறைவேறா
மல் விக்கினமாய்ப் போகின்றதே இதுவரையில்சமுத்திரமெல்லாந் தா
ண்டி இப்போது சிறியகால்வாயி னிடத்தில் முழுகலாச்சுதே இதற்கெ
ன்னசெய்யலாம் ஒகுமாரகா நீ தருமபுத்திரருக்குப் பிரிய குமாரனாகை
யால் நீ சண்டைபண்ண வேண்டாம் நீ அஸ்தின புரத்திற்குப்போய் த
ருமராஜானையும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியையுஞ் சேவித்துக்கொண்டிரு
நான் இவனுடனேபோராடி இவனைச்சயித்து குதிரையைக் கொண்டு வ
ந்து சேருகிறேன் இல்லாவிட்டால் ரணக்களத்தில் மடிந்தாகிலும் வீர
சொற்கத்தையடைகிறேன் இதல்லாமல் தருமபுத்திரருடைய பாக்கிய
ம் எப்படியிருக்கின்றதோ அவருக்குஅதிர்ஷ்டமில்லைபோலத் தோற்று
கிறது ஓ விஸ்வகேதா நான்என்னசெய்வேனென்று அர்ச்சுனன்விசார
மாகச்சொல்ல அதுகேட்டுவிஸ்வகேதுவும் அர்ச்சுனனைப்பார்த்து ஓ ஐ
யா நீர் இப்படி யோசிக்கவேண்டாம் நானிருக்கும்போது உமக்கென்
னகுறையிருக்கின்றது நீரிப்பொழுது எனக்குச் செலவு கொடுத்தனு
ப்பும் நான்போய்ஒருநிமிஷத்திற்குள் அந்ததுன்மார்க்கனைக் கண்டித்து
வருகிறேன்பாருமென்றுசொல்லி விஸ்வகேதுவும் அர்ச்சுனனிடத்திற்
செலவுபெற்றுக்கொண்டு யுத்தசன்னத்தனாய்த் தேறின்பேரிலேறி வில்
லைக் குணத்தொனிபண்ணி பப்பிரவாகனுடனே எதிர்த்து ரோஷத்து
டனேதிவ்வியபாணங்களினாலவனை நோகவெய்தான அதற்கு அவன் எ
வ்வளவும் பயப்படாமல் கோபதீப்தனாய் ஆக்கிரகித்து தன்னுடைய
தேரைச் சமீபமாகத்தூண்டி தன்னுடைய வில்லிலே கோடையிடிக்குச்
சமானமான பாணங்களைப் பிரயோகித்து விஸ்வகேதுவினுடைய சரீர
முழுதும் ரத்தமயமாக்கி சாரதியையும குதிரையும் குதிரைகளையும்
நோகப்பண்ணி அவன்கை வில்லையுஞ்சண்டித்து கியாவென்று சிங்காரகு
ம்பண்ணினான் அதற்குபின் வாங்காமல் விஸ்வகேதுவும் வேறேஒரு வி
ல்லை எடுத்துக் குணத்தொனி பண்ணி கோபத்துடனேதன்னுடையவி
ல்லினிடமாக விஷங்களைக்கக்குகின்ற அதிதீக்ஷண்ணியமான பாணங்க
ளையநேகமாகக் கொடுத்துப் பப்பிரவாகனுடைய பதாதிகேசு பரியந்த

ஞ்சல்லடைக்கண்களாகத்துளைத்து ரத்தமயமாக்கிருடையுமறுத்து சா
ரதியையுங்குதிரைகளையுங்கொன்று ரதத்தையுஞ் சக்கைசக்கையாய்ப்
பேர்த்தெறிந்து ஆக்கிரவியாக்கிரமஙிக்குரோதனைப் காலாக்கினிருத்திர
னைப்போல ஆக்கிரகித்துசிங்கநாதம் பண்ணினன் அதனால் பப்பிரவாக
ன் மெத்தவும்நொந்து க்ஷத்ரியத்தைவிடாமல் வேறே ஒருதேறிலேறிஇ
ரண்டுகண்களிலும்நெருப்புப்பொறிகள்பறக்கத்தக்கதாக ஆக்ருஷத்து
தன்னுடையவில்லிலே வாயவாஸ்திரத்தை எடுத்துத்தொடுத்துப் பிர
யோகம்பண்ணினனதுவும், அதிவேகமாகவந்துவிஸ்வகேதுவினுடைய
ரதத்தைக் குப்பென்று ஆகாயத்திற்கிளப்பி விட்டது அப்போது தேவ
ர்களெல்லாம் விஸ்வகேதுசெத்தானென்று சொல்லிக்கொண்டார்களப்
பொழுது விஸ்வகேதுவினுடைய ரதமும்ஆகாயத்தில் சக்கரம்போலச்
சுழன்றுபூமியில்விழுந்து சாரதிகுதிரைகளுடனே பொடியாகிப் போய்
விட்டது அதுதெறிந்து விஸ்வகேதவும் தரையில் நேர்ப்பாகக்குதித்து
மகாஉக்கிராகாரனாய் வேறேஒருதேறிலேறி வில்லைஎடுத்து குணத்தொ
னிபண்ணி அந்த வில்லினிடமாக ஒருசுபூல் பாணத்தைத் தொடுத்துப்
பிரயோகம்பண்ணினன் அதுவும்காலகூடவிஷம்போல அக்கினி சுவா
லையை வீசிக்கொண்டுவந்துபப்பிரவாகனுடையதேரைஆகாயத்திற்கிள
ப்பிவிட்டது அந்தரதமும்சூரியபகவானைக்கண்டு உம்முடைய பேரனா
கிய விஸ்வகேதுவும் பப்பிரவாகன் கையினு லிறந்து போகிறு னென்று
யோகக்ஷேமங்களைச் சொல்லப்போனதும்போல சூரிய மண்டலத்தைச்
சேரப்போய் அந்தஅனலினுல் பக்கென்றுஎறித்து சாம்பலாய்விழுந்து
விட்டது பப்பிரவாகனும் பூமியில்விழுந்து ரத்தங்களைகுபீல்குபீ லென்
று கக்கிக்கொண்டு மூர்ச்சையையடைந்து சற்றுநேரத்தில் மீனாக்ஷியம்
மையாருடையஆசீர்வாதத்தினுல்தப்பிப்பிழைத்து மூர்ச்சைதெளிந்தெ
ழுந்திருந்து கோபதீப்தனாய் வேறேஒருதேறிலேறிவில்லைக்குணத்தொ
னிபண்ணி அந்தவில்லினிடமாக திவ்வியபாணங்களைத் தொடுத்துப் பி
ரயோகம்பண்ணினன் (அதுகளும்கிருஷ்ணசர்ப்பம்போலவும் காலாக்
கினியைப்போலவும சுவாலையைவீசிக்கொண்டுவந்து விஸ்வகேதுவினு
டைய மார்பில்தைத்து முதுகிலுருவிப்போய்விட்டது) இப்படிப்பப்பிர
வாகனும் விஸ்வகேதுவும ரோஷத்துவேஷத்துடனே (ஸ்ரீராமமூர்த்தி
யும்இராவணனும்)எதிர்த்தாற்போலவும குமாரசுவாமியும் தாருகாசூர
னும் எதிர்த்தாற்போலவும் தேவேந்திரனும்விருத்திராசூரனும் எதிர்த்
தாற்போலவும் எதிர்த்து ஒருவர்க்கொருவர் கெலிக்கவேண்டுமென்கிற
அபேட்சையினுல் பின்வாங்காமல்ஐந்துநாள்ராத்திரியும்பகலும்போரா
டினர்கள் அதில்பப்பிரவாகனும் அஞ்சிவிஸ்வகேதுவினுடையரதத்தை
சாரதிகுதிரைகளுடனே பொடிப்பொடியாக்கி கவசத்தையும் பத்தலா
க்கிழித்து சரீரமுழுதும் சல்லடைக்கண்களாகத் துளைத்துவிட்டு விஸ்
வகேதுவைப்பார்த்து ஓ அண்ணாவிஸ்வகேதாநீமகாவீராதிவீரனையா
ல்என்னுடனே ஐந்துநாள்மட்டுக்கும் போராடினாய் இப்போதுநான் உ
ன்னைக்கொல்லப்போகிறேன் நீ உன்னுடைய இஷ்டதெய்வமானஸ்ரீகிருஷ்ண
பகவானைத்தியானம்பண்ணிக் கொண்டு உனதகப்பனாகிய கர்ணன்

மகாராசனேஎன்தகப்பனாகிய அர்ச்சுனன் கபடமாய்ரதத்தை எடுக்கட்டு
மென்று சொல்லும்பொழுதே அதைக்கேளாமல் கொன்றுவிட்டான்
அப்படிநான் அனியாயம் பண்ணுகிறதில்லே இன்னமும் உனக்குவேண்
டிய சஸ்திரஅஸ்திரங்களேக்கொடுக்கிறேன் அதுகளேநீவாங்கிக்கொண்டு
சண்டைபண்ணென்றுசொல்ல அதுகேட்டுவிஸ்வகேதுவும் ஆக்கிரகித்
து தோமரம் கத்தி சூலம்கெதை அதுகளேறிவ்றிவ்வென்றுஎடுத்துப்பி
ரயோகம்பண்ணினன் அதுகளேயெல்லாம் பப்பிரவாகன் கண்டித்துவி
ட்டு மகாகோபத்துடனே தன்னுடையவில்லிலே ரவுத்திராஸ்திரத்தை
யெடுத்துத்தொடுத்து அதிதேவதாபிரதிதேவதா மந்திரங்களுடனே அ
பிமந்திரித்துப் பிரயோகம்பண்ணினன் அதுவும் நெருப்புப்பொறிகளே
க்கக்கிக்கொண்டு பகபகவென்று எரிந்துக்கொண்டு தேவர்கள்ளெல்லாம்
பயப்பட்டுப்பார்த்துக்கொண்டிருக்க அதிவேகமாகவந்து கிரீட மகரகு
ண்டலங்களுடனே விளங்குகின்ற விஸ்வகேதுவினுடையசிரசைக்கண்
டித்துப்போய்விட்டது அப்போதந்தச்சிரசானது ஆகாசமார்க்கத்திலெ
ழும்பி-ஸ்ரீஹரீ-ஹரீ-கோவிந்தா கிருஷ்ணு கேசுவா வரதா பக்தவச்சலா
பரமபுருஷாவென்று முறையிட்டுகொண்டு அர்ச்சுனனும் சாவுக்குச்ச
ரியான மூர்ச்சையடைந்து மகாவிசாரத்துடனே அந்தசிரசைப்பார்த்து
ஆ,குமாரகாவீராதிவீரா ஆ,சவுரியபிரதாபா ஆ,அகண்டிதவீரபராக்கிர
மா ஆ,தைரியபுருஷா ஆ,புத்திரசிகாமணிநீஎங்கேஒளித்துப்போனாய் எ
ன்னேஒருவனாக அனாதையைப்போல் விட்டுப்போனாயோநான் உன்னேப்
பிரிந்திருந்து எப்படி நிர்வகிப்பேன் நான் எந்தமுகங்கொண்டுஅஸ்தின
புரத்திற்குப்போவேன் தருமபுத்திரரானவர் விஸ்வகேது எங்கேயென்
றுகேட்டால் நான் என்னசொல்லுவேன் வீமசேனன் கேட்டால் நான்
என்னசொல்லுவேன் என்தாயாகிய குந்திதேவியாரும் தன்குமாரனை
கர்னன் இறந்துபோனதற்கு விசாரமடைந்து தன் குமாரனுக்குக்கு
மாரனான விஸ்வகேது இருக்கிறானென்று அந்ததுக்கத்தைவிட்டு கர்ன
னேப்போல உன்னேப்பார்த்துக் கொண்டிருந்தாளே அவளுக்கு நான்
என்னசொல்லுவேன் ஆ, வீராதிவீரா வீரப்பிரதாபா அஸ்வமேதக்குதி
ரையினிமித்தம் எவ்வற்றுசுவனுடனே போராடிகெலித்து குதிரையை
க்கொண்டுவந்துஒப்பித்து என்பிறகே இத்தனேநாள்வரைக்கும் குதிரை
யைக்காப்பாற்றிக்கொண்டுவந்த மகானுபாவனாகிய நீரணக்களத்தில் ச
த்துருவினுடைய கையினால் வெட்டுண்டுவிழுந்தாயோ இனிநான்என்ன
வென்று நிர்வாகம்பண்ணப்போகிறேன் ஆ,புத்திராவென்று அர்ச்சுன
னும் வெகுவாய்பிரலாபித்து அழுகிறபோது அதுகண்டு பப்பிரவாகன்
சிரித்து தன்னுடைய ரதத்தைக் சமீபமாகக்கொண்டுவந்து நிறுத்திஅர்
ச்சுனனேப்பார்த்துஐயாகுந்தி நந்தனா இப்பொழுது வைசியன்பிள்ளேப்ப
ண்ணினசவுரியத்தைப் பார்த்தீர்களோ நானின்னமும் ராசவர்க்கங்களு

டைய கிரீடங்களையுடைத்து அந்தரத்னங்களை யெல்லாம் விஸ்வகேதுவினுடைய சிரசில்போட்டுக்கொண்டு விக்கிரயம்பண்ணுகிற வினிதேவரீர் ஒருத்தருமிருக்கிறீர் எங்கள்தாயார் சித்திராங்கனதையைவேசியென்றும தாசியென்றும் தூஷித்தபடியினால் அந்ததோஷமே உமக்குஇப்படிப்பட்ட ஆபத்துவந்து சம்பவித்தது இனியேன்! யோசனை பண்ணுகிறீர் தருமபுத்திரர்செய்கிறயாகமும் நிறைவேறப்போகுதோ இன்னமும் நீர் குதிரையைவிடுவித்துக்கொண்டுபோகஇருக்கிறீரோவென்று பரிகாசமாகச்சொல்ல அந்தச் சொல்லெல்லாம்அர்ச்சுனனுடைய செவியினிடமாக நாராசங்காய்ச்சிவிட்டதுபோல் நுழைந்து மகாகோபதீப்தனாய் விஸ்வகேதுவினுடைய தலையை ரதத்தின்பேரில் வைத்துவிட்டுக்காண்டீபத்தைக் குணத்தொனிபண்ணி உக்கிராகாரனாய்ப் பப்பிரவாகனைப்பார்த்து அடாப்பயலே துன்மார்க்கா என்னடாதலைகீழாய் விழுகிறாய் நீகையிலாகாத சிலரைக்கொன்றோமென்று கர்வித்திருக்கிறாய் அந்த கர்வத்தை யிப்போது வெளிப்படுத்தி வைக்கிறேன் சற்றுநேரத்தில்பாரடாவென்று தன்னுடைய காண்டீபத்தி லனேக திவ்வியாஸ்திரங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து பப்பிரவாகனுடைய ரதத்தைக்கண்ணுக்குத் தெரியவொட்டாமல்மறைத்து அவனதுசேனைகளையெல்லாங் கண்டதுண்டங்களாக்கி எங்கேபார்த்தாலும் பிணமலைகளாகக் குவித்தானதுகண்டு பப்பிரவாகனும் ஆக்கிரவியாக்கிரமநிக்குரோதனாய்த்தன்னுடைய வில்லைக்குணத்தொனிபண்ணி அந்தவில்லினிடமாக அர்த்தசந்திர பாணங்களையும் அக்கினியாஸ்திரங்களையும்வராளமாகத்தொடுத்து பிரயோகித்து அர்ச்சுனன்விட்ட பாணங்களை யெல்லாம் நடுபாதியில்கண்டித்துவிட்டு அவனதுசாரதி குதிரைகளையும் ரத்தமயமாக்கிஅனுமாரையும்கெர்வமடக்கி அர்ச்சுனனையும் கால்கைகள் ஆடவொட்டாமல் மெத்தவும்நோகப்பண்ணி அவனதுசரீரமுழுதுஞ் சல்லடைக்கண்களாகத்துளைத்துஉதிரமயமாக்கி சிங்கநாதம்பண்ணினனப்பொழுதுஅர்ச்சுனனும்ஆயாசமடைந்து கங்காதேவியினுடைய சாபம்சமீபித்திருக்கிறபடியால் மிகுந்த பயத்துடனே காண்டீபத்தைக் கைசோரவிட்டு முன்பின்தோற்றாமல் சும்மாயிருந்துநான் முப்பத்துமுக்கோடி தேவர்களையுங்கெலித்தேனப்போதித்தனை ஆயாசமும் பயமுமில்லையே இப்போது இவன்கையிலேலண்டியாய் அஞ்தியைப்போலசிக்கிக்கொண்டு மடியவுங்காலம்நேரிட்டதே இதற்குஎன்னசெய்கிறதென்றுநினைத்து மறுபடியும்மனதைரியம்விடாமல் ரோஷத்துடனே காண்டீபத்தை எடுத்துக்குணத்தொனிபண்ணிஎப்படியும்என் பகையாளியைக்கொல்லுகிறேனென்றுஅந்த காண்டீபத்தினிடமாக ஆக்கினி யாஸ்திரத்தைத் தொடுத்து அதற்குவாய்வுமந்திரத்தைச்செபித்துப் பிரயோகம்பண்ணினன் அதுவும்விருதாவாய் பப்பிரவாகனுடைய பாணத்தினால் வெட்டுண்டு போ

னது பின்னையும் ஒரு அந்தகாரமான அஸ்திரத்தையெடுத்துத்தொடுத்து அதற்குச் சூரியமந்திரத்தை யுச்சரித்துப் பிரயோகம்பண்ணினான் அதுவும் வியர்த்தமாக அங்ஙனே வெட்டுண்டுபோய்விட்டது. இப்படி அர்ச்சுனனும் அநேகந்திவ்வியாஸ்திரங்களை யெடுத்துத்தொடுத்துவிருதாவாய் அஸ்திரபாணங்களையெல்லாம் போக்கடித்து, வெறிகொண்டவன்போலக்கங்காதேவிசாபத்தினால், மெய்மறந்துமுன்பின்தோற்றாமல் பிரமைகொண்டு ரதத்தின்பேரில் காண்டீபத்தை நழுவவிட்டுச் சும்மாயிருந்தான் அப்போது ரத்தமழைபொழிந்தது, எலும்புகள் விழுந்தது ஆந்தைகள், கூ கா வென்று கூப்பிட்டது, சுழல்காற்றடித்தது சூரியனும் மழுங்கினதுபோலத் தோன்றியது நக்ஷத்திரங்களுதிர்ந்தது இப்படி அநேகமான அவசகுணங்களையெல்லாங்கண்டு அர்ச்சுனன் மெத்தவுந் திகிலடைந்து, கிருஷ்ணதேவரைநினைத்து துக்கப்பட்டான் அது தெரிந்துபப்பிரவாகனும் அர்ச்சுனனைப்பார்த்து ஓஐயா இந்திரபுத்திரா நீரென் சும்மாவிருக்கிறீர் பாணந்தொடும் உம்முடையவல்லபத்தையறிகிறேன் நீர் என்தாயாரை தூஷித்தபடியால் உம்முடையபேரிலெனக்கு தயவுண்டாகவில்லை ஆதலால் நான் இப்போது உம்மைக்கண்டிக்கிறேன் பாருமென்றுசொல்லி உக்கிரத்துடனே தன்னுடையவில்லைக் குணத்தொனிபண்ணி பாணங்களைத்தொடுத்துப் பிரயோகித்து அர்ச்சுனனுடைய சாரதியையும் இரண்டுதுண்டமாக்கி எட்டுகுதிரைகளையுங் கண்டித்து அனுமாருடையமார்பையும்பிளந்து ரதத்தையுஞ் சக்கை சக்கையாகப்பேர்த்தெறிந்து பிற்பாடு தன்னுடைய தூணிரதத்தில் கைவிட்டெடுக்க சுவாலாளென்கிற அஸ்திரங்கையிலகப்பட்டது அதையெடுத்து கோதண்டத்தினிடமாகத் தொடுத்து அதிதேவதா, பிரத்தேவதா மந்திரங்களுடனே அபிமந்திரித்து அர்ச்சுனனுடைய சிரசுக்குச்சரியாய் லட்சியம்வைத்துப் பிரயோகம்பண்ணினா னதுவும் வில்லிலிருந்து விடுபட்டு அதிவேகமாய் நெருப்புப்பொறிகளைக்கக்கிக்கொண்டுபுகைகளுடனும் ஜட ஜடவென்கிற தொனியுடனும் எரிந்துகொண்டுகாலாக்கினியைப்போலவும் காளகூட விஷத்தைப்போலவும் அண்டகடாகங்களெல்லாம் அதிரத்தக்கதாக வரும்பொழுது தேவர்களெல்லாம்நடுக்கமடைந்து ஓ கிருஷ்ணா, துவாரகாபுரிவாசா, தேவகிநந்தனா, உன்பக்தனான அர்ச்சுனனைக்காப்பாற்றி ரட்சியுமென்று முறையிட்டார்கள் தேவேந்திரனும் துக்காக்கிரந்தனாய் அர்ச்சுனனைப்பார்த்து ஆ, காண்டீபபாணி ஆ கிரீடி, ஆதனஞ்சயா, ஆ புத்திராவென்று வாய்விட்டலறினான் அப்பொழுது பப்பிரவாகனுடைய சேனைகளெல்லாஞ் சிங்கநாதங்கள் அட்டகாசங்கள் செய்தார்கள் இப்படிப்பட்ட உக்கிரத்துடனே மகா உற்பாதமாய் அந்த அஸ்திரமானது வந்து கிரீட மகர குண்டலங்களுடனே கூடித் சந்திரபிம்பம்போலப் பிரகாசிக்கின்ற அர்சுன ராஜனுடைய சிரசைக்கண்டித்துப் போய்விட்டது அப்போது அந்தசிரசானது ஆகா

சத்தில் குப்பென்று எழும்பி ஹரிஹரிகிருஷ்ணா கோபிகாரமணா கோவிந்தசிசுபாலமர்த்தனா தேவேந்திரவந்தியா கம்ஸசம்மாரா காளிங்கநிர்த்தனா ருக்மணிமனோகரா சுவாமியென்று முறையிட்டுக்கொண்டு பூமியில் வந்துவிழுந்தது அதுகண்டு பப்பிரவாகனும் மகாசந்தோஷத் துடனே சரீரம்புளகிக்கத்தக்கதாகவெற்றிசங்கத்தைவாயினிடமாகவைத்துப்பம்பம்மென்று பூரித்துமனோஉச்சாகத்துடனே செயபேரிகையறைவித்துச் சகலசேனைகளும்சூழ்ந்துவரும்படி பிரயாணப் பட்டுப் பதினெட்டுவகைமேளவாத்தியங்களு முழங்கத் தக்கதாக ரதாரூடனாய் சகலவேடிக்கைகளுடனே தன்னுடைய மணிபுரமென்னும் பட்டணத்திற்கு வந்து சேர்ந்தான்சேனைகளெல்லோரும்சந்தோஷகரமாய் அவர்களுடைய அரண்மனைக்குப்போய் சேர்ந்தார்கள் அதற்கு முன்னமே சித்திராங்கதையும் அவள்சக்களத்தியாகியஉலுவசியும் மனமகிழ்ச்சி யடைந்தவர்களாய் நமதுபுத்திரனாகியபப்பிரவாகன் தகப்பனாராகிய அர்ச்சுனனிடத்துக்குப்போயிருக்கிறானே இனி அவனைச்சந்தோஷமாயழைத்துக்கொண்டுவருவான் நாம் அவனைக்கூடிச்சகலசவுக்கியங்களையும் அனுப விக்கலாமென்றுநினைத்து இருவர்களும்மகாஅபேக்ஷையாய் திவ்வியவஸ்திராபரணங்களையலங்கரித்துகந்தபுஷ்பபரிமளாதிகளை அணிந்துக்கொண்டு அர்ச்சுன ராஜனுடைய வரவுபார்த்துக் கொண்டிருக்கையில் இடிவிழுந்தது போல் அர்ச்சுன னிறந்தானென்று கேட்டவளவில் இரண்டுபேரும்மூர்ச்சித்து விழுந்துபூமியிற்புரண்டழுது சகல ஆபரணங்களையுங்கழட்டியெறிந்து புஷ்பமாலைகளையெல்லாம் வாங்கி எறிந்து தலைமயிரைவிரித்துத் துக்கசாகரத்தில் முழுகினவர்களாய் கண்ணீராறாய்ப்பெருகியோடக் கோவென்று அழுகிறபோது அந்தப்புரத்துஸ்திரீகளெல்லாருங்கூடவந்து இழவுகொண்டாடினார்கள்.

அதுகேட்டுப் பப்பிரவாகனுந் தன்னுடைய அரண்மனையைவிட்டு அந்தப்புரத்திற்குப்போய்த் தாயாரைக்கண்டு நமஸ்காரம்பண்ணி ஓ அம்மா பாக்கியவதி நீ அழுகிறகாரியமென்ன நான்ஜெயத்துடனேவந்தபொழுது உனக்கென்னகுறை யிருக்கின்றது நீ சந்தோஷமாயிருக்கவேண்டாமோ தாயேயென்றுசொல்ல அதுகேட்டுச் சித்திராங்கதையும் கண்ணீர் ஆறாய்ப்பெருகும்படியாக உக்கிரத்துடனே புத்திரனைப்பார்த்து அடாபாதகா நீஒருசந்தோஷமாய் வந்தாயோ தகப்பனைக்கொன்றபிதாத்துரோகி என்னவேலைபண்ணாய் தகப்பனைக்கொல்லவோ வில்வித்தைகற்றுக்கொண்டாய் ஒருவனாந்திரத்திலுள்ள மூங்கிற்புதருகள்தனக்குத்தானே ஒன்றோடொன்று இழைத்து நீறாய்ப்போகிறது போல உன்தகப்பனையுங்கொன்று நீயும் நீறாகப்போகச்செய்தாய் ஆ துரோகி நீஇப்போது என்னை என்புருஷனிடத்தில் கொண்டுபோய்விட்டால் நானும் அக்கினிப்பிரவேசம்பண்ணி அவருடனேசேர்ந்துபோகிறேனென்

றுசொன்னாள் அதுகேட்டுநாககன்னியாகியஉலுவசியுஞ்சித்திராங்கதை
யைப்பார்த்து ஓ அக்காபாக்கியவதி நான்இரண்டுநாளைக்குமுன்னேஒரு
கனவுகண்டேன் அஃதென்னவென்றால்நான்சிங்கார வனத்திற்குப் போ
ய் புஷ்பமாலையைக்கழுத்திற்போட்டுக்கொண்டு உல்லாசமாகத்திரிகிற
போது அந்தபுஷ்பமாலை அறுந்துவிழுந்ததுபோலக்கனவுகண்டு திடுக்
கென்றெழுந்திருந்து பார்க்கையில் எனதுமாங்கல்யசூஸ்திரமறுந்து வி
ழுந்தது அப்போதேஇதுவென்னவிபரீதார்த்தமென்றுநினைத்திருந்தே
ன் அதுமெய்யாச்சுது இனிமேல்நாமக்கினிப்பிரவேசம் பண்ணுகிறதே
நிச்சயமென்றுசொல்லிப் பப்பிரவாகனைப்பார்த்து அடா துன்மார்க்கா
பிதாவைக்கொல்லப்பிறந்த துரோகி புருஷனில்லாதபெண்சாதிக்கு வ
ஸ்திராபரணங்கள் என்னத்திற்குநீபிறந்துதாய்மாரை அமங்கலிக ளாக
ச்செய்தாய் அதைப் பேசுகிறதினால் பிரயோசன மென்ன எங்களை எங்க
ள்புருஷனிடத்தில் கொண்டுபோய்விட்டுவிடென்றுச்சொல்லி உலுவசி
யுஞ்சித்திராங்கதையும் வெகுதுக்கத்துடனே அழுதுக்கொண்டுகண்ணீ
ராறுய்ப்பெருகத் தலைமயிரை விரித்து மார்பிலறைந்துக்கொண்டுமணி
புரத்தைவிட்டு ரணக்களத்திற்குப்போனார்கள்.

அப்போது பப்பிரவாகனும்பயங்காரத்துடனே துக்காக்கிராந்தனா
ய்க் கண்ணீராறுய்ப்பெருக அழுதுகொண்டு நான் இப்படிவருமென்று
கொஞ்சமாகிலும் எண்ணிப்பாராமல் பிதாவைக் கொன்று விட்டேனே
இதற்குஎன்னசெய்கிறதென்று பிரலாபித்துக்கொண்டு ரணக்களத்திற்
குப்போய்ச் சேர்ந்தான் அதற்கு முன்னமே சூரிய பகவானும் புத்தி
ரனாகிய அர்ச்சுனன் இறந்துபோனதைக்குறித்து ஸ்நானம் பண்ணுகிற
தற்குப் போனதுபோல மேற்குத்திசையில் அஸ்தமானமாகினார் அப்
பொழுது அஞ்ஞானிகளுடைய இருதயம்போலககாடாந்தகாரமானஇ
ருளானது எங்குமூடிக்கொண்டது அந்தஇருட்டுவேளையில் சித்திராங்
கதையும உலுவசியும் அழுதுக்கொண்டு ரணக்களத்திற்குவந்து அர்ச்சு
னனுடையசரீரத்தையுஞ்சிரசையுங்காணாமல்தேடிவெகுநேரம்அலைச்ச
ல்பட்டுபின்புதலையைக்கண்டு கையிலெடுத்துக்கொண்டு சரீரத்தைப்
பார்த்து மேலேவிழுந்துபுரண்டு மூர்ச்சையாய்விழுந்துதிரும்பவும் எ
ழுந்திருந்து மார்புடனே அணைத்துக் கட்டிப்புரண்டு மூட்டிக்கொண்டு
பின்னையும் அந்தசிரசைமார்புடனேசேர்த்து முகத்தைத்துடைத்து ஆ
பிராணநாயகா ஆபுண்யபுருஷா ஆபிராணவல்லபா நீர்எங்கேஒளித்தீர்
ஆ அகண்டிதவீரபராக்கிரமா உன்சவுரியமென்ன உன்பிரதாபமென்ன
உன்வில்வித்தையென்ன இதுகளையெல்லாம்எங்கேஅடக்கி விட்டீர் கா
லகேயநிவாதகவசாளென்கிற ஒன்பது கோடி ராட்சதர்களையும் இரணி
யபுரவாசிகளான அறுபத்தாறுகோடிராட்சதர்களையும் ஜெயித்தஅஸ்தி
ரங்களெல்லாம் எங்கேஒளித்துப்போய்விட்டது வீஷ்மா துரோணா

கிருபர் அசுவத்தாமர் கர்னன் சல்லியன் இப்படிப்பட்ட பிரமுகாளு
டனே எதிர்த்துப்போராடினை வில்வித்தையை எங்கேமறந்துபோய் வி
ட்டீர் என்னகாரியம்பண்ணினீர் ஒருபாலன்கையில் ஒண்டியாய் அநு
நிலையைப்போலச் சிக்கிக்கொண்டுபுழுதில் விழுந்து புரளுகிறீர் இது உம
க்குத்தருமமோ எங்களாசையைதீர்க்கவொண்ணுதோநாங்கள்நீர்வருகி
றீரென்றுவிருப்பங்கொண்டு சந்தோஷகரமாயிருந்தோமே அப்படியிரு
க்க எங்களையொண்டியாகவிட்டுநீர்மாத்திரந்தனித்துப்போகலாமோ ஆக
ல்யாணகுணசம்பன்னு அதனஞ்செயா ஆகிரீட்டிநீர்பத்துதிக்கிலுஞ் செ
யம்பெற்ற திவ்வியபுருஷராச்சுதே அப்படிப்பட்ட நீர்எங்களை இப்ப
டி அழுதுக்கொண்டிருக்கவைத்துஒண்டியாயப் போகலாமோவென்று
புலம்பி பின்னையும்விஸ்வகேதுவினுடையசிரசைக்கண்டு- ஆகுமாரகாம
டிந்தாயோவென்று வெகுவாய்ப்பிரலாபித்து தங்கள்மனதைத் தாங்க
ளே தேற்றிக்கொண்டு யினி ஆலசியமென்ன அக்கினிப்பிரவேசம் பண்
ணுகிறதேகாரியமென்றுதுணிந்துபப்பிரவாகனைப்பார்த்து அடாபிதா
த்துரோகி உன்மனமானது பெற்றதகப்பனைக்கொல்லுகிறதற்கு எப்ப
டித்துணிந்தது உன்முகத்தைப்பார்க்கலாமோவென்று தூஷிக்க அவர்
களைப்பார்த்துபப்பிரவாகனும் ஒ அம்மாநான் தகப்பனென்று தெரிந்து
அஸ்வமேதக்குதிரையுங்காணிக்கைககப்பங்களுங்கொண்டுபோய்வைத்
து பாததரிசனம்பண்ணி அடைக்கலம் ஐயா என்னை காப்பாற்றி இரட்
சியுமென்று வெகுவாய் வேண்டிக்கொண்டேன் அதற்கு என்னை உதை
த்துத்தள்ளிவிட்டார் அதுகண்டுபின்னையும்வெகுநேரம்வேண்டிக் கொ
ண்டேன் அதையும்பாராமல் அங்கிருந்தராஜாக்களெல்லாஞ் சொன்ன
சொல்லையுங்கேளாமல் ஆக்ருஷமாய் என்னைப்பார்த்து அடா பயலே நீ
எனக்குப்பிறந்தவனல்ல உன்னை உன் தாயார் வைசியனுக்குப் பெற்று
ளென்று விபரீதமாகச் சொன்னார் அதனால் எனக்கு கோபம் பிறந்து ச
ண்டைசெய்தேனென்று அழுதுகொண்டுசொல்ல அதுகேட்டுஉலூசி
யும்சித்திராங்கதையும் விசாரப்பட்டு குமாரனைப்பார்த்து அப்பா உனக்
கு இன்னம் அழுகையா நல்லதுஎங்களுக்கு அக்கினிவளர்த்திவையென்
று சொன்னார்கள அப்படியேபப்பிரவாகனும் மந்திரிகளுக்குஉத்திரவு ப
ண்ணி அகிறுகட்டைகளும்சந்தனக்கட்டைகளும் வண்டிகளில் அழைப்
பித்து நூறடிவிலாசம்பரப்பி கர்ப்பூரக்கட்டைகளும் சாம்பிராணிக்கட்
டைகளும் பொதிபொதியாகப்போட்டு நெய்க் குடங்களும் எண்ணெய்
க்குடங்களும் விஸ்தாரமாக அழைப்பித்து அக்கினியை மூட்டி பிர்மா
ண்டபரியந்தங் கொழுந்துவிட்டு திகுதிகுவென்றுபுகைந்து எரியும்போ
து அதுகண்டுபப்பிரவாகனும் ஆலோசனைசெய்துதகப்பனையுந்தாய்மா
ரையுங்கொன்றமகாபாதகனுகிய நான்இருக்கலாகாது ஆதலால் நானே
முதன்மையாகவிழுகிறேனென்று அந்தஅக்கினியை மூன்றுதரம்பிரத

க்ஷணம்பண்ணி உயரவுமெம்பி குதிக்கப்போகின்ற சமயத்தில் உலுவசி யும்விசாரப்பட்டு சித்திராங்கதையைப்பார்த்து அடியக்கா பாக்கியவதி நாம்புருஷனையுமிழந்து கடைசியில்பிள்ளையையுமிழந்துபோகலாச்சுதே ஆகையாலநமதுபுருஷனைஎப்படியாகிலும் பிழைக்கப்பண்ணிக் கொள் ளுவோமென்றுசொல்லிபப்பிரவாகனைப்பார்த்துநீ அக்கினியில்விழ வேண்டாம் உன்தகப்பனைநான்பிழைக்கப்பண்ணுகிறேனென்றுச் சொல்ல அதுகேட்டுபப்பிரவாகனும் மாதாவினுடையசொல்லைக் கடவாமல் வந்துஉலுவசியைப்பார்த்து தாயேஎன்னையேன் அக்கினிப்பிரவேசமாகவேண்டாமென்று சொன்னாயென்றுகேட்டஉலுவசியும் புத்திரனைப் பார்த்து ஓகுமாரகாநாங்கள்புருஷனையிழந்ததுமல்லாமல் உன்னையுமிழந்து எப்படிஜிவிக்கப்போகிறோம் நீ ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம் நான்என்னுடையதகப்பனுக்குச் சொல்லியனுப்பி மிருதசஞ்சீவி ரத்தின மும் அமிர்தகலசமும்அழைப்பித்துஉன தகப்பனைப்பிழைக்கப்பண்ணு கிறேன்நீசந்தேகிக்கவேண்டா மென்று சொல்லஅது கேட்டுப் பப்பிர வாகனும்ஆனந்தசமுத்திரத்தில்முழுகினவனாய்ச் சந்தோஷமடைந்தி ருந்தான் அப்பொழுதுஉலுவசியும் நாககுமாரரானபுண்டரீக னென்கிற தன்சேவகனையழைத்து தன்காதிலணிந்திராநின்றபொன்னோலையை கழற்றி அடையாளமாகக்கொடுத்துமாங்கல்யசூஸ்திரத்தையுங்கொடுத் துஓபுண்டரீகா நீ பாதாள லோகத்திற்கு அதிசீக்கிரமாய்ப் போய் என் பிதாவாகிய ஆதிசேஷனைக்கண்டு இவ்விடத்தில்நடந்தசவிஸ்தாரமெல் லாஞ்சொல்லிஅர்ச்சுனராஜனைப்பிழைக்கப்பண்ணுகிற தற்கு மிருதச ஞ்சீவிரத்தினமும்அமிர்தகலசமும் வாங்கிவரச்சொன்னாளென்று சொ ல்லி சீக்கிரத்தில்வாங்கிக்கொண்டு வாவென்றுசொல்ல அவனும் அப்ப டியே நல்லது அம்மாவென்றுசொல்லிப் பின்னையும் உலுவசியைப் பா ர்த்து ஓ அம்மா அர்ச்சுனனுடையசிரசையுஞ்சரீரத்தையுங்காத்துக் கொ ண்டிருக்கிறது உங்களுடையகடமைசஞ்சீவிகொண்டு வருகிறது என் னுடையகடமையென்றுசொல்லிவிட்டுமனோவேகத்திலும் அதிக வேக மாகப்புறப்பட்டுபூமியைக்கண்டு அதல விதலசுதல நிதல ரசாதல தரா த... பாதாளமென்கிற சப்தலோகங்களையுங்கடந்து அப்பா லநேக மா யிரம் நாககுமாரர்களுடனும்-வாசுகி தக்ஷகன்-கார்க்கோடகன்மூர்க்கன் திருதராட்டிரன்-முதலான நாகமந்திரிகளுடனும் ரத்னகசிதமான சிங் காசனத்திலெழுந்தருளி ஆயிரம்பணாமுடிகளும் பிரகாசிக்கத்தக்கதாக கொலுவாயிருக்கிற ஆதிசேஷனைக்கண்டுசாஷ்டாங்கமாக தெண்டனிட் டெழுந்துநின்று ஐயாமகானுபாவா நாகேந்திரா தேவரீருடைய குமார த்தியண்டையிலிருந்து வந்தேன் இதோ அந்தஅம்மாள் கொடுத்த பொ ன்ஓலையுமாங்கலியசூஸ்திரமும்பார்த்தீர்களாவென்றுகொடுத்துபின்னை யும் அந்தநாகராசனைப்பார்த்து ஐயாநாகாதிபா அஸ்தினாபுரத்தையாளு

கிறதருமபுத்திரரானவர் அஸ்வமேதயாகம்பண்ணநினைத்துக்குதிரையை விட்டு அந்தக்குதிரையின்பிறகே அர்ச்சுனனை யனுப்பினார் அந்தக் குதிரையானது மணிபுரத்திற்குச்சமீபமாகவந்தது கண்டுபப்பிரவாகனும் அந்தக்குதிரையைப் பிடித்துக்கட்டி அர்ச்சுன ராசனுடனே எதிர்த்துச் சண்டைபண்ணிரணக்களத்திலே புத்திரபவுத்திரர்களுடனும் அந்த அர்ச்சுனராஜனைக் கண்டித்து விட்டான் ஆகையினால் உலுவசியுந் துக்கப்பட்டுப் பொன்னோலையை அடையாளமாகக் காண்பித்து அறுந்து விழுந்து போனமாங்கல்யசூஸ்திரத்தையும் எப்போதும்போல் அணியத்தக்கதாக அநுக்கிரகம்பெற்றுக்கொண்டு மிருதசஞ்சீவிரத்தினமும் அமுர்தகலசமும்வாங்கிவரச்சொன்னாளென்று சொல்ல அதுகேட்டு ஆதிசேஷனும் ஆச்சரியப்பட்டு புண்டரீகனைப்பார்த்து ஓபுண்டரீகா நீசொல்லுகிறசேதி எனக்குச் சந்தேகமா யிருக்கிறது அர்ச்சுனனாவதேது அவன் பிள்ளைபப்பிரவாகன் கையில் மடிவதாவதேது அவன்வீராதி வீரன் விஷ்ணுபக்தன் ஸ்ரீ கைலாசபதியாகிய பரமசிவனோடு போராடி பாசுபதாஸ்திரம்பெற்றவன் அப்படிபபட்ட ரணரங்கசூரனைப்பப்பிரவாகன் கொன்றானென்றால் எனக்குஉண்மையாகத் தோற்றவில்லை யென்று சொல்ல அதுகேட்டுபுண்டரீகனும் ஐயாசேஷாதிபாதேவரீர் சொன்னபடியே அருச்சுனன் வீராதிவீரன்தான் அவன்எதினாலிறந்துபோனானென்றால் கங்காதேவி சாபம் சமீபித்தபடியால் இப்படி முடிந்ததென்று சொல்ல அதுகேட்டு ஆதிசேஷனும்அப்படியானால் மெய்தானென்று சம்மதித்து நமதுகுமாத்திக்குமங்கல்ய முண்டாகச்செய்கிறதே நமக்கு தருமமென்றுசொல்லிமிருதசஞ்சீவிரத்தினமும்அமிர்தகலசமுங் கொடுத்தனுப்பும்படிச்சம்மதித்தான் அதுதெரிந்து திருதராஷ்டனென்கிற நாகமந்திரியும்ஆதிசேஷனைப்பார்த்து ஐயாசேஷாதிபா நீர் என்னவேலைசெய்யப்பினைக்கிறீர்நீர்செய்கிறவேலைஎனக்குச் சம்மதமில்லை அஃதெதினாலென்றால் இந்தபுண்டரீகன்சொல்லைக்கேட்டு மிருதசஞ்சீவி ரத்தினத்தையும் அமிர்தகலசத்தையுங்கொடுத்துப்பூலோகத்திற்குஅனுப்பலாமோஅல்லவென்றனுப்பினால் அதுகள்மறுபடியும்நமதுலோகத்திற்குவருமோ அதல்லாமலும் நமக்கு கருடனாற்பயமன் றிருக்கத் தக்கதாக பிரமதேவர்நியமித்துக்கொடுத்திருப்பதை நாம்ஒருத்தருக்குக் கொடுக்கலாமோ இதுகள்இருக்கின்றதனாலல்லவோ நமதுலோகத்திற்குக் கருடன் வாராமலிருக்கின்றான் இதுகளைநீர் கொடுத்துவிட்டால் கருடன் கேள்விப்பட்டுவந்துநம்மெல்லாரையுங்கொல்லுவான் அப்போதுநாம் எல்லாரும் நீர்ப்பாம்புபோல்விழுந்து கிடக்கவேண்டும் நம்மைக்கண்டவர்க ளெல்லோருந்தடியெடுத்து அடித்துக்கொல்லுவார்களல்லாமல் அருச்சுனனைப் பிழைக்கப்பண்ணுகிறதற்குஇதுபோகவேண்டுமோ கபட நாடக சூஸ்திராவதாரியான ஸ்ரீகிருஷ்ணபகவானிருக்கிறார் அவராலாகாதகாரிய

பிருக்கின்றதோ பூர்வத்தில் பிரமதேவரானவர் பசுக்களையும் கன்றுகளையும் கோபாலர்களுடைய பிள்ளைகளையுங்கொண்டுபோய் ஒருவருஷம் ஒளித்துவைத்திருந்தான், அதுதெரிந்து அவர்கள் வீடுகள்தோறும்பசுக்களாகவும், கன்றுகளாகவும்,பிள்ளைகளாவுமிருந்து ஒருவருக்குந்தெரியவொட்டாமல் லீலாவினோதம்பண்ணின மகாபுருஷன் அங்கேயிருக்கும்பொழுது அர்ச்சுனனுக்குஒருநாளுங்குறைவுவருகிறதில்லை ஆதலால் என் சொல்லைநம்பி இந்தபுண்டரீகனைச்சும்மா போகச்சொல்லுமென்று சொல்ல அதுகேட்டு ஆதிசேஷனுமெய்தானென்று சந்தோஷப்பட்டு புண்டரீகனுக்குச்சொல்லியனுப்ப புண்டரீகனும் நல்லதென்று பூலோகத்திற்குவந்து உலுவசியையும் பப்பிரவாகனையுங்கண்டு அங்கேநடந்த சவிஸ்தாரமெல்லாஞ் சொல்ல அதுகேட்டுப் பப்பிரவாகனுங் கோபங்கொண்டு ஆதிசேஷனானவன்தான் பூமியைச்சுமக்கிறேனென்று கர்வித்திருக்கிறவனல்லவா அவன்பூமியைச்சுமக்காமற்போனாலும் போகட்டும் அவனுடைய கர்வத்தைச் சற்றுநேரத்தில் அடக்கிவைக்கிறேன் என்னுடைய பாணத்தினால் நாகங்களையெல்லாஞ் சாம்பலாக்கி விடுகிறேன் ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவன் ஒருவேளை என்னுடைய ஆபரணங்களைக் கண்டிக்கின்றாயாவென்று சண்டைக்குவந்தாலும் என்னுடைய புஜபலத்தினால் அந்த உருத்திரமூர்த்தியையும் பூசைபண்ணி அவரது ஆபரணங்களையெல்லாஞ் சின்னபின்னப் படுத்துகிறேனென்று பப்பிரவாகனும் ஆக்கிரவியாக்கிரம நிக்ரோதனாய் நவரத்தினகசிதமானஒரு தேரின்பேரிலேறிக்கொண்டுயுத்தசன்னத்தனாய்ப்புறப்பட்டுரதகஜதுரகபதாதிகளைக்கூட்டிக்கொண்டுபுண்டரீகனைப்பாதாளலோகத்திற்கு வழிகாட்டும்படி அவனைமுன்னதாக நடத்திக்கொண்டுபோய் சேர்ந்து அவ்விடத்தில் தண்டுவிட்டிறங்கி ரணபேரிகை வெண்கலபேரிகை முதலானதுகளை முழக்கிவித்து வெற்றிசங்கத்தை யெடுத்துப் பம்பம்மென்றுபூரித்தான்.

## ஆதிசேஷின்யுத்தம்,



அந்தச்சத்தத்தைக்கேட்டு ஆதிசேஷனுந் திகில்டைந்து மனங்கலங்கிச் சண்டைக்கு ஆயுத்தப்பட்டு பப்பிரவாகன் வந்துவிட்டானே அவன் இனிநம்மைக்கொல்லாமல் விடமாட்டான் அதற்கு நாமென்ன செய்யப்போகிறோமென்று விசாரப்பட்டு இந்ததிருதராட்டிரன் குருசர்ம்மியாய்நாம்கொடுக்கப்போகிறமிருதசஞ்சீவிரத்தினத்தையும்அமிர்தகலசத்தையுங் கொடுக்கவேண்டாமென்று தடுத்ததினாலல்லவோ இத்தனை விபரீதம்வந்து நேரிட்டதென்றுநினைத்து மந்திரிகளைப்பார்த்து ஓ மந்திரிகளே நீங்கள் சண்டைக்குப்போங்களென்றுகோபமாகச்சொல்ல

யிசு

அதுகேட்டு தக்ஷகனும் கார்க்கோடகன் திருதராஸ்டிரன் முதலானநாகமந்திரிகளெல்லாருங்கூடி அந்தப்பப்பிரவாகன் எம்மாத்திரம் அவனைநம்முடைய விஷாக்கினியில் தகித்துவிடலாமென்று ஒருவர்க்கொருவர் வண்மையாகப்பேசிக்கொண்டு அவரவர்கள் சேனைகளுடனே புறப்பட்டு யுத்தசன்னத்தர்களாய்வந்து பப்பிரவாகனுடனே எதிர்த்தார்கள் அதுகண்டு பப்பிரவாகனுடைய சேனைகளெல்லாம் மகா ஆக்ருஷத்துடனே எதிர்த்து அதிதீக்ஷண்யமாகிய சஸ்த்ர அஸ்திரங்களினால் நாகசேனைகளையெல்லாந் துண்டந்துண்டமாய்ச் சின்னபின்னப் படுத்துகையில் அதற்கு நாககுமாரர்கள் பின்னிடாமல் ரோஷத்துவேஷங்களுடனே தங்களுடைய விஷாக்கினியினால் ரதங்களையும் ரதக்காரர்களையும் பஸ்மீகரப்படுத்தி ஆனைகளையும் ஆனைப்பாகர்களையும் அதம்பண்ணிகுதிரைகளைச்சாம்பலாக்கி ரவுத்திரர்களைக்கொன்று காலாட்களையெல்லாம்பொடியாக்கி இந்தவிதமாக நாககுமாரர்கள்மிஞ்சிப்பப்ரவாகனுடையசேனைகளையெல்லாந் தும்சப்படுத்தும்பொழுது செனைகளெல்லாரும்பின்வாங்கியோடத்தலைப்பட்டார்கள் அதுகண்டு பப்பிரவாகனும் ரோஷதாம்பிரக்ஷநனாய் வில்லைக்குணத்தொனிபண்ணி அந்தவில்லினிடமாக அக்கினியைப்போல அதிதீக்ஷண்ணியமான பாணங்களையெடுத்துப்பிரயோகித்து நாகங்களுடைய பணாமுடிகளைபீறி மாணிககங்களை யுதிர்த்து வாய்களைக்கிழித்து விஷங்களையடக்கி துண்டந்துண்டமாகக் கண்டித்து நாகசேனைகளையெல்லாம் அதமாக்கிவிட்டான். அதுகண்டு திருதராட்டிரன் முதலானமந்திரிகளெல்லாரும் ஓடிப்போகிற நாகசேனைகளையெல்லாம் ஓடவேண்டாமென்று நிறுத்தி மறுபடியும் அவர்களை சண்டைக்கனுப்பி தாங்களும் ஆக்குரஷத்துடனேவந்துபப்பிரவாகனுடைய சேனைகளுடனே யெதிர்த்துநின்றார்கள் அதில் திருதராஷ்டிரனும்பப்பிரவாகனைப்பார்த்து ஓ ராஜகுமாரகா நீ உன்தகப்பனைக்கொன்று விட்டு திரும்பவும் அவனை பிழைக்கபண்ணலாமென்று நினைத்துவந்தாயோ அது எனக்குச்சம்மதமல்ல உன்தகப்பனைக்கொன்றுவிட்டதே எனக்கு மெத்தவும் சந்தோஷமாயிருக்கின்றது நீ திரும்பவும் எழுப்பலாகாது அஃதேதினாலென்றால் நீ உங்கள் குலத்திலே முன்பின்நடந்த வழக்கப்படிசெய்தாய் நீ நூதனமாக ஒன்றுஞ்செய்யவில்லை அஃதெப்படியென்றால் உன் தகப்பனாகிய அர்ச்சுனனானவன் பாரதயுத்தத்தில் சண்டைசெய்து வஞ்சனையினால் பிதாவுக்குச்சரியான கர்னமகாராஜனைக் கொன்றான் அல்லாமலும் பீஷ்மர் துரோணர் முதலானவர்களையும் பெரியோர்களென்று சற்றாகிலும் எண்ணிப்பாராமல் கொன்றுவிட்டான் ஆகையால் உன்தகப்பனசெய்தபிரகாரம் நீயுஞ்செய்தாய் இதுகல்லகாரியதான் அதுவுமல்லாமல் பூலோகத்தில் தன் பிதாவானவன் எந்தப்படி

இர்த்திவகித்துக் கொண்டானே அந்தப்படியே புத்திரனவன் நடக்க வேண்டுமென்று தர்மசாஸ்திரங்களுஞ் சொல்லுகின்றது ஆதலால்நீயும் அந்தப்படி நடந்துக்கொண்டாய் அதைகுறித்து உனக்கும் விசாரம் வேண்டாம் நீ சுகமாய்ப்போம் அஸ்தினாபுரத்திற்கு பட்டாபிஷேகனாய் சந்தோஷகரமாய் ராச்சியபரிபாலனம் பண்ணிக்கொண்டிரு வென்று சொன்னான் அதுகேட்டுப்பப்பிரவாகனும் புன்சிரிப்பாகச்சிரித்து திருதராட்டிரனைப்பார்த்துஓநாகமந்திரியே நீர்சொன்னவார்த்தைமெய்யேயாம்தகப்பன்செய்தபடிபிள்ளைசெய்யவேண்டுமென்று சொன்னதும் உண்மைவசனந்தான் அஃதென்னவென்றால் பூலோகத்தில் எங்கள்தாயாதியாகிய திருதராட்டிரனானவன் எங்களுக்கு உரிமையாகிய பாதிராச்சியத்தைக்கொடாமல் அட்டிசெய்தபடியினால் என்தகப்பனாகிய அர்ச்சுனராஜன் தன்னுடைய பாணாக்கினியினால் அவனுடையவம்சத்தை யெல்லாம் வேரறுத்து அஸ்தினாபுறத்தையுங் கொள்ளைகொண்டான் அந்தமுறைமையினால் நானும் உம்முடைய வம்சத்தையெல்லாம் என்னுடைய பாணாக்கினியினால் வேரறுத்து மிருதசஞ்சீவிரத்தினத்தையும் அமிர்தகலசத்தையும் ஆதிசேஷனிடத்தில் வாங்கிக்கொண்டுபோகிறேன் சற்றே பார்த்துக்கொண்டிருவென்றுசொல்லி தன்வில்லினிடமாக அனந்தமாயிரம் பாணங்களைப் பிரயோகம்பண்ணி அந்தத்திருதராட்டிரன் முதலான நாகமந்திரிகளெல்லாரையும் உதிரமயமாசகி மெத்தவும் நோகப் பண்ணினான் அதற்கு அந்தநாகமந்திரிகளும் பின்வாங்காமல்தங்கள்சேனைகளோடுஞ் சேர்ந்து விஷங்களைக் கக்கிக்கொண்டு அந்தவிஷாக்கினியால் பப்பிரவாகனுடைய சேனைகளை யெல்லாங் கொல்லுகையில் அதுகண்டு பப்பிரவாகனும் ஆக்கிரவீயாக்கிரமநிக்குரோதனாய் மீசைபடபடவென்று துடிக்கும்படி பற்களை நற நறவென்று கடித்துக்கொண்டு வில்லைக் குணத்தொணிபண்ணி அந்தவில்லினிடமாக ஒரு நாகாஸ்திரத்தையெடுத்துத் தொடுத்துப் பிரயோகம்பண்ணினான் அந்த அஸ்திரத்திலனேகமாயிரங் கலைமான்கள்பிறந்து அந்தசர்பங்களையெல்லாங் கண்டதுண்டஞ்செய்தும் மிதித்தும் கிழித்தும் அடித்தும் கடித்தும் இந்தவிதமாய் கொல்லுகிறபோது அந்த சர்ப்பங்களெல்லாம்பயந்து பாதாளத்திலிராமல் உயரஎழும்பிவரத்தலைப்பட்டது அதுகண்டு பப்பிரவாகனும் தன்னுடைய வில்லினிடமாக ஒருதிருதாஸ்திரத்தை எடுத்துத்தொடுத்துப் பிரயோகம்பண்ணினான் அந்த அஸ்திரத்தில் கோடானுகோடி பருந்துகள் கூளிகள் டேகைகள் பிறந்துஉயரவெழும்பி வருகிற சற்பங்களையெல்லாம் உரித்து வாழைப்பழம்போலவிழுங்கத்தலைப்பட்டது அதுகண்டு அந்தசர்பங்களெல்லாம்நாமெங்கேபோய்வொளிப்போமென்று மனோதுக்கத்துடனே புதறுகளிலும் பொந்துகளிலும் நுழைந்

துக்கொள்ள அதுதெரிந்து பப்பிரவாகனும் ஒருநீலகண்டாஸ்திரத்தை எடுத்துத்தொடுத்துப் பிரயோகம்பண்ணினன் அந்தஅஸ்திரத்தில் அனேகமாயிரம் மயில்கள் பிறந்து நாகசர்பங்களையெல்லாம் விழுங்கத்தலைப்பட்டது அதுதெரிந்து அந்தசர்பங்கள் திரும்பவும் வளைகளிலும் சுவரின்பிளவுகளிலும் நுழைந்துக்கொள்ள அப்பொழுது பப்பிரவாகனும் தன்னுடைய வில்லினிடமாக மூஷிகாஸ்திரத்தையெடுத்துதொடுத்துப் பிரயோகம்பண்ணினன் அதில் அளவிறந்த கீரிப்பிள்ளைகள்பிறந்து சந்துகளிலும பொந்துகளிலும்போய் ஒளிக்கின்ற சர்பங்களையெல்லாம் துண்டந்துண்டமாகக் கண்டிக்கத்தலைப்பட்டது அதற்கு நிர்வகிக்கமாட்டாமல் சர்பங்களெல்லாங் கவலையடைந்து நாம்பூமியிலிருந்தாலும் கலைமான்களுடைய உபத்திரவம் பொறுத்து முடியவில்லை அல்லவென்று புதறுகளில் பொந்துகளில் நுழைந்துக்கொண்டாலும் கீரிப்பிள்ளைக்ள் இழுத்துக்கொல்லுகின்றது இனிநாம் எந்தவிடத்திறபோயிருப்போமென்று ஆலோசித்து வளைகளிலும் துளைகளிலும் புகுந்துக்கொண்டிருந்ததுகள் அதுகண்டு பப்பிரவாகனுஞ்சிரித்து தன்னுடையவில்லிலே மதுவாஸ்திரத்தை எடுத்துத்தொடுத்துவிட்டான் அதில்மேகங்கள்பிறந்து ஒருசாமபரியந்தம் ஆனைதும்பிக்கையிலிருந்து ஜலம்விழுவதுபோல தேன்மழையைப் பொழிந்தது பின்னையும் பப்பிரவாகன் பிபீலியாஸ்திரத்தை எடுத்துத்தொடுத்துவிட்டானதில் அனந்தமாயிரம்சிற்றெறும்புகள் கட்டெறும்புகள்பிறந்து அந்தத்தேனுடனே கலந்து சர்ப்பங்களைச் சூழ்ந்துக்கொண்டு சாம்பலாக எரித்துவிட்டது அதனலிறந்துபோக நின்றசர்ப்பங்களெல்லாம்பயந்து ஓடிவந்து ஆதிசேஷனைக் கண்டுதெண்டனிட்டு ஐயா அனந்தபுருஷா எங்களைக்காப்பாற்றி ரக்ஷியும் இப்பொழுது பப்பிரவாகனுடைய பாணமானது எங்களை எந்தவிடத்திலும் நிற்கவொட்டாமல் துரத்திக்கொண்டு வருகின்றது நாங்கள் எங்கேபோயிருப்போம் என்னசெய்யப்போகிறோம் அந்த துன்மார்க்கனை திருதராஷ்டிரன் சொன்னவார்த்தைக்குத் தேவரீர் செவிகொடுத்தபடியினல் எங்களுக்கு இத்தனை ஆபத்துவந்து சம்பவித்தது நாகசேனைகளெல்லாம் மடிந்துபோய்விட்டது ஆதலால் தேவரீர் இப்போதாகிலும் எங்கள்பேரில் தயவுசெய்து மிருதசஞ்சீவிரத்தினத்தையும் அமிர்தகலசத்தையும் பப்பிரவாகனுக்குக்கொண்டுபோய்கொடுத்து எங்களைக்காப்பாற்றி ரக்ஷியுமையாவென்று வேண்டிக்கொள்ள அந்தவார்த்தைகளையெல்லாம் ஆதிசேஷன்கேட்டு திகிலடைந்து திருதராட்டிரன்பேரில் எரிந்துவிழுந்து நாம் முன்னேதானே புண்டரீகன்கையிற் கொடுத்தனுப்பாமற் போனபடியினல் இத்தனை அவமானம்வந்ததென்று அதிசீக்கிரமாக எழுந்திருந்து மிருதசஞ்சீவிரத்தினமும் அமிர்தகலசமும் எடுத்துகொண்டு அதுவுமல்லாமல் பப்பிரவாகனுக்கு வெகுமானமாய்மா

ளிக் கிரீடமும் ரத்தின பரணங்களும் மாணிக்கப் பதங்கங்களும் எடுத்
துக்கொண்டுவந்து பப்பிரவாகனைக்கண்டு தான்கொண்டுவந்த வஸ்துக்
களையெல்லாம் அவனுக்குமுன் காணிக்கையாகவைத்து அவனை பார்போ
டுதொழுவிக்கொண்டுஐயா பப்பிரவாகனே நாங்கள் உன்னுடைய பராக்கிர
மத்தையறியாமல் எங்களுடைய அஞ்ஞானத்தினாலபசாரம் பண்ணி
னோம் அந்தப்பிழையைப்பொறுத்து உன்னுடைய கோபத்தை யடக்கி
எங்களைரட்சிக்கவேண்டுமென்று வேண்டிக் கொள்ள அதுகண்டு பப்பி
ரவாகனுஞ்சிரித்து ஆதிசேஷனைப்பார்த்துஐயா பாட்டா அடிமேலடிய
டித்தால் அம்மியுநகருமென்று உலகத்தார் வழக்கமாகச் சொல்லுகின்ற
வார்த்தையானதுஇப்போது உங்களிடத்தில் நிஜமாச்சுதென்று பரிகா
சமாகச்சொல்லிப் பின்னையும்ஆதிசேஷனுக்கு நமஸ்காரம்பண்ணி அவ
னுடைய ஆசீர்வாதமுங்கைக்கொண்டுசகலசேனாசமேதனாய் அந்த ஆதி
சேஷன்முதலானநாகசேனைகளுடனும்புறப்பட்டு பாதாள லோகத்தை
விட்டு பூலோகத்திற்குப்போகையி லதுதெரிந்துதிருதராட்டிர னென்கி
ற நாகமந்திரியானவன் முன்னேநினைத்த குரூரம் விடாம லதிசீக்கிரமா
கத்தன்னுடைய வளவிற்குவந்து தன் குமாரர்களாகிய துற்பபத்தி என்
கிறவனையும் துற்பவனென்கிறவனையுமழைத்து ஓகுமாரர்களே நீங்களி
ருவருமென்னுடைய வார்த்தையைமறுத்து விடாமலதி வேகமாய்ப பூ
லோகத்திற்குப் போய் இரக்களத்தில் விழுந்து கிடக்கிற அர்ச்சுனரா
ஜனுடையசிரசையெடுத்துக்கொண்டு கருடன்வராத இடமாகப்பார்த்து
ஒளித்துவைத்திருங்கோள்நீங்களப்படியேசெய்வீர்களானா லர்ச்சுன ரா
ஜன் பிழைக்கமாட்டான் அந்த அர்ச்சுனன் பிழையாதவகைக்கே என்னா
லாகியதந்திரயுக்திகளனேகமாகச் செய்தேன் அதுக ளெல்லாம் வீணா
கிப்போய்விட்டது அதோபார்த் தீர்களோ ஆதிசேஷன் முதலான நாக
சேனைகளெல்லாம் பப்பிரவாகனுடனேசமாதானமாய்ச் சேர்ந்துக் கொ
ண்டு பூலோகத்திற்குப்போகிறார்கள்நானும் அவர்களோடுசேர்ந்து போ
கவேண்டும் ஆதலாலதற்குமுன்னமேநீங்களபோய் உங்களுக்குச் சொ
ன்னபடி செய்யுங்களென்றுசொல்லிவிட்டு திருத ராட்டிரனும் சீக்கிர
மாய் ஆதிசேஷனுடனே கூடிக்கொண்டுநடந்தான் அநத துற்பபுத்தி து
ற்பாவனென்கிற இரண்டுபேரும் தங்களுடைய பிதாவின் சொற்படி
யே பூலோகத்திற்கு அதிவேகமாகவந்து தங்களுடைய மாயையினாலொ
ருவருக்குந்தெரியவொட்டாமல்அருச்சுனனுடையசிரசையெடுத்துக் கொ
ண்டு கருடன்வரக்கூடாதஇடமாகப்பார்த்து சத்த சமுத்திரத் திற்கு
அப்புரத்தில்பகதலப்பிரிய மகாமுனீந்திரருடைய ஆசிரமத்திற் கொண்
டுபோய் ஒளித்துவைத்திருந்தார்கள்.

(அர்ச்சுனனிற தலையைக்காண ஸ்ரீகிருஷ்ணதேவர்எழுந்தருளியது)

இவ்விடத்தில்ப்படியிருக்க அங்கேஅஸ்தினபுரத்தில் குந்திதேவி
யானவள் ஒருகனவுகண்டெழுந்திருந்து மகாதுக்காக்கிராந்தியாய் ஸ்ரீ கி
ருஷ்ணபகவான் சயனத் திருக்கிறபள்ளியறைக்குப்போய் அந்த பகவா
னைத்தட்டியெழுப்பி ஓகிருஷ்ணா நான்இன்றையதினமென்றுங் காணா
தஒரு நல்லதல்லாத கனவு கண்டேன் அஃதென்ன வென்றால் உன் மை

துணனாகிய அர்ச்சுனனானவன் தலையிலேஎண்ணெயிட்டுக் கொண்டு சரீ
ரமுழுதும் சாணியைப்பூசிக்கொண்டு சிகப்புவஸ்திரமும் சிகப்புச் சந்த
னமுந்தரித்துக்கொண்டு கழுதையின்பேரிலேறிக்கொண்டு தெற்கு முக
மாய்ப்போகிறதுபோலக் கண்டேன் ஓசுவாமி அருச்சுன னுக்கு ஏதோ
ஆபத்துநேரிட்டதுபோலிருக்கிறது எனக்கொன்றுந்தோற்றவில்லை எ
ன்வயிற்றைக்கலக்குகின்றது மனத்திகிலாயிருக்கின்றது ஆபத்பாந்தவா
அநாத ரட்சகா வென்று சொல்ல அந்தவார்த்தைகளை யெல்லாம் கபட
நாடகரூஸ்திராவதாரியான ஸ்ரீ கிருஷ்ணபகவானுங்கேட்டுத் தம்முடை
யஞானதிருஷ்டியினாலேபார்த்து ஆ, ஆ, அருச்சுனனுக்குமோசம்வந்ததெ
ன்றுதெரிந்து அர்ச்சுனனுடையசங்கதியைச் சீக்கிரத்திற் போய் அறிய
வேண்டுமென்று கருடாழ்வனை யழைப்பித்து அந்தக் கருடாழ்வன் பே
ரில் தாமும் வீமசேனனுங் குந்திதேவியும் அசோதையும் தேவகிதேவி
யாருமாக யேறிக்கொண்டு அதிகவேகமாகஒருநொடிக்குள்ளேமணிபுர
த்திற்குச்சமீபமாகவந்து கருடாழ்வானை விட்டிழிந்து அந்தக் கிருஷ்ண
மூர்த்தியானவர் வீமசேனன-குந்திதேவி-தேவகிதேவி அசோதை- இவ
ர்களுடனே புறப்பட்டு இரணக்களமுழுதுஞ் சுற்றிப்பார்க்கும் பொழு
துவீமசேனனும் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து ஐயா கிருஷ்ணா இ
துஎன்னகாரணம் எனக்கு ஒன்றுந் தெரியவில்லை பிரமித்தாப்போலிரு
க்கின்றதென்றுசொல்ல அதுகேட்டுகிருஷ்ணபகவானும் வீமசேனனை
ப்பார்த்து ஓவீமசேனா இதுயுத்தகளம் அதோமணிபுரமிருக்கின்றது அ
ந்தப்பட்டணத்தையரசாட்சிசெய்கின்ற பப்பிரவாகன்தான் நம்முடை
யகுதிரையைப்பிடித்துசகலசேனைகளையு அதம்பண்ணினது மல்லாம
ல்விஸ்வகேதுவையும் அர்ச்சுனனையுங் கொன்றுவிட்டான் அதோ பார்
த்தாயோ பிரத்தியுமன்ன முதலான துரைகளெல்லாரும் மூர்ச்சையாய்
விழுந்துகிடக்குறார்களென்று பின்னையும் அந்தபகவான் இரணக்களமு
ழுதுஞ் சோதித்துக்கொண்டுவருகையில் அதுதெரிந்துசித்திராங்கதை
யும்உலுவசியும் கண்ணீர் ஆறாய்ப்பெருகும்படி கோவென்ற சத்தமாய்
அழுதுகொண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய பாதத்தில்வந்து விழுந்து
நமஸ்காரம்பண்ணிவந்து அழுதார்கள் அதுகண்டு அவர்களும்கோவென்
றுமுறையமிட்டழுதார்கள் அப்போதுகிருஷ்ணபகவானும்வீமசேனனு
ம அர்ச்சுனனுடையசரீரத்தைக்கண்டு மூர்ச்சையாய் விழுந்து சற்று நே
ரத்தில்தெளிந்து அதில்ஸ்ரீகிருஷ்ணதேவரானவர் அர்ச்சுனனைப் பார்த்
துவீராதிவீரா-ஆ,வீரப்பிரதாபா, ஆதோழா, ஆ அர்ச்சுனா, நீயெங்கே யட
ங்கினாய்எங்கேபோயொளித்தாய்நீஎன்னுடனே பேசப் போகாதோ இ
துவரையில்நீஒருநாளு மிப்படிப்பட்ட ஆபத்தையடைந்த தில்லையே நீ
இல்லாமலிருக்கிறதுசூரியனில்லாத பகற்போலவும் சந்திரனில்லாத இ
ராத்திரிபோலவும்தாமரையில்லாததடாகம்போலவும் அரசனில்லாத
பட்டணம்போலவும்பாழடைந்திருக் கின்றதே நீ வீரலட்சுமி யுடனே
போகித்துக்கொண்டிருக்கிறாயேஇது உனக்குஞாயமிருக்கின்றதோ சு
பத்திரையுடனும் துரௌபதையுடனும் போகிக்கலாகாதோ உன்னுடை
யதாயாரும் உன்னுடையஸ்திரீகளும்உன்னைக்காணமலஎந்நேரமும் அ
ழுகின்றார்களே நீவந்துஇவர்களுடைய துக்கத்தை நிவர்த்திசெய்ய மா

ட்டாயோ உனக்கு அந்தப்பராவியானகங்காதேவியினுடையசாபம் எப்படிவந்துநேரிட்டதுஉன்வில் வித்தை எங்கே யடங்கி விட்டது ஓமைத்துனாவென்று அனேகவிதமாகச்சொல்லி இரண்டுகண்களாகிய தாமரைகளிலும்ஜலமானதுதாரைதாரையாயொழுகும்படி அழுகிறதுகண்டுவீமசேனனும் மனோதைரியம்விடாமல்கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து திருட்டுக்கிருஷ்ணா நீர்லோகநடனநடிக்கின்றீர் நீர் அழுகிறதைப்பார்த்தால் எனக்குமெத்தவும் ஆச்சரியமாயிருக்கிறது அர்ச்சுனன்பிழைக்க வேண்டுமென்கிறஎண்ணம் உமக்கிருக்குமானால் அர்ச்சுனா வென்று ஒருதரம் அழைப்பீராகில் அர்ச்சுனனும்நித்திரைசெய்தவனைப்போல் எழுந்து வருவான் அதற்கு எவ்வளவுஞ்சந்தேகமில்லை நீர்பிடித்தகாரியம்முடியாமற் போகுமோ நீர்வேண்டுமென்றால் மலையைத் துரும் பாக்குவீர் துரும்பைமலையாக்குவீர் உம்முடையமகிமையைத்தேவேந்திராதிதேவர்களாலுமறியக்கூடாதென்றால் என்னாலறியக்கூடுமோ இதுவுமல்லாமல் முன்னே சந்திபனென்கிற ஒருபிராமணப்பிள்ளையை அழைத்துக்கொடுத்தஉமக்குஇந்தஅர்ச்சுனனை அழைப்பிக்கிறது அருமையா ஆகையினால்இந்தலோகநடனத்தைவிட்டு உமதுபக்தனான அர்ச்சுனனைஎழுப்பிவிடும் சுவாமியென்று வீமசேனன்சொல்ல அந்தவார்த்தைகளையெல்லாங் கேட்டு ஸ்ரீகிருஷ்ணதேவரும்புன்சிரிப்பாகச்சிரித்து வீமசேனனைப்பார்த்து ஓவீமசேனா உன்னுடையஎண்ணம் அப்படிக்கிருந்தாலப்படியே நடக்குமென்றுசொல்லி அப்பால்விஸ்வகேதுவினுடைய சிரசையுஞ்சரீரத்தையும்பார்த்துமுட்டிக்கொண்டு அழுகின்றகுந்திதேவிமுதலானஸ்திரீசனங்களுடைய துக்கத்தைத்தணித்துப்பிற்பாடு அங்கிருக்கின்ற சேனைகளால் அவ்விடத்தில்நடந்தசேதிகளையெல்லாஞ்சவிஸ்தாரமாகக்கேட்டுத்தெரிந்துக்கொண்டு இருட்டுவேளையானபடியினால் அர்ச்சுனனுடையசிரசைத் தேடிக்காண்கிறதற்குக்கூடாமல் ஆலோசித்துக்கொண்டிருக்கும்பொழுது தேவேந்திரனானவன் தன்புத்திரனாகிய அர்ச்சுனன் தலையைக்கண்டெடுத்துவந்து உதயகிரியின்மேல்வைத்தானோவென்று சொல்லும்படியாகச் சூரியபகவானும் உதயமாகினார்

அந்தச்சமயத்தில் பப்பிரவாகனும் ஆதிசேஷன்முதலான நாகசேனைகளுடனே சகலமேளவாத்தியங்களுந் தாந்தாமென்று முழங்கத்தக்கதாக மகாவைபவத்துடனேவந்து ஸ்ரீகிருஷ்ணபகவான் முதலானவர்களைக்கண்டு சந்தோஷித்து மகாபயபக்திவிசுவாசத்துடனே கிருஷ்ணமூர்த்தியின்பாதத்தில்விழுந்து கோவென்றழுது பின்னையும் அந்தப்பகவானைப்பார்த்து ஓ கோபாலசூடாமணி தேவரீருடைய சந்நிதானத்திற்கு முன் பிதாத்துரோகியாகிய நான் வந்துநிற்கிறேன் ஆதலால் தேவரீருடைய திவ்வியாஸ்தத்திலிட்டமாக விளங்குகின்ற சக்கிராயுதத்தினால் என்சிரசைக்கண்டித்து இரட்சியுமையாவென்று தாபந்திரியத்துடனே சொல்லஅந்தவார்த்தைகளையெல்லாம் கிருஷ்ண பகவான் கேட்டு மனமிரங்கி பப்பிரவாகனையெடுத்து மார்போடணைத்துக்கொண்டு ஓ பப்பிரவாகா நீவிசாரப்படவேண்டாம்உன்பேரில்யாதொருகுற்றமுமில்லை அந்தகங்காதேவினுடைய சாபத்தினால் இப்படிவந்து நேரிட்டதென்று சொல்லிஆதரவுசெய்தருளினார் பின்பு பப்பிரவாகனும் வீமசேனனு

டையபாதத்தில் விழுந்துநமஸ்காரஞ்செய்து ஐயாபுண்ணியபுருஷா நக
ப்பனைக்கொன்றபாதகனாகிய என்னுடையதலையை உம்முடைய கதாயு
தத்தினால்உடையுமென்றுவிபரீதமாகச்சொல்ல அதுகேட்டு வீமசேன
னும் பப்பிரவாகனை யெடுத்து மார்போடணைத்துக்கொண்டு முகத்தைத்
த்துடைத்து ஓபுத்திரா நீவீண் விசாரப்படுகிறாய் என்றால் ஒரு காரிய
மும்நடக்கவில்லையேயென்று பிரியவசனமாகச்சொல்லி துக்கத்தைத் தீ
ர்த்தான் அப்பொழுது ஆதிசெஷன்வந்து ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியைக் கண்
டு நமஸ்காரம்பண்ணி ஓபிராணபுருஷா கோபிகாரமணா அச்சுதா வென்
றுசஹஸ்திரநாமங்களாலும் அனேகவிதமாகத் தோத்திரஞ்செய்து தா
ன்கொண்டுவந்த மிருதசஞ்சீவிரத்தினத்தையும் அமிர்தகலசத்தையும்
அந்தபகவானுக்கெதிரேவைத்து ஓபுருஷோத்தமா இந்தக்ஷணமே அர்
ச்சுனனையும் விஸ்வகேதுமுதலான சேனைகளையும்எழுப்பிஇரட்சியும்ஐ
யாவென்றுவிண்ணப்பஞ்செய்தான் அதுகேட்டு அந்தபகவானும் அப்
படியே நல்லதென்றுசம்மதித்து அர்ச்சுனனுடைய சிரசைத் தேடிக் கா
ணமல் இரணக்களமுழுதுஞ்சோதித்துப்பார்த்து இல்லையென்று நிச்ச
யம்பண்ணிக்கொண்டு அர்ச்சுனனுடையதலையெங்கேபோய்விட்டதோ
எவர்களெடுத்துக்கொண்டுபோனார்களோ என்னகாரணமோ நாம்இனி
அர்ச்சுனனைக்காணப் போகிறோமோ வென்று தாபந்திரியமாகச் சொல
லுகிற ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய வார்த்தைகளை ஆதிசேஷனும் வீம
சேனனுங்கேட்டு ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியைப் பார்த்து ஐயா ஜநார்த்தனா
தேவரீர என்னயோசனை செய்கிறீர் அந்ததலையெங்கேயிருந்தபோதிலும
உம்முடையமகிமையினால் அழைப்பிக்கவேண்டுமென்றுசொல்ல அது
கேட்டு அந்தபகவானும் அப்படியேநல்லதென்று அங்கிருக்கிறசகல சே
னைகளும் அறியத்தக்கதாக அவர்களைப்பார்த்து நான்நித்திய பிரமசாரி
யாயிருப்பது உண்மையானால் அர்ச்சுனனுடைய தலையாது எங்கே யி
ருந்தபோதிலும் இங்கேவரக்கடவதென்று பிரதிக்கினை செய்தவளவில்
சத்தசமுத்திரங்களுக்கு மப்புறத்திலிருந்த அர்ச்சுன னுடைய தலையும்
கிருகிருவென்று ஆகாயமார்க்கத்திலெழும்பிஓகிருஷ்ணா-வாசுதேவா-கே
சவா-பரமாத்துமா-பரந்தாமா-அப்பிரமேயா. அரிமுகுந்தா அடைக்கல
ம் அடைக்கலமென்றுமுறையிட்டுக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானுடை
யபாதத்தில்வந்துவிழுந்து அவ்விடத்தில்அந்தசிரசைஎடுத்துக்கொண்
டுபோய் ஒளித்துவைத்திருந்த நாககுமாரர்களிருவருடையதலையும் ஆ
யிரஞ்சுக்கலாக வெடித்தது இவ்விடத்தில்ஸ்ரீ கிருஷ்ண பகவானும் தம்
முடையபாதத்தில்வந்துவிழுந்த அர்ச்சுனனுடைய சிரசைகையி லெடு
த்துக்கொண்டு தமதுபீதாம்பரத்தினால் முகத்தைத்துடைத்துசிகையை
முடித்து மீசையைத்திருத்தி கிரீடத்தையும்நன்றாயமர்த்திபிற்பாடு அ
ந்தச்சிரசை அர்ச்சுனனுடைய சரீரத்திற் பொருந்தத்தக்கதாகப் பொ
ருத்திவைத்து அந்தச்சரீரத்தின்பேரில அமிர்தத்தைத்தடவி மிருதச
ஞ்சீவிஇரத்தினத்தினால் ஒருதரம்துடைத்தமாத்திரத்தில்அர்ச்சுன ரா
சனவன் ஆயாசமாகமூர்ச்சித்திருந்தவன் எழுந்திருந்தாற் போல எழு
ந்திருந்தான் பின்புவிஸ்வகேதுவினுடைய சிரசையும் அவன்சரீரத்திற்
பொருத்திவைத்து மிருதசஞ்சீவி இரத்தினத்தினால் துடைத்தமாத்திர

த்தில்விஸ்வகேதுவுமெழுந்திருந்தான் அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணபகவானும் அந்தமிருதசஞ்சீவி இரத்தினத்தைத் தமது திவ்வியாஸ்தத்தினும் பிடித்துக்காண்பித்தமாத்திரத்தில் இரணக்களத்தில அடிபட்டுநொந்து மூர்ச்சையாய்விழுந்துகிடக்கின்ற பிரத்தியும்னன்-அநுசாலுவன்-சவ்வர்ஞசுவன்-நீலத்துவசன் - அம்சத்துவசன்-சாத்தகி-கிருதவர்மன் மேகவர்ணன்-சுவாகன்முதலான துரைகளெல்லாரும் எழுந்திருந்தார்கள் பின்னையும் இரதகசதுரகபதாதிகளெல்லாம் எழுந்திருந்தது அப்பொழுது தேவர்களெல்லாம் புஷ்பவருஷம்பொழிந்தார்கள் தேவதுந்துபியும் திம்திம்மென்று முழங்கின குளிர்ந்தகாற்றடித்தது பின்னும் நல்லசகுனமாச்சுது அந்தவேளையில் விஸ்வகேதுவும் வில்லையெடுத்துக்குணத்தொனிபண்ணி ஆக்கிரவியாக்கிர மிக்குரோதத்துடன் பற்களைப் படபடவென்றுகடித்துக்கொண்டு அதிககோபத்துடன் பப்பிரவாகனைப்பார்த்து அடாபப்பிரவாகா உன்னைநான்கொல்லாமல் விடுவேனோ என்னுடையபாணக்கினியினால் உன்னைப் பஸ்மீகரப்படுத்துகிறேனென்றுசொல்லிமுனையும்பொழுது ஸ்ரீகிருஷ்ணபகவான்கண்டு சிரித்து விஸ்வகேதுவைப்பார்த்து ஓவிஸ்வகேதுவே போதும்போதும் சும்மாயிரு சண்டையைநிறுத்து இந்தப்பப்பிரவாகன் அன்னியனோ அவனும் உன்னைப்போல அர்ச்சுனனுடையகுமாரனல்லவா விதிவசம் ஒருவராலும் தள்ளிடக்கூடாமையினால் இப்படிக்குவந்துநேரிட்டது இனிமேல் சண்டைபண்ணவேண்டாம் சமாதானமாய்த் திரும்பென்றுசொல்ல அந்த வார்த்தையைக்கேட்டுவிஸ்வகேதுவும் மதங்கொண்ட யானையானது அங்குசத்தினலடங்கிநிற்பதுபோலக்குரோதத்தைத்தணித்து அடங்கிநின்றான் அப்பொழுது அர்ச்சுனனும் விஸ்வகேதுவும் எழுந்திருந்து பயபக்திவிசுவாசத்துடனே ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கும் வீமசேனனுக்கும் பிரதட்சணநமஸ்காரஞ்செய்து அவர்களுடைய ஆசீர்வாதத்தைக்கொண்டு பிற்பாடு குந்திதேவியையும் தேவகிதேவியையும் அசோதையையுங்கண்டுதெண்டனிட்டார்கள் அவர்களுமிவர்களை எடுத்து மார்போடுதழுவிக்கொண்டு ஆசீர்வாதஞ்செய்தார்கள் பிரத்தியும்னன் அநிருத்தன் முதலான இராசகுமாரர்களெல்லாரும்வந்து மகாபயபக்திவினயத்துடனே கிருஷ்ணபகவான்-வீமசேனன்-குந்திதேவி - தேவகிதேவி-அசோதை இவர்களுக்குநமஸ்காரம்பண்ணி இவர்களுடைய ஆசீர்வாதத்தைக்கொண்டார்கள்.

அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியாருடைய அனுமதியின்பேரில் செயபேரிகையறைவித்துப்பதினெட்டுவகைமேளவாத்தியங்களும் தாம்தாமென்று முழங்கத்தக்கதாக இரதகசதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனைகளுடனும் அம்சத்துவசன்-நீலத்துவசன்முதலான இராசவர்க்கங்களுடனும் ஆதிசேஷன்முதலானநாகசேனைகளுடனும் கிருஷ்ணார்ச்சுனர்களுடனும்பப்பிரவாகனானவன் தானுடனாய் இரணக்களத்தைவிட்டுப்புறப்பட்டுமணிபுரத்திற்குவந்துசேர்ந்துசகலசம்பிரமத்துடனே அவரவர்களுக்குத்தகுந்தவிடுதிகள்விடுவித்துத் துரைகளுக்கெல்லாம் வெவ்வேறுவிசித்திரமானவிடுதிகள்விடுவித்து அதின்பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவான்-அர்ச்சுனன் -வீமசேனன்-ஆதிசேஷன்-இவர்கள்நா

ல்லாரையுங்கொலுமண்டபத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் நவரத்தி
னபீடங்கள்போடுவித்து அவர்களையதின்மேரில் உட்காரவைத்துத் தா
ன் கீழேயுட்கார்ந்திருந்தானப்போது ஆதிசேஷனானவன் அர்ச்சுனன் த
லையிறக்கிக்கொண்டிருக்கிறதைக்கண்டு அர்ச்சுனனைப்பார்த்து ஓ அர்ச்சு
னா நீயேன் விசாரப்படுகிறாய் உன்குமாரன்தானே-யுன்னோடெதிர்த
துயுத்தம்பண்ணினவன் அன்னியனல்லவே கைவிரல்வந்துகண்ணிற்
பட்டால் திரும்பவுமந்தக்கைவிரலைத்தறித்துப் போடுவார்களுண்டோ
ஆகையினால்உன்குமாரனும்நீர்பேசவில்லையென்று துக்காக்கிராந்தனாய்
இமோற்பர்வதத்திற்குப்போய்ப்பிராணத்தியாகம்பண்ணிக்கொள்ளுகி
றேனென்று ஆலோசனையாயிருக்கின்றானப்படிநீ கோபமாயிருக்க
லாகாது பூலோகத்தில்பிள்ளையானவன் தகப்பனுக்கு ஒருகுற்றஞ் செ
ய்தால் அதைப்பொறுத்துரட்சிக்கிறது பிதாவினுடைய கடமையல்ல
வோ ஆதலால்நீ கோபத்தைத்தணித்து உன்னுடைய குமாரனை ஆதர
னை செய்துரட்சியுமென்றுசொல்ல அதுகேட்டு அர்ச்சுனனும்நம்முடை
யபிள்ளையினால் நமக்கு இத்தனை அவமானம்வந்ததேயென்று வெட்கத்து
டனேயிருக்க அதைத்தெரிந்துபின்னையும் ஆதிசேஷனானவன் ஸ்ரீகிருஷ்
ணபகவானைப்பார்த்து ஐயா சனார்த்தனா-அச்சுதா-வரதா-புருஷோத்தமா
தேவரீரிப்படிக்குஉபேட்சையாயிருந்து பார்த்துக்கொண் டிருப்பது
தருமமாயிருக்கிறதோ அப்படிசெய்யவேண்டாம் அர்ச்சுனனையும்பப்பிர
வாகனையும் உறவுபண்ணிவையுமென்றுசொல்ல அதுகேட்டு அந்தப்
பகவானுர் நகைத்து ஆதிசேஷனைப்பார்த்து ஓ அனந்தா நாம் ஒருவார்த்
தைசொன்னால்யாருங்கேட்கமாட்டார்கள் இதோ எல்லாருக்கும் பெரி
யவர்வீமசேனனிருக்கின்றார் அவரையல்லாமல் ஒருகாரியமும் நடக்கமா
ட்டாது அவரேகாரணகர்த்தர் நமக்கொன்றுந்தெரியவராது ஆகையால்
சகலநன்மைதின்மைகளும் அவருக்கேயல்லாமல் நமக்குவந்ததென்னவெ
ன்றுசொல்லியருளினார் அந்தவார்த்தைகளெல்லாம்வீமசேனன் கேட்டு
ச்சிரித்துக்கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து ஐயா தேவகிநந்தனா நீர் என்
னைப்பரிகாசம்பண்ணவோவந்தீர் உம்மாலாகாதகாரியமொன்றுண்டோ
ஜகப்பட காபடசூஸ்திராவதாரி நீர் அப்படி சொல்லாமல் அர்ச்சுனனு
டையகோபத்தைத்தீர்த்துப் பப்பிரவாகனைரட்சித்தருளுமென்று சொ
ன்னான் இந்தவார்த்தைகளையெல்லாம் பப்பிரவாகன் கேட்டு மகாதுக்
காக்கிராந்தனாய்ப்பிதாத்துரோகியாகியநாம் பூமியிலிருக்கலாகாது மகாக்குரு
த்தாகியபாதகம்வந்துசம்பவித்தது ஆதலால்இந்தச்சரீரத்தைவைத்தி
ருக்கப்படாது இதுகாரியத்திற்கு இமோற்பர்வதமட்டுக்கும் போ
கவேண்டுமோ இவ்விடத்தில்தானேசீவனைவிட்டுவிடுகிறது யுத்தமமெ
ன்றுதீர்மானித்து அவ்விடத்தில்தானே சர்ப்பாசயனம்பரப்பி அதன்
பேரில்உட்கார்ந்துகொண்டு பிராணத்தியாகம்பண்ணிக்கொள்ளப்போ
ம்பொழுது அதுதெரிந்து ஆதிசேஷனும்-கிருஷ்ணபகவானும்-வீமசேன
னும் திடுக்கென்றெழுந்து ஓடிவந்து பப்பிரவாகனைப் பிடித்துக்கொண்டு
அவனுடையதுக்கத்தைத் தீர்த்து அவனை யழைத்துக்கொண்டுபோ
ய் அர்ச்சுனனுடையபாதத்திற்போட்டுக்கிருஷ்ணமூர்த்தியானவர் அருச்
சுனனைப்பார்த்து ஓ அருச்சுனா உன்கோபத்தைவிட்டு உன்குமாரனை

ஆதாவிண்ணப்பண்ணினென்றுசொல்ல அதுகேட்டு அருச்சுனனானவன் தனக்
குள்ளிருந்தகோபத்தையும்வெட்கத்தையும்விட்டுவிட்டுச் சந்தோஷகர
மாய்ப்பப்பிரவாகனையெடுத்துமார்போடுதழுவிக்கொண்டு ஓ குமாரா
பப்பிரவாகா இத்தனை விபரீதமுங் கங்காதேவிசாபத்தினால் வந்ததே
யல்லாமல்வேறல்ல இதனாலெனக்குக்கீர்த்தியேயல்லாமல் அபகீர்த்தி
யல்ல நீ இதைக்குறித்துவிசாரப்படவேண்டாம் சந்தோஷமாயிருவெ
ன்று பிரியவசனமாகச்சொல்ல அதுகேட்டுப்பப்பிரவாகனும்சந்தோஷ
சமுத்திரத்தில்மூழ்கினவனாய்ப்பிதாவினுடைய அனுமதியின்பேரில் கி
ருஷ்ணபகவான்முதலானவர்களுக்கெல்லாம்போசனமுதலான சர்வ உ
பசாரங்களும்நடப்பித்துப்பிற்பாடுநாட்டியப்பெண்களையும் பதினெட்டு
வகைமேளவாத்தியங்களையுமழைப்பித்துச்சகலமானபேருக்கும்பொழு
துபோக்கிக்கொண்டிருக்கும்படி திட்டம்பண்ணினான் இந்தப்பிரகாரம்
கிருஷ்ணபகவானும் அருச்சுனராசனுடனே மணிபுரத்தில்ஐந்துநாளிருந்
து ஆறுநாள்காலமேயந்தப்பகவானானவரருச்சுனனைப்பார்த்து ஓ அ
ருச்சுனா நாமஸ்தினாபுரத்திற்குப்போகவேண்டும் எனக்குச்செலவுகொ
டுத்தனுப்பென்றுகேட்டருளினார் அதுகேட்டு அருச்சுனனும் அந்தப்பக
வானைப்பார்த்துஐயாகிருஷ்ணனே இனிமேல் ஒருநிமிஷமாகிலும்தே
வரீரைவிட்டுப்பிரிந்து அப்புறம்இப்புறம்போகமாட்டேன் தேவரீர்என்
னிடத்தில்தானேயிருக்கவேண்டும் ஆகையாலென்தமையனாகிய வீ
மசேனமகாராசனை அஸ்தினாபுரத்திற்கு அனுப்பிவையுமென்றுசொல்ல
அதுகேட்டு அந்தப்பகவானும்வீமசேனனையழைத்து ஓ வீமசேனா நீ அ
ஸ்தினாபுரத்திற்குப்போய்த்தருமபுத்திரனண்டையில்பத்திரமாய்க்காத்து
க்கொண்டிருவென்றுசொல்லியனுப்ப அதுகேட்டுவீமசேனனுமப்ப
டியே நல்லதென்றுசம்மதித்துத் தேவகிதேவி-குந்திதேவி-அசோதை-
உலூவசி-சித்திராங்கதை இவர்களெல்லாரையும்ரதத்திலேற்றிக்கொண்
டு தருமபுத்திரருக்குக்காணிக்கையாக இரண்டாயிரம் ஒட்டகத்தின்பேரி
ல் நவரத்தினங்களையெடுப்பித்துக்கொண்டு கிருஷ்ணருச்சுனர்களிட
த்தில்செலவுபெற்றுக்கொண்டு அஸ்தினாபுரத்திற்குப் போனபிற்பாடு ஆ
தி சேஷனும்கிருஷ்ணருச்சுனர்களிடத்தில்செலவுவாங்கிக்கொண்டுநாக
சேனைகளுடனே பாதாளலோகத்திற்குப்போக அப்போது அருச்சுனம
காராசனானவன் கிருஷ்ணபகவானுடைய அனுமதியின்பேரில் பப்பிரவா
கன் விஸ்வகேது அம்சத்துவசன் முதலான துரைகளுடனும் ரதகசதுரக
பதாதிகளாகிய சதுரங்கபலசேனைகளையும் பிரயாணப்படுத்தி அந்த
மணிபுரத்தையும்மந்திரிகள்வசத்தில் ஒப்புவித்து அஸ்வமேதக்குதிரை
யையும்வீதிமார்க்கமாகப்பூசைபண்ணிமுன்னதாகநடத்தித்தானும்கிரு
ஷ்ணபகவானுடனேயுத்தசன்னத்தனாய்ப்புறப்பட்டுப்பதினெண்வகை
மேளவாத்தியங்களுந்தாந்தாமென்றுமுழங்கத்தக்கதாக மகாவுச்சாகத்
துடனேநடந்தான் கேட்டீரோ செனமேசெயமகாராசாவே அப்பால்
அந்தக்குதிரையானது தன்னிச்சையாகநடந்து காடுகள்செடிகள் வ
னங்கள்வனாந்திரங்கள்கடந்துவடதிசையைநோக்கி ரத்தினபுரமென்கிற
பட்டணத்திற்குச்சமீபமாகவந்து அவ்விடத்தில் அந்தப்பட்டணத்தைப்
பரிபாலனம்பண்ணுகிறவன் மயூரத்துவசமகாராசனென்னும் பெய

ரையுடையவன் மகாவீராதிவீரன் வீரப்பிரதாபன் சத்தியசந்தனன் கனவிலும்பொய்சொல்லாதவன் அரிபக்திமறவாதவன் துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனன் அஷ்டைஸ்வரியங்களும் நிறைந்துள்ளவன் சோடசமகாதானகொடுப்போன் அப்படிப்பட்டராசாதிராசனானவன் அசுவமேதயாகஞ்செய்யநினைத்துத்தான்யாகதீட்சையைக்கைக்கொண்டு குதிரையைப் பூசைபண்ணிவிட்டு அக்குதிரையின் பிறகே வீராதிவீரனான புத்திரனதாமரைத்துவசனையனுப்பிச் சீக்கிரத்தில் பூமிப்பிரதட்சணஞ் செய்வித்துக்கொண்டு வரும்படி கட்டளையிட்டனுப்ப அந்தப்படியேதாமரைத்துவசனானவன் நகுலத்துவசனென்கிற சேனாபதியுடனும் ரதகசதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனைகளுடனும் ரணசூரனாய்ப் புறப்பட்டு அந்தக்குதிரையின்பிறகேநடந்து அங்கங்கேயந்த அஸ்வமேதக்குதிரையைப்பிடித்தெதிர்த்தவர்களோடெல்லாம்போராடிக் கெலித்துக்காணிக்கைகப்பங்களைப்பெற்றுக்கொண்டுபூமிமுழுவதும் பிரதட்சணம்பண்ணிமுடித்துத்தன்னுடையரத்தினபுரத்திற்குச் சமீபமாக வந்துதண்டுவிட்டிறங்கினான் அந்தஅசுவமேதக்குதிரையும்ரத்தினபுரத்துக் கோட்டைவாசலினோரமாய்ப் பச்செனறபுல்லைக்கண்டு மேய்ந்துகொண்டிருந்தது அப்போது அருச்சுனனுடையகுதிரையும்வந்துதாமரைத்துவசனுடைய குதிரையைக்கண்டுசேரப்போச்சுது அதுகண்டுதாமரைத்துவசனுடையகுதிரையும்அருச்சுனராசனுடையகுதிரையைக்கண்டுசேரவந்து அதின்முகத்துடனே முகம்வைத்து முசந்துகொண்டுஏழாரவங்களைச்செய்தது அதுகண்டுதாமரைத்துவசனும்நகுலத்துவசனைப்பார்த்து இதேது அசுவமேதக்குதிரை இதுஎங்கேயிருந்து வந்ததென்றுசொல்ல அதுகேட்டு நகுலத்துவசனும் அந்தக்குதிரையின் சமீபமாகப்போய்க்குதிரையைப்பிடித்துக்கொண்டுவந்து தாமரைத்துவசனிடத்தில் ஒப்புவித்தான் அப்போது தாமரைத்துவசனும் அந்தக்குதிரையினுடையலலாடத்திற்கட்டியிருக்கின்றவிருதாவோலையைவாசித்துப்பார்த்துப்புன்சிரிப்பாகச்சிரித்துத்தலையையசைத்துச் சேனாபதியைப்பார்த்து ஓசேனாபதியே இந்தஅதிசயத்தைக்கேட்டாயோ அதுவென்னவென்றால் அஸ்தினபுரத்தையரசாட்சிசெய்கின்றதருமராசனானவர் பயித்தியம்பிடித்துத்தானே வீராதிவீரனென்றுகர்வித்து அசுவமேதயாகஞ் செய்துமுடிக்க நினைத்துக் குதிரையைவிட்டிருக்கின்றார் அந்தராசன் இனிமேல்யாகம்பண்ணிமுடிக்கிறதுதெய்வத்திற்கே தெரியும் அதுவுமல்லாமல் இந்தக்குதிரையின்பிறகே யுத்தசன்னத்தனாய் வருகிறவன்மேட்டாணமேட்டியாகிய அருச்சுனனும் அவன்நமதுகுருசுவாமியாகியகோபாலகிருஷ்ணமூர்த்திக்குமைத்துனனும்ஆகையால்நாம்அருச்சுனனைமடக்கிக்கொண்டுசாக அடித்துநோகப்பண்ணினால்அவனுக்குச்சகாயமாய் ஸ்ரீகிருஷ்ணபகவான்வந்தருளுவார்நாமவரைப்பிடித்துக்கொள்ளலாம் இந்தைபத்தினமல்லவோ நம்முடைய வெண்ணம் நிறைவேறுவதல்லாமலும் இந்தக்கண்டுடனே கூடஅருச்சுனன்மகனானபப்பிரவாகனும்வருவான் அவனைப்பலசாலியென்றுசிலர் சொல்லுவார்கள் ஆனாலாகட்டும்இந்தக்குதிரையைக்கொண்டுபோய் நம்முடையதண்டிடனே கட்டிவையென்றுசொல்ல அதுகேட்டு அந்தச்சே

ஜதிபதியுந்தாமரைத்துவசனைப்பார்த்துஐயாராசநந்தனாஅந்தவருச்சுனன் எம்மாத்திரம அவனைசட்டைபண்ணித் தேவரீரவனுடனே சண்டைபண்ணவேண்டுமோ அப்படிநீ யோசிக்கவேண்டியதில்லை அவன் இவ்விடத்திற்குவருவானாகில் அவனையுமவன்சேனைகளையுமென்னுடையபாணாக்கினியால்தானேகண்டித்துவிடுகிறேன் நீதற்குளவ்வளவுஞ்சந்தேகிக்கவேண்டாம் அல்லது அந்தபப்பிரவாகனை மகாபலசாலியென்றுமதித்திருக்கிறீரோ அவன்வந்தாலென்ன அவன்நம்முடையகோட்டைசாலைப்பெண்களில்புட்பாஞ்சலியென்பவளுக்கு வருஷத்திறகொருதரம்ரத்தினங்கொண்டுவந்துகொடுக்கிறவனல்லவோ அவன் எம்மாத்திரம் அவனமக்குசேட்டானவனோவென்றுசொல்ல அதுகேட்டுத்தாமரைத்துவசனுஞ்சந்தோஷித்துத்தனதுசேனாபதியைப்பார்த்துஓநகுலத்துவசாநமக்கேசெயகாலமிருக்கின்றதுநீசீக்கிரத்தில் குதிரையைக்கொண்டுபோய்ப்பத்திரப்படுத்திவிட்டுநமதுசேனைகளையெல்லாம்யுத்தஞ்செய்வதற்குமுஸ்தீதுபண்ணிவையென்றுகட்டளையிட்டனுப்பினான்.

## தாமரைத்துவசன்யுத்தம்,

அதுகேட்டுநகுலத்துவசனு மப்படியேநல்லதென்று குதிரையைக்கொண்டுபோய்க்கட்டிவைத்துவிட்டுத் தங்களுடையசேனைகளையெல்லாமெச்சரிக்கைபண்ணி அர்த்தசந்திரவியூகமாகநிறுத்திவைத்துரணபேரிகையயறைவித்துச்சண்டைக்குமுஸ்தீதாயிருந்தானங்கேயருச்சுனராசனுங்குதிரைபிடிபட்டுப்போனதைக்கேட்டுக் கிருஷ்ணபகவானுடனேசொல்ல அவரும்ஆலோசனைசெய்துஅருச்சுனனைப்பார்த்து ஓ அருச்சுனாஇப்போதுநமதுகுதிரையைப்பிடித்துக்கொண்டதாமரைத்துவசனோமெத்தவும்பலவந்தன் அவன்தரும சொரூபன் சத்தியசந்தனான விஷ்ணுபக்தன் வீராதிவீரன் அவனைசெயிக்கமுடியாது ஆகையினால்அவனுடனேஎவ்விதத்திலாகிலுஞ்சிநேகம் பண்ணிக் குதிரையைமீட்டுக்கொள்ளவேண்டுமேயல்லாமல்சண்டையினால் குதிரையை மீட்டுக்கொள்ளக்கூடாதென்றுசொல்ல அதுகேட்டுஅருச்சுனனும் அந்தப்பகவானைப்பார்த்துஐயாகிருஷ்ணமூர்த்திஅப்படியானால்நாமேபோய்நமக்குதிரையைவிட்டுவிடென்றுபிரியவசனஞ்சொல்லுகிறது வீரத்தன்மையோசுவாமியென்றுதடுத்துச்சொல்ல அதுகேட்டுக்கிருட்டிணதேவரும் ஓ அருச்சுனா அப்படிப்பகையாளிக்குப் பிரியவசனஞ் சொல்லவேண்டியதில்லைநாமும்பின்னிடாமல்சண்டைபண்ணலாம்நீயும் ஹரிபக்தியுள்ளவனல்லவோ நீயும்செயிக்கிறாயென்றுசொல்லி விசுவகேதுவையழைத்துஓவிசுவகேதுவேநமதுசேனைகளையெல்லாஞ்சண்டைக்குமுஸ்தீதாகவியூகங்கட்டிநிறுத்தென்றுகட்டளையிட்டருளினா ரதுகேட்டு விசுவகேதுவும் அந்தப்படியேசேனைகளைக்கூட்டிக் கிருசயூகமாகநிறுத்திவைத்துப்பிரத்தியும்னனையும் அநுசாருவனையும் பட்சிக்குக்கண்களாகநிறுத்தி அம்சத்துவசனையுந்நீலத்துவசனையுங்கால்களாகநிறுத்தியெவ்வர்ணாசுவனையும் பட்பிரவாகனையும் செட்டைகளாகநிறுத்தி

சாத்தகிகிருதவர்மன்மேகவர்ணன் இவர்களைவாலாக நிறுத்திக் கிருட்டி
ணருச்சுனர்களைக்கர்ப்பத்தில்நிறுத்தித்தானுமுக்ராகாரனாய்ப் பட்சிக்கு
மூக்காகநின்றானபேரிகைவெண்கலப்பேரிகைமுதலாகியதுகளையுஞ்ச
கலலோகங்களும்நடுங்கத்தக்கதாகமுழக்குவித்தான் அப்பொழுது கிரு
ட்டிணபகவானுமருச்சுனனைப்பார்த்துஓஅருச்சுனநானுனக்குச் சாரதி
யாகவிருக்கவோ நீகனுயிருக்கவோசொல்லென்றுகேட்க அதற்கு அரு
ச்சுனனுமந்தப்பகவானைப்பார்த்துஐயாதேவரீர் நீகனாய்த்தானே யிரு
மென்றுசொல்ல அதுகேட்டுகிருட்டிண பகவானுந்தாரகனை நினைத்தரு
ளினா ரதுதெரிந்துஅக்கணமே தாரகனுஞ்சகலசத்திர அத்திரமுஸ்
தீதுகளுடனே வைகுண்டரதத்தைக்கொணடுவந்து நிறுத்தினா னது
கண்டுஅந்தப்பகவானும் அந்தரதத்திலேறிக்கொண்டுதமது பாஞ்சசன்
னியத்தையெடுத்துப்பம்பமென்றுஊதியருளினா ரந்தச்சத்ததுடன்
அருச்சுனனுந்தனதுதேவதத்தத்தை யெடுத்து அண்டகடாகமதிரும்
படிமுழக்கஞ்செய்தான் அந்தஓசைகளினால்அருச்சுனனுடையசேனைக
ளெல்லாஞ்சந்தோஷகரமாய்மகாஉச்சாகத்தைப்பொருந்தினார்கள் தா
மரைத்துவசனுடையசேனைகளெல்லாமுச்சாகமடங்கித் திகிலடைந்தா
ர்கள் அப்போதுஸ்ரீகிருட்டிணபகவானும்மகாசந்தோஷத்துடனேசா
ர்ங்கமென்கிறவில்லையெடுத்துத்தமது திவ்யாத்தத்தினாற்பிடித்துக் கு
ணத்தொனிபண்ணித்தமதுரதத்தைச்சகலசேனைகளுக்கு முன்னதாய்
த்தாமரைத்துவசன்பேரில்நடத்தியருளினாரதுகண்டுதாமரைத் துவசனு
ஞ் சிரித்துஅந்ததேவனுக்கு மனோபூசையாய் அர்க்கியபாத்தியமு
தலானசகலவுபசாரங்களுஞ்செய்துதன்னுடையரதத்தைச் சமீபமாகத்
தூரத்தியந்தப்பகவானைப்பார்த்துஐயாருக்மணிமனோகரா சத்தியபாமை
வல்லபாகோபிசாரமணாதேவகிநந்தனபரமபுருஷாஜகசுவாமிநில்லும் நில்
லும் ஏன் இத்தனை துரிதமாய்வருகிறீர்நீரென்னையறியீரோ அறியமாட்
டீரோ இப்பொழுதுஎன்னுடையபாணாக்கினியென்கிறதுளசியினால்உ
ம்மைப்பூசைபண்ணுகிறேன்சற்றுநேரம்பதறாமல்நில்லும் அந்த அருச்
சுனனெப்படிப்போகிறானோநீரெப்படிப்போகிறீரோ பார்ப்போம் உம்
முடையபாணமானதென்னையென்னசெய்யக்கூடும் அதைநான்சற்றே
யறிகிறேனென்றுசொல்லிக்கொண்டிருக்கையில் அருச்சுன னுடை
யசேனைகளெல்லாம்மனோஉச்சாகசந்தோஷகெம்பீரத்துடனே ஸ்ரீகிரு
ட்டிணபகவானுக்குமுன்னதாகப்போய்த் தாமரைத்துவசனுடைய சே
னைகள்பேரில்விழுந்துஅதிககோரமானயுத்தம்பண்ணார்களதுகண்டு தா
மரைத்துவசனும்ஆக்கிரவியாக்கிரநிக்குரோதனாய்த் தன்னுடையகோத
ண்டத்தைக்கையிலெடுத்துக்குமுகுமுவெனகுணத்தொனிபண்ணிய
ந்தவில்லினிடமாகஅனேகமாயிரம்பாணங்களைச்சந்தித்துப் பிரயோகம்
செய்து அருச்சுனனிடசேனைகளெல்லாஞ்சின்னபின்னமாகும்படிக்
கண்டித்துரத்தப்பிரவாகமாக்கித்துரத்திவிட்டானதுகண்டு அம்சத்துவ
சனும் ரோஷதாம்பிராட்சனாகித்தன்னுடையரதத்தைத் தாமரைத்து
வசன்பேரில்துரத்தி அனேகமாயிரம்பாணங்களைப்பிரயோகம்பண்ணி
னார் அதற்குந்தாமரைத்துவசனுவனெவ்வளவுஞ்சஞ்சலப்படாமல்
தன்னுடைய வில்லினிடமாக அநேக நாராசபாணங்களைத் தொடு

த்து அவர்கள் விட்ட பாணங்களையெல்லாம் தும்சப்படுத்தி அவர்களுடை
யசரீரமுழுதுஞ் சல்லடைக்கண்களாகத் துளைத்துச் சதைசதையாகப்
பேர்த்தெறிந்தான் அதனால் அவர்கள் மெத்தவுங் கஸ்திப்பட்டு ரதத்தின்
பேரில்விழுந்து மூர்ச்சையடைந்தார்கள் அதுகண்டு அனுசாலனும்
கோபதீபதனுபரிந்துவிழுந்து தாமரைத்துவசனைப்பார்த்து ஓ இராச
குமாரா நில்லுநில்லென்று சொல்லித் தன்னிட ரதத்தைத் தூத்தி
அநேகமாயிரம் பாணங்களையெடுத்துத் தொடுத்து நில்லுநில்லென்று பிர
யோகம்பண்ணினான் அதுகண்டுதாமரைத்துவசனும் தன்பேரில்வந்
துவிழுந்தபாணங்களையெல்லாங்கண்டித்துத்தள்ளியுடனே ஆயிரம்பா
ணங்களைப் பிரயோகம் பண்ணி அநுசாலுவனிட சரீரமுழுதும்
தைக்கும்படி செய்ய அசந்தவன் சிரலாகம்பண்ணமாட்டாமல் சேனை
விட்டு பூமியிற்குதித்து ஓடிப்போனான் அதுதெரிந்து சாத்தகி-கிருதவ
ர்மன்-மேகவர்ணன்-இவர்கள்மூன்றுபேரும்வந்து சண்டப்பிரசண்டர்
ளாய் ஆக்கிரமித்துத்தங்களுடைய சேனைதாண்டி வில்லைவளைத்துப் பா
ணங்களைப்பிரயோகித்துத் தங்களுடைய தூணீரத்தில் பாணமில்லாமற்
போகத்தக்கதாக எங்கேபார்த்தாலும் பாணமயமாக நிரப்பினார்கள் அ
ந்தப்பாணங்கள் நிவேகமாய்வந்து சுருக்குசுருக்கென்று தாமரைத்துவச
னிட சாரதிகுதிரைகள்பேரிற்றைத்து ரத்தமயமாக்கிவிட்டு அவனை
யும்வருத்தும்போது அதனால் தாமரைத்துவசன் மெத்தவும்நொந்து கா
லாக்கினிருத்திரனைப்போலச்சீறிவிழுந்து அநேகமாயிரம் பாணங்களை
யெடுத்து வில்லினிடமாகத்தொடுத்துப்பிரயோகம்பண்ணி அந்தமூன்
றுபேருடைய ரதங்களையும் பொடிபாக்கி அவர்களுடைய கைவில்லையு
ங் கண்டித்துப்பின்னையும் அவர்களுடைய மார்பினிடமாகத் தைக்கும்
படி பத்துநாராசங்களையெடுத்துப்பிரயோகம்பண்ணினான் அதுகளும் தி
குதிகுவென்று வடவாமுகாக்கினிபோலஎரிந்துகொண்டுவந்து மூன்
றுபேருடைய மார்பிலும் பட்டு முதுகிலுருவிப்போய்விட்டது அதனாலவ
ர்கள் மெத்தவும்நொந்து தலைவிரிகோலமாய் ஒருவர் போனவழியொரு
வர்போகாமல் அந்தமூன்றுபேரும் ஓடிப்போய்விட்டார்கள் அதுகண்டு
பிரத்தியுமனனும் அநிருத்திரனும் மகாகோபதீபதர்களாய் இரண்டுகண்க
ளிலும் நெருப்புப்பொறிகள் குபீல்குபீலென்று பறக்கும்படியாக ஆக்ரு
ஷத்துடனேவந்து தாமரைத்துவசனைப்பார்த்து ஓ இராசகுமாரா நீமிஞ்
சவேண்டாம் நில்லுநில்லு உன்னையின்னஞ்சற்றுநேரத்தில் இந்தப்பூமிக்
குப் பலியிடுகிறோமென்று சொல்லி வில்லைவளைத்து அநேகமாயிரம்பா
ணங்களைப்பிரயோகித்துத் தாமரைத்துவசனுடைய ரதத்தைக் கண்
ணுக்குத்தெரியவொட்டாமற் சரக்கூடங் கட்டினதுபோல மறைத்து அ
ட்டகாசஞ்செய்துநின்றார்கள் அதுகண்டு தாமரைத்துவசனுங் காலாக்கினி
ருத்திரனைப்போலச்சீறிவிழுந்து சூரியகிரணங்களைப்போல அதிதீட்சண்
யமாய்விளங்குகின்ற பாணங்களையெடுத்து வில்லினிடமாகச் சந்தித்துப்
பிரயோகம்பண்ணி அந்த இரண்டுபேருடைய கைவில்லையும் ஒடித்து
அவர்கள் சரீரமுழுதும் ஊசிநாட்ட இடமில்லாமற் சல்லடைக்கண்களாக
த் துளைத்து மார்படையும் பத்தலாகக்கிழித்தது அதனால் மெத்தவும்
நொந்து அந்த இரண்டுபேரும் வாயினாலும் நாசியினாலும் ரத்தங்களைக் கு

ல்குழியிலென்றுகக்கிக்கொண்டுதேரின்பேரில்மூர்ச்சையாய்விழுந்துவிட்டார்களதுகண்டுப்பிரவாகனும்மிகுந்தகோபாந்தகாரனாய்ஆக்கிரகித்துப் பற்களைநறநறவென்றுகடித்துக்கொண்டுமீசைகள் படபடவென்று துடிக்கும்படியாகத் தன்னிடாதத்தைத் தாமரைத்துவசன்பேரிலதிவேகமாகத்தூரத்தி மகாடக்ராகாரனாய் அந்தராசகுமாரனைப்பார்த்து அடாதாமரைத்துவசாவுண்டாநீதலைகீழாய விழுகிறாய் இப்பொழுது ஓடிப்போகாமனின்றுஎன்னோடுபோராடென்றுசொலலித்தன்னையிலிராகின்றவில்லைவளைத்துக்குணத்தெனிபண்ணியந்தவில்லினிடமாக அதிதீட்சண்யமான அநேகபாணங்களைத்தொடுத்துப் பிரயோகம்பண்ணி தாமரைத்துவசனிட தேரைச்சாரதிகுதிரைகளுடனே பொடிபொடியாக்கி அவன்கையிலிராகின்ற வில்லைக் கண்டித்துக்கவசத்தைக்கிழித்துமார்பை யும்பாத்தலாக்கினான் அதனால்தாமரைத்துவசனும்மிதந்தஆயாசமடைந்தெவ்வளவும்பின்னிடாது வேறொரு தேரிலேறிக்கொண்டுமறறொருவில்லையெடுத்துக்குணத்தொனிபண்ணி யநேகமாயிரம் பாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்துபப்பிரவாகனிடசாரதியையுங்குதிரைகளையுங்கொன்று அவனகைவில்லையுங் கண்டித்துக்கவசத்தையுங்கிழித்துப் பின்னையும் அந்தபப்பிரவாகனைப் பார்த்து அடாபப்பிரவாகாநானிந்தக்கணமே உன்னைக்கொன்றுவிடுவேன் அப்படிக்கல்லாமல்விட்டுவிட்டதுஎதினாலென்றால் லெங்களுடையநாடகசாலைப்பெண்களில்புட்பாஞ்சலியென்கிறபெண்ணுக்குவருஷத்திற்கொருநாமரத்தினங்கள்கொண்டுவந்துகொடுக்கிறவனாகையால்மன்னித்துவிட்டேனென்றுசொல்லி சரீரமெல்லாஞ்சதைசதையாகப் பேர்த்த்தெறிந்துஅவனைக்கைகாலாடவொட்டாமல்பிரமிக்கப்பண்ணினான்அதனாற்பப்பிரவாகனும்மிகுந்தஆயாசத்தைபடைந்து மகாவெட்கத்துடனேகைகால்களையுதறிக்கொண்டுநிர்வாகம்பண்ணமாட்டாமலோடிப்போனான் அதுகண்டுதாமரைத்துவசனும்அருச்சுனன்பேரில் மூணங்குடக்கையில் அதுதெரிந்துகர்ணன்குமாரனானவிசுவகேதுவும் ஆக்கிரகித்துத்தன்னிடாதத்தைக்குறுக்கேதுரத்தி அந்தவீரனைப் பார்த்து அடாதாமரைத்துவசாநீஎங்கேபோகிறாய் சற்றேநில்லென்றதட்டித்தன்னிடவில்லிலேகோடையிடிக்குச்சமானமான அனேகபாணங்களைத்தொடுத்து அதிவேகமாகப்பிரயோகம்பண்ணித் தாமரைத்துவசனிடாதத்தைச் சாரதிகுதிரைக ளுடனே யதம்பண்ணி அவனது கைவில்லையுங்கண்டித்து மார்பையும் பத்தலாகக் கிழித்துவிட்டான் அதுகண்டுதாமரைத்துவசன் உடனோதத்திலேறினான் அதையும் விசுவகேதுகண்டித்துவிட்டான்பின்னையுமொருாதத்திலேறினான் அதையுங் கண்டித்துவிட்டானிப்படி நூறுாதமட்டுக்கும் விசுவகேது கண்டிக்க அதனால்தாமரைத்துவசன்மெத்தவுமவருத்தமடைந்து வேறேதிவ்யாதத்தின்பேரிலேறிக்கொண்டுவில்லைக்குணத்தொனிபண்ணி அந்தவில்லினிடமாகஅக்கினிப்பொறிகளைக்கக்குகின்றபாணங்களை அபரிமிதமாகத்தொடுத்துவிசுவகேதுவினிட மார்பிலேதைத்துமுதுகிலூடுரும்படிப்பிரயோகித்து அவனேறியிருக்கின்ற ரதத்தைப் பொடியாக்கி அவன் கைவில்லையும்பொடித்துக்கவசத்தையுமறுத்தானதனால்விசு

வகேதுமெத்தவும்நொந்து அடியற்றமரம்போல ரதத்தின்பேரில்விழுந்து மூர்ச்சையடைந்தான் அப்போது தாமரைத்துவசன் மகாஉக்கிராகாரனாய் தனது வில்லினிடமாக அக்கினிக்குச் சமானமானபாணங்களைத் தொடுத்துஎங்கேபார்த்தாலுஞ்சரவருஷம் பொழிந்ததுபோலப்பிரயோகஞ்செய்யஅதனாலச்சதுரங்கபல சேனைகளெல்லாம் பயந்துஓடிப்போய்அர்ச்சுனனிடத்திற்சரணமடைந்து அர்ச்சுனனைப்பார்த்து ஐயாகிரீடி எங்களைக்காப்பாற்றிரட்சியும்ரட்சியும்ஐயாவென்று முறையிட்டார்கள்.

அதுகேட்டுஅர்ச்சுனனும்அவர்களுக்கு அப்யாஸ்தங்கொடுத்துப்பிற்பாடுஸ்ரீகிருஷ்ணபகவானுடனேகூடவந்துதாமரைத்துவசன்பேரில்எதிர்த்துகாண்டீபத்தைக்குணத்தொனிபண்ணி அதனிடமாகத்தேவேந்திராதிதேவர்கள்கொடுத்ததிவ்யபாணங்களைத் தொடுத்துப்பிரயோகப்பண்ணினான் அதுகளையெல்லாந்தாமரைத்துவசனானவன்மிஞ்சியொட்டாமல்நடுப்பாதியில்பஸ்மீகரப்படுத்திவிட்டுப்பின்னையுந்தன்னுடைய அஸ்திரங்களினால்கிருஷ்ணார்ச்சுனர்களிருவருடையசரீரத்தையும்வசந்தகாலத்தில் மலர்ந்துபூத்த முருக்கம்விருட்சம்போலச்செய்துமெத்தவும்நோகப்பண்ணினான் அதனாலவ்விரண்டுபேரும் மிகுந்தபிரயாசமடைந்துகாற்றுந்தீயுங்கூடினதுபோல மகாஉக்கிராகாரமாய்த்தங்களுடையஅஸ்திரங்களினால்தாமரைத்துவசனுடையசரீரமுழுதும் ரத்தமயமாக்கினார்கள் இப்படிஅர்ச்சுனனும்தாமரைத்துவசனும் ஏழுநாள் இராத்திரியும்பகலும் போராடினார்கள் அப்படிப்போராடுகிறபோது அர்ச்சுனனுந்தாமரைத்துவசனுடையரதத்தைப்பொடியாக்கினான், அவன்பின்னையும்ஒருதேரின்பேரிலேறினதையுமர்ச்சுனன்பொடியாக்கிவிட்டானதுகண்டுதாமரைத்துவசனு மகாகோபங்கொண்டு அர்ச்சுனனைப்பார்த்துஓஅர்ச்சுனா பளாபளா நீமெத்தவுங்கெட்டிக்காரன் நானும்உன்னைமெச்சினேனென்றுசொல்லிஅதிசீக்கிரத்தில்வேறேயொருதேரிலேறிக்கொண்டுவில்லைக்குணத்தொனிபண்ணி அந்தவில்லினிடமாக இரண்டுஅர்த்தசந்திரபாணத்தைத்தொடுத்துப்பிரயோகம்பண்ணி அர்ச்சுனனுடையகாண்டீபத்திலும் ஸ்ரீகிருஷ்ணபகவானுடையசார்ங்கத்திலுங்கட்டியிருக்கின்ற நாணியையறுத்தெறிந்தான் அதுகண்டு அர்ச்சுனனும்ஸ்ரீகிருஷ்ணபகவானும் ஒருவர்முகத்தைஒருவர் பார்த்துக்கொண்டிருக்கையில்தாமரைத்துவசனும்தேரைவிட்டுப்பூமியிற்குதித்து ஓடிவந்துகோழிக்குஞ்சைப்பருந்தெடுத்துக்கொண்டுபோகிறதுபோல அர்ச்சுனனைத்தேரோடேதூக்கிக்கொண்டு ஆகாயவீதியிற்போய்நின்று கிறுகிறுவென்றுஅந்தரதத்தைச்சக்கிராகாரமாய்ச்சுற்றிப்பூமியில் விட்டெறிந்தானதுவுஞ் சுழன்றுகொண்டுவரும்போது ஸ்ரீகிருஷ்ணபகவான்கண்டு அ

டுதிகிலடைந்து ஆஆ மோசம்வந்ததேயென்று கொப்பெனவெழுந்திரு
ந்து அந்தத்தேருக்குநேராய்நின்று தம்முடைய திவ்யாஸ்தத்தைநீட்டிப்
பூமியில் விழப்போகின்றதேரைப்பிடித்து எப்போதும்போல நிறு
த்தியருளினார் அதுகண்டு தாமரைத்துவசனுஞ்சிரித்து அந்தப்பகவானை
பபார்த்து ஓதிருட்டிக்கிருஷ்ணா நீர் இப்படிசெய்யலாமோ இப்படிப்பட்
டபட்சபாதம்பண்ணலாமோ ரணக்களத்தில்என்கையில் அர்ச்சுனன்
விழுகிறான்நான் அவன்கையில் விழுகிறேனென்று நீர்சும்மா யிராமல்
அர்ச்சுனனுக்குச்சகாயம்பண்ணினீர் இதுஉமக்குநியாயமோபூர்வகால
த்தில்வேதங்களைத்திருடிக்கொண்டுபோன சோமுகாசுரனிமித்தம்
ஒருமீனாசப்பிறந்து அவனைக்கொன்றவர் நீரல்லவோ அதுவுமல்லாமல்
தேவர்களும்இராட்சதர்களுங்கூடிப்பால்சமுத்திரத்தில் அமிர்தங்கடை
யும்போதுமந்தாகிரியானது சமுத்திரத்தில் மூழ்கிப்போகவொட்டாமல்
ஆமையாகப்பிறந்துமலையைச்சுமந்தவர் நீரல்லவோ இரணியாட்சதனு
னவன்பூமியைப்பாயாகச்சுருட்டிப் பக்கத்தி லிடுக்கிக்கொண்டுபாதாள
லோகத்திற்குப்போய் ஒளித்துவைத்துக்கொண்டபோது ஒருபன்றியா
கப்பிறந்துஅவனைக்கொன்று பூலோகத்தையெப்பொழுதும்போலநிலை
நிறுத்திவைத்தவர்நீரல்லவோ இரணியனனவன் ஹரிநமோஸ்துஎன்
றுஎவர்களையுஞ் சொல்லவொட்டாமலடக்கி இரணியநமோஸ்துவெ
ன்றுஎவர்களையுஞ்சொல்லும்படிபயமுறுத்திவைத்துக்கொண்டு மகா
கர்வத்துடனேயிருக்குங்காலத்தில் அவன்பிள்ளையாகிய பிரகலாதஆ
ழ்வாரையும்அப்படியேசொல்லென்றுசொல்லஅந்தமகானுபாவன் அப்
படிசொல்லாமல்ஹரிநமோஸ்துஎன்று திடச்சித்தமாகச்சொல்ல அது
கேட்டுமெத்தவுங்கோபங்கொண்டுநீசொல்லுகிறஅரி யெந்தவிடத்திலி
ருக்கிறானென்றுஇரணியன்கேட்கத்தூணிலுந்துரும்பிலுமற்றுமுள்ள
எந்த விடங்களிலும் பிரமாமுதல் பிபீலிகா பரியந்தமுள்ள சகல
ஜீவர்களிடத்திலும்சர்வவியாபகனாய்ச்சர்வாந்தரியாமியாய்ப் பிரகாசித்து
க்கொண்டிருக்கிறானென்றுபிரகலாதன்சொல்லஅப்படிச்சொல்வாயானா
லிந்தத்தூணிலும்இருப்பானோவென்றுஇரணியனனவன் தன்னுடைய
கையினால் ஓங்கியறைந்தமாத்திரத்தில் அந்தபாகவதசிகாமணியாகிய
பிரகலாதஆழ்வானிமித்தம் அந்தத்தூணினிடத்தில் நரசிங்கமாகப்பிறந்
துஇரணியனைச்சங்கரித்துப் பிரகலாத ஆழ்வானைரட்சித்தருளினவர் நீ
ரல்லவோ அதுவுமல்லாமல்திரிலோகத்தையும் ஒருகுடைநிழலின்கீழ் அ
ரசாட்சிசெய்த மாபலிச்சக்கிரவர்த்தியினிடத்திற்குப் பிரமசாரியாகப்
போய் மூன்றடிநிலம்தானமாகக்கேட்டுவாங்கிஅவன்குடியைக்கெடு
த்தவர்நீரல்லவோ இன்னமுங்கார்த்தவீரியார்ச்சுனனிமித்தம் பர
சுராமனாகப்பிறந்துபூமியெல்லாம் நிர்மூலம்பண்ணினவர் நீரல்லவோ

இதுவுமல்லாமல் ஸ்ரீராமனாகப்பிறந்து குரங்குகளைச் சேனையாகக்கூட்டி
க்கொண்டு ராவணாதிராட்சதர்களையெல்லாம் வேரறுத்தவர் நீரல்லவோ
கடைசியில்கோபாலகிருஷ்ணனாகப்பிறந்து இடைச்சிகள் வீடுதோறும்
பால்தயிர்வெண்ணெய்களைத்திருடியுண்டு இன்னம் அம்மானாகிய கஞ்
சன்முதலான அனேக ராட்சதர்களைக்கொன்று மகாகீர்த்திப் பிரகாசத்
தையடைந்து அக்கீர்த்தியையெல்லாம் இப்போது இந்த அர்ச்சுனனு
க்குச்சாரத்தியம்பண்ணிப்போக்கடித்துக்கொண்டீரேயும்முடைய திரு
ட்டுக்குணம்எப்போதும்போகிறதில்லையேயல்லது உம்மைநான் கொஞ்
சத்திலேவிடுகிறதில்லையென்றுசொல்ல அந்தவார்த்தைகளை யெல்லா
ம்ஸ்ரீகிருஷ்ணபகவானானவர்தோத்திரமாகக்கொண்டு திருவுளமகிழ்ந்து
பிற்பாடுகோபங்கொண்டவர்போலத் தமதுதிருப்பாதத்தினால்தாமரை
த்துவசனையுதைத்துக்கையிற்பிடித்திராநின்றகதையினால்அவன் தலையி
ன்பேரிலடித்தார் அந்தஅடியினால் தாமரைத்துவசனும்பூமியில் வி
ழுந்துமூர்ச்சையடைந்துசற்றுநேரத்தில்தெளிந்தெழுந்திருந்துவேறொ
ருரதத்திலேறிக்கொண்டுவில்லைக்குணத்தொனிபண்ணிஅர்ச்சுனராசனு
டனேயெதிர்த்துநின்றான் அப்போதுஅர்ச்சுனனும் ஸ்ரீகிருஷ்ணபக
வானைப்பார்த்துஐயாகிருஷ்ணாதேவரீர்ரதிகனாயிருப்பதைவிட்டுஎனக்கு
ச்சாரதியாயிருந்து குதிரைகளையோட்டுவீரானால்நானிந்தத் துர்மார்க்க
னையவசியங்கண்டிக்கிறேனென்றுசொல்ல அதுகேட்டு அந்தபகவானும்
அப்படியே சம்மதித்துத் தமது வைகுண்டரதத்தைக் கொண்டு
போம்படித்தாருகனுக்குச்சொல்லிவிட்டு முடிகோலைக்கையிற்பிடித்துக்
கொண்டுபார்த்தனுடையரதத்திலேறி அந்தரதத்திலிருக்கின்றசாரதி
யைப்போகச்சொல்லித்தாம்உட்கார்ந்துகொண்டுசவுக்கினால் குதிரைக
ளையதட்டியந்தரதத்தைநடத்தியருளினார் அப்போது அர்ச்சுனனுந்தன்
னுடையகாண்டீபத்தைக்குணத்தொனிபண்ணியதிலேயனேகமாயிரந்
திவ்யபாணங்களைத்தொடுத்துப்பிரயோகித்துத் தாமரைத்துவசனை மெ
த்தவுங்கஸ்திப்படுத்திஒருபாணத்தினால்அவன்சாரதியினுடைய சிரசை
க்கண்டித்துப்பத்துப்பாணத்தினால்அவன்ரதத்தையும் பொடியாக்கினா
னதுகண்டுதாமரைத்துவசனுமகாகோபதீப்தனாய்எரிந்து விழுந்துபளா
ளாரென்றுயிருந்ததென்றுகறுவிக்கொண்டுவேறே யொருதேரிலேறிவி
ல்லைக்குணத்தொனிபண்ணியந்தவில்லிலே சூரியகிரணங்களைப்போலஅ
திதீட்சண்யமானபாணங்களைத்தொடுத்துப்பிரயோகித்துக்கிருஷ்ணார்ச்
சுனர்களிருவருடையசரீரத்தையுஞ்சதைசதையாகப்பேர்த்தெறிந்துஎங்
கேபார்த்தாலும் ரத்தவெள்ளமோடும்படிசெய்துவிட்டான் அதனா
ல்அந்தபகவானுடையதிருமேனி மெத்தவும் இளைப்படைந்து இனி
அர்ச்சுனனுடைய கையினால்இவனைச்செயிக்கமுடியாதுதாமே கொ

ல்லவேண்டுமென்றுநிச்சயித்துத்தம்முடையசக்கராயுதத்தை நினைத்தருளினார் அப்படிநினைத்தமாத்திரத்தில் கோடிசூரியப்பிரகாசமாய் விளங்குகின்றஅந்தச்சக்ராயுதமானது ஸ்ரீகிருஷ்ணபகவானுடையகையில் நின்றது அதுதெரிந்துகிருஷ்ணமூர்த்தியானவர் அந்தச்சக்கரத்தைத்தமதுவலக்கரத்திலேந்திக்கொண்டுஇவனைக்கொல்லுகிறேனென்றுமலையைவிட்டுக்குதித்தோடிவருகின்றஒருசிங்கம்போலத் தேரைவிட்டுக்குதித்தோடிவருகிறவேகத்தினால்வயிற்றிலடங்கியிருக்கின்றபிர்மாண்டகடாகங்களெல்லாங்குலுங்கினது பூமியெல்லாங் கிடுகிடுவென்றுநடுங்கினது இந்தப்படியோடிவருகின்றகோலாகலத்தைக்கண்டு தாமரைத்துவசன்சிரித்துத்தானுந்தேரைவிட்டுக்குதித்து அந்தப்பகவானுக்கெதிரேநடந்துவந்தவரைப்பார்த்துஓபரந்தாமா வாரும்வாரும் எதோ உம்முடசுறுக்கைப் பார்ப்போமென்று சொல்லித் தாமரைத்துவசனானவன் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியையசையவொட்டாமல்கெட்டியாகப்பிடித்துக்கொண்டானதுதெரிந்து அர்ச்சுனனும் மகாகோபத்துடனே தனதுகாண்டீபத்தில்ஒருபாணத்தைத்தொடுத்துஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடையதிருமேனிபிறபடவொட்டாமல் தாமரைத்துவசன்பேரில்பிரயோகம் பண்ணினான் அதுகண்டுதாமரைத்துவசனும்மகாகோபத்துடனேகிருஷ்ணமூர்த்தியைவலதுபக்கத்திலிடுக்கிக்கொண்டுஓடிவந்து அர்ச்சுனனைத்தூக்கியிடதுபக்கத்திலிடுக்கிக்கொண்டு ஆகாசமார்க்கத்திலெழும்பிஇரண்டுகக்கத்தையுமணைக்கும்பொழுது அதனால்கிருஷ்ணமூர்த்தியானவர் மெத்தவும் வருத்தமடைந்து இனிநம்மால் இவனைசெயிக்கமுடியாதுலகுவாய்த்தப்பித்துக்கொள்ளவேண்டுமென்றுஇரண்டுகண்களையுமூடிக்கொண்டுகைகாலசைக்காமல் ஒடுங்கிப்பிரதமையைப்போலிருந்தார் அதுதெரிந்து அர்ச்சுனனுமப்படியேயிருந்தான் அதுகண்டுதாமரைத்துவசன் அந்தஇரண்டுபேரையும்பார்த்து இவர்களிறந்துபோனார்கள் இனிமேல்இவர்களால்சாமில்லையென்றுபூமியின்மே லெறிந்துவிட்டுஇரண்டுஅஸ்வமேதக்குதிரையையும்பிடித்துக்கொண்டு நகுலத்துவசனுடனேகலந்துரத்தினபுரத்தைச்சேர்ந்துதன்னுடையபிதாவாகியமயூரத்துவச மகாராச னண்டைக்குப் போனான் கேட்டீரோ செனமேசெயமகாராசாவே அப்போது சூரியபகவானும் தாமரைத்துவசனுடைய சவுரியபராக்கிரமத்துக்குப் பயந்து ஒளித்துக்கொண்டதுபோலமேற்குத் திசையில் அஸ்தமனமாகினார் அப்பால் அர்ச்சுனன்சேனைகளுடையமுகவிலாசமொடுங்கினதுபோல தாமரைகளெல்லாமூடிக்கொண்டது எங்கேபார்த்தாலும்காடாந்தகாரமான இருள்நிறைந்துகம்மிக்கொண்டது அந்தவேளையில் தாமரைத்துவசன்போய்தன்னுடையபிதாவைக்கண்டு அவருக்குப்பிரதட்சணநமஸ்காரம்பண்ணி

எழுந்துநின்றுகைகளைக்கட்டி வாய்பொத்திக்கொண்டு அவனைப்பார்த்துஜெயபரமபுருஷா தேவரீருடைய அஸ்வமேதக் குதிரையைவிட்டுப்பூமிபிரதட்சணஞ் செய்துகொண்டு வருகையில் அஸ்தினபுரத்தையாளுகின்றதருமபுத்திரர்விட்ட அசுவமேதக்குதிரைவந்தது அதைக்கண்டுநான்பிடித்துக்கட்டிவைத்தேன் அதையறிந்து ஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்களிருவம் சகலசேனாசமேதர்களாய் என்பேரில் எதிர்த்துவந்து இதுவரையிலும்போராடினார்கள் நான் அவர்களுடைய சேனாசமுத்திரங்களையெல்லாம் துவம்சப்படுத்திவிட்டு அந்தகிருட்டிணார்ச்சுனர்களுடனேபோராடி அவர்களிருவரையும்பிடித்துக்கொண்டு தேவரீரிடத்திற்குக்கொண்டுவாநினைத்துவருகையில் அவர்களிறந்துபோனார்கள் அதுதெரிந்துநானவர்களைரணக்களத்திலெறிந்துவிட்டுக் குதிரையைமாத்திரம்பிடித்துக்கொண்டுநமதுசேனைகளுடனே வந்தேனென்றுசொல்ல அதுகேட்டுஅந்தராசனானவன் புத்திரன்மேல் கோபித்துக்கொண்டு அடாபயித்தியக்காரா நீஎன்னவேலை செய்துவந்தாய் விருதாவானகாரியஞ்செய்துவந்தாயே ஒருகொப்பரிகையுடனே திரவியம்அகப்பட்டால் அந்ததிரவியத்தைஇறைத்துவிட்டுக் கொப்பரிகையைமாத்திரம் எடுத்துக்கொண்டுவந்ததுபோலவும் அமிர்தத்தைவிட்டுவிஷத்தைக்கொண்டுவந்ததுபோலவும் அந்தஅகிலாண்டகோடிபிர்மாண்டநாயகராகிய கிருட்டிணமூர்த்தியை விட்டுவிட்டு இந்தக்குதிரையை ஏன் பிடித்துக்கொண்டுவந்தாயென்று தூறிப் பின்னையுந்தன்குமாரனைப்பார்த்து ஓகுமாரகா நீபோய்அந்தப்பகவானைப்பொழுதுவிடிந்தபின்பாவது இவ்விடத்திற்கு அழைத்துக்கொண்டுவா நான் அவரைப் பூசைபண்ணுகிறதற்கு வேண்டிய பூசாதிரவியங்களும் காணிக்கைக்கப்பங்களும் நவரத்தினமுதலான சகலவஸ்துக்களும் முஸ்தீதுபண்ணிவையென்றுசொல்லித்திட்டம்பண்ணியனுப்பிவிட்டுப்பிற்பாடு அந்தமயூரத்துவசமகாராசனும்எப்பொழுது பொழுதுவிடியப்போகின்றதென்றுயாகசாலையிலிருந்துவழிபார்த்துக்கொண்டிருந்தான் அங்கேதாமரைத்துவசன்கையினாலடிபட்டுமூர்ச்சையாய்விழுந்துகிடந்தகிருட்டிணார்ச்சுனர்கள் இருவரும் மூர்ச்சைதெளிந்துமெள்ளக்கண்களைத்திறந்து தாமரைத்துவசன் போனானோ இல்லையோவென்றுதலையையெடுத்துப் பார்த்தவளவில் அவனையும் அவன்சேனைகளையும் காணாதபடியினால் குதிரையைப்பிடித்துக்கொண்டுபட்டணத்திற்குப்போய்விட்டானென்றுநிச்சயம்பண்ணிக்கொண்டுஎழுந்திருந்து ஒருவர்க்கொருவர்சரீரத்தைத்தடவித்துடைத்துக்கொண்டபின்பு அர்ச்சுனனானவன் தன்சேனைமடிந்துபோனதையுந் தனக்குவந்துசம்பவித்தஆபத்தையும் அசுவமே

தக்குதிரையைப் பிடித்துக்கொண்டுபோனதையும் நினைந்துவிசார ப்பட்டுக்கிருட்டிணபகவானைப்பார்த்து ஐயாஜநார்த்தனா பார்த்திரேச தேவரீரிருந்தும் எனக்குவந்த ஆபத்துகளோ மட்டுமிதமில்லை எ ன்னுடையசேனைகளெல்லாம் மடிந்துபோய்விட்டது குதிரையும் பிடி பட்டுப்போச்சுது தருமபுத்திரர் செய்கிறயாகமும் நிறைவேறாமற்போ ய்விட்டது எனக்கோவென்றால் மிகுந்தஆயாசமாயிருக்கின்றது பே சுகிறதற்கேசக்தியுமில்லை நானென்னசெய்வேன் சுவாமியென்றுசொ ல்லஅதுகேட்டு அந்ததேவனுமர்ச்சுனனைப்பார்த்து ஓஅர்ச்சுனா உ னக்குக்குதிரைபோச்சுதென்றும் சரீரமெல்லாம் காயமாச்சுதென்று ம்என்னுடனேசொல்லி விசாரப்படுகிறாயேநான் என்னுடையதுக்க த்தைஆருடனேசொல்லி யாற்றப்போகிறேன் நான் இதுவரையிலும் அநேகயுத்தத்திற்போராடி யனந்தமாயிரம் சத்திரஅத்திரங்களினாலும் நொந்திருக்கிறேன் இப்படிப்பட்டபிரயாசமடைந்ததில்லை முன்பு பாரதயுத்தத்திலேஉனக்குச்சாரத்தியம் பண்ணினபோது வீட்டுமர்து ரோணர்முதலானபிரமுகாளுடையபாணங்களினாலும் நொந்திருக்கிறே ன் அப்பொழுதும்இவ்வளவுவருத்தங்கண்டதில்லை இப்பொழுதுசரீர முழுதுங் காயமாச்சுது மனஞ் சிதறிப்போய்விட்டது எழுந்திருந்து நடக்கிறதற்கே சீவனில்லை என்னுடையதுக்கத்தை என்ன சொல்ல ப்போகிறேன் விசயாவென்றுசொல்ல அதுகேட்டு அர்ச்சுனனும் மகாஉக்கிராகாரனாய் அந்தபகவானைப்பார்த்து ஓஅநாதரட்சகா தேவ ரீருடையதிருமேனியைஇத்தனைஉபத்திரவம்பண்ணின அந்ததுர்மார்க் கனை இக்கணமேகொன்று அசுவமேதக்குதிரையையும்விடுவித்துக் கொள்ளுகிறேன்சற்றேயவனுடையபட்டணத்தைக்காண்பியும் ரதத் தைநடத்துமென்றுஆக்ருஷமாகச்சொல்ல அதுகேட்டுகிருட்டிணமூ ர்த்தியும் புன்சிரிப்பாகச்சிரித்து அர்ச்சுனனைப் பார்த்து ஓஅர்ச்சுனா அந்தத் தாமரைத்துவசனைப் பரமசிவனாலும் பிரமனாலும் அக்கினி தேவனாலும் வாய்வுபகவானாலும் செயிக்கமுடியாது அப்படிப்பட்ட சாமர்த்தியபுருஷனை உன்னால் செயிக்கமுடியுமோ நீ அவனுடைய பலத்தை இன்னமறியவில்லையோ அவன் தருமசொரூபன் சத்தியசு த்தனன் அரிகிருபையுள்ளவன் அவன்பிதாவோவென்றால் அவனைப் பார்க்கிலும்பரமோத்தான் தருமக்கியானி அரிபூசாதுரந்தரன் அவ னுடையபட்டணமோவென்றால் ஸ்ரீவைகுந்தம்போல நித்தியகல்யாண மாய் அரியினுடையபிரகாசத்துடனே விளங்கப்பட்டது அப்படிப்பட் டவர்களையெதிர்த்துநிற்கிறதற்கு என்னாலுமாகாது அவனுடையம கிமையையுனக்கு அறியப்பண்ணுகிறேன் வாவென்று சொல்லித்

தார் ஒருசன்னியாசிபோலே கோபிசந்தனத்தினால்நெற்றியில்ஊர்த்துவ புண்டரம்தரித்து தலையிலேசகலாத்துக்குல்லா போட்டுக்கொண்டு அதன்பேரில்காவிவஸ்திரங்கட்டிக்கொண்டு அரையில்நார்மடிகட்டிக்கொண்டு தோளின்மேல் ஒருஉத்தரீயத்தைப் போட்டுக்கொண்டு கழுத்திலேதுளசிமாலையைத்தாழ்வடமாகத் தரித்துக்கொண்டு கக்கத்திலேபஞ்சாங்கப்புத்தகம் இடுக்கிக்கொண்டு கையிலேதண்டுக்கோல் பிடித்துக்கொண்டு பாதத்திலேபாதக்குறடு தரித்துக்கொண்டு தொண்ணூற்றொன்பதுவயதுள்ள பெரியசன்னியாகிய அர்ச்சுனனையும்பிரமசாரியாக்கி அவனிடத்திற்பூசைப்பெட்டியையும்மடிசஞ்சியையும் அன்னவஸ்திரத்தையுங்கொடுத்து அவனையுஞ்சீஷனாக அழைத்துக்கொண்டு அப்பகவானானவர்பொழுதுபோனஒருசாமத்தின்பிறகு ரத்தினபுரத்திற்குள்ளே போய்க்கடைவீதியில்நின்று வேடிக்கைபார்க்கும்பொழுது அங்கேபுட்பமாலைவிற்கிறஒருபெண்ணானவள்நல்லபுட்பமாலையைக்கையிற்பிடித்துக்கொண்டிருக்க அதைக்கண்டு ஒருபுருஷன்வந்து அப்பெண்ணைப்பார்த்து ஓ அம்மா பாக்கியவதி உன்கையிலிருக்கின்ற புட்பமாலையைப்பார்த்தவுடனே லட்சுமிகடாட்சமுண்டானபுருஷன் எப்படிசந்தோஷமடைவானோ அப்படிப்பட்டசந்தோஷம் எனக்குண்டாயிருக்கிறது இந்தப்புட்பமாலை லட்சுமிகடாட்சம்போலவே யிருக்கிறதென்றுசொல்லஅதுகேட்டு அந்தப்பாக்கியவதியும் அப்புருஷனைப்பார்த்து ஐயா இப்புட்பமாலையும் உம்முடைய மார்புக்குச் சரியாயிருக்கிற படியால் உம்மைப்பார்த்தால்வைசந்திவனமாலிகாபரணராகிய மகாவிஷ்ணுவைப்போ லிருக்கிறதென்று சொன்னாள் அந்த வார்த்தைகளைக் கேட்டுக் கிருட்டிணபகவானானவர் அர்ச்சுனனைப்பார்த்து ஓஅர்ச்சுனா இந்தஸ்திரீபுருஷாள்பேசினவார்த்தைகளைக்கேட்டாயோஎத்தனை ஆனந்தமாயிருக்கின்றது கொள்ளல்விற்றல் முதலானஇடங்களிலு மிப்படி அரிநாமஸ்மரணை பிரகாசிக்குமானால் மற்ற இடங்களில் எப்படியிருக்குமென்றுசொல்லி அப்புறம் சிலதூரம் போகையில்அங்கேஒரு உப்பரிகையின்பேரில்ஒருஸ்திரீபுருஷாள் சங்கீதம்பாடிக்கொண்டிருக்கும்பொழுதுஅந்தப்புருஷனானவன்ஸ்திரீயைப்பார்த்து ஓ நாயகி நீபாடுகிற ஸ்திரீராகத்திற்கு மலையானாலும்உருகிப்போகும் என்செவிகளுக்குமகா இன்பமாயிருக்கிறதென்றுசொல்லஅதற்குஅந்தஸ்திரீயும்நாயகனைப்பார்த்து ஓநாயகா உன்னுடையஇருதயத்திற்சதாகாலமும் பகவானையிருந்துவிளங்குகிறபடியினால்நான்பாடுகின்ற ஸ்திரீராகமும் உமக்குப் பிரீதியாயிருக்கிறதென்றுசொன்னாள் அந்தவசனங்களையும் கிருட்டிண பகவான்கேட்டுஅர்ச்சுனனைப்பார்த்து ஓ அர்ச்சுனா இவர்கள் பேசு

கின்றதையுங்கேட்டாயோ வென்றுசொல்லி யப்புறம் இரண்டடி தூர
ம்நடந்துபோகையில் அங்கேயொருமேடையின்பேரில் ஒருஸ்திரீயும் பு
ருஷனுங்கேளிவிலாசமாய்ச்சம்போகசவுக்கியங்களனுபவித்துக்கொண்
டிருக்கும்பொழுதுபுருஷனானவன்நாயகியைப்பார்த்து ஓ பெண்ணே
உன்னுடையஸ்தன்னியத்தினுனியில்கறுத்திருக்கின்றபடியினால்கிருஷ்
ணமூர்த்தியானவர்உன்னுடையஸ்தன்னியத்தினுனியில்விளங்குகின்ற
பாவனைபோலிருக்கிறதல்லாமலும்உன்னுடைய தலைமயிரிலும அந்தப்ப
கவான் விளங்குகின்றதுபோலிருக்கின்றதென்றுசொல்ல அதற்கு அப்
பெண்ணானவள் புருஷனுடைய இரண்டுகைகளையையும்பிடித்துக்கொ
ண்டு ஓநாதா உம்முடையஅத்தத்தில் பதுமரேகை சங்கரேகைகளிரு
க்கின்றபடியால் நீரெனக்கு மகாவிஷ்ணுவுக்குச்சரியென்றுசொன்னாள்
அவ்வார்த்தைகளையுங் கிருஷ்ணபகவான்கேட்டு சந்தோஷித்து அர்ச்
சுனனைப்பார்த்து ஓ அர்ச்சுனா சம்போகவேளையிலும் அரியைமறவாமலி
ருக்கிறார்களே மற்றவேளையிலெப்படியிருப்பார்களோ அதைநீயேயறி
ந்துகொள்ளென்றுசொல்லி அப்பால் சிலதூரம்நடந்து போகையில்
அந்தபகவானானவர் அர்ச்சுனனைப்பார்த்து ஓகிரீடி ஸ்ரீவைகுந்தத்தி
ற்குச்சரியான இப்பட்டணத்தி லுள்ள பிரசைகளே இப்படியிருப்
பார்களானால் இதையரசாட்சிசெய்கின்றஅரசன் எப்படி யிருக்கவே
ண்டும் இந்தப்பட்டணத்தில் மகாலட்சுமி சமேதராக அந்தவிஷ்ணு
வேகுடியிருக்கின்றார் இப்படிப்பட்ட பக்தியுள்ளஇராசனை நாம்
எப்படிஜெயிக்கப்போகிறோமென்று சொல்லிக்கொண் டங்கராத்திரிமு
ழுதுமந்தப்பட்டணமெல்லாஞ்சுற்றியங்காங்கபண்டாரவிநோதவிசித
திரங்களைக்கண்டுசந்தோஷித்துக்கொண்டிருக்கையில் சூரியபகவானும்
கிழக்குத்திசையிலுதயமாகினார் அதுதெரிந்து கிருஷ்ணார்ச்சுனர்களி
ருவரும் பட்டணத்திற்குவெளியே நருமதா தீரத்திற்குவந்துவாலோ
சிதகர்மானுட்டானசபதபங்களைமுடித்துக்கொண்டுஎப்போதும்போல
கிருஷ்ணபகவான்பிராமணசன்னியாசியாகவும் அர்ச்சுனன் பிரமசாரியா
கவும் வேஷங் கொண்டு புறப்பட்டு வந்து அந்தநர்மதாநதிக்க
ரையில் யாகசாலையேற்படுத்தித் திடமாகவிருந்து யாகதீட்சையைவகி
த்து ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை மனதினிடமாக நிறுத்தி இரண்டுக
ண்களையுமூடித்தியானம்பண்ணிக்கொண்டிருக்கிறமயூரத்துவசமகாரா
சனையும் அவன்குமாரனாகிய தாமிரத்துவசனையுங் கண்டு அவ
ர்களுக்குச் சமீபமாகப்போய் கிருஷ்ணபகவானானவர் தமது அஸ்தத்
தைநீட்டித் தீர்க்காயுஷ்மஸ்து வச்ரசரீரமஸ்து விஜயீபவஸ்துவென்றாசீ
ர்வாதஞ்செய்தருளினார் அதுகேட்டு அந்தராசனும் கண்ணைவிழித்துப்
பார்த்து அந்தப்பகவானுக்குநவரத்தினப்பீடம்போடுவித்து அதன்பேரி
ல் அவரையெழுந்தருளப்பண்ணித்தான் கீழேநின்றுகொண்டு அந்ததே
வனைப்பார்த்து ஓசுவாமி இதுநியாயமோ நான்நமஸ்காரஞ் செய்தபிற
குநீர்ஆசீர்வாதம் பண்ணவேண்டுமல்லாமல் இப்படிசெய்யலாமோ சு

வாமியென்றுசொல்ல, அதுகேட்டு அந்ததேவனும்மயூரத்துவஜனைப் பார்த்து ஓராஜேந்திரா, நாம் ஒருகாரியமாய்வந்து உமக்குஆசீர்வாதம் பண்ணினோம் அதனால் தோஷமில்லை யென்றுசொல்ல அதுகேட்டு அந்தராஜனு மவனைப்பிரதட்சணம்பண்ணி பத்திவிநயத்துடனே அர்க்கியபாத்தியமுதலான உபசாரங்களினாற்பூசித்து நமஸ்காரஞ்செய்து அநேகவிதமாகத் ஸ்தோத்திரம்பண்ணி அஞ்சலியஸ்தனாய்நின்று அந்ததேவனைப்பார்த்து ஓபுருஷா, நீர் எந்தவூர், உம்முடைய நாமமென்ன, நீர் என்னகாரியமாய் என்னைக்குறித்துவந்தீர் அதைச்சொன்னால் நானந்தகாரியத்தை ஆகப்பண்ணுகிறேன்சுவாமியென்றுகேட்க அதுகேட்டு கபடநாடக சூஸ்திராவதாரியான பிராமணசந்நியாசியும் அந்தராஜனைப்பார்த்து ஓராஜேந்திரா நாம்மாபுரமென்கிறபட்டணத்திலிருக்கின்றது நம்முடையபெயர்கிருஷ்ணனென்றுசொல்லுவார்கள் நமக்கு இந்தச்சீஷனும் ஒருபிள்ளையுமுண்டு அந்தப்பிள்ளைக்கு உம்முடைய புரோகித னன ஹரிவாசுதேவ சாஸ்திரியாருடைய குமாரத்தியைக்கேட்கும்படி அந்தப்பிள்ளையை யழைத்துக்கொண்டு இந்தசீஷனுடனேகூட உம்முடையபட்டணத்தைநோக்கிக் காட்டுவழியாக வருகையில் ஒருசிங்கமானது ஓடிவந்து எங்களிருவரையும் விட்டு விட்டு என்பிள்ளையைமாத்திரம் பிடித்துக்கொண்டு தின்னப்போச்சுது அதுகண்டு நான்பயந்து அந்தசிங்கத்தைப்பார்த்து ஓசிங்கராஜாவே என்பிள்ளையைவிட்டுவிடு உனக்குவேறே இரைகொடுக்கிறேன் எனக்குப்புத்திரதானம்கொடுத்து ரட்சியென்று அநேக விதமாக வேண்டிக்கொள்ளுகையில் அதற்குதயவுவந்து நம்மைப்பார்த்து ஓபிராமணோத்தமா உனக்கு ஓரேபிள்ளையென்றும் அதற்குப்பதில் இரைகொடுக்கிறேனென்றும் வேண்டிக்கொள்ளுகிறு யல்லவோ நல்லது இந்தச்சிறுபிள்ளையைத் தின்றால்தான் எனக்கு லாபமென்ன என்பசிதீருகிறதேகாரியம் ஆதலால் வேறொருவர் மாமிசம்வேண்டா மிந்த ரத்தினபுரத்தையாளுகின்ற மயூரத்துவச மகாராசனுடைய பாதிசரீரத்தை அறுத்துக்கொண்டுவந்துகொடுத்தாயானால் நானுன்பிள்ளையை விட்டுவிடுகிறேனென்றுசொல்ல அதற்குநானப்படியே கொண்டுவந்து தருகிறேனென்று சொல்லிவிட்டு உம்மிடத்திற்குவந்து ஆசீர்வாதம்பண்ணினேன் நீருங்கேட்டதைத்தருகிறேனென்று சொன்னீராதலாலும் நீர் சத்தியசந்தனானதலாலும் நான்கோரிவந்ததைக் கொடுத்து என்பிள்ளையைவிடுவித்து என்னைச்சந்தோஷப் படுத்துமென்று சொல்ல அதுகேட்டு அந்தராஜனும் பிராமண சன்னியாசியைப்பார்த்து ஓசுவாமி தேவரீருடைய குமாரனை ரட்சிக்கிறநிமித்தம் என்சரீரத்தைப் பகவானுக்குப் பிரிதிசெய்கிறேனென்று சொல்லி அப்பொழுதே அந்த இரத்தினபுரத்தை தாமரைத்துவசனுக்குப் பட்டாபிஷேகம் பண்ணுவித்து தான் பரிசுத்தனாக யாகசாலை மண்டபத்தில் வந்து கிழக்குமுகமாய் உட்கார்ந்துக்கொண்டு அநேகமாயிரம் பிராமணர்களுக்குத்தான தருமங்கள் செய்வித்து ஸ்ரீமகாவிஷ்ணுவை இருதய கமலத்தில் தியானித்துக் கொண்டுஅதிக சந்தோஷத்துடனே அந்தப்பிராமண சன்னியாசியைப் பார்த்து என்சரீரத்

தை ரம்பத்திலறுத்துக்கொண்டுபோமென்றுசொல்ல அதிலே அந்
தராஜனுடைய மனைவியாகிய குமுத்துவதேவியார்வந்து அந்த சன்
னியாசியைப்பார்த்து ஐயா பிராமணோத்தமா தேவரீர் என்புருஷனு
டைய சரீரத்திற் பாதிசரீரமல்லவோ கேட்டீர் அப்படி வேணடாம்
என்னைக்கொண்டுபோய் அந்தசிங்கராஜனுக்கு இரையாகக்கொடுமெ
ன்றுசொல்லஅதுகேட்டு அந்தபகவானும் குமுத்துவதியைப்பார்
த்து ஓஅம்மா அந்தசிங்கராஜன்சொன்னது புருஷருடையசரீரத்தி
லும இடப்புறம் பெண்பாகமாயிருக்கும் அதைவிட்டு வலப்புறத்
தைக்கொண்டுவாவென்று சொல்லியிருக்க பிரத்தியக்ஷயாய் ஸ்திரீ
யைகொண்டுபோவேனுனல் அதுசம்மதிக்குமாவென்றுசொல்ல அ
துகேட்டுத் தாமரைத்துவசனும் அவரைப்பாாத்து ஓசுவாமி தகப்ப
னுக்கு ஆபத்துவந்தபோது பிள்ளையவனக ப்பாற்றவேண்டுமாத
லால் என்னைக்கொண்டுபோய் அந்தச்சிங்கத்திற்குக் கொடுமென்று
சொல்ல அதுகேட்டு அந்தப்பகவானும் தாமரைத்துவசனைப்பார்த்
து ஓராசநந்தனு நீங்கள் அந்தசிங்கராஜன் சொன்னவார்த்தையைச்
செவ்வையாககேளுங்கள் அஃதென்னவென்றால் அந்தராசாவான
வன் பிள்ளையை ஒருபுறத்திலும் பெண்சாதியை ஒருபுறத்திலும் உ
ட்காரவைத்துக்கொண்டு அவர்களுஞ்சஞ்சலப்படாமல் தானுஞ்சஞ்
சலப்படாமல் சந்தோஷித்தர்களாய் ஒருமனதாயிருந்து பாதிசரீரத்
தைப்பகுந்துகொடுக்க அதை நீவாங்கிக்கொண்டுவந்தால் நான் ஏற்
றுக்கொள்ளுவேன் இல்லாவிட்டால் எனக்கு வேண்டாமென்று
சொல்லியதென்றுசொல்ல அந்தவார்த்தையைக்கேட்டு மயூரத்துவச
னும் பிராமணோத்தமனைப்பார்த்து ஓசுவாமி தேவரீர் கருத்தின்படி
யே நடப்பிக்கிறேன் நீங்கள் அவர்கள்வார்த்தையைக் கேளாமல் தய
வுபண்ணுமென்று இரக்கமாகச்சொல்லிப் பின்பு பெண்சாதியையும்
பிள்ளையையும்பார்த்து நீங்கள்ஒன்றுக்கும்யோசனைபண்ணமல் என்
பாதிசரீரத்தை அறுத்துக்கொடுங்க ளென்றுசொல்ல அதுகேட்ட
வர்களும் அப்படியே நல்லதென்றுசம்மதித்து ஏகமனதாய் பகவா
னைத்தியானித்துக்கொண்டு பிர்மாதிதேவர்களெல்லாரும்ஆகாசவீதி
யில்நின்று இதென்ன ஆச்சரியமென்று பார்த்துக்கொண்டிருக்க கு
முத்துவதியாரும் தாமரைத்துவசனும் இரண்டுபக்கத்திலிருந்து ரம்
பத்தை எடுத்து ராசனுடையசிரசின்பேரில்வைத்து ஹரிகோவிந்தா
உனக்கேஅற்புதமென்றுசொல்லி இரண்டுபேரும் ரம்பத்தைப்பிடித்
து கறகறவென்று நெற்றிமட்டுக்கும் அறுத்தாகள்-அப்போது இட
துகண்ணிலிருந்து சலமானது தாரைதாரையா யொழுகியது அது
கண்டு பிராமணர்கோபித்து என்னைஅழைத்து இந்த பாவியினிடத்
திற்றனம்வாங்குகிறதற்கு என்னைஅழைத்துக்கொண்டுவந்தாய் போ
தும்போதுமென்று தண்டினல் அங்கேயிருக்கிறவர்கள்பேரில் விசிறி
பஞ்சாங்கத்தை எறிந்துவிட்டு மகாகோபத்துடனே எழுந்துபோகிற
போது குமுத்துவதியும்தாமரைத்துவசனுங்கண்டு அறுக்கின்றதை
நிறுத்திபிராமணோத்தமர் கோபித்துக்கொண்டுபோகிற காரியமென்
னவென்று ராசனுடனேசொல்ல அந்தராசனுங்கண்ணைவிழித்துப்பா

ர்த்து மந்திரிகளுடனேசொல்லியனுப்பி அப்பிராமணனையழைப்பித்
து ஓசுவாமிதேவரீர் கோபித்துக்கொண்டுபோகிறகாரியம் என்னவெ
ன்றுகேட்க அதற்கு அந்தபகவானும் ராசனைப்பார்த்து ஓராசனே நீ
அழுதுகொண்டு தானங்கொடுத்தால் எனக்குவேண்டியதில்லை-உன
க்குப்பெண்சாதிபிள்ளைகள்பேரில் ஆசையிருந்தால் மூன்னமேஇல்
லையென்றுசொல்லலாகாதோவென்றுசொல்ல அதற்கந்த ராசனும்
ஓசுவாமி நான்துக்கப்பட்டால் இரண்டுகண்களிலுஞ்சலம் வடியா
தோ என்கண்ணைப்பாரும் இடதுகண்ணில்மாத்திரம் வடிகின்றது
அஃதேனென்றால் வலதுபுறமாத்திரம் பகவத்பிரீதியாகின்றதே நம
க்கு அந்தபாக்கியங்கிடைக்கவில்லையேயென்று இடதுபுறந்துக்கப்ப
டுகின்றதென்றுசொல்லிப் பின்னையும் அந்தத்தேவனைப்பார்த்து ஓ
சுவாமி எப்படியாகிலும் தயவுபண்ணிஎன்னுடையதானத்தைக்கொ
ண்டு ரட்சியுமையாவென்றுவேண்டிக்கொள்ளுகின்ற பரமபாகவதசி
ரேஷ்டனுகியுஞ் சத்தியசந்தனுகியும் தமசொரூபனுகியும் விளங்கு
கின்ற அந்தராஜனுடைய பக்திக்குமெச்சி ஸ்ரீகிருஷ்ணபகவானும்அர்
ச்சுனனைப்பார்த்து ஓபக்தா இவனுடையபக்தி விநயத்தைக்கண்டா
யோவென்று எச்சரித்துரம்பத்தைவாங்கி எறிந்துவிட்டுதமதுதிவ்வி
யாஸ்தத்தினுல் அந்தராசனுடைய சிரசைச்சேர்த்துப் பிடித்தமாத்தி
ரத்தில் அந்தசிரசு எப்போதும்போலொட்டிக்கொண்டது-அப்போ
தந்தபகவானும் திவ்வியமங்களவிக்கிரகமாய் கோடிசூரியப்பிரகாசத்
துடனே சங்குசக்கிராயுதபாணியாய் சதுர்ப்புசங்களும் வைசந்திவன
மாலிகையும் கவுஸ்துவாபரணமும்பிரகாசிக்கும்படி பிரசன்னமாய்வி
ளங்கியருளினுர் அவர்பக்கத்தில் அர்ச்சுனனிற்க அதுகண்டு அந்த
ராஜனும் பெண்சாதிபிள்ளையுடனே அதிகசந்தோஷகரமாய் இரண்டு
கண்களிலும் ஆனந்தபாஷ்பம்பொழியத்தக்கதாகப் புளகாங்கிதனுய்
அந்ததேவனுக்குப்பிரதக்ஷணம்பண்ணி சாஷ்டாங்கதண்டன்சமர்ப்
பித்து வேதவாக்கியங்களினுல் அனேகவிதமாகத்தோத்திரம்பண்ணி
பிர்மாதிதேவர்களுடைய இருதயகமலத்தில் வாசமாயிருக்கப்பட்ட
அவரதுஸ்ரீபாதாரவிந்தங்களை கந்தபுஷ்பதூபதீபநைவேத்திய முதலா
ன உபசாரங்களாற்பூசைபண்ணி அந்தத்தீர்த்தத்தை தன்னுடையசிர
சிலே புரோக்ஷித்துக்கொண்டு அந்தபகவானைப்பார்த்து ஓசுவாமி இன்
றைக்கல்லவோஎன்னுடையகோரிக்கையீடேறிற்றுநானுங்கிருதகிருத்
தியனுகினேனென்றுசொல்லிஅப்பாலர்ச்சுனனையும்ஆலிங்கனம்பண்
ணிக்கொண்டு ஓபுண்ணியபுருஷா நானென்னுடைய சீமை பூமிகளை
யும் பண்டி பண்டாரங்களையும் அஸ்வமேதக்குதிரையையும் தருமபு
த்திரருக்குக்கொடுத்தேன் அவரைச்சுகமாய் இரண்டு அஸ்வமேதயா
கம்பண்ணச்சொல்லும் எனக்கிந்தயாக பலனைப்பார்க்கிலும் அதிக
பலன்கிடைத்ததென்றுசொல்லி அப்பால் கிருஷ்ணர்ச்சுனர்களையு
மவிடத்திலிருந்த பப்ரவாகன்முதலானவர்களையும் சகலசேனைகளுட
னேபட்டணத்திற்குள்ளே அழைத்துக்கொண்டுபோய் சகலசம்பிர
மத்துடனே மூன்றுநாள்வைத்துக்கொண்டிருந்து பிறகு நாலாநாள்
காலமேஇரண்டு அஸ்வமேதக்குதிரைகளையும்விட்டு அதின்பிறகுமயூ

ரத்துவசன்-தாமனாந்துவசன்-அம்சத்துவசன்-நீலத்துவசன்-பப்பிரவாகன்-விஸ்வகேதுமுதலான துராதுரைகளும் ரதாரூடர்களாய்ப் புறப்பட்டு சதுரங்கபலசேனைகளுடனே நடந்தார்கள்-அப்பா லந்தக்குதிரையானதுகாடுகள்-மேடுகள்-வனங்கள்-வனாந்தரங்கள்-மலைகள் குகைகள்-ஆறுகள்-நதிகள் பட்டணங்கள்-சீமைகள்-பூமிகளிதுகளையெல்லாந்தாண்டி அனேகதூரம்போயங்கே சரஸ்வதிபுரமென்கிறபட்டணத்திற்குச் சமீபமாகப்போய்ச்சேர்ந்து அந்தப்பட்டணத்தைப் பரிபாலனம்பண்ணுகிற வீரவர்ம்மமகாராஜனானவன் அந்தக்குதிரைகள்வந்ததும்-கிருஷ்ணார்ச்சுனர்கள்வந்ததும்-வேவுகாரர்களால் கேள்விப்பட்டு தன்மருமகனாகிய எமதருமராசனுடனும் சதுரங்கபல சேனைகளுடனும் ஆயுதவகைகளுடனே சண்டைக்கு முஸ்தீதாகப்புறப்பட்டுபட்டணத்திற்குவெளியேவந்துதண்டுவிட்டிறங்கிஅஸ்வமேதக்குதிரைகளைப்பிடித்துக்கட்டிவிட்டு யுத்தசன்னத்தனா யிருந்தான்.

## வீரவர்மயுத்தம்.



இவ்விடத்தில்குதிரைபிடிபட்டுப்போனசேதியை அர்ச்சுனராஜன்தண்டுக்குள்பப்பிரவாகன் தெரிந்து கோபதீப்தனாய் தன்னுடைய ரதத்தை அதிவேகமாகத்துரத்திக்கொண்டுதன்னுடையசேனைகளுடனேவீரவர்ம்மனுடைய தண்டுக்கெதிராகவந்துசேர்ந்து வீரவர்ம்மனைப்பார்த்து ஓவீரவர்ம்மா எங்கள்குதிரைகளைவிடுகிறாயோஅல்லது என்பாணக்கினிக்குஇரையாகிறாயோவென்றுகேட்கஅதுகேட்டுவீரவர்ம்மனுங்கோபங்கொண்டு பப்பிரவாகனுடையசேனைகள்பேரில்விழுந்துகாலாக்கினி உருத்திரனைப்போலஎதிர்த்துச்சின்னபின்னப்படுத்தும்போதுவிஸ்வகேதுமுதலானதுரைகளெல்லாரும்வந்து பப்பிரவாகனுடனேகலந்துகொண்டு வீரவர்ம்மனுடைய சேனைகள்பேரில்எதிர்த்து தங்கள்தங்களுடையவில்லைவளைத்துக்குணத்தொனிபண்ணி அனேகமாயிரம்பாணங்களைப் பிரயோகஞ்செய்து சதுரங்கபலசேனைகளுடனேயும் தும்சப்படுத்தினார்கள் அதனால்வீரவர்ம்மனுடையசேனைகள்நின்று நிர்வகிக்கமாட்டாமல் ஓடத்தலைப்பட்டது அதுகண்டு எமதருமராஜனுங் கோபங்கொண்டு கதாயுதத்தைக்கையிலெடுத்துக்கொண்டு அர்ச்சுனனுடைய சேனைகள்பேரில்விழுந்துநாசப்படுத்தும்போதர்ச்சுனனுடையசேனைகளெல்லாம் நின்றுநிர்வாகம்பண்ணமாட்டாமல் நாலுதிக்கிலுஞ்சிதறிஓடிப்போனார்களதுகண்டு அர்ச்சுனராஜன்மெத்தவுந் திகிலடைந்து கிருஷ்ணபகவானைப்பார்த்துஐயா கிருஷ்ணா அதோபார்த்தீரோ ஒருமகாபுருஷன்கையிலே ஒருகதாயுதத்தைஎடுத்துக்கொண்டு மகாஉக்கிரத்துடனே நமதுசேனைகள்பேரில்விழுந்து அதம்பண்ணுகிற னவனுக்குமுன்னமேநாம்நிர்வகிக்கிறதாய்த்தோற்றவில்லை எனக்குமெத்தவும் பயங்கரமாயிருக்கின்றதுஆதலாலந்தபுருஷன்யார் அதைஎனக்குச் சற்றேதெரியச்சொல்ல

வேண்டும்ஐயாவென்றுகேட்க அதுகேட்டுஅந்தபகவானுமர்ச்சுனனை ப்பார்த்து ஓஅர்ச்சுனா அந்தபுருஷன் வீரவர்ம்மனுடையமருமகனான எமதருமராஜன் வீரவர்ம்மனுக்கு மருமகனாதலாலவனைசெயிக்கக்கூடாது அதுவல்லாமலு மந்தவீரவர்ம்மனேவென்றால்-கனவிலும்பொய்சொல்லாதவன் சத்தியமேசெயமென்றுநம்பிஇருக்கிறவன் ஸ்ரீமகாவிஷ்ணுவினுடையபாதபத்மங்களைஎப்போதும் இடைவிடாமல்தியானம்பண்ணுகிறவன் அந்தபுண்ணியபுருஷனானவன் பிராமணர்களுக்குத்தானங்கொடுத்து தாரைவார்க்கிற சலமானதுகால்வாய்களாயோடிப்பூமியிலுள்ள பயிர்களுக்குப்போய்பாயும்ஆகையாலந்தராஜனைநாம்சண்டையினால்செயிக்கமுடியாதுமெள்ளச் சிநேகம்பண்ணிநமது குதிரையை விடுவித்துக்கொள்ள வேண்டுமென்றுசொல்ல அதுகேட்டுஅர்ச்சுனனும் கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து ஐயாஜனார்த்தனா இந்தஎமதருமராஜனானவன்வீரவர்ம்மனுக்கு மருமகனானவிதமெப்படி அதைச்சற்றேதெரியச்சொல்லுமையா வென்றுகேட்க அதற்குஅந்த பகவானும் அர்ச்சுனனைப்பார்த்து ஓகிரீடி அந்தவீரவர்ம்மனுக்குமாலினியென்னும் பெயரையுடைய ரூபலாவண்ணியமுள்ள ஒருபெண்ணுண்டு அந்தப்பெண்ணானவள்எமதருமராஜனே தனக்குப்புருஷனாகவேண்டுமென்றுநினைத்து அனேகந்தானதருமங்கள் ஜபதபங்கள்விரதஹோமங்கள் முதலானதுஞ் செய்துகொண்டிருக்கும்போதுஒருநாள்அவ்விடத்திற்கு நாரதமுனீஸ்வரர்வந்துஅந்தப்பெண்செய்யப்பட்டபூசையைக்கொண்டு அந்தப்பெண்ணைப்பார்த்து ஓபெண்ணே நீவிவாகம்பண்ணிக்கொண்டு சகலபோகபாக்கியங்களு மனுபவித்திருக்கிறகாலமாச்சுதே அதைவிட்டுவிட்டு இப்படிவிரதங்களை அனுஷ்டித்துக்கொண்டு காலம்போக்குகின்றவிதம் என்னவென்று கேட்க அதுகேட்டுமாலினியும்நாரதருக்குநமஸ்காரம்பண்ணிஐயாமுனிநாதா எனக்குஎமதருமராஜன் புருஷனாகவேண்டுமென்றுநினைத்துஇப்படி விரதங்களைச் செய்துகொண்டிருக்கிறேனென்றுசொல்ல அதற்கு நாரதமுனிவர்சந்தோஷப்பட்டு மாலினியைப்பார்த்து ஓமாலினி, அப்படியானால்நான் உன்கருத்தின்படியேஅனுகூலம்பண்ணிவைக்கிறேனென்றுசொல்லி அவள்கையிற்செலவு வாங்கிக்கொண்டுஎமபுரத்திற்குப்போய் எமதர்மராஜனைக்கண்டுஅவனிடத்தில்பூசைகொண்டுஓஎமதர்மராசனேபூலோகத்தில்வீரவர்ம்மனுடைய குமாரத்தியாகியமாலினியென்கிறவள் உனக்குப் பெண்சாதியாகவேண்டுமென்றுநினைத்து அனேகந்தர்மங்கள் விரதஹோமங்கள் செய்துகொண்டிருக்கிறாள்ஆகையால்நீர் அவ்விடத்திற்குப்போய் அவளைப்பாணிக்கிரகணஞ்செய்துகொண்டு சகலசவுக்கியங்களையும் அடையுமென்றுசொல்ல அதுகேட்டு எமதர்மராஜனும் நாரதனைப்பார்த்து ஐயாநாரதமுனிவரே நானப்படியேசெய்கிறேன் உம்முடையவார்த்தையைத்தள்ளி நடக்கிறதில்லையென்றுசொல்ல அதுகேட்டுநாரதரும் சந்தோஷமாய்எமதர்மராஜனிடத்தில் செலவுபெற்றுக்கொண்டு தம்முடைய ஆசிரமத்திற்குப்போய்விட்டார் அதின்பிறகுஎமதர்மராஜனும் அந்தப்பெண்ணுக்

எதிரே பிரசன்னமாகவந்துநின்றுஎன்னவரம்வேண்டுமென்றுகேட்
க அதுகண்டு அந்தமாலினியும் எமதர்மராஜனுக்குச் சாஷ்டாங்கமாகந
மஸ்காரம்பண்ண தேவரீர்எனக்குப்புருஷனாகின்றவரம் வேண்டுமெ
ன்றுகேட்க, அதற்குஅந்தஎமனும் அப்படியேநல்லதென்றுசம்மதித்
துவீரவர்ம்மனுடைய அனுமதியின்பேரில் மாலினியைக் கலியாணஞ்
செய்துக்கொண்டு பின்பு மாமனாகிய வீரவர்ம்மனைப்பார்த்து எனக்
குச்சந்தோஷமாச்சுது உமக்குஎன்னவரம் வேண்டுமென்றுகேட்க அ
தற்குவீரவர்ம்மனுஞ் சந்தோஷித்து மருமகனைப்பார்த்து ஓஐயாஉன்
னுடையகிருபையினால் எனக்குச்சகலபாக்கியங்களும் குறைவில்லா
மலிருக்கின்றது ஆனால்ஒன்றுண்டு அஃதென்னவென்றால் நான் அரி
யினிடத்தில் பக்தியுள்ளவனாயிருந்து மரணதிசையில்ஸ்ரீமந்நாராயண
னென்றசத்தத்துடனே ஜீவன்விடவேண்டும் அதுவுமல்லாமல் என்
சரீரமுள்ளபரியந்தமும் நீஎன்னிடத்திலேதானே யிருந்துஎனக்குவ
ந்தஆபத்துகளைத் தீர்க்கவேண்டுமென்று வரங்கேட்க அதற்குஎமதர்
மராஜனுஞ்சந்தோஷப்பட்டு அப்படியே நல்லதென்றுசம்மதித்துவர
ங்கொடுத்து அன்றுமுதல்இதுபரியந்தமும் மாமனார்வீட்டில்தானேத
ன்னுடையஸ்திரீயுடனேகூடிச் சகலசவுக்கியங்களையு மனுபவித்துக்
கொண்டிருக்கிறானென்று சொல்லிக்கொண்டிருக்கையி லதிலேவீரவ
ர்ம்மனும்மகாவுக்கிராகாரனாய்த் தன்மருமகனாகியஎமராசனைமுன்னு
தாகநடத்தித் தன்னுடைய ரதத்தையும்பின்னேதுரத்திவில்லையெடு
த்துக்குணத்தொனி பண்ணிஅளவிறந்தபாணங்களைப்பிரயோகஞ்செ
ய்துஅர்ச்சுனனுடையசேனைகளையெல்லாம் சிக்குப்படுத்துகையில்அ
துகண்டுமயூரத்துவசன்-தாமிராத்துவசன்-பப்பிரவாகன்- அம்சத்து
வசன்-நீலத்துவசன்-விஸ்வகேது பிரத்தியுமனன்-அநுசாளுவன்-எ
வ்வர்ணசுவன் - மேகவர்ணன்-கிருதவர்மன்-அனிருத்திரன்- சாத்தகி
முதலான சுத்தவீரர்களெல்லாரும்வந்து வீரவர்ம்மன்பேரில் எதிர்த்
துமகா ரோஷத்துவேஷத்துடனே தங்கள்தங்களுடையவில்லைவளைத்
து அனேகமாயிரம் பாணங்களைத்தொடுத்து பிரயோகம்பண்ணினார்க
ள்அதுகளையெல்லாம் வீரவர்ம்மன் கண்டித்துத்தள்ளிபின்னையும் த
ன்னுடையவில்லினிடமாக ஒவ்வொருத்தருக்கு(௫)விழுக்காடு அளவி
றந்தபாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்து தன்பேரிலெதிர்த்
தராசாக்களையெல்லாஞ் சற்றுநேரத்தில் மகாகஸ்திப்படுத்திமூர்ச்சித்
துவிழும்படிசெய்துசதுரங்கபலசேனைகளையும்சிதற அடித்துப்பிற்பா
டுஅர்ச்சுனன்பேரில் தன்னுடையரதத்தைத்துரத்தினனதுகண்டுஅ
ர்ச்சுனனும்கிருஷ்ணபகவானைப்பார்த்துஓபுண்டரீகாக்ஷாநீர்சண்டை
செய்யவேண்டியதில்லை எனக்குச்சாரதியாயிருந்து குதிரைகளைமாத்
திரம்நடத்துமென்றுசொல்ல அதற்குஅந்ததேவனும் அப்படியேநல்
லதென்றுசம்மதித்து அர்ச்சுனனுடையதேரின்பேரில் உட்கார்ந்துகு
திரைகளை அதட்டி தேரைநடத்தியருளினார் அப்பொழுது அர்ச்சுனனு
ங்காண்டீபத்தைக்குணத்தொனிபண்ணி அதிலேதிவ்வியபாணங்களை
த்தொடுத்துவீரவர்ம்மன் பேரில்பிரயோகம்பண்ணினன் அதுகளையெ
ல்லாம்வீரவர்ம்மன்கண்டித்துவிட்டு தன்னுடையவில்லிலே அனேக

மாயிரங்குரூரபாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்து கிருஷ்ணு ர்ச்சுனர்களிருவரையும் நோகப்பண்ணிசரீரமுழுதும் ரத்தமயமாக்கி கைகால் ஆடவொட்டாமற்செய்து குதிரைகளையெல்லாஞ் சல்லடைக்கண்களாகத்துளைத்து கொடியாகிய அனுமாரையும் நோகப்பண்ணி யிரவென்று அட்டகாசம்பண்ண அதனால்ஸ்ரீகிருஷ்ணபகவான்மெத்தவுநொந்து அர்ச்சுனனால்சாமில்லையென்று தெரிந்துகொடியாகிய அனுமாரைப்பார்த்து ஆச்சரிக்கைபண்ணி ஓவாய்வுகுமாரகா நீகொடியைவிட்டிழிந்து இந்தவீரவர்ம்மனை அதம்பண்ணென்றுசொல்லஅதுகேட்டுஅனுமாரும் தேரைவிட்டுபூமியிற்குதித்து மகாஉக்கிராகாரமாய்வந்து தன்னுடையவாலினால் வீரவர்ம்மனுடையதேரைச்சுற்றிவளைத்துக்கொண்டு ஆகாயமார்க்கத்திலெழும்பிப்போனார் அப்போதுவீரவர்ம்மனும் அனுமாருக்குத்தெரியாமல் பூமியில்லகுவாய்குதித்து ஓடிவந்து அர்ச்சுனனுடைய தேரைத்தூக்கி எடுத்துக்கொண்டு ஆகாயத்திலெழும்பி இடதுகையினால் அந்தத்தேரைத்தூக்கிக்கொண்டுவலதுகையினால் அனுமாருடையநெற்றியின்பேரிலறைந்தான் அதனால் அனுமாரும்பூமியில்விழுந்து மூர்ச்சையடைந்தார் அப்போதுதங்களுடைய ரதத்தைப்பிடித்துக்கொண்டிருக்கிற வீரவர்ம்மன்தலையின்பேரில்தமதுதிருப்பாதத்தைநீட்டி கிருஷ்ணபகவான் உதைத்தருளினார் அந்தவுதையோடே சாம்பவமூர்த்திகாலினால்உதைப்பட்டுவிழுந்தயமதர்மராஜனைப்போலபூமியில்விழுந்துமூர்ச்சையடைந்தான் அப்போது கிருஷ்ணபகவானும் அர்ச்சுனனுடைய ரதத்தைப்பூமியிற்கொண்டுவந்துநிறுத்தினார் வீரவர்ம்மனுடைய சாரதியுந்தன்னுடையரதத்தைக்கொண்டுவந்துபூமியில்நிறுத்தினான் அதிலேவீரவர்ம்மனுமூர்ச்சைதெளிந்தெழுந்திருந்து அந்தபகவானுடைய பாதம்பட்டபடியினாலஞ்ஞானநீங்கிமெய்ஞ்ஞானம்பெற்று மகாபயபக்தி விசுவாசத்துடனேகிருஷ்ணமூர்த்தியண்டைக்குவந்து நமஸ்காரம்பண்ணிஇரண்டுகைகளையும்அஞ்சலியாகச் சிரசின்பேரில் வைத்துக்கொண்டந்தபகவானைநோக்கிஓபுண்ணிய புருஷோத்தமா துவாரகாபுரிவாசா-ஜனார்த்தன-கஜேந்திரவரதா-சுவாமியென் றனேகவிதமாகத் தோத்திரம்பண்ணிபிற்பாடுமுனீஸ்வரர்களுடனேயிருந் தனேககாலந் தவஞ்செய்தாலுங்கிடையாததேவரீருடைய சரணாரவிந்தத்தைக்கண்டேன் இப்போதுதான் என்னுடையகோரிக்கைகைகூடிற்றுநான் இந்தக்குதிரைகளினால்வெகுலாபம்பெற்றேன் இதுவேஎனக்குப்போதும் இந்தக்குதிரைகளைப்பிடித்துக்கட்டினலாபம் ஒன்றுக்கு ஆயிரம்பங்காய்க்கிடைத்ததல்லவனும் பஞ்சாசதகோடிபூமண்டலத்திற்காசனானாலும் உம்முடையபாதாரவிந்தத்தைக்கண்டசந்தோஷத்திற்குஈடல்ல நான்வேண்டுமென்றால் இந்தஅர்ச்சுனன்முதலான இராசாக்களைக்கெலிக்கிறதருமையல்ல தேவரீருடைய பாதாரவிந்தத்தைக்கண்டதேஎனக்குப்போதுமென்றுசொல்லிவீரவர்ம்மனென்பவன்கிருஷ்ணமூர்த்திக்குக்காணிக்கையாக ஐம்பதினாயிரம்வெள்ளையானையும் அஸ்வமேதக்குதிரைக்காணயு

ஞ்சலக்ஷணமுள்ள எண்பதினாயிரங் குதிரைகளும்நாலாயிரம்ஸ்திரீஜனங்களும் ஒன்பதுமலைப்பிரமாணம் நவரத்நராசிகளுங்கொண்டுசமர்ப்பித்து அர்ச்சுனனையும் ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு பிற்பாடுகிருஷ்ணார்ச்சுனர்களையும்மயூரத்துவசன்முதலான துரைகளையும்சகலசேனையுந்தன்னுடைய பட்டணத்திற் கழைத்துக்கொண்டுபோய்சர்வாடம்பரத்துடனே மூன்றுநாள்வரைக்கும் வைத்திருந்து பிற்பாடுநாலாநாட்காலமே அஸ்வமேதக்குதிரைக ளிரண்டையும்விட்டுஅதுகளின்பிறகே கிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் ரதாரூடர்களாய்ப் புறப்பட்டுவீரவர்ம்மன்கொடுத்தகாணிக்கைகளைப் பொதிபொதியாகஅஸ்திநபுரத்திற்கனுப்பிவிட்டு வீரவர்ம்மன்- மயூரத்துவசன்- அம்சத்துவசன்-பப்பிரவாகன்முதலான சுத்தவீரர்களுடனே சகலசேனாசமேதர்களாய்சரஸ்வதிபுரத்தைவிட்டுபதினெட்டுவகை மேளவாத்தியங்களும்தாம்தாமென்றுசகலலோகங்களுமதிரும்படிமுழங்கத்தக்கதாக நடந்தார்கள் கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜாவே அப்பாலந்தக்குதிரைகளானது அனேகம்பூமிகள்நடந்துபோ யப்புறம்ஐந்துயோசனையகலமுள்ள ஒருபிரமாண்டமான மடுவிலிறங்கிநீந்தி யந்தக்கரையிலேபோய்ச்சேர்ந்ததந்தக்குதிரையின் பின்னேநடந்த கிருஷ்ணார்ச்சுனர்கள்முதலான சகலசேனைகளும் மடுவினிடத்தில் வந்துசேர்ந்து குதிரைகளையுங் காணாமல்தாங்களுமந்தமடுவைக் கடக்கமாட்டாமல் ஆலோசனைபண்ணிக்கொண்டிருக்கையி லதிலே வீரவர்ம்மனானவ னனேகம்படகுகளையும்ஓடங்களையு மழைப்பிவித்து கிருஷ்ணார்ச்சுனர்கள்முதலானவீரர்களையும் சேனைகளையும்ஏற்றிக்கொண் டிரண்டுநாழிகைக்குள் அக்கரைபோய்ச்சேர்ந்துகுதிரைகளைப்பார்க்குமளவில் அவிடத்திலுங்குதிரைகளைக்காணாமலர்ச்சுனனானவன் கிருஷ்ணபகவானைப்பார்த்துஐயா ஜனார்த்தனா நமதுகுதிரைகள்எங்கேபோய்விட்டதோ தெரியவில்லை இதற்கெப்படியென்று விசாரப்படுகிறபோது பிரமகுமாரனானநாரதமகாமுனிவர் நாராயணா நாராயணாவென்று வீணாபாராயணம்பண்ணிக்கொண்டுவந்து முன்னேநின்றா ரதுகண்டுகிருஷ்ணார்ச்சுனர்களிருவரும்எழுந்திருந்து நமஸ்காரம்பண்ணி அந்தமுனீஸ்வரரைப்பொற்பீடத்தி லுட்காரவைத்து 'கிருஷ்ணமூர்த்தியும் அர்ச்சுனனைப்பார்த்து கிரீடி நமதுகுதிரைகள்போனசங்கதி இவரைக் கேட்டால் தெரியுமென்றுசொல்ல அப்படியே அர்ச்சுனனும்நாரதரைப்பார்த்து ஓயாமுனிநாதா எங்கள்குதிரைகளானது இந்தமட்டுக்குந்தப்பிவந்துஇந்தமடுவைத்தாண்டினவளவில் எப்படியோமாய்கையாய்ப்போய்விட்டது அதுகள் எங்கேயிருக்கிறது அதைச்சா

ல்லவேண்டுமென்றுகேட்க அதற்குநாதரும் கிருஷ்ணார்ச்சுனர்களைப்
பார்த்துஓநரநாராயணர்களே உங்களுடையஅசுவங்களெல்லாங் குந்தல
தேசத்தைப்பரிபாலனம் பண்ணுகின்ற சந்திரகாசமகாராச னென்பவன்
பிடித்துக்கட்டிவிட்டான் அவனைஉங்களால் செயிக்கமுடியாதுமயூரத்
துவசன்-தர்மத்துவசன்-வீரவர்மன்-பப்பிரவாகன்-அம்சத்துவசன்
முதலானவீரர்களுடனேபோராடினதுபோலல்ல அவனுடையமகிமை
யானது ஆதிசேஷசயனத்தில்பள்ளிகொண்டிருக்கிற ஆதிநாராயணமூர்
த்திக்கேதெரியவரும் அதுவல்லாமலும்மனுமாந்தாசிபி அரிச்சந்திரன்
முதலான இராசரைப்பார்க்கிலும் இவனுடைய அம்சையாயிரம்பங்கதிக
மாயிருக்கும் அதெப்படியென்றால்.

நாதமகாமுனிவர் அர்ச்சுனனுக்குச்

சந்திரகாசமகாராசன் வரலாறுகூறுதல்.

அதற்கொருகதையுண்டு அதுவென்னவெனில், கோளுகைதேசத்
தையாளுகின்றகோளுகைமகாராசனுக்கனேககாலம் புத்திரசந்தானமி
ல்லாமலதன்பிறகு அளவிறந்ததானதருமத்தைச்செய்து பெரியோர்களை
யனுசரித்திருந்தபடியினாலவர்களுடையஆசீர்வாதத்தினாலந்தராசனுக்கு
மூலநட்சத்திரத்தில் ஓர்புத்திரன்பிறந்தது அதுகண்டு அந்தஇராசனு
ம்மகாசந்தோஷித்தனுச்சர்வசாத்திரசம்பன்னர்களானபிராமணோத்
தமர்களையழைப்பித்து அவர்களைப்பூசைபண்ணி ஓசுவாமிகளே இந்தப்பு
த்திரனுக்குச்சாதககர்மம்விதித்துச் சொல்லவேண்டுமென்று சொல்ல
அதுகேட்டு அவர்களும் அந்தராசனைப்பார்த்து ஓராசேந்திரா இந்தப்
புத்திரன்பிறந்தலக்கினம்ஆகாதுமாதாபிதாக்களுக்குமரணமுண்டாகு
ம்ராச்சியத்திற்கு ஆனிவரும் சகலசம்பத்தும் சத்துருக்கள்பங்காகிப்
போகும் இந்தப்பிள்ளையோவென்றால்மகாயோக்கியசாலியாய்விஷ்ணுப
க்தனுப்பிரமாதிதேவர்களாலும்செயிக்கக்கூடாதசாமர்த்திய புருஷனு
ய்மகாகீர்த்திப்பிரதாபத்துடனேயிருப்பான் ஆகையாலிந்தப்பிள்ளையை
நீங்கள் பரிகரித்துவிட்டீர்களானால் சுகமாயிருப்பீர்களென்றுசொல்
ல அதுகேட்டு அந்தராசனும் பிராமணர்களைப்பார்த்து ஓ ஐயமா
ரே இந்தப்பிள்ளையைக்கொல்லச்சொல்லுகிறீர்களோ நாங்கள்போனாலு
ம்போகட்டும் அப்படிசெய்கிறதில்லையென்றுசொல்ல அதற்கு அந்
தப்பிராமணர்களும் ராசனைப்பார்த்து உங்கள்இஷ்டமென்று சொல்ல
அதுகேட்டுஇராசனும் தலையசைத்து அவர்களைப்பார்த்து ஐயமா

ரேநாங்கள்நெடுநாளாய்ப்புத்திரனில்லாமலிருந்து இப்போது எங்களு
டையபூசாபலத்தினாலிடைத்தபிள்ளையைக்கொன்று எங்களைப்பிழை
த்திருக்கச்சொல்லுகிறீர்களேநாங்களிறந்துபோனாலும்நல்லதே அந்தப்
பிள்ளைமாத்திரம்தீர்க்காயுசுடையவனாயிருந்தால் அந்தக்கீர்த்தியேபோ
துமென்றுசொல்லிபந்தப்பிராமணர்களுக்கெல்லாந் தட்சணைதாம்பூலங்
கொடுத்துச் சந்தோஷமாயனுப்பிவிட்டுப் பிற்பாடுசெய்யவேண்டிய
முறைமைப்படிபுத்திரோச்சவங்களைச்செய்வித்து அந்தப்பிள்ளையை
நாளொருமேனியும்பொழுதொருவர்ணமுமாய் அதிகசெல்வத்துடனே
வளர்க்கின்றகாலத்தில் ஆறுமாசத்திலுள்அந்தராசன்பேரில் மறுமண்
டலத்தரசனுனாசிவிந்த னென்கிறவனும் மிலேச்சர்களு மெதிர்த்து
வந்துபோராடி அந்தராசனைக்கொன்று பட்டணத்தையுங்கொள்ளைகொ
ண்டார்கள் அப்போது அவன்பெண்சாதியும் புருஷனோடேகூடவே இறந்
துபோனாளந்தப்பிள்ளையையிரண்டுதாதிகளெடுத்துக்கொண்டு குந்தல
தேசத்துக்குப்போய் ஒருபிராமணன்வீட்டிற்சேர்ந்து ஒருபுறந்திண்
ணையிலிருந் தவர்களுக்கு நல்வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு
அன்புவரும்படியிருந்து ஒருதாதியானவள் அந்தப்பிள்ளையைப் பாது
காத்துக்கொண்டிருக்க மற்றொருதாதியானவள் அந்தப்பட்டணத்திற்
போய்ச்சகலபதார்த்தங்களையும்யாசகம்பண்ணிக்கொண்டுவந்து தின
ந்தோறும்அப்படியேகாலத்தைக்கழித்துக்கொண்டு அந்தப்பிள்ளையை
ச்சுகமாய்வளர்த்துக்கொண்டுவருகையில் ஒருவருஷமாச்சுது அதிலேயொ
ருதாதிமாணமடைந்தாள்பின்புமற்றொருதாதியானவள் அந்தப்பிள்ளை
யைப்போஷித்துக்கொண்டுவருகையில்வளுமறுமாதத்தில்மாணமடைந்
தாளதன்பிறகு அந்தப்பிள்ளைக்குவேறே திக்கில்லாதபடியினா லந்த
வீட்டம்மையாரும்விசாரப்பட்டுமிகத்தயவுடனே தன்பிள்ளைகளில் இது
வுமொருபிள்ளையாய்நினைத்துப்போஷித்துக்கொண்டுவந்தா ளந்தப்பிள்
ளையுமஞ்சுவயதாய்வளர்ந்து சிலபிராமணப்பிள்ளைகளுடனேகூடி விளை
யாடிக்கொண்டவர்கள்படிக்கின்றவேதசாத்திரங்களைத்தானும் படித்து
க்கொண்டு பட்டணத்திற்போய் வீடுகள்தோறும் அமுதுபடியாச
கம்பண்ணிக்கொண்டுவந்து அந்தம்மையார்கையில்கொடுக்க அந்தஅ
ம்மையாரும்தயவுடனேபேதமில்லாமல் தன்பிள்ளையைப்போலப் போ
ஷித்துக்கொண்டுவருங்காலத்தில்ஒருநாளந்தப்பிள்ளையானது சிறுபி
ள்ளைகளுடனேசேர்ந்து வீதியில்திரிந்துவிளையாடிக்கொண்டிருக்கையி
ல் அந்தக்குந்தலதேசத்தை யாளுகின்ற குந்தலராசனுக்குப் பிள்ளை
யில்லாமல்தன்னிடத்திலிருக்கும்துஷ்டபுத்தியென்கிற மந்திரிகுமாரனு
ைமதனனென்கிறபிள்ளையைத்தன்னிடத்தில்வைத்துக்கொண்டு சர்வ

அதிகாரம்பண்ணுவித்துக்கொண்டிருப்பான் துகண்டு அந்ததுஷ்டபுத்தியும்மகாசந்தோஷசித்தனய்ராசாவினிடத்திற்கு ஒருவேளைபோயிருந்துமற்றவேளையெல்லாம்தன்னுடையவீட்டில்தானே சுகமாயிருப்பான் இப்படியிருக்கிறநாளில்ஒருநாள்தெருத்திண்ணையின்மேரில்அந்தமந்திரியஞ்சகலசம்பிரமத்துடனேகேளிவிலாசமாயுட்கார்ந்திருக்கும்போது தெருவில்விளையாடுகின்ற அந்த ராசகுமாரனைப்பார்த் தங்கிருந்தவர்களையழைத்து இந்தப்பிள்ளை பாருடையபிள்ளை இதுமகாலட்சணங்களுடனும்ராசகுமிசையுடனும்விளங்குகின்ற இந்தப்பிள்ளையினுடையசவிஸ்தாரமென்னவென்றுகேட்கஅதுகேட்டவர்களும் அந்தமந்திரியைப்பார்த்துஐயாகோளுகைராசனுடையபிள்ளையவனுடையபட்டணத்தைப் பகையாளிகைக்கொண்டு அவனையுங் கொன்றுவிட்டபடியினல் இரண்டுதாதிமார்களிந்தப்பிள்ளையை யெடுத்துக்கொண்டுவந்து எல்லம்பட்டலு என்கின்றபிராமணன்வீட்டிலிருந்துகொண்டு போஷித்துவருங்காலத்தில் அவர்களில்ஒருத்திஇறந்துபோனள் அதின்பிறகு மற்றொருத்திஎடுத்துப்போஷித்துவருங்காலத்தில்அவளும்இறந்துபோனள் அதின்பிறகு அந்தவீட்டு அம்மையா ரெடுத்துப்போஷித்துவருகின்ருள் இப்பிள்ளையும் பட்டணத்தில் மூஷ்டியெடுத்துக்கொண்டுபோய்அவ்வம்மையார்கையில்கொடுக்க அவ்வம்மையாரும் தன்பிள்ளைகளிலொன்ருப்இப்பிள்ளையையும் போஷித்துவருகிருளென்றுசொல்ல அதுகேட்டுத்துஷ்டபுத்தியும் ஆலோசனைசெய்து இப்பிள்ளையிருந்தால்நமக்குக்கேடுவரும் ஆகையினல்இதை உபாயத்தினல்கண்டித்துப்போடவேண்டுமென்றுநினைத்துக் கோசிங்கிகளென்கிறவர்களையழைப்பித்துஅவர்களுக்குச்சிறிதுதிரவியத்தைக்கொடுத்துஅந்தப்பிள்ளையைக்காண்பித்துநீங்களிப்பிள்ளையை உபாயமாகக்காட்டுக்கழைத்துக்கொண்டுபோய்க்கொன்றுவிட்டு வாருங்களென்று செலவுகொடுத்தனுப்ப அவர்களு மந்திரியினுடையசொல்லைத் தள்ளப்போகாதென்றுமகாபிரசாதமென்றுமந்திரியினிடத்திற் செலவுவாங்கிக்கொண்டு அப்புறம்போயிருந்து சமயம்பார்த்துக்கொண்டிருக்கையில் அப்பிள்ளையும்மறுநாள்காலமேயெழுந்துநதிக்குப்போய்ஸ்நானம்பண்ணி ஒரு சிறியசாளக்கிராமத்தைவைத்துப் பூசைபண்ணிச் சபதபங்களை முடித்துக்கொண்டுவீட்டுக்குத்திரும்பி வரும்போது அக்கோசிங்கிகள் கண்டு அப்பிள்ளையின்சமீபத்தில்வந்து வெகுவாய்ப்பேச்சைக்கொடுத்து அழைத்துக்கொண்டேகாட்டுக்குப்போய் அங்கேயுட்கார்வைத்துவெட்டுகிற கத்தியை யுருவிக்கொண்டார்கள் அதுகண்டு அப்பிள்ளையானவன்பயந்து சாளக்கிராமத்தைவிழுங்கி அரிஅரி கிருஷ்ணநாராய

ணா வாசுதேவா அச்சுதா பரந்தாமா பரமபுருஷாவென்றுபாடி
ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைத்தியானம்பண்ணினான் அதுகண்டு அவர்
களும்மனமிரங்கித்தயவுபிறந்து இப்பாலகன்பேரில் ஒருகுற்றமுமில்
லையே இவன்நல்லசவுந்தரியமுள்ளவனாயிருக்கிறானே இவனைநாமெப்ப
டிகண்டிக்கிறது அதுதுஷ்டபுத்தியும் கெடுமதிநினைத்து நரகத்தில்
விழுந்தால்நாமுங்கெடுமதிநினைக்கிறதோவென்றுசொல்லி உருவினக
த்தியையுறையிற் போட்டுவிட்டு அச்சிறுவனுக்கு உபசாரம்பண்ணி
அவனுடையகாலின் சுண்டுவிரலைமாத்திர மறுத்துக்கொண்டு அப்
பாலகனையவ்விடத்தில்விட்டுவிட்டுஅவர்கள்போய்த்துஷ்டபுத்தியைக்
கண்டு கொன்றுவிட்டுவந்தோமென்றுசொல்லிச் சுண்டுவிரலையுங்கா
ண்பித்தார்கள்அதுகண்டுதுஷ்டபுத்தியுஞ் சந்தோஷப்பட்டு அவர்களு
க்குவெகுமதிபண்ணியனுப்பிவிட்டிருந்தான் அப்பாலந்தக்காட்டினி
டத்தில் அப்பிள்ளையானவன் மகாபயங்கரத்துடனும் கால்வேதனையு
டனும் ராமா-கேசவா-கோவிந்தா-சனார்த்தனா-நாராயணாவென்று தோத்
திரம்பண்ணிக்கொண்டுவிசாரமாயிருக்கையில் அவ்விடத்தில் கொங்
கணதேசாதிபதியான கொங்கணராசாவானவர் வேட்டைக்காரர்களுட
னேகூடிவேட்டைவிளையாடுகிறதற்க கவந்துஅங்கேயிளாயித்துக்கொ
ண்டிருக்கிறசிறுபிள்ளையின்குரலைக்கேட்டுத் தயவுபிறந்து சமீபமாகவந்
து அப்பிள்ளையைப் பார்த்துஓபுத்திரா நீயாருடையகுமாரன் உன்
பெயரென்னநீயேன்விசாரப்படுகிறாயென்றுகேட்கஅதற்கு அப்பிள்
ளையும் ராசனைப்பார்த்துஐயாநான்அனாதை என்னுடையதாயுந்தக
ப்பனும்இறந்துபோனார்களெனக்குஒருவரும் திக்கில்லை அப்பரப்பிரம
சொரூபமேயெனக்குத்துணையென்னம்பெயரிடவில்லைநான் இக்காட்டில்
வருகிறபோது காலிலே ஒருபெரியகல்பட்டுச் சுண்டுவிரலையடித்து
க்கொண்டுபோச்சுது இதற்குவிசனப்படுகிறேனென்றுசொல்லிப்பி
ன்னேயும் அவ்விராசனைப்பார்த்துஐயா என்னை இக்காட்டிலுள்ள புலிமு
தலானமிருகங்கள் ஆதரவுபண்ணுகின்றது பட்சிகளெல்லாம் அதுகளி
ன் இறகினால்வெய்யலைமறைக்கின்றதுஎன்றுசொல்லஅதுகேட்டு அவ்
வரசன்மெத்தவுமகிழ்ச்சிகொண்டுநாம்புத்திரனில்லாமல் விசனப்படுகி
றோமென்றுபகவான்கட்டளையிட்டருளினாரென்றுதனக்குத்தானேசந்
தோஷப்பட்டுக்கொண்டுஅப்பிள்ளையைப்பார்த்துஅப்பனே புத்திரா
எனக்குப்பிள்ளையில்லைநீயெனக்குப்பிள்ளையாயிருக்கிறாயாவென்றுகே
ட்க அதற்கு அவனுமப்படியேயிருக்கிறேனென்று சொல்ல அது
கேட்டு அவ்விராசனுமவனையழைத்துக்கொண்டுபோய்த் தன்னுடை
யபட்டபூதேவி யாகிய சந்திராவதியி னிடத்தில் ஒப்புவித்தான்
அவ்விராசபத்தினியும் அவனைப்பெற்றபிள்ளையைப்பார்க்கிலும் மிகுந்த
அருமையாய்ப்புத்திரோற்சவமுதலானதுகளும்பண்ணுவித்துச் சந்திர
காசனென்றுபெயர்வைத்துவித்தியாப்பியாசமுதலானதுஞ்செய்வித்து
ச்சகலசம்பிரமத்துடன் அந்தராசனுஞ்சந்திராவதியும்வளர்த்து வருங்கா
லத்தில் சந்திரகாசனும்மாதாபிதாக்களிடத்தில் மகாபயபக்திவினயத்
துடனே நடந்துகொண்டு வில்வித்தைமுதலானதுகளிலும் அதிகசா
மர்த்தியமுள்ளவனாய்ப் பதினாறுவயதளவும்வளர்ந்தபிற்பாடு அங்கங்கே

யுள்ளராசாக்களிடத்திற்கு யுத்தசன்னத்தனாய்ப்போய்ச் சண்டைபண்ணி அவர்களைச்செலித்து அவர்களிடத்தில்காணிக்கைகப்பங்கள்பெற்றுக்கொண்டுவந்து பிதாவினிடத்தில்ஒப்புவித்துப்பிதாவின்கையினால் அனேகமாயிரம்பிராமணர்களுக்குத்தானதர்மங்கள்பண்ணுவித்துத்தானும் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியினிடத்தில் அந்தரங்கபக்தனாயிருந்து பூதயவுடனே அனாதைகளையெல்லாம்ஆதரித்துக்கொண்டு திக்குவிசயதுரந்தரனாய்ப்பெரியோர்களுடையஆசீர்வாதமுள்ளவனாய் இருக்குங்காலத்தில் அந்தகொங்கணராசனும்தன்பிள்ளையினால் கிடைத்திருக்கிறதிரவியங்களைக்கண்டு இதுசேதியைத் துஷ்டபுத்தியறிந்தால் அவன்குந்தலராசனுக்குச்சொல்லுவானே அதுகேட்டு அந்தராசனும்நமக்கு வருஷாவருஷம் கப்பங்கட்டுகிறகொங்கணராசனுக்குஇவ்வளவுதிரவியம் எங்கேயிருந்து வந்ததென்று ஆலோசித்துப்பொருமையினால் நமதுபட்டணத்தின் பேரில்தண்டெடுத்துவந்தாலும்வருவானேயென்று தனக்குள்ளேதானேயோசித்துக்கொண்டு பிரபலமாயிராமல் முன்னிருந்தது போலவேயடக்கமாயிருந்துகொண்டு புத்திரனைப்புகழ்ந்துகொண்டாடிச்சில சேவகர்களையழைத்து அவர்கள்கையில் குந்தலநகரராசாவுக்கு வெகுமானமாகச்சிறிதுவாகனவஸ்துக்கள்முதலான திரவியங்கள்கொடுத்து பின்னையும்துஷ்டபுத்தியென்கிறமந்திரிக்கும்சிறிதுகாணிக்கைகப்பங்கள்கொடுத்தனுப்பினனவர்களும் அப்படியேகொண்டுபோயந்தராசனிடத்திலும்மந்திரியிடத்திலும்கொடுக்க அதுகண்டவர்கள் அந்தசேவகர்களைப்பார்த்து ஓசேவகர்களே இதேது ஆச்சரியமாயிருக்கின்றது அந்தராசன் கப்பங்கட்டுகிறதேமகாபிரயாசமாயிருக்குமே அத்தன்மைப்பட்டவனுக்கு இத்தனை அயிஸ்வரியமெங்கேயிருந்துவந்ததென்று கேட்க அதற்கந்தசேவகர்களும் ஐயா அந்தராசனுடைய குமாரன்தேசங்கள்தோறும்போய்த் திக்குவிசயம்பண்ணிச் சம்பாதித்துக்கொண்டு வந்தான் ஆகையினால்உங்களுக்குவெகுமானங் கொடுத்தனுப்பினனென்று சொல்லஅதுகேட்டுத்துஷ்டபுத்தியாகியமந்திரியும் அவர்களைப்பார்த்து ஓசேவகர்களேஅவ்விராசனுக்குப்பிள்ளையில்லையே பிள்ளையெப்படிவந்ததென்றுகேட்கஅதற்கவர்களும்மந்திரியைப்பார்த்து ஐயா எங்கள்ராசனவர்வேட்டைக்குப்போனவிடத்தில்காட்டிலேயொருபிள்ளையைக் கண்டெடுத்துக்கொண்டுவந்துசந்திரகாசனென்றுபெயரிட்டு வளர்த்துக்கொண்டாரென்றுசொல்லஅதற்குமந்திரியும்ஆலோசனைபண்ணிக் காட்டிலேபிள்ளையைக்கண்டெடுத்தானென்றுசொல்லுகிறதேது நம் முன்னேகோசிங்கிகளுக்குச் செலவுகொடுத்தனுப்பினோமே அவர்கள கொண்டுபோய்க்காட்டில் கொல்லாமல் விட்டுவிட்டு விலைமாத்திரங்

கொண்டுவந்துகாண்பித்தார்போலிருக்கிறது நாடெல்லாம்போய் அ
றியவேண்டியதென்றுநினைத்து ராசனிடத்திற்குப்போய் ஐயாராசேந்
திரனே கொங்கணதேசத்திற்குப்போய்அவ்விடத்துச் சேதிகளெல்லா
ந்தெரிந்துவருகிறேனென்று அவ்விராசனிடத்திற் செலவுபெற்றுக்
கொண்டு சதுரங்கபலசேனைகளுடனே புறப்பட்டுக் கொங்கணதேச
த்திற்குவந்தான் அதையறிந்துகொங்கணராசனும் எதிர்கொண்டுபோய்
ஆலிங்கனம்பண்ணிக்கொண்டுசகலபரிவாரங்களுடனேயும் அவனையர
ண்மனைக்கு அழைத்துக்கொண்டுபோய்சகலசம்பிரமத்துடனே வெகு
மானங்கள்பண்ணினான் அப்போது சந்திரகாசனும்வந்து துஷ்டபுத்
தியைக்கண்டுதெண்டனிட்டான் அத்துஷ்டபுத்தியும் சந்திரகாசனைப்
பார்த்துஇப்பிள்ளையேதென்றுகேட்கப்பிள்ளைவந்த சவிஸ்தாரமெல்லா
ம்பூர்வோத்தரமாகக்கொங்கணராசன்சொல்லஅதுகேட்டுத் துஷ்டபுத்
தியுநாம்கோசிக்கியினிடத்திலொப்புவித்துக்கொல்லும்படி செலவு
கொடுத்தனுப்பினபிள்ளைதானென்றுநிச்சயம்பண்ணிக்கொண்டுஇப்பி
ள்ளையினுடையசவுரியபராக்கிரமத்தைநமதுராசன் கேள்விப்பட்டால்த
ன்னுடையகுமாத்தியையுங்கொடுத்துராச்சியத்தையும் பட்டாபிஷேக
ஞ்செய்துவைப்பானே அப்புறம்நம்மிடபிள்ளைக்கு ஒன்றுமில்லாம
ற்போகின்றதேயென்று விசனப்பட்டு இப்பொழுதுதானேயிவனை
க்கொன்றுவிட்டால் நல்லதென்று ஆலோசித்துக்கொண்டு அங்கிருந்
தபடியேயொருகடிதாசியழைப்பித்து அதில்தன் புத்திரனாகிய மதனன்
பார்த்துக்கொண்டிக்கடிதாசியைக்கொண்டுவருகின்ற சந்திரகாசனுக்கு
அதிசீக்கிரத்தில்விஷத்தைக்கொடுத்துக் கொல்லவேண்டியது இதற்
கு அட்டிபண்ணவேண்டாம் இப்படிக்குத்துஷ்டபுத்தி கையெழுத்து
என்றுவிவரமாயெழுதிஒருவருக்குந்தெரியவொட்டாமல்மடித்து ரா
க்குமுத்திரைபோடுவித்துச்சந்திரகாசனையழைத்துஅப்பா சந்திரதிலகா
இக்கடிதாசியைக்கொண்டுபோய்என்புத்திரனாகியமதனனிடத்தில்கொ
டுத்துவிட்டுவா பின்னையவர்களிடத்திலும் கொடுக்கவேண்டாமெ
ன்றுசொல்லஅதுகேட்டுச்சந்திரகாசனும் அப்படியேயல்லது ஐயாவெ
ன்று அக்கடிதாசியை இரண்டுகையினாலும்வாங்கிக்கொண்டு ஒருகு
திரையின்மேலேறிக்கொண்டு தன்பட்டணத்தைவிட்டுப் புறப்பட்
டு நடந்துகுந்தலதேசத்திற்குச்சமீபத்திலிருக்கிற ஒருசிங்காரவனத்
திலிறங்கியங்கேஒருமரத்தில்குதிரையைக்கட்டிவிட்டு ஆயாசமாயிருந்த
படியினால் சந்திரகாந்தச்சாலையில் குளிர்ந்தகாற்றிலே படுத்துக்கொ
ண்டு நித்திரைபோய்விட்டான் அப்போது அப்பட்டணத்திலிருந்து
ராசகுமாத்தியானசம்பகாவதியும்மந்திரிகுமாத்தியானவிஷையையு

ம்சிறிதுகன்னிகளுடனே கேளிவிலாசமாய்ப்புறப்பட்டு அச்சிங்கார
வனத்திற்குவந்து அங்குள்ள ஒருதாமரைத்தடாகத்தில்சலக்கிரீடைப
ண்ணியவ்விடத்துண்டான நல்லபுட்பங்களைப்பறித்து முடித்துக்கொ
ண்டுபழங்களைப்புசித்துச்சாப்பிட்டுக்கொண்டு மகாஉல்லாசத்துடனே
அவ்வனத்திலுள்ளசகலவேடிக்கைகளும்பார்த்துக்கொண்டுபின்புஒரு
மண்டபத்தில்வந்து சண்பகாவதிமுதலான அக்கன்னிகைகளெல்லாம்
படுத்துக்கொண்டுநித்திரைபோனார்கள் அவர்களில்மந்திரிகுமாரத்தி
யான் விஷையென்கிறவள்மாத்திரம் நித்திரைபண்ணாமல் எழுந்திரு
ந்துஉலாவிக்கொண்டிருக்கையில் சந்திரகாந்தச்சாலையில் சயனித்திருக்
கின்றசந்திரகாசனைக்கண்டு அவனுடைய சவுந்தரியத்தைப் பார்த்து
மோகங்கொண்டுஇப்படிப்பட்டரூபலாவண்ணியமுள்ளபுருஷனையல்ல
வோநாம்சேரவேண்டுமென்றுநினைத்து அவனுடைய சமீபத்திற்போய்
முகத்தைப்பார்க்கும்பொழுது அவன்போட்டிருக்கின்ற உத்தரீபத்தில்
முடிந்திருக்கும்கடிதாசியைக்கண்டு அதையவிழ்த்துக்கடிதாசியைக்கை
யிலெடுத்துத்தன்னுடையவிரலினால்அம்முத்திரையைவாங்கி அப்புற
ம்வைத்துவிட்டுக்கடிதாசியைவிரித்து வாசித்துப்பார்க்கையிலதில் வி
ஷத்தைக்கொடுத்துக்கொல்லும்படிதன்தகப்பனானவன் தமையனுக்கு
எழுதியிருக்கிறானென்றுதெரிந்துகொண்டுதலையசைத்துத் தன்தக
ப்பனுடையபுத்தியைக்குறித்துத்தூஷித்து இம்மகானுபாவனைக்கொல்ல
வொட்டாதவண்ணஞ்செய்துநாம்இவனையேகலியாணம் பண்ணிக்கொ
ள்ளவேண்டுமென்றுநிச்சயித்து அக்கடிதாசியில்விஷமென்கிற அட்
சரத்தைமாற்றி விஷையைகொடுக்கிறதென்கிற அட்சரத்தைப்போட்டு
எப்பொழும்போலமடித்து முத்திரைவைத்து அவன்உத்தரீபத்தில்
தானே முடிந்துவிட்டு மண்டபத்திற்குப்போய்ச் சண்பகாவதியை
யு மக்கன்னிகைகளையுமெழுப்பிக்கொண்டு பட்டணத்திற்குப்போ
ய்விட்டாள்.

அப்பால்சந்திரகாசனுஞ்சற்றுநேரத்தில்நித்திரைதெளிந் தெழுந்து
அந்தாமரைத்தடாகத்தி லிறங்கிக்கைகால் சுத்திசெய்து மறுபடியுங்
குதிரையின்பேரிலேறிக்கொண்டுபட்டணமேபோய்ச்சேர்ந்து ராசவீ
தியில்போகையிலெதிரேவருகிறமந்திரிகுமாரனைக்கண்டு அங்கிருக்கிற
வர்களைப்பார்த்து அதோவருகிறவர்யாரென்றுகேட்கஅதற்கு அவர்களு
ம்மந்திரிகுமாரனாகியமதனனென்றுசொல்லஅதுகேட்டுச்சந்திரகாசனு
ங்குதிரையைவிட்டிழிந்துமதனனுக்கெதிரேபோகையில்அதுகண்டுமத
னனும் இதோவருகிறராசகுமாரன்யாரென்று பார்க்கும்போதுசந்திர

காசனுக்கடிதாசியைக்கொண்டுபோய்க்கொடுத்தான் மதனனு மதைவா
ங்கி வாசித்துப்பார்த்துச்சந்தோஷமடைந்து குந்தலராசனிடத்தில் அ
ழைத்துக்கொண்டுபோய்ச்சந்திரகாசனுடையசவிஸ்தாரமெல்லாஞ்சொ
ல்லித்தன் தகப்பனெழுதியிருக்கிறகடிதாசியுங்காண்பித்தான் அதுகண்
டு அந்தராசன் மெத்தவுஞ்சந்தோஷமடைந்துமதனனைப்பார்த்து ஓமத
னா இந்தப்பிள்ளைக்குஎன்னுடைய பெண்ணைக்கொடுத்துக் கலியாணம்
செய்விக்கவேண்டுமென்கிறவிருப்பமிருக்கின்றது ஆதலால்முன்னமே
உன்னுடையதங்கையைக்கொடுத்துக் கலியாணம் பண்ணிவையென்று
சொல்லியனுப்ப அப்படியேமதனனுஞ்சந்திரகாசனைத்தன்னுடைய அரம
னைக்கழைத்துக்கொண்டுவந்து அன்றையதினமே நல்லமுகூர்த்தமிரு
க்கிறபடியினாலுஞ் சந்திரகாசனுடையநல்வினையொத்துக்கொண்டபடி
யினாலுஞ்சகலசம்பிரமத்துடனே சந்திரகாசனுக்கு விஷயைகலியாண
ஞ்செய்துவைத்துப் பிறகுதன்னுடையதகப்பனிடத்திற்குவிஷயையினு
டைய கலியாணச்சேதியையுமெழுதியனுப்பினான் அதற்குமுன்னமே
துஷ்டபுத்தியென்கிறமந்திரியும் இதுவரையில்சந்திரகாசன் மரணமடை
ந்திருப்பானென்றுசந்தோஷமடைந்துகொண்டுராசனைப்பிடித்துவிலங்
குபோட்டுஅந்தப்பட்டணத்தையெல்லாங்கொள்ளைகொண்டு பிரயாண
மாய்ப் புறப்பட்டுப்பாதிவழியில்வருகிறபோதுமதனனனுப்பினவைத்த
ஓலையைச்சேவகர்கள்கொண்டுவந்துகொடுக்க அதைவாங்கிவாசித்துப்
பார்த்து ஐயையோநாமொருவினைநினைத்தால்தெய்வமொருவினைநி
னைத்ததேயென்றுதிகிலடைந்து சற்றுநேரத்தில் தன்மனதைத்தானே
தேற்றிக்கொண்டு அந்தக்கொங்கணராசனைப்பார்த்து ஐயாநான் உம்மு
டையமனதைச்சோதிக்கவேண்டியிப்படிசெய்தேன் அதைமனதில்வை
க்கவேண்டாமென்றுஉபசாரஞ்சொல்லிவிலங்கையும்விடுவித்துக் கொ
ள்ளைகொண்டபொருள்களையுங்கொடுத்துநீர்சுகமாய்உம்முடையபட்ட
ணத்திற்குப்போமென்றுசொல்லிஅவரையனுப்பிவிட்டுத் தன்னுடைய
சேனைகளுடனே குந்தலதேசத்திற்குவந்துசேர்ந்துதன்னுடைய அரண்
மனைக்குப்போய்நுழைந்தான் அதுகண்டு மதனனும் குமாரத்தியும்
வந்து தெண்டனிட்டார்கள் அவர்களைஆசீர்வாதம்பண்ணித் தன்கு
மாரத்தியைப்பார்த்துஓஅம்மணி உனக்குமிந்தப்புருஷன்பேரிற்சம்
மதமிருக்கின்றதல்லவோ வென்றுகேட்க அதற்குஅந்தவிஷயையும்
பிதாவைப்பார்த்து ஐயாதேவரீருடையவனுக்கிரகத்தினால் இந்தப்புரு
ஷன்பேரிலெனக்குஅபேட்சையிருக்கின்றதென்றுசொல்ல அதுகேட்
டு அப்புறந்தன்னிடத்திற்குவந்துதண்டனிட்ட குமாரனைப்பார்த்துஆசீர்
வாதம்பண்ணி அவனைப்பார்த்து ஓகுமாரா நானொருகாரியமெழுதியனு
ப்பினால்நீயொருகாரியஞ்செய்தாயேயது வென்னவென்றுகேட்க அ
துகேட்டு மதனனும் திகிலடைந்து பிதாவைப்பார்த்து ஐயாதேவரீ
ரெழுதினபடிக்குநடந்தேனேயல்லாமல் வேறில்லையேயென்றுதகப்ப
னெழுதியனுப்பியகடிதாசியைக்கொண்டுவந்து கொடுக்க அதைவா
ங்கிவாசித்துப்பார்த்து தலையையசைத்துஇதுநம்முடையவிதியெழுந்து

தானேயிது இப்படி நேரிட்டதென்ன ஆனாலும் நாம் மறந்து எழுகிறோ
மோ எப்படியோவென்று மனதில் நினைந்து மகாவிசனத்துடனே முன்
பின்னொன்றுந்தோன்றாமல் நாம் நினைத்த காரியமெல்லாம் விருதாவாய்ப்
போச்சுதே இதற்குளென்னசெய்வோம் இந்தச்சந்திரகாசன் இவ்விட
த்திலிருந்தால் நம்முடைய ராசன் பெண்ணையுங் கொடுத்து ராச்சியத்தை
யும் அவனுக்கே பட்டாபிஷேகஞ்செய்துவைப்பான் அப்பால் நம்
முடையபுத்திரனுந்தன்னுண்டுபோவான் ஆகையினால் இவனை உயி
ரோடுவைக்காமல் உபாயத்தினால் கண்டித்துவிடவேண்டுமென்று ஆ
லோசித்து அந்தக்கோசிங்கிகளை யழைப்பித்து ஓ துன்மார்க்கர்களே சி
லநாளைக்குமுன் நாம் ஒரு சிறுபிள்ளையைக் கொல்லும்படி உங்களுக்குச்
சொல்லியனுப்பினால் நீங்களப்படிசெய்யாமல் சூதுசெய்து காட்டிலே
உயிரோடுவிட்டுவிட்டுவந்தீர்கள் அந்தக்குற்றத்திற்கே உங்களையாக்கினை
பண்ணவேண்டியது அதை நாம் மன்னித்தோம் இப்போதாகிலும் நம
து சொல்லைத்தள்ளாமல் இந்தப்பட்டணத்திற்குப்புறம்பாக இருக்கிற
பத்திரகாளியினுடைய கோயிலினிடத்தில் இன்றிராத்திரிபதினைந்துநா
ழிகைவேளையில் நீங்களிருந்துகொண்டு அப்போதவ்விடத்தில் வருகின்ற
வனை முன்பின் யோசித்துப்பாராமல் கண்டித்துவிடுங்க ளென்
று திட்டஞ்செய்து அவர்களுக்குச்சிறிது திரவியங்களை வெகுமானமாகக்
கொடுத்தனுப்பினான் அவர்களும் அதற்குச்சம்மதித்துத் துஷ்டபுத்தியினி
டத்தில் செலவுபெற்றுக்கொண்டு அந்தப்பத்திரகாளியம்மன் கோயிலிட
த்திற்போய் யார்வருகிறார்களோவென்று மிகுந்த எச்சரிக்கையாய்க் கத்தி
யை யுருவிக்கொண்டு முஸ்தீதாகவிருந்தார்கள் இவ்விடத்தில் துஷ்ட
புத்தியுந்தன்மருமகனை சந்திரகாசனை யழைத்து ஓ சந்திரகாசா நாம்
ஒருஅந்தரங்கமான ரகசியஞ்சொல்லுகிறோம் அதை யென்குமாரன் மு
தலானவர்களும் அறியப்படாது அதுவென்னவென்றால் இந்தப்பட்ட
ணத்திற்குவெளியேயிருக்கிற பத்திரகாளியம்மனுக்கு வருஷத்திற்கொ
ருதரம் பூசைகொடுத்து நமஸ்காரம்பண்ணிவருவேன் அதனால் எனக்
குச்சகலசம்பத்துகளும் உண்டாச்சுது நானிப்படிபூசைபண்ணுகிறது
என்குமாரன் முதலானவர்களும் அறியமாட்டார்கள் அந்தநினைவு இ
ன்றையத்தினம்வந்தது ஆகையால் இன்றையத்தினம் ராத்திரிப் பதினைந்
து நாழிகைக்குமேல் கந்தபுட்ப அட்சதைகளும் பண்டிபலாதிகளுமெடுத்
துக்கொண்டு போய்ப்பூசைபண்ணுகிறதற்கெனக்குத் தள்ளாது என்
மகனோவென்றால் ராசாவினுடைய அரண்மனையிலிருக்கிறான் அவனுக்
குப்போகக்கூடாது ஆகையினாலெனக்குப்பதிலாய் நீ போய்ப்பூசைசெய்
துவாவென்றுசொல்ல அதைக்கேட்டுச்சந்திரகாசனும் மெய்யாக நினைந்து
அரண்மனைக்குப்போனான் அதிலே சூரியபகவானும் அஸ்தமானமானா
னப்போது சந்திரகாசனும் ஸ்நானம்பண்ணிச் சபதபங்களை முடித்து
க்கொண்டு மகாபரிசுத்தனாய்த் தனதுமாமனாரிட்ட கட்டளைப்படியே கன
கத்தட்டுகளில் பூசாதிரவியங்களை யெடுத்துக்கொண்டு தனியே புறப்பட்
டு அந்த இருட்டுவேளையில் பட்டணத்துவீதியே போகும் பொழுது
அங்கே குந்தலமகாராசனிடத்திற்குக் காலவமகாரிஷி வந்தருளினார் அந்த
முனீஸ்வரருடைய வரவுகண்டு குந்தலராசனும் சிம்மாசனத்தை விட்

டெழுந்திருந்துஎதிரேபோய்அழைத்துக்கொண்டுவந்துநவரத்தின பீடத்தில்உட்காரவைத்துஅந்தமகாரிஷிக்கு அர்க்கியபாத்தியமுதலானவைகளாற் பூசைபண்ணி யவரைப்பார்த்து ஓமுனிநாதா அடியேனுடையமனதில ஒருசந்தேகமிருக்கின்றது அதுவென்னவென்றால் அடியேனுக்குஒருமசமாய்க்கைகால்கள் அசந்துபோகின்றதுசரீரந்தளர்ந்துவருகின்றதுமனங்கலக்கமாயிருக்கின்றதுமுன்பின்ஒன்றுந்தோற்றவில்லை சூரியனைப்பார்த்தால் வளையலோடுபோல மழுங்கிக்காணுகின்றது என்சரீரநிழலைப்பார்த்தால்சிரசுமாத்திரமில்லாமல்முண்டமாத்திரங்காணுகின்றது அந்தமுண்டத்திலுமனேகரந்திரங்கள் தோற்றுகின்றது ஆகையினுலிந்தராச்சியத்தின்பேரில் எனக்குச் சற்றாகிலும் விருப்பமில்லை அப்படியிருக்கின்றபடியால் தேவரீரடியே னுடைய கருத்தைத்திருத்திக்கிருதகிருத்தியனுக்கிரட்சிக்கவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்தான் அதுகேட்டுக்காலவமகாரிஷியும் அந்தராசனைப்பார்த்துக்கௌரவமையாகுந்தலபூபாலகாபூலோகத்திலேமனிதர் மரணமடையுங்காலத்தில் காணப்படுகின்ற அவசகுனங்களைச் சொல்லுகிறேம் அதுவெப்படியென்றால்மனிதர்நடக்கும்போது அவர்கள்நிழல் அவர்களுக்குத்தெரியாமலிருந்தால் ஒருவருஷத்தில் மரணமடைவார் சூரியப்பிரகாசமழுங்கினதுபோலக்கண்டவர்கள் பத்துமாதத்தில் மரணமடைவார் ஒருபுருஷன்நடக்கும்போதுசிரசானதுஇரண்டுபிரிவாகப்பிரிந்துதோன்றினல் அவனெட்டுமாதத்தில்மரணமடைவான் ஒருபுருஷன்சொப்பனத்தில் குரங்குகளையுங் கழுதைகளையுங் காண்பானுகில் அவனாறுமாசத்தில்மரணமடைவா னொருபுருஷனுடைய சமீபத்தில்ஆனைகளாவதுநாய்களாவதுவந்துகத்துமாகில் அந்தப்புருஷ னிரண்டுமாதத்தில் மரணமடைவா னொருபுருஷனுடையகண்களுக்கு முன்னேதோற்றுகிறதுகளெல்லாம்பலவாகச்சிதறித்தோற்றுமாகில் அவனொருமாதத்தில்மரணமடைவா னொருபுருஷன் ஸ்நானம்பண்ணி வஸ்திரத்தையெடுத்துத்துடைத்துக்கொள்ளுமுன்னேமார்பில் ஈரமில்லாமற் சுவறிப்போகுமாகில் அவன்பதினைந்துநாளையில் மரணமடைவா னொருவனெண்ணெய்த்தலையுடனேசிவப்புப்பூவை முடித்துக்கொண்டுதெற்குமுகமாய்ப்போகிறதுபோலக்கனவுகண்டால் அவன் பத்துநாளையில்மரணமடைவான் தீபம்பிரகாசமாயெரிகிறபோது அந்தப்பிரகாசந்துண்டித்துப்போகிறதுபோலக்கனவுகண்டாலவனைந்து நாளையில் மரணமடைவான் பட்சிகள்வந்துமுகத்திலே கொத்தினல் அவனாலுநாளையில்மரணமடைவா னொருபுருஷன் தன்னுடையகாலடி தனக்குத்தெரியாமற் காணுவானுகில் அவனிரண்டுநாளையில்மரண மடைவான் கறுத்தசரீரத்தோடுதலைவிரித்துக்கொண்டு ஒருஸ்திரீயானவள்வந்துதன்பிடரியிலேகுத்தினறபோலக்கனவுகண்டா லவனொரு நாளையில் மரணமடைவா னின்ன மிப்படிப்பட்ட அவசகுனங்கள் அநேகவிதங்களுண்டு அதுபோலநீரும்அவசகுனங்களைக்கண்டராகையால் இன்றுமுதலிராச்சியத்தினுடைய ஆசையை விட்டுக் காட்டுக்குப்போய்மரவுரியுடுத்திக்கொண்டுசருகுபட்சணம் பண்ணிக்கொண்டுசர்வேஸ்வரனைநோக்கித்தவஞ்செய்துபுண்ணியலோகத்தையடையுமென்றுசொல்ல அதுகேட்டுக்குந்தலராசனும் சந்தோஷப்பட்டு

அப்போதுதானே தன்னிடத்திலிருக்கிற மந்திரிகுமாரனையழைத்து ஓ
மதனா இந்தராச்சியத்தை யுன்மைத்துனனாகிய சந்திரகாசனுக்குப்
பட்டாபிஷேகம்பண்ணுவித்து நான் தவசியாயப்போகவேண்டு மாதலா
லுன்மைத்துனனை யதிசீக்கிரமாயழைத்துக்கொண்டு வாவென்று சொல்
லியனுப்ப அதுகேட்டுமதனனுந் தன்னுடைய அரண்மனைக்குள்ளு
சந்திரகாசனைத்தேடிக்காணாமல் பட்டணமுழுதுந்தேடித்திரிந்து ராஜ
வீதியில்வருகையில் அங்கேயொருதங்கத்தட்டிற்பூசா திரவியங்களை
யெடுத்துக்கொண்டு பத்திரகாளியம்மன் சந்நிதியைநோக்கிப்போகின்றச
ந்திரகாசனைக்கண்டுஓராசகுமாரசா குந்தலராசனானவர் உனக்கு ராச்சி
யத்தைப்பட்டாபிஷேகம்பண்ணிவைக்கநினைத்து அழைத்துக்கொண்டு
வரச்சொன்னாரென்றுசொல்ல அதுகேட்டுச்சந்திரகாசனுஞ்சந்தோஷப்
பட்டுமைத்துனனைப்பார்த்துஓமைத்துனா உன்னுடையபிதாவானவர்பத்
ரகாளிகோயிலுக்குவருஷத்திற்கொருதரம்போய்ப் பூசைபண்ணுகிறதெ
ன்றும்இன்றைபதினம்போகிறதற்குத்தனக்குச்சரீரம்பிரயாசமாயிரு
க்கிறதென்றுஞ்சொல்லியென்னையனுப்பிப்பூசைசெய்துவரும்படிகட்ட
ளையிட்டனராதலால்நான்பிரயாணப்பட்டுப்போகும்போதே இத்தனைய
யிஸ்வரியம் வந்ததல்லவோ ஆகையினால்நான் அதி சீக்கிரத்திற்
போய் அந்தமகாதேவியைப் பூசித்து வருகிறேனென்று சொல்ல
அதுகேட்டுமதனனும்சந்திரகாசனைப்பார்த்துஐயாராசநந்தனா அவ்விட
த்திலிராசனானவர் துரிதப்படுத்துகின்றபடியால்நீர் இராசனிடத்திற்குப்
போம் நான்போய்அந்தஅம்மனைப்பூசித்துவருகிறேனென்றுசொல்ல
அதற்குச்சந்திரகாசனுஞ்சம்மதித்துத்தன்கையிலிருந்த தங்கத்தட்டை
அவன்கையிற்கொடுத்தனுப்பிவிட்டு அதிவேகமாய்வந்து குந்தலராச
னைக்கண்டு நமஸ்காரம்பண்ணிஅந்தமுனிநாதனுக்குப்பயபக்தி விநய
த்துடனேபிரதட்சிணநமஸ்காரஞ்செய்துஅவர்களுக்குமுன்பாகக் கை
கட்டிக்கொண்டுநின்றானதுகண்டுகுந்தலராசனுஞ்சந்தோஷமடைந்து
அக்கணமேதன்னுடையகுமாரத்தியானசம்பகாவதியை யழைத்துச்
சந்திரகாசனுக்குக்கலியாணம்பண்ணுவித்துத்தன்னுடையகுந்தலபுரத்
தையுமவனுக்கேபட்டாபிஷேகஞ்செய்துசகலசேனைகளையும் அவன்வ
சத்திலொப்புவித்துத்தன்னுடையமுத்திரைமோதிரத்தையும் அவன்
கையில்கொடுத்துவிட்டவ்விராசனானவர்காலவமகாரிஷியுடனே கூடிக்
கொண்டுதவசுக்குப்போய்விட்டார் இப்பால்மதனனும் பத்திரகாளி
கோயிலுக்குச்செல்ல அங்கிருந்தவேவுகாரரால்மதனனுங்கொல்லப்ப
ட்டானிந்தசங்கதிகளெல்லாமறிந்ததுஷ்டபுத்தியுஞ்சந்திரகாசனைக்கண்
டுவெட்கப்பட்டுஅவனைத்தழுவிக்கொண்டுஅப்பாசந்திரகாசா உன்மகி
மையையறியாமல்என்னுடையஅஞ்ஞானத்தினாலிதுவரையிலும் உனக்
குஅனேகதுன்பங்களைச்செய்வித்தேன் அதுகளையெல்லாம்பொறுத்து
ரட்சிக்கவேண்டுமென்றுவேண்டிக்கொண்டானதற்குச்சந்திரகாசனுந்
துஷ்டபுத்தியைப்பார்த்துஓ ஐயா நீரெத்தனைகாரியஞ்செய்தாலும்
என்னையென்னசெய்யும் அரிபக்தியுள்ளவர்களுக்கு ஒருநாளுங்கு
றைவுவருகிறதில்லையென்றுசொல்லிமாமனாரையாதரணைபண்ணி அரம
னைக்கனுப்பிவிட்டுமகாதேவியினிடஞ்சென்றுபிரதட்சணநமஸ்காரம்
பண்ணிவெட்டுண்டமதனனை அவ்வம்மனாலெழுப்பிக்கொண்டு வ

ட்டணத்திற்குவந்து கொலுமண்டபத்திலிருக்கிறசிம்மாதனத்திலுட்கா
ர்ந்துதுஷ்டபுத்திமதனன்முதலான மந்திரிபிரதானிகளுடனே கொ
லுவாயிருந்துகொண்டுபட்டணத்திலுள்ளசனங்களையெல்லாமழைப்பி
த்து அவர்களைப்பார்த்து அரிபக்தர்களாகவும் அரிபூசாதுரந்தரர்களாக
வுமிருக்கும்படிகட்டளையிட்டு அப்படிநடவாதபேர்களை ஆக்கினைபண்
ணிவிடுவோமென்றுபறையறைவித்து அச்சந்திரகாசனானவன் சத்
தியசந்தனனாய்ச் சகலசனங்களையுந் தன்னைப்போலப்போஷித்துக்
கொண்டு சொப்பனத்திலும் பொய்சொல்லாமல்குடிகளுக்குப் பத்துக்
கொண்டதுவிழுக்காடுகொடுத்துத்தானொருபங்குவிழுக்காடுவாரம்வாங்
கிக்கொண்டு தருமசொரூபனாய்த் தனது சத்தியத்தினாற் றன
துஇராச்சியத்தில் மாதமும்மாரிபெய்வித்துச்சகலபயிர்களையு மபிவிர்த்
தியாய்விளைவித்துக்கொண்டுஒருகாலத்திலுங்குடிகளுக்குத்துன்பம்வரா
வொட்டாமற் பாதுகாத்துக்கொண்டு பிரமாதிதேவர்களும் தனது
கீர்த்தியைமெச்சும்படி யநேகயாகங்கள்யக்கியங்கள்ஹோமங்கள் ப
ண்ணிப்பிராமணபூசையும் தேவபூசையுமுழுவதுஞ்செய்து சனவிலும்
அரியைமறவாமற் சண்பகாவதிவிஷயையென்கிறஇரண்டுதேவிமாருட
னுங்கூடிச்சகலசவுக்கியங்களையுமனுபவித்துக்கொண்டு குந்தலதேசத்
தைப்பரிபாலனஞ்செய்கின்றசந்திரகாசமகாராசனானவ னுங்களுடைய
குதிரைகளைப்பிடித்துக் கட்டிவிட்டு உங்களுடனேபோராடநினைத்
திருக்கிறா னீங்களும் அந்தராசனை இந்தராசாக்களிலொன்றாய் நி
னைத்துச்சண்டைபண்ணிக்குதிரைகளைவிடுவித்துக்கொள்ளுவோமென்
றுநினைத்தீர்களானாலுங்களால்முடியாது ஆகையாலிலகுவா அந்தஇராச
னைச் சிநேகம்பண்ணிக்குதிரைகளைவிடுவித்துக்கொண்டு அஸ்தினாபுர
த்திற்குப்போய்த்தர்மபுத்திரர்செய்கிறயாகத்தை நிறைவேற்றிவையுங்க
ளென்றுசொல்லிப்பிறகு அந்தநாரதமுனிவரானவர் கிருஷ்ணார்ச்சுன
ர்களிடத்திற்செலவுபெற்றுக்கொண்டு தனது ஆசிரமத்திற்குப்
போய்விட்டாரதன்பிறகு கிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் தங்கள்ம
னதிலிருந்த சந்தேகந்தீர்ந்துசந்தோஷசித்தர்களாய்ச் சகலஅரசர்க
ளுடனும் சதுரங்கபலசேனைகளுடனும் அவ்விடத்திலிருந்துரதாருடர்க
ளாய்ப்புறப்பட்டுநடந்துகுந்தலதேசத்திற்குச்சமீபமாகப்போய்த்தண்டு
விட்டிறங்கினார்கள் அச்செயதற்குமுன்னமேதானே அவ்வசுவமேதக்கு
திரைகளிரண்டுங்குந்தலதேசத்தைச்சேர வருகையிற்சந்திரகாசமகாராச
ன் சேவகர்களாற் கேள்விப்பட் டக்குதிரைகளைப் பிடித்து
வரச் சொல்லி அருச்சுனராசன்விட்ட குதிரையினுடையநெற்றியி
லிருக்கின்ற விருதாவோலையைவாசித்துப்பார்த்துப்புன்சிரிப்பாகச்சி
ரித்துஇக்குதிரையின்பின்னேவருகிறவன்சாம்பவமூர்த்தியையுங்கேலி
த்தமேட்டானமெட்டியாகியகிரீட்டியாம்அப்படிப்பட்டராணாங்கனை
இன்றையத்தினம்ரணக்களத்திலே மதிக்கிறேன் அவன் நம்மையெ
ல்லாம் பெண்டுகளாக்கினானே அவனுடையஆண்பிள்ளைத்தன்மை
யைஇப்போது அறிகிறேனென்றுஆக்கிரகித்துப்பற்களை நெறநெறவெ
னக்கடித்துக்கண்களில்நெருப்புப்பொறிகள்பறக்கவும்புருவங்கள்நெரி
யவும்மீசைபடபடவென்றுதுடிக்கவும் அதிககோபத்துடனே அங்கி
ருந்தசேனைகளையழைத்து அந்தக்குதிரைகளிரண்டையுங்குதிரைச்சாச

வடியில்கட்டிவைக்கும்படி திட்டம்பண்ணியந்தக் கணத்திலே தானே
சந்திரகாசமகாராசனானவன் யுத்தசன்னத்தனாய்நவரத்தினமயமானதே
ரிலேறிக்கொண்டு மந்திரி பிரதானிகள் சாமந்தர்கள் குமாரவர்க்கங்கள்
பந்துவர்க்கங்கள் மகுடவர்த்தனர்கள் கிரீடாதிபதிகள் தண்டநாயகர்க
ள் சேனாபதிகள் முதலான துராதுரைகளும் சதுரங்கபலசேனைகளுமா
புடைசூழ்ந்துவரத்தக்கதாகப்புறப்பட்டு வெண்கலபேரிகை ரணபேரி
கை முதலான பதினெட்டுவகைமேளவாத்தியங்களும் காமசாமென்று
முழங்க அட்டகாசங்கள்பண்ணிக்கொண்டு பட்டணத்திற்கு வெளியே
வந்துதண்டுவிட்டிறங்கிச் சகலசேனையையும் அணியணியாகநிறுத்தி
ந்தசேனைகளுக்குமுதன்மையாய்ச் சந்திரகாசமகாராசனும் எமதர்மராச
னைப்போற் பார்க்கப்பயங்கரமாய் அக்ரூஷித்துநின்றா னதுகண்டு
தேவர்களெல்லாரும் ஆச்சரியப்பட்டு இந்தச்சந்திரகாசன் விஷ்ணுபக
தன் வீராதிவீரன் இவனைத்திருஷ்டித்துப்பார்க்கிறதற்கு நம்மாலுமா
காது அப்படியிருக்க இந்த அர்ச்சுனன் எவ்விதத்தினால் கெலிக்கப்போகி
றான் குதிரையையுமெப்படி விடுவித்துக்கொள்ளப்போகிறான். தருமபு
த்திரருமெவ்விதத்தில்யாகம்பண்ணிநமக்கு அவிர்ப்பாகங் கொடுக்க
ப்போகிறார் கிருஷ்ணபகவானுடையதந்திரங்களெங்கே நடக்கப்போகி
ன்றது இதைநம்பவேண்டியதில்லையென்று தங்களுக்குள்ளெண்ணங்கொ
ண்டுபயப்பிராந்தரானார்கள் கேட்டீரோ செனமேசயமகாராசனே
அப்படிப்பார்க்கப்பயங்கரமாய்நின்றுநிற்கின்ற சந்திரகாசமகாராச
னுடையசேனைகளை அருச்சுனன் கண்டு ஆச்சரியப்பட்டு நாம்இந்தராச
னையெப்படிகெலிக்கப்போகிறோம் நாரதமுனிவர்சொன்னதெல்லாம்உ
ண்மையாயிருக்கின்றதேயென்றுநடுங்கிஉச்சாகபயங்கரமாய் நாம் இன்
றையத்தினம்இந்தஇராசன்கையில்தப்பிப் பிழைக்கப்போகிறோமோவெ
ன்றுசிந்தாக்கிராந்தனாய்ச்சூரியனைக்காணாத தாமரைபோல முகம்வாடி
நின்றான் அப்படிமுகவாட்டமாய்நிற்கிற அர்ச்சுனனைப்பார்த்து அ
கிலாண்டகோடிபிர்மாண்டநாயகராகிய கிருஷ்ணபகவானுஞ் சிரித்து
த்தலையையசைத்து ஓகிரீடி நீயேன் தயிரியத்தைவிட்டாய்நாம இருக்கும்
பொழுது உனக்கென்ன குறையிருக்கின்றது நீஒன்றுக்கு மஞ்சவேண்
டாம்உச்சாகமாய்நின்றுகாண்டீபத்தைவளைத்து அஸ்திரங்களைப்பிரயோ
கஞ்செய் நாம்அச்சந்திரகாசனைக் செயிப்போமென்று அருச்சுன
னையுச்சாகப்படுத்தி அப்பகவானானவர் புன்சிரிப்புடனேமுடிக்கோ
லினால்குதிரைகளையதட்டி அருச்சுனனுடையதேரைச் சந்திரகாசனுக்கு
நேராகநடத்தியருளினார் அதுகண்டு அர்ச்சுனனும் கிருஷ்ணதேவனைப்
பார்த்துஜனார்த்தனரே தேவரீர்இரதத்தைமெதுவாய்நடத்தும் மிதோ
பாணங்களைப்பிரயோகிக்கிறேனென்றுசொல்ல அதுகளையெல்லாஞ்சந்
திரகாசன்கண்டுசிரித்து ஆனந்தசமுத்திரத்தில்முழுகிச் சகல ஆக்கிரமு
மடங்கி இந்தப்பகவானே அருச்சுனனுக்குச்சாரதியாகவிருந்து அடிமை
த்தொழில்செய்யும்பொழுது நாமிவ்வருச்சுனனுக்கடிமையல்லவா ஆகை
யினால்நாம்அருச்சுனனுடனேபோராடவேண்டியதென்ன நமக்கு அ
தனால்வருகிறபிரயோசனமென்ன இகபரசவுக்கியங்களைக்கொடுத்து இர
ட்சிக்கப்பட்டதேவனைவிட்டு வீணானகாரியத்தைநாமேன்செய்யவே
ண்டுமென்றுநினைத்து அதிகசந்தோஷத்துடனே தன்கையிலெடுத்தவி

ஸ்லேந்தேரின்மேலிலெறிந்துவிட்டுக்கவசத்தைக்கழற்றிப்போட்டுத் தே
ரைவிட்டுப்பூமியிற்குதித்துஓடிவருகையில்அதுகண்டுஅப்பகவானும்பு
ன்சிரிப்புடன்னேதேரைவிட்டிழிந்து பூமியின்மேலில் நின்றருளினர்
அப்பொழுது தருமசொரூபனான சந்திரகாசனும்வந்து அப்பகவானைக்க
ண்டுபிரதட்சிணஞ்செய்துசாஷ்டாங்க தெண்டனிட்டு எழுந்துநின்று
கைகளைச்சிரசின்மேலிலஞ்சலியாகவைத்துக்கொண்டு அத்தேவனைப்பா
ர்த்து ஓ தேவகிதேவா-புருஷோத்தமா-புண்டரீகாட்சா-ஆபத்பாந்த
வா-அநாதரட்சகா-கோவிந்தா-கோபாலா-கோபிகாரமணா - தேவகிநந்த
னா-பரந்தாமா-விஸ்வரூபா ஓசுவாமியென்னைரட்சியும் இந்தசமுசார
மென்கிறமாயாசமுத்திரத்தில்முழுகிமோட்சமாகிய கரையைக்காணா
மல்வருந்துகின்ற அடியேனுக்குத்தேவரீருடையதிருவடியாகியதெப்பத்தை
த்தந்துகரையேற்றி ரட்சியும்ரட்சியும் உமது கிருபாநோக்கத்தினாற்
பார்த்தருளும்இன்றைக்கல்லவோஎன்னுடையபூசாபலன்பலித்தது எ
ன்னுடையகீர்த்திப்பிரகாசம்பூலோகமுழுதும் நிறைந்தது இன்றல்ல
வோபரமசுகத்தைப்பெற்றேனென்னுடையசென்மஞ்சாபல்லியமாச்சு
துதேவரீருடையதிருவடியாகிய அங்குசம்பட்டமாத்திரத்தில்மனமா
கியகாட்டிற்சஞ்சரிக்கின்றபாவமாகிய ஆனைக்கூட்டங்களெல்லாம் மடி
ந்துவிழுமே அப்படிப்பட்டமகிமையையுடையகடாட்சசுஸ்திராவதா
ரியானமுகுந்தாரட்சியும்ரட்சியும் பசுவானதுகன்றுகளைப் போஷிக்கிற
துபோலப்பக்தசனங்களைப் போஷிக்கின்ற தயாநிதிரட்சியும் உம்மை
க்கண்டமாத்திரத்தில் என்னுடையசரீரம்குளிர்ந்துபிரமானந்தமேவி
ட்டதல்லாமலும்நான்காணவேண்டியிருக்கின்ற பாக்கியத்தினாலல்ல
வோ அந்தருமபுத்திரரும் அசுவமேதயாகம்பண்ணநினைத்தார் இவ்
வருச்சுனராசனுந்தேவரீராற்சகலபிரதிஷ்டையும் பெற்றானிவனுடை
யபுண்ணியந்தானெப்படிப்பட்டதோதெரியாதென்றுசொல்லித் திரும்
பவும் அப்பகவானுக்குப்பிரதட்சிணநமஸ்காரம்பண்ணிப்பிற்பாடுஅர்
ச்சுனனையும் ஆலிங்கனம்பண்ணிக்கொண்டுவீரவர்மன்முதலான இராச
ர்களையும் சதுரங்கபலசேனைகளையும் ஆதரணைசெய்து அக்கணத்திலே
தானேபதினெட்டுவகைமேளவாத்தியங்களும் தாம்தாமென்றுமுழங்
கத்தக்கதாகக்கிருஷ்ணார்ச்சுனர்கள்முதலான சகலசேனையையும்பிரயா
ணப்படுத்திக்கொண்டு தன்னுடைய சேனைகளுடனே குந்தலதேச
த்திற்கு அழைத்துக்கொண்டுவருகையில்தேவர்களெல்லாருங்கண்டுச
ந்தோஷப்பட்டுச்சந்திரகாசனுடையபாக்கிக்குமெச்சி சந்திரகாசன்பேரி
ற்பாரிசாதபுட்பங்களைச்சலசலவென்று வருஷித்தார்கள்பொழுது கி
ருஷ்ணபகவானும்புன்சிரிப்புடனே அருச்சுனனைப்பார்த்துக் கண்சை
கைபண்ணிஓ அருச்சுனா நாமிருவரும் நல்லபூசாபலன்பண்ணினபடியால்
இன்றைக்குத்தப்பிப்பிழைத்தோம்இனிமேல்நமக்கொருவருமெதிரில்
லையென்றுசொல்லிமகாசந்தோஷத்துடனேநடந்துசகலதுராதனசரு
டனும்சேனைகளுடனும்குந்தலபுரத்தைச்சேர்ந்து அச்சந்திரகாசமகாரா
சனுடையவனுமதியினாற்சர்வாடம்பரத்துடனே அப்பட்டணத்திலே
மூன்றுநாளிருந்தார்கள்இப்பால்நாலாநாள்காலமேசந்திரகாசனும் அசுவ
மேதக்குதிரைகளையுஞ்சிறந்த திரவியங்களையும் கிருஷ்ணார்ச்சுனர்களுக்
குக்காணிக்கையாகக்கொடுத்து அனுப்பிவைத்துப்பிற்பாடுசகலசேனைக

னையும்பிரயாணப்படும்படியுத்தரவு பண்ணித் தன்னுடையபட்டணத்
தையும்மந்திரிமார்கள்வசத்தி லொப்புவித்துத்தானும் ரதாருடனுய்ச்ச
துரங்கபலசேனைகளுடனே புறப்பட்டுவந்து அருச்சுனனுடையசேனைக
ளுடனேகலந்துகொண்டான் அதுகண்டு அர்ச்சுனனு மசுவமேதக்கு
திரைகளிரண்டையும் விட்டு அதுகளின்பிறகே கிருஷ்ணமூர்த்திசமேத
னய்ச் சந்திரகாசன்-வீரவர்மன்-மயூரத்துவசன்-தாமரைத் துவசன்-அம்
சத்துவசன்-நீலத்துவசன்-எவ்வாளுகுவன்-பப்பிரவாகன்-அனுசாளுவ
ன்-பிரத்தியுமனன்-அனிருத்திரன்-மேகவர்ணன்-சாத்தகி-கிருதவர்மன்
முதலான துரந்துரைகளுடனும் சதுரங்கபலசேனைகளுடனும் ரதாருட
னய்ப்புறப்பட்டுமகாஆடம்பரத்துடனே பூமியானது கிடுகிடுவென்றந
டுங்கத்தக்கதாக நடந்தான் அப்பால் அக் குதிரைகளானது வ
டக்குநோக்கியநேக தூரம்நடந்துகாடுகள்-செடிகள்-சீமைகள்-பூமிகள்
வனங்கள்-வனந்திரங்கள்-மலைகள்-குகைகள்-அக்கிராரங்கள் -பட்டண
ங்கள்-ஆறுகள-நதிகள-தேசங்கள்-ராச்சியங்கள் - சாலைகள்-சோலைகள்
இதுகளெல்லாங்கடந்துபோகையில் அங்கங்கேயிருக்கிற அரசர்களிற்
சிறிதுபேர் அவ்வசுவமேதக்குதிரைகளைக்கண்டுநடுநடுங்கினார்கள் சிறி
துபேர்பயப்பிராந்தர்களானார்கள் சிறிதுபேர்தங்கள்விருதுகளை வாங்கி
யெறிந்தார்கள் சிறிதுபேர் அத்துரைகளையெல்லாம் திருஷ்டித்துப்பார்க்
கமாட்டாமல் விலகிப்போனார்கள் சிறிதுபேர் அக் குதிரைகளுக்குத்
தெண்டனிட்டார்கள் சிறிதுபேர்காணிக்கை கப்பங்களைக் கொண்டு
கிருஷ்ணார்ச்சுனர்களைக்கண்டார்கள் சிறிதுபேர் அக்குதிரைகளையு மர்
ச்சுனனுடையசேனைகளையுங்கண்டுபயந்து ஓடிப்போனார்கள் கேட்டு
ரோசெனமேசெயமகாராசாவே இப்படியருச்சுனனுடைய சேனைகளா
னது சமுத்திரம்புரண்டுவருகிறதுபோல எங்கும்பாவிநடக்கையில் அ
துகண்டு எவ்வகைப்பட்டராசாக்களும் திருஷ்டித்துப் பார்க்கமா
ட்டாமல்ஓடிப்போனார்கள்சந்திரகாசனைக்கூட வணங்காப் புண்ணிக்கொ
ண்டு அருச்சுனராசனுக்குஇனிஇந்தலோகத்திலுமெதிராளிகளில்லையெ
ன்றுசிறிதுபேர்சொல்லிக்கொண்டார்கள் அருச்சுனனுடையசேனைகள்
நடக்கிறஅதிர்ச்சியினாற்பூமிதேவியுநடுங்கினாள் ஆதிசேஷனும்விஷங்க
ளைக்குபீல்குபீலென்றுகக்கிக்கொண்டு ஆயிரம்பணாமுடிகளையும் சாய்
த்துக்கொண்டா னிப்படியநேகவைபவத்துடனே அருச்சுனனானவன்
சகலசேனாசமுத்திரங்களுடனேநடக்கும்பொழுது அக்குதிரைகளும்
வடதிசையில்அநேகந்தூரம்நடந்தபிறகு கீழ்த்திசையைநோக்கித்தி
ரும்பிக்கிழக்குச்சமுத்திரக்கரையோரமாகவந்து அங்கேசற்றுநேரம்நின்
று அப்பால்சமுத்திரத்தின்பேரில்நடந்துமாய்கையாய்ப்போய்விட்ட
து அதிலே அருச்சுனனும்சகலசேனைகளுடனே கிழக்குச்சமுத்திரக்க
ரையோரமாய்வந்துசேர்ந்துகுதிரைகளைக்காணாமல் திகிலடைந்துகிருஷ்
ணபகவானைப்பார்த்து ஐயா கிருஷ்ணா இக்குதிரைகள்சமுத்திரத்தில் ந
டந்துபோகமாட்டாதல்லவோ அதுகளெங்கேபோச்சுது இனியென்
னசெய்வோமித்தனைபிரயாசப்பட்டுவந்தகுதிரைகள்மாய்கையாய்ப்போன
காரணமென்ன அதுகளையார்கொண்டுபோனார்களென்று தெரிய
வில்லையே இதுவரையில்பெரியசமுத்திரங்களையெல்லாங்கடந்து வ
ந்துகடைசியில்ஒருசிறியகால்வாயில்முழுகிவிடலாச்சுதே இதற்கு எ

ப்படி ஐயாவென்று சொல்ல அதுகேட்டு கிருஷ்ணபகவானும் தம்முடைய ஞானதிருஷ்டியினாற்பார்த்துக் குதிரைகளிருக்குமிடத்தையறிந்துகொண்டு அருச்சுனா குதிரைகள்போய்விட்டதென்று நீ பயப்படவேண்டாம் அந்தக் குதிரைகளிருக்கின்றவிடத்தைநாம் சொல்லுகின்றோம் அதுவென்னவென்றால் மைநாகபர்வதமொன்றுசுவேதபருவதமுதலான பருவதங்களுக்கு மிருப்பிடமாய் ஆமைகள்-முதலைகள் - சர்ப்பங்கள்-பட்சிகள்முதலான சீவராசிகளுக்கு மிருப்பிடமாய்க் கற்பகத்தரு பாரிசாதம்-சிந்தாமணி-காமதேனுமுதலான வஸ்துகளுக்குத்தாய்வீடாய் ஸ்ரீமந்நாராயணமூர்த்திக்குஞ் சிங்காரமாளிகையாய் இவ்வளவவ்வள வென்று அகலநீளம்ஆழம் அறியப்படாததாய் விளங்கப்பட்ட திருப்பாற்கடலுக்குமத்தியில்சுவேததீபமொன் றிருக்கின்றது அந்தசுவேததீபத்தில் நமது குதிரைகள்போய்ப்பச்சென்றபுல்லைக்கண்டுமேய்ந்துகொண்டிருக்கின்றது ஆகையால் அவ்விடத்திற்குப் போய்க் குதிரைகளைக்கொண்டுவருவோம் நீசற்றாகிலும் கவலைபடாமல் இச்சேனைகளையெல்லாம்இவ்விடத்தில்தானேநிறுத்திவிடு உன்னுடைய தேரும்உதவாதென்று அருச்சுனனுக்குச்சொல்லிவிட்டு அந்தக்கணமே தாருகனை நினைத்தருளினார் அப்பகவான் நினைத்தமாத்திரத்தில் தாருகனும் காந்தர்வகுதிரைகளுடனும்கருடக்கொடியுடனும் சங்குசக்கரமுதலிய பஞ்சாயுதங்களுடனும் கோடிசூரியப் பிரகாசமாய் விளங்குகின்ற வைகுண்டரதத்தைக்கொண்டுவந்துநிறுத்தினான் அதுகண்டு அப்பகவானும்சந்தோஷமாய்ச்சேனைகளையெல்லாம் அங்கேதானேநிறுத்திவிட்டுச்சந்திரகாசன்-வீரவர்மன்-மயூரத்துவசன்-அம்சத்துவசன் - பிரத்தியுமனன் அருச்சுனன் இவர்களைமாத்திரம் அவ்விரதத்திலேற்றித்தாமும் ஏறிக்கொண்டுதாருகனையெச்சரிக்கைபண்ணிரதத்தைத் திருப்பாற்கடல் மத்தியிற்கொண்டுபோம்படி கட்டளையிட்டருளினார் அதுகேட்டுத்தாருகனும் மகாப்பிரசாதமென்றுமுடிக்கோலினால்குதிரைகளையதட்டி இரதத்தை ஆகாசமார்க்கமாய்க்கொண்டுபோய்ச்சுவேதபருவதத்திற்கு நடுவே நிறுத்தினான் அப்போதுகிருஷ்ணமூர்த்தியானவர் அருச்சுனனுடனும் அஞ்சுதுரைகளுடனும்தேரைவிட்டிழிந்து அவ்விடத்திற்சுற்றிப்பார்த்துவருகையில் அங்கே ஆகாயத்திற்கும்பூமிக்குமொன்றாய் லட்சம்யோசனைவிஸ்தாரமுள்ள ஒருஆலாவிருட்சத்தின்கிழிருந்து தவஞ்செய்கின்ற பகதலப்பிரியமுனீந்திரனைக்கண்டு கிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் சந்தோஷமடைந்தார்கள் சந்திரகாசன்முதலானவைந்துபேரும் அம்முனிநாதனைக்கண்டுபிரதட்சிணநமஸ்காரஞ்செய்து நின்றார்கள் அப்பொழுது அம்முனீஸ்வரருங்கண்விழித்துப்பார்த்துகிருட்டிணார்ச்சுனராசர்களைம்ஆதரணைபண்ணி அப்பால் கிருட்டிணார்ச்சுனர்களைப் பார்த்து ஓநாராயணர்களே நீங்கள்புண்ணியபுருஷர்களாச்சுதே நாம்உங்களைப் பார்க்கும்படி யெத்தனைபுண்ணியம்பண்ணினோமோ நமதுகோரிக்கையின் நல்லவேளைநேரிட்டது உங்களைத்தரிசனம் பண்ணுகிறநிமித்தம் அக்குதிரைகளையிவ்விடத்திற்கு அழைத்தோம் இதோஇக்காரவனத்தில் மேய்ந்துகொண்டிருக்கின்றது பிடித்துக்கொண்டுபோங்களென்றுசொல்ல அதுகேட்டுக்கிருட்டிணார்ச்சுனர்களிருவரும்சந்தோஷமடைந்தார்கள் பின்னையும் அருச்சுனராசன் அம்முனிநாதனைப்பார்த்து ஐயா உம்முடைய

பார்த்தால் எனக்குமெத்தவும் நகைப்புவருகின்றது அஃதெதினாலெ
ன்றால்தேவரீர் அனேகநாளாய் தவஞ்செய்கிறபடியினால்சரீரமுழுது
ஞ்சர்ப்பங்கள்புற்றுவைத்துக்கொண்டு குடியாயிருக்கின்றது அதுவு
மல்லாமல்பலவிதமான விருக்ஷங்கள் முளைத்திருக்கின்றது இரண்டு
செவிகளிலும்பக்ஷிசாதிகள் கூண்டுகட்டிமுட்டையிட்டுகுஞ்சுபொரி
த்திருக்கின்றது கொக்குகளும்குருவிகளும்எச்சமிட்டிருக்கின்றதுபி
ன்னையும்வெய்யிலையும் காற்றையும்குளிரையுஞ் சட்டைபண்ணாமலொ
ருபயித்தியக்காரனைப்போல் உட்கார்ந்துகொண்டு தவஞ்செய்கிறீர்
இப்படிஇருப்பதைப்பார்க்கிலும்ஒருபர்ணசாலைகட்டிக்கொண்டுஅதி
லேசுகமாயிருந்து தவஞ்செய்யலாகாதோவென்றுகேட்க அதுகேட்டு
அந்தமுனிநாதனுஞ்சிரித்து அர்ச்சுனனைப்பார்த்துஓஅர்ச்சுனாஎன்
னைக்காற்றுக்கும் மழைக்கும்வெய்யலுக்கும் மறைவாய்க்குடிசைபோ
ட்டுக்கொண்டிருக்கலாகாதாவென்று சொன்னாயல்லவோஇந்தசரீர
ம் நீர்மேற்குமிழிபோல் நிலையில்லையேநான் இந்தகோலமாயிருந்துபா
ர்த்துக்கொண்டிருக்கும்போதே இருபதுபிரமாக்கள்பிறந்து இறந்து
போனார்களேஅப்படிப்பட்ட அற்பாயுசைநம்பிபர்ணசாலைகட்டிக்கொ
ள்ளலாமோவென்றுசொல்ல அதுகேட்டு கிருஷ்ணமூர்த்தியும்அந்த
ராஜாக்களுஞ்சிரித்தார்கள் அர்ச்சுனனுங்கலீலென்றுசிரித்துஅந்தமு
னிவனைப்பார்த்துஓமுனிநாதா நீர்நல்லவிசேஷஞ்சொன்னீர்உம்மை
ப்பார்க்கிலும் அந்தப்பிரமாக்களுக்கு ஆயுசுகொஞ்சமோஅதைச்சொ
ல்லுமென்றுகேட்க அதுகேட்டுஅந்த முனிநாதனுஞ்சிரித்து ஓகிரீடி
அந்தப்பிரமாக்களுடைய ஆயுசைச்சொல்லுகிறேன் அஃதெப்படியெ
ன்றால் கிரேதாயுகம்-திரேதாயுகம்-துவாபரயுகம்-கலியுகம்- என்கிறசது
ர்யுகங்கள் ஒருதரந்திரும்பினால் மஹாயுகமென்றுபெயர் அப்படிப்
பட்டமஹாயுகம்ஆயிரங்கொண்டதுஒருநாள். அப்படிப்பட்டநாள்
பதினைந்துகொண்டது ஒருபக்ஷம், அப்படிப்பட்டபக்ஷம் இரண்டு
கொண்டது ஒருமாதம், அப்படிப்பட்டமாதம் ஆறுகொண்டது ஒரு
ருது, அப்படிப்பட்டருது இரண்டுகொண்டது ஒருவருஷம், அப்படிப்
பட்டவருஷம் நூறுகொண்டது பிரமாவுக்குச்சரியனகாலம், அப்
போதுசகலபிரபஞ்சங்களும் ஜலப்பிரளயத்தினால் நாசமடைந்துபோ
ம் அப்போது ஆதிமூலமாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் ஒருசிறு
பிள்ளையாய்தம்முடைய கெர்ப்பத்தில்சகலபிரபஞ்சங்களையும்அடக்கி
க்கொண்டிருப்பார் இந்தப்படி நூறுமகாவருஷம் ஜலப்பிரளயமாயிரு
க்கும்போது அந்தமகாபுருஷன் உத்தாரப்படி துவாதசாதித்தர்கள்பிற
ந்து அந்தச்சலங்களை வற்றடித்து எப்போதும்போலபூமண்டலத்தை
திருமிப்பார்களிப்படி இருபதுபிரமாக்களைக்கண்டேனென்றுசொல்
ல அதுகேட்டுஅர்ச்சுனனும் ஆச்சரியப்பட்டு அந்தமுனீஸ்வரனைப்பா
ர்த்துஓமுனிநாதா, அப்படிப்பிரமாக்களும் மடிந்துபோய்சத்தசமுத்தி
ரமும்ஒன்றாகக் கோத்துக்கொண்டு பிரளயமாயிருக்குமென்று சொ
ன்னீரே அந்தப்பிரளயத்தில் நீரெப்படியிருந்தீர் அதையுமெனக்குத்
தெரியச்சொல்லவேண்டுமென்று கேட்க அதற்கு அந்தமுனீஸ்வரனு
ஞ்சிரித்து அர்ச்சுனனைப்பார்த்து ஓபுண்ணியபுருஷா, நூறுமஹாவரு

ஷபரியந்தம்ஜலப்பிரளயகாலமா யிருக்கும்போது அந்தசலத்தின்பே
ரில்ஆதிகர்த்தாவாகிய பகவான் ஒருசிறுபிள்ளையாய் சகலலோகங்களை
யுந்தம்முடையகுட்சியில் வைத்துக்கொண்டு சற்றாகிலும் ஆயாசமி
ளைப்பில்லாமல்ஒருஆலிலையின்பேரில்பள்ளிகொண்டிருப்பாரென்று
சொன்னேனல்லவோ நானுமந்தப்பிரளயகாலத்தில் பயப்படாமல்ஜ
லத்தின்பேரில்மிதந்துபோய் அந்தபகவானிடத்திற் சேர்ந்து அவரு
டையபாதாரவிந்தங்களைக்கெட்டியாகப் பற்றிக்கொண்டிருந்து திரும்
பவுமவருடையஅனுக்கிரகத்தினால் பிரமாக்கள்பிறந்து உலகங்களைச்
சிருஷ்டித்தால்நானும் இந்தஇடத்தில்வந்துசேர்ந்து தவஞ்செய்வேனெ
ப்படிஇருபதுபிரளயத்திற்கு அந்தபகவானுடைய கிருபையினால்தப்
பிப்பிழைத்தேன் அந்தபகவான் ஆரென்றும்அவரெங்கேயிருப்பாரெ
ன்றுங்கேட்கிறாயோஅவர் இங்கேதானேயிருக்கிறார்அவரெங்கேயெந்த
யிடத்திலிருக்கிறாரென்றுகேட்கிறாயோஆனால் அதையுஞ்சொல்லுகி
றேன்அஃதெப்படியென்றால் உனக்குப்பந்துவாகியும்சிநேகராகி
யும்தெய்வமாகியுமிருக்கப்பட்ட கபடநாடக சூஸ்திராவதாரியான இ
ந்தகிருஷ்ணமூர்த்திதான் அப்போது ஆலிலைமேற்பள்ளிகொண்டிருந்
தவர் இப்போதும் இவ்விடத்தில்நம்மிலொருவராய் ஒன்றுமறியாதவ
னைப்போலிருக்கிறார் இதுகளையெல்லாம் அவரையேகேட்டுதெரிந்து
கொள்ளென்றுசொல்ல அதுகேட்டுஅர்ச்சுனனும்சந்தோஷித்தனே
யந்தபகவானைப்பார்த்து ஐயாகிருஷ்ணாஅந்தமுனீஸ்வரர்சொன்னவச
னங்களெல்லாமெய்தானோவென்றுகேட்கஅதற்கு அந்தபகவானுஞ்
சிரித்துஅர்ச்சுனனைப்பார்த்து ஓ-அர்ச்சுனா, இவர்சொன்னவசனங்க
ளெல்லாமெய்யேஅந்தகாலத்தில் நான்சிறுபிள்ளையாயிருந்து உலகங்
களையெல்லாம் ரட்சித்ததுமெய்யேஅதுபொய்யல்லவென்றுசொல்ல
அதுகேட்டுஅர்ச்சுனனும் நடுநடுங்கி அந்தபகவானுக்குப் பிரதக்ஷண
ஞ்செய்துசாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டெழுந்துநின்று அந்தநாத
னைப்பார்த்து பரந்தாமா-பக்தவச்சலா-ஓசிநேகனமத்துனா-ஓசுவாமி
உம்முடையமகிமையை பிரமாதிதேவர்களாலும் அறியப்படாதேயெ
ன்றுஅனேகவிதமாகக் கொண்டாடினான் அப்போதுகிருஷ்ணமூர்த்
தியுஞ்சிரித்து அந்தமுனீஸ்வரருக்கு நமஸ்காரம்பண்ணிஓபுண்ணிய
புருஷாஉம்முடைய திவ்யசொரூபத்தைக் கண்டமாத்திரத்தில் எங்க
ளுக்குச்சந்தோஷமுண்டாச்சுது நாங்கள்பரமபவித்திரர்களானோமெ
ன்றுசொல்லஅதுகேட்டுஅந்தமுனிநாதனுஞ்சிரித்துஅர்ச்சுனனைப்பா
ர்த்துநாமொருசிறியகதைசொல்லுகிறோம் அதையுஞ்சாவதானமாய்க்
கேள்அஃதென்னவென்றால்நாம்பார்த்துக்கொண்டிருக்கும்போதே
பிறந்துஇறந்துபோன இருபதுபிரமாக்களில்பதினோராம்பிரமாானவ
ர்சிருஷ்டிகர்த்தாவாயிருக்கும்போது அவரென்னிடத்திற்குவந்துஎ
ன்னைப்பார்த்துநீர் அநேகநாளாய் தவஞ்செய்கிறீரோ என்னவரம்வே
ண்டித்தவஞ்செய்கிறீர் உம்முடைய தவத்திற்குமெச்சிப்பிரத்தியக்ஷ
மாய்வந்தேன் ஆகையால் உமக்குவேண்டிய வரத்தைக்கேளும்நான்த
ருகிறேனென்றுசொன்னார் அந்தவார்த்தையைக்கேட்டுச்சிரித்து அந்
தபிரமாவைப்பார்த்து ஓசதுர்முகப்பிரமாவே நீயென்னவார்த்தைசொ
ன்னாய்நீயெனக்கு வரங்கொடுக்கிறேனென்றுசொன்னாயல்லவோநீஅ

ற்பஆயுசுள்ளவன் நீயோஎனக்குக்கர்த்தன் நான்பார்த்துக்கொண்டிருக்கும்போதேஎனக்குமுன்னே பத்துபிரமாக்கள்பிறந்துசிருஷ்டிகர்த்தர்களாயிருந்துஇறந்துபோனார்க ளவர்களிலேநீயுமொருவன்தானேநீஇன்னம் இரண்டுமூன்றுநாளையில் இறக்கப்போகிறாய்அப்படியிருக்கநீஎனக்குவரங்கொடுக்கிறவனா உன்னுடையலோகத்திற்குப்போவென்றுசொல்ல, அதுகேட்டுஅந்தப்பிரமாவுஞ்சிரித்து என்னைப்பார்த்துஉனக்குப் பயித்தியம்பிடித்து நல்லவார்த்தைசொன்னாய்என்னைப்பார்க்கிலும் வேறேஒருதெய்வமுண்டோஇந்தப்பதினாலுலோகங்களுக்குநானே சிருஷ்டிகர்த்தாவாய் எண்பத்துநாலுலக்ஷம்ஜீவகோடிகளுக்குந்தெய்வமாய்ச் சகலதேவர்களுக்கும் ரிஷிகளுக்கும்வரங்களைக்கொடுக்கின்றவனாயிருக்கும்போது என்னையல்லாமல்வேறேஒருதேவன்வந்துஉனக்குவரங்கொடுக்கப்போகிறானோபார்ப்போமென்றுசொல்லிக்கொண்டிருக்கும்போதுகேட்டீரோநாராயணர்களே அந்தவேளையில் பூமியானதுபடாலென்றுவெடித்து அதிலிருந்துஒருபேய்க்காற்றுண்டாகிப்பிரளயகாலத்துச் சண்டமாருதம்போலெழும்பிஇப்படி வாதித்துக்கொண்டிருக்கிற எங்களிருவரையுந்தூக்கிக்கொண்டுஇந்த அண்டத்தைவிட்டு வேறொருஅண்டத்திற்கொண்டுபோய்விட்டது அங்கே ஒருசிம்மாதனத்தில் அஷ்டமுகப்பிரமாவானவர்சகலதேவர்களுடனும கொலுவாயிருந்தார் அவர்எங்களிருவரையும்பார்த்துநீங்களார் நீங்களெங்கேயிருந்துவந்தீர்நான்சிருஷ்டிகர்த்தாவாயிருந்துசகலலோகங்களையும்நிருமித்தேன் நீங்கள்என்சிருஷ்டிக்குள்அகப்படவில்லையே உங்களைப்பார்த்தால் விந்தைரூபமாய்க்காணுகின்றதேயென்றுகேட்கஅதுகேட்டுச் சதுர்முகப்பிரமாவுஞ் சிரித்துஅந்தஅஷ்டமுகப்பிரமாவைப்பார்த்து ஐயாநான்சதுர்முகப்பிரமாவாயிருந்துசகலலோகங்களையுஞ் சிருஷ்டிக்கப்பட்டவன் இவன்என்னுடையசிருஷ்டியிலகப்பட்ட சீஷனென்றுசொல்ல, அதுகேட்டுஅந்தஅஷ்டமுகப்பிரமாவுஞ்சிரித்து ஓபுரட்டர்களே நீங்களோபிரமாஅதுபொய்வார்த்தைநானேபிரமாநீங்களிருவரும் என்னுடையசீஷர்களென்று தர்க்கித்துக்கொண்டிருக்கையில் அவ்விடத்திலுஞ்அந்தக்காற்றுண்டாகிவந்துஎங்கள்மூன்றுபேரையும்அடித்துக்கொண்டுபோய்வேறொருஅண்டத்தில்விட்டது, அவ்விடத்தில் பதினாறுமுகமுள்ளபிரமாவானவர்சகலதேவர்களுடனும் சிம்மாதனத்தின்பேரில் கொலுவாயிருந்தார்அந்தப்பிரமாவானவர் எங்கள்மூன்றுபேரையும்பார்த்துஇதேது ஆச்சரியமாயிருக்கின்றது நீங்களார் விந்தையாயிருக்கிறீர்கள்உங்களில்ஒருவன்எட்டுத்தலையாகவும்ஒருவன் நாலுதலையாகவும்ஒருவன்சந்நியாசியாகவு மிருக்கிறீர்கள் நீங்கள்என்சிருட்டிக்குள்ளகப்படவில்லையேநீங்கள்யாவரென்று கேட்கஅதுகேட்டு அஷ்டமுகப்பிரமாவுமவரைப்பார்த்து ஐயாநான்அஷ்டமுகப்பிரமா நான்சகலலோகங்களுக்குஞ்சிருஷ்டிகர்த்தா இந்தமூன்றுபேரும் என்னுடையசீஷர்களென்றுசொல்ல-அதுகேட்டு அந்தபதினாறுமுகப்பிரமாவுஞ்சிரித்துநீங்களோபிரமாக்கள் அதுபொய்வார்த்தை நானேசகலலோகங்களுக்குஞ்சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமாஎன்னைப்பார்க்கிலும்வேறேஒருபிரமாவில்லைநீங்களெல்லாரும்என்னுடையசீஷர்களென்று வாதித்துக்கொண்டிருக்கையில்அவ்விடத்திலு மந்தக்காற்றுண்டாகி எங்களைந்துபே

ளையுமடித்துக்கொண்டுபோய் வேறொரு அண்டத்தில்விட்டது, அவ்
விடத்தில் அறுபத்துநான்கு தலையுள்ளபிரமாவிருந்து அவரும் அப்படி
யேசொன்னார் அவ்விடத்திலும் அந்தக்காற்றுண்டாகிவந்து எங்கள் ஆ
றுபேரையும் அடித்துக்கொண்டுபோய் வேறொரு அண்டத்தில்விட்
டது, அவ்விடத்தில் நூற்றிருபத்துநாலு தலையுள்ளபிரமாவிருந்து அ
வரும் அப்படியேசொன்னார். அவ்விடத்திலும் அந்தக்காற்றுண்டாகி
எங்கள்ஏழுபேரையுமடித்துக்கொண்டுபோய்வேறொரு அண்டத்தில்
விட்டது, அவ்விடத்தில் ஐம்பதுதலையுள்ள பிரமாவிருந்து அவருமப்
படியேசொன்னார் அவ்விடத்திலுமந்தக்காற்றுண்டாகி எங்களெட்டு
பேரையுமடித்துக்கொண்டுபோய்வேறொரு அண்டத்தில்விட்டது,
அவ்விடத்தில்ஐந்நூறுமுகப் பிரமாவிருந்து அவருமப்படியேசொன்
னார். அவ்விடத்திலுமந்தக் காற்றுண்டாகி எங்கள் ஒன்பதுபேரையும்
அடித்துக்கொண்டுபோய் வேறொரு அண்டத்தில்விட்டது, அவ்விட
த்தில்ஆயிரமுகப் பிரமாவானவர் நவரத்னமயமானசிம்மாசனத்தின்
பேரில்கொலுவாயிருந்துகொண்டு முப்பத்துமுக்கோடி தேவர்களும்
நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும்தன்னைச்சேவித்துநிற்கவும்நாலுவே
தங்களும்ஆறுசாஸ்திரங்களும்புருஷரூபமாகநின்று சேவித்துநிற்கவு
ம்-மகாசம்பிரமத்துடனேயிருந்து எங்கள்ஒன்பதுபேரையும்பார்த்து
நீங்கள்யாவர் நீங்கள்இவ்விடத்திற்கு ஏன்வந்தீர்கள்உங்களை இதுவ
ரையிலும்நான்கண்டதில்லையேநீங்கள் என்னவேண்டிவந்தீர்களெ
ன்றுகேட்கஅவரைப்பார்த்து அந்தஎட்டுபேர்களுஞ் சிரித்துஐயாஉங்
களுடையகர்வத்தினால் நாங்களித்தனைதூரம்வந்தோம்-நீர்தானோலோ
ககர்த்தாவாகியபிரமா-நீர்தானோ சகலலோகங்களையும்-சகலசராசரங்
களையும்-உண்டாக்கினவரென்றுகேட்க- அதுகேட்டுஅவரும்சிரித்து
அந்தஎட்டுபேர்களையும்பார்த்து ஓபுண்ணியபுருஷர்களே இந்தலோக
த்திற்குநீங்களுங்கர்த்தர்களல்ல, நானுங்கர்த்தாவல்ல,உங்களுக்கும்எ
னக்குங்கர்த்தாவாகியபரமேஸ்வரனானவர் தன்னுடையலீலாவிபூதி
யினால்சகலஅண்டங்களையும் உண்டாக்கினார் அவருடையஆக்கினையி
னால்நான்இந்த லோகங்களையெல்லாம் நிர்மாணம்பண்ணி சகலலோ
கங்களையும் சிருஷ்டித்தேன்- அந்தஅகிலாண்டகோடி பிரமண்டநா
யகரான பராபரவஸ்துவாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே சகலதேவர்
களுக்கும்சகலலோகங்களுக்குஞ்சகலசராசரங்களுக்குங்கர்த்தன் அவ
ருடையதிருவிளையாட்டி னிமித்தமாய் நீங்களும்நானும்இந்த அண்டங்
களைச்சிருஷ்டிக்கக்கர்த்தர்களானோமென்றுசொல்ல அதுகேட்டுஎட்
டுபேர்களுஞ் சந்தோஷப்பட்டு ஆயிரமுகப்பிரமாவுக்குத் தண்டனிட்
டார்கள் அதைகண்டுஅவரும்அவர்களையெடுத்துமார்போடுதழுவிக்கொ
ண்டுஅவர்களுக்குத்தகுந்தவெகுமானம் கொடுத்தனுப்பினார் அப்பொ
ழுது அந்தக்காற்றுண்டாகி எல்லாரையும் அடித்துக்கொண்டுவந்து அ
வரவர்களுடைய அண்டத்தில் அவரவர்களைவிட்டுவிட்டு என்னையும்
இவ்விடத்திற்கொண்டுவந்துசேர்த்தது- கேட்டாயோஅர்ச்சுனா அந்
தஸ்ரீமந்நாராயணமூர்த்தியானபகவான் இதோஉன்னிடத்திற்சதாகா
லமுமிருந்துஉங்களை ரட்சித்துக்கொண்டிருக்கிறாரென்றுசொல்லஅ
துகேட்டுஅர்ச்சுனராசனுஞ் சந்தோஷித்தனுப அந்தபகவானைப்பா
ர்த்துஅநேகவிதமாகக் கொண்டாடினான் அதின்பிறகுகிருஷ்ணர்ச

சுனர் ளிருவரும் அந்தப்பகதலப்பிரீயமுனீந்திரருக்கு நமஸ்காரஞ்செ
ய்து ஐயா முனிநாதா தேவரீர்பெரியவரானகயால் தருமபுத்திரர்செய்கி
றயாகத்திற்குவரவேண்டுமென்றுவேண்டிக்கொள்ள அதுகேட்டு அ
தமுனீஸ்வரருஞ்சந்தோஷப்பட்டு அப்படியேவருகிறேமென்றுசொ
ல்ல அப்பொழுதுகிருஷ்ணார்ச்சுனர்கள் அந்தமுனிநாதனையுந்தேரின்
மேலெழுந்தருளச்செய்து பின்புசந்திரகாசன் முதலான ஐந்துராசா
க்களையும்ஏற்றிக்கொண்டுதாங்களும்ஏறிக்கொண்டு தாரகனெச்சரித
தமாத்திரத்தில்தாரகனும் அந்தரதத்தைஆகாசமார்க்கமாய்நடத்திச்சி
றுக்குசமுத்திரக் கரையோரமாய்க்கொண்டுவந்து நிறுத்தினன் அப்
போதுஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்களும் பகதலப்பிரீயமுனீந்திரரும்மற்ற ஐ
ந்துராசாக்களும் அந்தரதத்தைவிட்டிழிந்து தங்கள்தங்கள்ரதத்திலே
றிக்கொண்டார்கள் அப்பால்ஸ்ரீகிருஷ்ணபகவானும் தாரகனையெச்சரிக்
கைபண்ணி அந்தரதத்தை வைகுந்தத்திற்குக் கொண்டுபோம்படிகட்
டளையிட்டனுப்பினர் அப்பொழுது அர்ச்சுனனும் அஸ்வமேதக்குதி
ரைகளைவிட்டு அதுகளின்பிறகே ஸ்ரீகிருஷ்ணபகவான்முதலானசே
னைகளுடனேரதாரூடனுகியுத்தசன்னத்தனாய்ப் புறப்பட்டு திமிலை
ட்டுவைசமேளவாத்தியங்களும் தாம்தாமென்றுமுழங்கத்தக்கதாசம
காஉச்சாகத்துடனே நடந்தான் அப்பால் அந்தக்குதிரைகளானது சி
ந்துதேசத்திறகுச் சமீபமாகநடந்துபோகையில் அங்கிருந்தவேவுகார
ர்கள்கண்டு அதிவேகமாய்ப்போய் அந்தசிந்துதேசத்தைப்பரிபாலன
ம்பண்ணுகின்றசயிந்தவன்குமாரனைக்கண்டுதண்டனிட்டு ஐயாராசேந்
திராநம்முடையபட்டணத்திற்குச் சமீபத்தில்இரண்டுஅஸ்வமேதக்கு
திரைகள்வருகின்றது அதுகளின்பிறகேஅஸ்தினபுரத்தையாளுகின்ற
தருமநந்தனருடையதம்பியாகியவீராதிவீரனை அர்ச்சுனமகாராசாவா
னவர் ஸ்ரீகிருஷ்ணபகவானுடனும் சகலசேனைகளுடனும் மகாஆடம்
பரத்துடனேயுத்தசன்னத்தனாய்ப் புறப்பட்டுவருகிறுரென்றுசொல்
ல அந்தவசனங்கேட்டமாத்திரத்தில் விருதசந்திரனும்திகிறபட்டு ஐ
யோ அந்த அர்ச்சுனராசனை நம்முடையதகப்பனைக் கபடத்தினற்கொ
ன்றவனச்சதே அப்படிநம்மையுங் கொல்லுவானே நாமென்னசெய்
வோமென்றுமகாபயப்பிராந்தனாய்நடுநடுங்கி அந்தச்சபையிலேதானே
சிம்மாசனத்திலிருந்து தொப்பென்றுபூமியில்விழுந்து காலுங்கையும்
உதைத்துக்கொண்டு கண்கள்சுழலமிடவாயை ஆஆவென்று திறந்து
சாக்கூந்தல்போட்டுஅங்கேயே பிராணனைவிட்டான் அப்போது அந்
தச்சபையிலிருந்தவர்களெல்லாருமபயந்துமகாதுக்காக்கிராந்தர்களா
ய்விசனப்பட்டழுதார்கள் அதுசேதியை அந்தப்புரத்திலிருந்த அவன்
தாயாகியதுர்ச்சேலையென்பவள்கேள்விப்பட்டு கோவென்றசத்தத்து
டனே அழுதுக்கொண்டோடிவந்து கொலுமண்டபத்திற்சேர்ந்து கு
மாரனைப்பார்த்து ஐயோமகனேயென்று வாயிலறைந்துகொண்டுபுத்
திரன்மேல்விழுந்து மூர்ச்சையாய்க்கிடந்து மறுபடியும்இரண்டுநாழி
கைசென்றபிறகு அங்கிருந்தமந்திரிகள்செய்த சயிதகியவுபசாரங்களி
னல்மூர்ச்சைதெளிந்து திரும்பவும் புரண்டுபுரண்டழுது ஓகுமாரா
நீயென்னநினைத்து சீவனைவிட்டாய்நீயெங்கேபோனாய்எங்கேயடங்கினா
ய்நீயென்னைவிட்டு ஓண்டியாய்ப்போனாயோ நானஉன்தகப்பனிறந்து
போனதிற்கு உன்னைப்பார்த்து அந்ததுக்கத்தைவிட்டுச் சந்தோஷ

மாயிருந்தேன் அந்த சந்தோஷத்தையெல்லாம் எங்கேபோக்கடித்தா
யென்று அனேகவிதமாகப்புலம்பி பிற்பாடு மந்திரிமார்கள் சொன்ன
வுபசாரவசனங்களினால் சற்றேமனந்தெளிந்து அர்ச்சுனராசன்வருகி
றவிருத்தாந்தத்தைகேழ்விப்பட்டு அந்தச்சபையைவிட்டுத்திடுக்கென்
றெழுந்திருந்து பட்டணத்திற்குவெளியேபோய் அஸ்வமேதக்குதிரை
களின்பின்னாகவருகிற அர்ச்சுனராசனைக்கண்டு கண்ணீராருயப்பெரு
க அழுதுக்கொண்டுவந்து அர்ச்சுனனுடைய பாததத்திலவிழுந்துபுத்தி
ரசோபம் பொறுக்கமாட்டாமல்வெகுவாய்ப்பிரலாபித்து அர்ச்சுனனை
ப்பார்த்து ஓ அண்ணே வீராதிவீரா சுபத்திராமனோகரா என்னுடைய
துக்கத்தைஎன்னென்றுசொல்லுவேன் நீங்கள்வருகிறசேதியைகேகே
ட்டு என்குமாரனானவன் கொலுமண்டபத்தில்தானே மகாபபத்துட
னேதகப்பனைக்கொன்றவர் தன்னையுங்கொல்லுவாரென்று நினைத்து
ச்சீவனைவிட்டான் இனிஎனக்குவேறே ஒருதிக்கில்லை நான் அனாதை
யாய்நின்றேன் தேவரீரால்என்புருஷனானவன் பாரதயுத்தத்தில்அநி
யாயமாய்மடிந்துபோனபின்பு அந்தத்துக்கத்தையெல்லாம் இந்தப்புத்
திரனைப்பார்த்துநிவிர்த்திசெய்துசந்தோஷமாயிருந்தேன் அந்தச்சந்
தோஷமெல்லாம் இன்றோடேயடங்கிப்போய்விட்டதுநான் இனிஎன்
னவென்றுநிர்வாகம்பண்ணுவேன் பூர்வத்தில் என்புருஷனானவன் உ
ங்களுடனேகூடியிராமல் அநியாயபாதகர்களானசகுனிதுரியோதனா
திகளுடனேகூடியிருந்தபடியினால் நான் அமங்கலியாய்நின்றேன் அ
ந்தத்துக்கத்தையெல்லாம் நிவிர்த்திபண்ணிஉங்களையேகோரிக்கொண்
டிருந்தேன் அப்படியிருக்கஎனக்குஇப்படிப்பட்ட ஆபத்துகள்வந்து
சம்பவித்தகாரணமென்ன ஓ அண்ணேபரமதயாளா என்னைக்காப்பா
ற்றும்இறந்துபோனசாந்திபனென்றஒருபிராமணப்பிள்ளையைபன்னி
ரண்டுவருஷத்தின்பிறகு அழைப்பித்துகொடுத்தமகானுபாவராகிய
ஸ்ரீகிருஷ்ணபகவான் உமக்குமைத்துனராகையால்அதுபோலஎன்பி
ள்ளையையும் பிழைக்கப்பண்ணிஎனக்குப்புத்ரபிக்ஷைகொடுத்துரக்ஷி
க்கவேண்டும் அண்ணேயென்று அனேகவிதமாகப்பிரலாபித்து அழு
கிறபோது அந்த அர்ச்சுனனுந்தன்காலில்விழுந்தழுகிற தங்கையாகிய
துற்சேலையென்பவளை எடுத்துஉட்காரவைத்து தன்னுடையஉத்தரீய
த்தொங்கலினால்அவளுடையகண்ணீரைத்துடைத்து ஓதங்காய்நீ அழ
வேண்டாம்உன்னுடையகுமாரனைநான் இறந்துபோகசொன்னேனோ
நானென்னசெய்குவேன் அவனுக்குப்பிரமனுடைய செயல்அப்படி
யிருந்தது அப்படிப்பட்ட வீராதிவீரனாகிய பிள்ளையைப்பெற்றாய்இப்
போதும்நீ பயப்படவேண்டாம் நமக்கெல்லாங் காரணகர்த்தாவாயிரு
க்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்திற்போய்சரணமடைந்தால்அவர்உ
ன்னுடையதுக்கத்தைத்தீர்த்து ரட்சிப்பாரென்றுசொல்ல அதுகேட்
டு அந்ததுற்சேலையும் துக்கம்நீங்கி அப்படியேசெய்கிறேனென்றுகிரு
ஷ்ணபகவானிடத்திற்போய் அந்தபகவானுக்குப் பிரதட்சணநமஸ்கா
ரங்கள்பண்ணிகைகட்டிக்கொண்டு நின்று அந்தநாதனைப்பார்த்து ஓஜ
யா அனாதையாயிருக்கின்றவர்களைக் காப்பாற்றிரட்சிக்கின்றது தேவரீ
ருடையகடமையாதலால் என்னைரட்சியும்ரட்சியும் பூர்வகாலத்தில்ஆ
திமூலமேயென்றுமுறையிட்ட கஜேந்திரழ்வானைக் காத்துரட்சித்த
புண்ணியபுருஷா கபடநாடகசூஸ்திரதாரி கோபாலகிருஷ்ணாஎன்

ளைரட்சியும் என்னுடையகோரிக்கையை ஈடேற்றும்தேவரீரால்சக்தி
யமாகாதகாரியமொன்றுண்டோ முன்புஅஸ்வத்தாமருடையபாணாக்கி
னியினால்வெந்துநீறாய்ப்போன உத்தரையினுடைய கருப்பத்தைநிவு
த்திப்பரிட்சித்தைரட்சித்த மகாபுருஷர்நீரல்லவோஉம்முடையமகி
மையைப்பிரமாதிதேவர்களாலு மறியக்கூடாதே இப்போதுஎன்னு
டையகுமாரனைப் பிழைக்கப்பண்ணிரட்சியும் சுவாமியென்றுஅனேக
விதமாகத் தோத்திரம்பண்ணுகின்ற துற்சேலையைப்பார்த்துஅந்தபக
வானுஞ்சிரித்து ஓ துற்சேலை, நீயேன்விசனப்படுகிறாய் நீயழவேண்
டாம்நீ அப்படிப்பட்ட ரணரங்கதுரந்தரனை வீராதிவீரனைப்பெற்றா
ய்உனக்குஎன்னகுறையிருக்கின்றது நீமகாசவுரியபராக்கிரமசாலியா
ன அர்ச்சுனராஜனுடைய தங்கையல்லவா உனக்கொருநாளுந்தாழ்வுவ
ராதென்றுசிறிதுபரிகாசவார்த்தைகளாய்ப் பேசிக்கொண்டு அந்தபக
வானவர் அர்ச்சுனன்முதலான ராஜாக்களுடனுஞ்சதுரங்கசேனைக
ளுடனும்நடந்துவந்து சிந்துதேசத்து கோட்டைவாசலிற்சேர்ந்துசக
லசேனைகளையு மவ்விடத்தில்தானே நிறுத்திவிட்டு அர்ச்சுனனையுஞ்ச
ந்திரகாசன்முதலானசிறிதுதுரைகளையுந்தம்மோடழைத்துக்கொண
டுதுற்சேலையானவள் பின்னேவர அந்தத்தேவனும்அரண்மனைக்குள்
நுழைந்துபோய்ஆஸ்தானமண்டபத்திற்சேர்ந்து சிம்மாசனத்தின்பே
ரில்விழுந்துகிடக்கின்றபிள்ளையைப்பார்த்து அந்தபகவான்சிரித்துத
ம்முடையவலதுகையாகிய தாமரையினால் அந்தப் பிள்ளையினுடைய
பாதாதிகேசபரியந்தம்தடவிக்கொடுத்தருளினார், அப்போதுஅந்தப்பி
ள்ளையுமவருடைய அனுக்கிரகத்தினால் நித்திரைபண்ணிஎழுந்தவர்
போலவெழுந்துஉட்கார்ந்துதன்னண்டையிலிருக்கிறஸ்ரீகிருஷ்ணார்ச்சு
னர்களைக்கண்டுதிடுக்கென்றெழுந்திருந்து அவர்களுக்குப்பிரதட்சண
நமஸ்காரங்கள்பண்ணி அர்க்கியபாத்தியமுதலான உபசாரங்களினால்
அந்நரநாராயணர்களைப்பூசித்து அநேகவிதமாகத்தோத்திரம்பண்ணி
னான் கிருஷ்ணார்ச்சுனர்களிருவரும்சந்தோஷப்பட்டு அந்தப்பிள்ளையை
யெடுத்துமார்போடுதழுவிக்கொண்டு ஆசீர்வாதம்பண்ணி பிறபாடுகி
ருஷ்ணார்ச்சுனர்கள்சகலராஜாக்களுடனு மந்தப்பட்டணத்தில்மூன்று
நாளிருந்துபிறகு நாலாநாள்காலமே கிருஷ்ணபகவானுடையஅனுமதி
யின்பேரில் அஸ்வமேதக்குதிரைகளைவிட்டு அதுகளின்பிறகே அர்ச்சு
னங்கிருஷ்ணமூர்த்திசமேதனாய்ராஜாருடனேப்புறப்பட்டுசயிந்தவனு
டையகுமாரனையும் துற்சேலையையு மழைத்துக்கொண்டு சகலராசது
ரைகளையும்சதுரங்கபல சேனைகளுடனும்பதினெட்டுவகைமேளவாத்
தியங்களும்தாம்தாமென்று முழங்கத்தக்கதாக மகா ஆடம்பரத்துட
னேநடந்தான்.

கேட்டீரோஜெனமேஜெயமகாராஜாவே அப்பாலந்தக்குதிரைகளா
னது வழாரவங்களுடனேநடந்துவந்து சிந்துதேசத்தைவிட்டு அப்புற
ம்சிறிது சீமைபூமிகள் கடந்து அஸ்தினாபுரத்துக்குநேராய்த்திரும்பின
து அப்போதுஅர்ச்சுனராஜனும் சகலசேனாசமுத்திரங்களுடனே அந்
தக்குதிரைகளின் பின்னாகவேநடந்து அஸ்தினாபுரத்திற்குச்சமீபமாக
வருகையில்அதுகண்டுஸ்ரீகிருஷ்ணபகவானும் ஆலோசனைசெய்து அ
ர்ச்சுனனைப்பார்த்துஓகிரீடி இனிமேல் தருமபுத்திரர் செய்கிறயாகத்தி
ற்குஒருவிக்கினமுமில்லை, இந்தமட்டுக்கும்தருமபுத்திரர் யாகதீக்ஷ

ளைவகித்துக்கொண்டு குதிரையைவிட்டு ஒருவருஷமாச்சுது சித்திரா
பர்வமுஞ்சமீபித்திருக்கின்றது உங்கள்தமயனாகிய தருமநந்தனரு
டையதருமத்தினாலும் உன்னுடைய புஜபலபராக்கிரமத்தினாலு
ம் இந்தராஜாக்களுடைய சகாயத்தினாலும் அஸ்வமேதக்குதிரையான
து ஒருதடையில்லாமல் நேராய்வந்துசேர்ந்தது இந்தப்பகதலப்பிரீய
முனீந்திரரைக்கண்டபுண்ணியம்இவ்வளவவ்வளவென்றுசொல்லிமு
டியாது அதுவல்லாமலும் மகாபராக்கிரமசாலிகளான மகுடாதிபதிக
ளெல்லாம்வணங்கப் பண்ணிக்கொண்டாய் உன்னுடையசவுரியப
ராக்கிரமத்தை நானென்னவென்று சொல்லுவேனென்றுகிருஷ்ணபகவா
ன்சொல்ல அதுகேட்டர்ச்சுனனும் புன்சிரிப்பாகச்சிரித்து அந்தமூர்
த்தியைப்பார்த்து ஜகத்ரக்ஷகா தேவரீரென்னைப்பரிகாசம்பண்ணுகி
றீர் என்னாலொருகாரியமுநடக்கவில்லை சகலமுந்தேவரீருடையஅனு
க்கிரகத்தினால் இந்தமட்டும்கடந்தேறிவந்தது இனிமேலுந் தேவரீரே
யல்லாமல்அணுவளவு மசையமாட்டாதென்றுசொல்ல அதுகேட்டு
அந்தநாதனுஞ்சந்தோஷமடைந்து அர்ச்சுனனைப்பார்த்து ஓகிரீடி இப்
போதுநாம்நம்முடைய பட்டணத்தைச்சேர வந்தோமல்லவோநம்மு
டையதண்டிலே அநேகம் வீரர்களானமகுடவர்த்தனர்கள் வருகின்றா
ர்கள்முனிசிரேஷ்டராகியபகதலப்பிரீயமகாமுனீந்திரரும்வருகின்றார்
ஆகையால்நான் அஸ்தினாபுரத்திற்குப்போய்த் தருமபுத்திரரைக்கண்
டு இவ்விடத்துச்சங்கதிகளெல்லாந் தெரியப்படச்சொல்லி மறுபடியு
ம்இந்தராஜாக்களுக்கு எதிராகவரவேண்டுமாதலால் நான்முன்னதா
கப்போகிறேன் நீயும்இந்தராஜகூட்டங்களுமாய் இந்தசேனைகளுட
னேகூடிக்கொண்டு மெள்ளமெள்ள நடந்துநாளையத்தினம்அஸ்தினா
புரத்திற்குவந்து சேருங்களென்றுசொல்லி அர்ச்சுனனிடத்திற்செல
வுபெற்றுக்கொண்டு அந்தபகவானுந் தனியேபுறப்பட்டுரதத்தின்மே
லேறிக்கொண்டுநடந்தருளினார் அப்பால்அர்ச்சுனராசனானவன்அஸ்
வமேதக் குதிரைகளுடனும் ராசவர்க்கங்களுடனும் பகதலப்பிரீயமு
னீந்திரருடனும் சகலசேனாசமேதனாய் நடந்துஅஸ்தினாபுரத்திற்கு
ச்சமீபத்திலிருக்கிற ஒருசிங்காரவனத்தினிடமாகவந்து தண்டுவிட்டி
ருந்தானப்பொழுது சூரியபகவானும்மேற்குத்திசையில்அஸ்தமான
மானார் அங்கேகிருஷ்ணபகவானும்அதிகவேகமாகநடந்து அஸ்தினா
புரஞ்சேர்ந்து யாகமண்டபத்தில்யாகதீட்சையைவகித்துக்கொண்டி
ருக்கிறதருமபுத்திரரைக்கண்டு சாஷ்டாங்கதண்டனிட்டருளினார் அது
கண்டுதருமபுத்திரருஞ்சந்தோஷமாய் அந்தபகவானையெடுத்துமார்போ
டுதழுவி ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு வெகுவாயுபசரித்தந்ததேவ
னைநவரத்னசிங்காதனத்தின்பேரில் உட்காரவைத்துக்கொண்டு அவ
ரைப்பார்த்து ஓகிருஷ்ணசுவாமிஉம்மைக்கண்டு நெடுநாளாச்சுதே சகல
காரியங்களையும் செயம்பண்ணிக்கொண்டுவந்தீரோசித்திராபர்வமுஞ்
சமீபித்திருக்கின்றதே அர்ச்சுனனெங்கேயிருக்கிறான்குதிரைஎங்கே
யிருக்கின்றது தேவரீர்மாத்திரம் தனித்துவந்தகாரணமென்ன அதை
ச்சொல்லுமையாவென்றுகேட்க அதுகேட்டுஅந்தபகவானுந்தருமந்
தனரைப்பார்த்து புன்சிரிப்பாகச்சிரித்து தாம்போய்வந்தசேதிகளெ
ல்லாஞ்சவிஸ்தாரமாகச்சொல்லிப்பின்னையுமவரைப்பார்த்து ஓயாக
ருமநந்தனாஅர்ச்சுனனானவன் இரண்டு அஸ்வமேதக்குதிரைகளுடனும்

வீராதிவீரர்களான அநேகமகுடமண்டலீகர்களுடனும் சகலசேனச
மேதனாய்நமது பட்டணத்திற்குச் சமீபமாயிருக்கின்றசிங்காரவனத்
தில்தண்டுவிட் டிறங்கியிருக்கிறான் உம்முடையபாக்கியத்தை நானெ
ன்னவென்று அளவு படுத்திச்சொல்லுவேன் நீர்நினைத்தகாரியம்முடி
யாமற்போகுமோ உமக்குப்பலசாலிகளான வீமார்ச்சுனர்களிருக்கும்
போது என்னகுறையிருக்கின்றதென்றுசொல்லிப் பின்னையும் அந்த
ராசனைப்பார்த்து ஐயா நாளையதினம் நாம்சிறிதுபேருடனே நடந்து
போய் அர்ச்சுனராசனுடனே வருகிறராஜாக்களையெல்லாம் எதிர்கொ
ண்டு அழைத்துவர வேண்டுமென்றுசொல்ல அதுகேட்டுத்தருமபுத்
திரரும் அதிகசந்தோஷத்துடனே கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து ஐயா
கோபாலசூடாமணி தேவரீர் எனக்கு அபயஸ்தங்கொடுத்து ரட்சிக்கி
றேனென்று கங்கணங்கட்டிக்கொண் டிருக்கும்போது எனக்கு என்ன
குறையிருக்கின்றது சகலமுங்காலையிலே பேசிக்கொள்ளலாம் இப்போ
து ஆலசியமாயிராமல் அந்தப்புரத்துக்குப் போமென்றுசொல்ல அது
கேட்டுகிருஷ்ணமூர்த்தியும் அப்படியே அந்தப் புரத்திற்குப்போய் அ
த்தையாராகியகுந்திதேவியைக்கண்டு தண்டனிட்டுத்தாம்போய்வந்த
சேதிகளெல்லாஞ் சவிஸ்தாரமாகச்சொல்லி அங்கிருந்துவந்து திரௌ
பதியையுஞ்சுபத்திரா தேவியையுங்கண்டு அவர்களிடத்திலுஞ்சொல்
லிவிட்டு அப்பால் தம்முடைய அரண்மனைக்குப்போய்த் தமதுதாயாரா
கியதேவகிதேவியாரையும் அசோதையம்மையாரையுங்கண்டு அவர்க
ளுக்குநமஸ்காரம்பண்ணி அவர்களிடத்திலும் தாம்போய்வந்தசேதிக
ளைச்சொல்லிச் சற்றுநேரம்பேசிக்கொண் டிருந்தபிற்பாடு ருக்மணிச
த்தியபாமைமுதலான ஸ்திரீசனங்களையுங்கண்டு ஆதரணைபண்ணி அ
தின்பிறகுஸ்நானஞ்செய்து சந்தியானுஷ்டான செபதபங்களை முடித்
துக்கொண்டு அந்தப்புரத்திற்குப்போய் மகாசம்பிரமத்துடனே ஷட்
சுவைபதார்த்தங்களோடும் போஜனம்பண்ணி எழுந்திருந்து கை
கால்சுத்திபண்ணிக்கொண்டு கர்ப்பூரதாம்பூலம் தரித்துக்கொண்டுகந்
தபுஷ்பபரிமளாதிகளை யணிந்துகொண்டுசந்தோஷகரமாய்ச்சிறிதுநே
ரங்கேளிக்கைவிநோதங்கள் பார்த்துக்கொண்டிருந்து பிற்பாடுபள்ளி
யறைக்குட்போய்ப்புஷ்பசரங்களினா லலங்கரித்திருக்கின்றசப்பிரகூட
மஞ்சத்தின்பேரில் சயனித்துக்கொண்டு ருக்மணிசத்தியபாமையிவ
ர்களிருவரும் பாதம்பிடிக்கவும் மற்றஸ்திரீகளெல்லாரும் வெண்சாம
ரம் ஆலவட்டம் மயில்விசிறிமுதலானதுகளைக் கையிலேந்திக்கொண்
டு அனந்தவிதசயித்திய உபசாரங்கள் செய்யவும் அந்தபகவானானவர்
இப்படிப்பட்ட வைபவத்துடனே பரமயோகநித்திரைசெய்தருளினா
ர் அதிலேசற்றுநேரத்தில்சூரியனும்கீழ்த்திசையில் உதயமாகினார் அது
கண்டுதடாகங்களிலுள்ள தாமரைகளெல்லாமுகமலர்ந்துசகலசீவரா
சிகளுக்கு மானந்தமுண்டாச்சுது அதற்குமுன்னமே கிருஷ்ணபகவா
னுநித்திரைதெளிந் தெழுந்திருந்து காலோசிதகாரியமான நித்தியகர்
மாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு போசனகிருத்தியங்களையுந்
தீர்த்துக்கொண்டு அரமனையைவிட்டுப் புறப்பட்டுவந்து தம்பிமார்களு
டனும் மந்திரிமார்களுடனும்பிரதானிகளுடனும்மகுடவர்த்தனர்களு
டனுங்குருக்கள்மார்களுடனுங்கொலுமண்டபத்தில்நவரத்நகசிதமானசி

ம்மாசனத்தின்பேரில்கொலுவாயிருக்கின்ற தருமபுத்திரமகாராஜனை
க்கண்டுதண்டனிட்டு அவருடையஆசீர்வாதத்தைக் கைக்கொண்டு அ
வர்போடுவித்த ரதத்தின் சிம்மாசனத்தின் பேரிலுட்கார்ந்து அந்ததரு
மபுத்திரனைப்பார்த்து ஐயாதருமநந்தனா நமது அஸ்வமேதக்குதிரைக
ளானது இந்நேரமாம்முடையபட்டணத்திற்குச் சமீபமாகவருமே அ
துகளின்பிறகே அர்ச்சுனனும் மற்றுமுண்டானமகுடமண்டலாதிப
ர்களும்வருகின்றார்களே நாமுஞ்சிறிதுபேர்களுடனே எதிர்கொண்டு
போய்அவர்களையெல்லா மழைத்துக்கொண்டு வரவேண்டியிருக்கின்
றதே அதற்கு ஆலோசனைசெய்து அவர்களையனுப்பவேண்டுமோ அவ
ர்களை அனுப்பிவையு மென்றுசொல்ல அதுகேட்டுதருமநந்தனருஞ்சி
ரித்துகபடநாடக சூஸ்திராவதாரியான கிருஷ்ணபகவானைப் பார்த்து
அநேகவிதமாகத் தோத்திரம்பண்ணி அவனைக்கொண்டாடி ஓசுவாமி
பூமிதேவிநாயகா தேவரீர் லோகநடனஞ்செய்கிறீரோ உம்மைப்பார்க்
கிலும்ஆப்தரானவர்கள்நமக்குஆரிருக்கின்றார்கள் எங்களுக்குமைத்து
னரும்சிநேகிதரும் ஆப்தரும்ஆசாரியரும்தெய்வமும் தேவரீரேயாகை
யால்நீரேஎங்கள்பேரில் கிருபைவைத்து வீமசேனன்-நகுலன்-விதுர
ன்-சஞ்சயன்-கிருபாசாரி-இவர்களையும்முடனேகூட அழைத்துக்
கொண்டுபோய் அர்ச்சுனன்முதலான அந்தராசாக்களையெல்லாம்அ
ழைத்துக்கொண்டுவாருமையாவென்றுஅநேகவிதஉபசாரமாகச்சொ
ல்லஅதுகேட்டு அந்தபகவானுஞ் சந்தோஷகரமாய்அந்தசபையை வி
ட்டெழுந்திருந்து தருமபுத்திரர் உத்தாரப்படி வீமசேனன்முதலான
வர்களைப்பிரயாணப்படுத்தி அவர்களையெல்லாந் தம்முடனேகூடரதா
ரூடர்களாயழைத்துக்கொண்டு தாமும்ரதரூடராய்சிறிதுசேனைகளு
டனேபதினெட்டுவகைமேளவாத்தியங்களும்தாம்தாமென்றுமுழங்
கத்தக்கதாக அஸ்தினாபுரத்தைவிட்டுப் புறப்பட்டுநடந்துஅப்பால்சி
றிதுதூரம்போகையில் தங்களுக்கெதிராகவருகிற அர்ச்சுனராஜன்மு
தலானசகல ராஜவர்க்கங்களையும் சேனைகளையுங்கண்டு ஒருவர்க்கொ
ருவர்தழுவிக்கொண்டு யோகக்ஷேமங்களை விசாரித்துக்கொண்டுமகா
சந்தோஷகரமாய் இரண்டுசேனைகளும் ஒன்றாகக்கூடிக்கொண்டுமகா
வைபவத்துடனே நல்லசுபமுகூர்த்தவேளையில் அஸ்தினாபுரத்திற்கு
ட்புகுந்துசத்தசமுத்திரங்களும்புரண்டுவந்ததுபோலசதுரங்கபலசே
னைகளுடனும் நடக்கின்றவேகத்திலெழும்புகின்றபாததூளிகள்ஆ
காசமுழுதும்பரவி சூரியனைமறைக்கும்படியாகநடந்து பட்டணத்து
வீதியில்வரும்போது அவிடத்திலிருக்கப்பட்ட பிராமணஸ்திரீகள்
ராஜஸ்திரீகள்முதலானவர்களெல்லாம்தங்கள்தங்கள் உப்பரிகையின்
பேரிலும்திண்ணையின்பேரிலும் தலைவாசற்படியிலும இருந்துகொண்
டுமங்களவாழ்த்துகள்பாடிக்கொண்டு அநேகமாயிரந்தங்கத்தட்டுகளி
ல்முத்தாலாத்தி பவளாலாத்தி ரத்நாலாத்தி கர்ப்பூராலாத்திமுதலான
துகளைக்கையிலேந்திக்கொண்டு அர்ச்சுனனைப்பார்த்து ஆ-வீராதிவீ
ரா,ஆ-வீரபராக்கிரமா, ஆ-புண்ணியபுருஷா,ஆ-சுபத்திரைமனோகரா,
உனக்குஎந்தத்திசையிலும் ஜெயம்பொருந்தக்கடவதுஉன்னுடையகீ
ர்த்திப்பிரதாபந் திரிலோகங்களிலும் பிரகாசிக்கக்கடவதென்று ஆசீர்
வாதம்பண்ணி சகலதிருஷ்டிகளும் சகலதோஷங்களும்பரிகாரமாகந்

கூடவென்று ஆலாத்திகள்சுற்றி விஸ்வகேது முதலானவர்களுக்கும்
அப்படியேசெய்து அதுகளைக்கொண்டுபோய் பட்டணத்திற்குப்புற
ம்பாய்எறிந்துவிட்டார்கள் இப்படிப்பட்டசம்பிரமத்துடனே அர்ச்சு
னராசனானவன் சகலராஜவர்க்கங்களுடனும் சதுரங்கபலசேனைகளு
டனும்பட்டணத்து வீதியில்நடந்துபோய்அரண்மனைக்குச் சமீபத்தி
ல்வந்துரதத்தைவிட்டிழிந்துவிஸ்வகேது பிரதியுமனன் முதலானவ
ர்களும்சிறுராசாக்களும் கைலாகுகொடுக்கும்படி பாதசாரியாய்நட
ந்து ஆஸ்தான மண்டபத்திற்குவந்து அவிடத்தில் கொலுவாயிருக்கி
ன்றதருமபுத்திர மகாராஜாவைக்கண்டு அவருக்குப்பிரதக்ஷணஞ்செ
ய்துசாஷ்டாங்கநமஸ்காரம்பண்ணினன் அதுகண்டுதருமபுத்திரமகா
ராசாவும்சந்தோஷித்தராய் தம்பியாகிய அர்ச்சுனனைஎடுத்துமார்
போடணைத்துக்கொண்டு ஆசீர்வாதம்பண்ணினர் அப்பால்விஸ்வகே
துமேகவர்ணன்முதலான குமாரர்களெல்லாம் வந்துபிரதக்ஷணநமஸ்
காரம்பண்ணினர்கள் அவர்களையும் அப்படியேயெடுத்து மார்போட
ணைத்துக்கொண்டு ஆசீர்வாதம்பண்ணினர் அதன்பின்புஅர்ச்சுனனு
னும்மேகவர்ணன் விஸ்வகேது முதலானவர்களைக்கூட அழைத்துக்
கொண்டுஅந்தச்சபையிலிருந்த பெரியோர்களைக்கண்டு தண்டனிட்டு
அவர்களுடைய ஆசீர்வாதத்தையும் பெற்றுக்கொண்டுஅப்பால்அந்த
ப்புரத்துக்குப்போய் குந்திதேவி காந்தாரிமுதலான தாய்மார்களுக்கு
நமஸ்காரம்பண்ணி அவர்களுடைய ஆசீர்வாதத்தையுங்கைக்கொண்டு
அப்பால்திரௌபதையையும்சுபத்திரையையுங்கண்டுஆதரணைபண்ணி
ருக்குமணி சத்தியபாமைமுதலான ஸ்திரீசனங்களையுங்கண்டுதன்னு
டையயோக க்ஷேமங்களையெல்லாஞ் சொல்லிக்கொண்டிருந்தான் இ
ங்கேவீமசேனமகாராசன்அந்த அஸ்வமேதக்குதிரைகளிரண்டையும்
பிடித்துக்குதிரைலாயத்திற்கொண்டுபோய் தங்கச்சங்கிலியினாற்கட்டி
வைத்துதருமபுத்திரமகாராசனிடத்திற்குவந்து சேர்ந்தான் அந்தச்சம
யத்தில்பகதலப்பிரீய முனீஸ்வரரும் அந்தச்சபையில்வந்துசேர்ந்தார்
அப்போது தருமபுத்திரமகாராசாவும் பகதலப்பிரீய முனீந்திரரைக்க
ண்டுசிம்மாசனத்தைவிட்டு திடுக்கென்றெழுந்திருந்து நாலடிதூரம்ந
டந்துவந்துஅந்தமுனீஸ்வரருக்குப் பிரதட்சணநமஸ்காரங்கள்செய்
துசர்வஉபசாரத்துடனேஅழைத்துக்கொண்டுபோய் நவரத்நகசிதமா
னஒருசிம்மாசனத்தின்பேரில் புலியாசனம்பரப்பி அதன்பேரில்அந்
தமுனிநாதனையெழுந்தருளப்பண்ணி அவருக்குஅர்க்கியபாத்தியமுத
லானஉபசாரங்களினால்பூசைபண்ணி அவரைப்பார்த்துஅநேகவித
மாகக்கொண்டாடித் தோத்திரம்பண்ணினர் அப்போதுகிருஷ்ணபக
வானும்சாத்தகி கிருதவர்ம்மன் இவர்களுடனேவந்துதருமபுத்திரனை
க்கண்டுநமஸ்காரம்பண்ணி யவருடையஆசீர்வாதத்தைக்கைக்கொண்
டுஅந்ததருமபுத்திரர்தமக்குப்போடுவித்த ரத்நசிம்மாசனத்தின்பேரி
ல்உட்கார்ந்திருந்தார் அப்போதுதருமபுத்திரரும்பலபத்திரர்முதலான
பெரியோர்களுடையவரவுகண்டெழுந்திருந்து அவர்களுக்கும்வந்தனை
வழிபாடுகள்செய்து ஆதரணைபண்ணினர் அவர்களும்சந்தோஷகரரா
ய்தருமபுத்திரர் போடுவித்த சிம்மாசனத்தின்பேரில் கிருஷ்ணமூர்த்தி
யினுடைய சமீபத்தில் உட்கார்ந்திருந்தார்கள்; அப்போதுமகாசத்திய
சந்தர்களான சந்திரகாசன்-வீரவர்ம்மன்-மயூரத்துவசன்-தாமரைத்

துவசன்முதலான வீராதிவீரர்களெல்லாம் அந்தசபையினிடமாகத்தாங்கள்கொண்டுவந்தகாணிக்கைக் கப்பங்களையெல்லாம்தருமபுத்திரமகாராசாவுக்கு முன்னேவைத்து ஒவ்வொருவராய் தங்கள்தங்களுடையபெயர்களைச்சொல்லி மகாபயபக்தி விநயத்துடனே அந்தத்தருமபுத்திரமகாராசாவுக்குப்பிரதட்சணஞ்செய்து சாஷ்டாங்கமாகவிழுந்து தெண்டனிட்டார்கள் அதுகண்டு தாம்மநந்தனருஞ்சந்தோஷித்தாய்கிருஷ்ணார்ச்சுனர்களைப்புகழ்ந்துகொண்டாடி அந்தராசாக்களையெல்லாம்அணைத்து மார்போடுதழுவி ஆலிங்கனம்பண்ணிக்கொண்டவர்களுக்குவெவ்வேறே ரத்தினசிம்மாசனங்கள் போடுவித்து அவர்களையெல்லாம் அதின்பேரில் உட்காரும்படி சொல்லஅவர்களும் அந்தப்படியேகிருஷ்ணபகவானுக்குச்சமீபத்தில்உட்கார்ந்தார்கள் அப்போது யப்பிரவாகன்சயிந்தவன் இவர்களிருவரும்வந்துநகுலசகாதேவர்களைக்கண்டுதண்டனிட்டு பலராமருக்கு நமஸ்காரம்பண்ணி அந்தப்புரத்திலிருக்கின்ற தாய்மாருக்கும் பாட்டியாருக்கும்நமஸ்காரம்பண்ணி அவர்களுடைய ஆசீர்வாதங்களையும்கைக்கொண்டுமறுபடியும்கொலுமண்டபத்திற்குவந்துஉட்கார்ந்தார்களப்போது கபடநாடகசூஸ்திராவதாரியானகிருஷ்ணபகவானனவரந்த மகாசபையிலுள்ளசகலசனங்களும்கேட்கும்படி அவ்விடத்திலிருக்கின்ற விசித்திரவீரியன்குமாரனைதிருதராட்டிரனைப்பார்த்துஓதிருதராட்டிர பூபாலசா அதோ இருக்கின்றவர்சாக்ஷாத்விஷ்ணு அம்சையினால் பிறந்தவர்தர்மசொரூபர்- சத்தியசந்தனர்-அகண்டிதவீரபராக்கிரமர்- திவ்யகுணசுந்தரர்- அவர்தான் குந்தலதேசத்தைப் பரிபாலனஞ் செய்யப்பட்டசந்திரகாசமகாராஜனென்பவர் அப்பால்இதோஇருக்கிறவர் வீராதிவீரர்-சத்தியசொரூபர்-எமதருமராசனுக்குத தம்முடைய குமாரத்தியைக்கலியாணம்பண்ணிக்கொடுத்து கீர்த்திப்பிரதாபம்பெற்றவர் தருமத்தினால்தேவர்களையெல்லாமெய்ப்பித்தவர் அஷ்டஅயிஸ்வரிய சம்பன்னர் மகாதானவிநோதர் விஷ்ணுபக்தர் அவர்தான்சரஸ்வதிபுரத்தை பரிபாலனம்பண்ணுகின்றவீரவர்ம்ம மகாராசனென்பவர் அப்பால் இதோஇருக்கிறவரசதாகாலமும் தான்தர்மங்களைச் செய்யப்பட்டவர் புத்திரபவுத்திரகளத்திராதிகளான பிரதாபத்தையுடையவர் தான்யாகஞ்செய்யநினைத்துபூமிப்பிரதக்ஷணஞ் செய்துவந்த அஸ்வமேதக்குதிரையைத் தருமபுத்திரருக்குக்காணிக்கையாகக்கொடுத்தவர் எனக்குப்பாதிசரீரத்தைத்தானமாகக்கொடுக்கநினைத்துபெண்சாதிபிள்ளையினுடையகையினால்கண்டம்பரியந்தம் அறுப்புண்டுமகாகீர்த்திப்பிரதிஷ்டையைப்பெற்றமகானுபாவர்விஷ்ணுபக்தியிலுயர்ந்தவர் விஷ்ணுபூசாதுரந்தரர்சகலபோகபாக்கியங்களையுமுடையவராவர்தான் ரத்தினபுரத்தைபரிபாலனம்பண்ணுகிறமயூரத்துவச மகாராசனென்பவரப்பால்அதோயிருக்கிறவீராதிவீரர்மயூரத்துவசமகாராசாவினுடைய குமாரர் சத்துருபயங்கரர்சாம்பவமூர்த்திக்குச் சரியானபராக்கிரமமுள்ளவர்எங்களுடையகுதிரையைப்பிடித்துக்கட்டிவிட்டு எங்களுடையசேனைகளையெல்லாஞ்சின்னபின்னப்படுத்தி அர்ச்சுனனையும்என்னையும்நன்றாய்ப்பூசைபண்ணிஎங்களிருவரையும்பூமியில்மூர்ச்சையாய்விழத்தள்ளி அஸ்வமேதக்குதிரையைப் பிடித்துக்கொண்டு பட்டணத்திற்குப் போனபிறகு

நாங்களுங்கபடப்பிராமண வேஷங்கொண்டுபோ யந்தராசனைக்கண்
டோமப்படிப்பட்டமகாபுருஷனாகிய தாமரைத்துவசனென்பவன்அ
ப்பால்அதோயிருக்கிறவன் மகாபலசாலி வீராதிவீரன் அகண்டிதவீர
பராக்கிரமன் பொறுமையும் பூததயாளமும் சத்தியமுள்ளவன் சவுரி
யத்தில்தேவேந்திராதிதேவர்களையெல்லாம் மெய்ப்பித்தவன்பிதாவா
கிய அர்ச்சுனனையுமரணக்களத்தில் ஜெயித்துத்திருமு வுமாகலோக
த்திற்குப்போய்ஆதிசேஷனுடையசேனைகளையெல்லாஞ் சின்னபின்
னப்படுத்தி அவனது கர்வத்தையடக்கி அவனிடத்திலிருந்தமிருதசஞ்
சீவிரத்தினத்தையும் அமிர்தகலசத்தையும் வாங்கிக்கொண்டுவந்து அ
ர்ச்சுனன் விஸ்வகேது முதலான வீரர்களையெல்லாம் பிழைக்கப்பண்
ணுவித்த ரணரங்கசூரன் அந்த அர்ச்சுனனுக்குவந்த ஆபத்து இந்தபுத்
திரனால்வந்ததல்ல கங்காதேவியினுடையசாபத்தினால் அப்படிசம்பவி
த்தது தகப்பனைப்பார்க்கிலும் வில்வித்தையில் அதிகமானவன்பாண்
டியராசனுக்குப்பேரன் சித்திராங்கதையினுடைய குமாரன் அவன்தா
ன்மணிபூரத்தைப் பரிபாலனம்பண்ணுகிற பப்பிரவாக னென்பவன்
அப்பால்அதோ இருக்கிறவர்-விஷ்ணுபக்தர்-சக்ரேஸ்வரர்- மகாதான
விநோதர்-சவுந்தரியத்தினால் மன்மதனைப்பழித்தவர்- பொறுமையினா
ல்பூமிதேவியைப் பழித்தவர்-சத்தியத்தினால் ஸ்ரீராமனைப்பார்க்கிலும்
அதிகமானவர், ஜனரஞ்சனையினால் ருக்மாங்கதரைப்பழித்தவர்- இவர்
தான்சம்பகபுரத்தைப்பரிபாலனம் பண்ணுகின்ற அம்சத்துவசமகா
ராசனென்பவரா னவருடைய பாக்கியத்தைஎன்னவென்று வர்ணி
த்துச்சொல்லுவேன் அஃதென்னவென்றா லவருடையபுத்திரர்களா
கியசுதர்மனும்-சுதர்த்தனும்மகாவீராதிவீரர்களாய் நின்று சண்டைசெ
ய்து அர்ச்சுனனுடையசேனைகளையெல்லாங் கண்டதுண்டம்பண்ணி
என்னையும்அர்ச்சுனனையும்கன்றப் பூசைபண்ணிகடைசியில் இர
ண்டுபேருமடிந்துபோனார்கள் அதில்சுதர்மனுடைய சிரசானதுசூரிய
பகவானுடனே அபின்னமாகக் கலந்துவிட்டது, சுதர்த்தனுடையசிர
சானது ஸ்ரீகயிலாசபதியான சாம்பமூர்த்தியினுடைய மார்பிலணி
ந்திருக்கின்ற சிரமாலிகைக்கு நடுநாயகமாகிவிட்டது, அப்படிப்பட்டசு
புத்திரர்களைப்பெற்று கீர்த்திப்பிரதாபம்பெற்றவர், அப்பால் நீலத்து
வசன் முதலான சகலமான ராசாக்களையும் அந்தப்படியே அவரவர்களு
டையசவுரிய பராக்கிரமங்களையும் பெயரையும் ஊரையும்வெவ்வேறா
கப்பிரித்துச்சொல்லி அந்தச்சபையிடத்தில் எழுந்தருளியிருக்கின்ற
பகதலப்பிரியமுனீந்திரரைப்பார்த்து அவரையும்திருதராட்டிரனுக்கு
நன்றாய்க்காண்பித்து ஓஐயா திருதராட்டிரபூபாலகா, அதோவெழுந்த
ருளியிருக்கின்ற முனீஸ்வரருடைய மகிமையைப்பிரமாதிதேவர்களா
லும் அளவிட்டுச்சொல்லமுடியாது அவர் மகாபெரியவர் அநேகநாளா
ய்ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைநோக்கித் தபசுசெய்துகொண்டிருக்கிற
வர் இருபது பிரமாக்கள் பிறந்து இறந்துபோனதையும் கண்களாரப்பா
ர்த்துக்கொண்டிருந்தவர், காமம்-குரோதம்- லோபம்-மோகம்-மதம்
மாச்சரியமென்கிற ஆறுபகைகளையும் வென்றவர்-மெய்-வாய்-கண்-மூ
க்குச்-செவியென்னும்-பஞ்சேந்திரியங்களையும்நிக்கிரகம்பண்ணினவ
ர், ஆதிமூலமாகிய பராபரவஸ்துவை இருதயகமலமாகிய மனத்தில்ச
தாகாலமும் குடியாகவைத்துக்கொண்டு பூஜிக்கப்பட்டவர், இவ்வி

யமங்களவிக்கிரக பராக்கிரமமுடையவர் நிர்மலமானமனதையுடைய
வர் அப்படிப்பட்ட மகத்துவமுள்ள இந்தபகதலப்பிரீய முனீந்திரரா
னவர் தருமபுத்திரருடைய பாக்கியத்தினாலும நாமெல்லாரும்பண்ணி
னபுண்ணிய வசத்தினாலும்இவ்விடத்திற்கு எழுந்தருளியிருக்கிறார் இ
னிமேல் தருமநந்தனர் செய்யப்போகிற யாகத்திற்குஒருகுறைவுமில்லை
யென்றுசொல்லிப் பின்னையும் அந்ததிருதராட்டிரனைப்பார்த்து ஐமா
ராசேந்திரா அதோ இருக்கிறவன் இப்போதுநாம்சொல்லிக்கொண்டு
வந்தராசாக்களுடைய புஜபலத்திலும் சவுரியபராக்கிரமத்திலும்தைரி
யததிலும் குணநிசயத்திலும் மிஞ்சினவனாய்சத்துருபயங்கரனாய்ரண
ரங்கசூரனாய் அநேகயுத்தங்களிற் கைகண்டவனாய்மகாபலசாலியாயிரு
க்கப்பட்டவன் அவன் உம்முடையகுமாரத்தியாகிய துற்சேலையினுடை
யகுமாரன் அவன்தான் சிந்துதேசத்தைப்பரிபாலனம் பண்ணுகிறவி
ருதசந்திரனென்பவன் - அவனைப்பார்த்திரோ வென்றுபரிகாசவார்த்
தையாகச்சொல்லி அந்தபகவான் சிரித்தருளினார் அந்தவார்த்தையை
க்கேட்டு அர்ச்சுனராஜனும் மற்றுமுண்டானமகாராசாக்களுங்கேட்டு
கலீரென்று நகைத்தார்கள் அதுகண்டுதிருதராட்டிரனும் சம்சயப்பட்
டுஸ்ரீகிருஷ்ணபகவானைப்பார்த்துஐயாநன்றாயத்தெரியச்சொல்லுமெ
ன்றுகேட்க அந்தபகவானுஞ்சிரித்து அவனுடையசேதிகளையெல்லா
ம்சவிஸ்தாரமாகச் சொல்லியருளினார். அதுகேட்டுதிருதராஷ்டிரனும்
தருமபுத்திரர் முதலானவர்களும் சம்சயந்தீர்ந்து சந்தோஷமடைந்தா
ர்கள் அப்போது சாயுங்காலவேளையானபடியினால் தருமராசாவானவ
ர்ஸ்ரீகிருஷ்ணபகவானுடனும்தம்பிமார்களுடனும் சந்திரகாசன்முதலா
னராசாக்களுடனும்எழுந்திருந்துபோய் சந்தியானுஷ்டானசெபதபங்
களைமுடித்துக்கொண்டு திரும்பவுங்கொலுமண்டபத்திற்குவந்து சி
ம்மாசனத்தின்மேலி லுட்கார்ந்து ஆடல் பாடல்முதலான கேளிக்கை
பார்த்து சந்தோஷப்பட்டுக்கொண்டு சூரியாஸ்தமானபத்து நாழிகை
மட்டும்சகலசேனைகளுடனும் பொழுதுபோக்கிக்கொண் டிருந்துபிற்
பாடுதருமராசாவானவர் கொலுமண்டபத்தைவிட்டெழுந்து அரமனை
க்குப்போய் ஸ்ரீகிருஷ்ணபகவானுடனும்தம்பிமார்களுடனும்சந்திரகா
சன்முதலானராசவர்க்கங்களுடனும் உட்கார்ந்து ஷட்சுவைபதார்த்த
வகைகளுடனே நல்லதிவ்யபோசனம்பண்ணிகைகாலலம்பிக்கொண்
டு அவரவர்களுக்குத்தகுந்தமுறைமைப்படி கர்ப்பூரதாம்பூலமும்சுகந்தப
ரிமளாதிகளுங்கொடுத்து நடப்பித்து தாமும்தாம்பூலந் தரித்துக்கொ
ண்டு அதன்பிறகு கிருஷ்ணபகவான் சந்திரகாசன்முதலானவர்களுக்
கெல்லாம் வெவ்வேறுவிடுதிகளமர்த்திவைத்து அவரவர்களைப்போய்
நித்திரைசெய்யும்படி செலவுகொடுத்தனுப்பிவிட்டுதாமும்தம்முடை
யபள்ளியறைக்குட்போய் சயனித்துக்கொண்டார் உடனேசூரியபக
வானும்கிழக்குத்திசையில்உதயமாகினார் அதற்குமுன்னமேதருமபுத்
திரரும்நித்திரைதெளிந்தெழுந்திருந்து காலோசிதகாரியமானநித்திய
கர்ம்மானுஷ்டான ஜபதபங்களை முடித்துக்கொண்டு போசனகிருத்தி
யத்தையும் தீர்த்துக்கொண்டு சர்வாலங்காரபூஷிதராய் தம்பிமார்களெ
ல்லாரும்பக்கத்தில்நின்று சேவிக்கவும் மந்திரிகள்பிரதானிகள்சூழ்ந்து
வரவும்ஸ்தோத்திரம்பண்ணிப்புகழ்ந்துகொண்டாடவும் பொற்பிரம்புக்கார

ர்கள்பர்ாமரிக்கைபண்ணவும் இப்படிப்பட்ட சம்பிரமத்துடனேகொ
லுமண்டபத்துக்குவந்துநவரத்தின கசிதமான சிம்மாசனத்தின்பேரி
லுட்கார்ந்துகொலுவாயிருந்தார் அப்போது திருதராட்டிரனும்சஞ்ச
யனும்விதுரனும்வந்து தருமபுத்திரருடையஆக்ஞையைப்பெற்றுஒரு
புரத்திலுட்கார்ந் திருந்தார்கள்- ஸ்ரீகிருஷ்ணபகவானுமவருடையகுமா
ரர்களும்வந்து தருமபுத்திரருக்கு நமஸ்காரம் பண்ணிஅர்ச்சுனராசனு
டையசமீபத்தி லுட்காந்திருந்தார்கள் ;பப்பிரவாகன -விஸ்வகேது-மே
கவர்ணன்-இவர்களெல்லாரும்வந்துபிதாக்களுக்குநமஸ்காரம்பண்ணி
ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியையுஞ்சேவித்து ஒருபுறத்திலுட்கார்ந்தார்கள்ச
ந்திரகாசன்-வீரவர்ம்மன்-யூரத்துவசன்-தாமரைத்துவசன்- அம்சத்
துவசன்-எவ்வர்ணசுவன்- அனுசாருவன்-நீலத்துவஜன் முதலானரா
சாக்களெல்லாரும் தங்கள்தங்கள் புருதுகளுடனும்மந்திரிபிரதானிக
ளுடனும்வந்து கிருஷ்ணபகவான்- தருமபுத்திரர்-திருதராட்டிரன்-இ
வர்களுக்கு நமஸ்காரங்கள்பண்ணி தங்களுக்குப்போடுவித்த ஆசன
த்தின்பேரில் தருமராசாவைச்சூழ்ந்துஉட்கார்ந்திருந்தார்கள் அப்போ
துபரமபவுத்திராகிய பகதலப்பிரியமுனீந்திரானவர் அந்தக்கொலு
மண்டபத்திற்கு எழுந்தருளிவந்தார் அதுகண்டு அங்கிருந்த கிருஷ்ண
பகவான்தருமபுத்திரர் முதலான ராசாக்களெல்லாருந்திடுக்கென்றெ
ழுந்திருந்து மகாபயபக்தி விசுவாசத்துடனே நாலடிதூர மெதிர்கொ
ண்டுபோய் அவருக்குவந்தனை வழிபாடுசெய்து அவரைஅழைத்துக்
கொண்டுவந்து பொறபீடத்திலெழுந்தருளச்செய்து அந்தமுனீஸ்வர
ரை அர்க்கியபாத்திய முதலான உபசாரங்களினால்பூசித்துமகாசந்தோ
ஷகரமாய் அவர்களுடைய சிம்மாசனத்தின்பேரில் உட்கார்ந்திருந்தா
ர்கள் அப்போது மகாரிஷிகளாகிய பிரமரிஷிகளும்- தேவரிஷிகளும்-ரா
சரிஷிகளும் தபோதனர்களும்- அந்தகொலுமண்டபத்திற்கு வந்தார்க
ள் அவர்கள் யாரென்றால் வியாசமுனிவர்நாரதமுனிவர்- பருவதரிஷி
மார்க்கண்டேயர்- வால்மீகமுனிவர்-காலவாகனர்-வர்ச்சணட கோசிக
ர்-பராசர்-உத்தாகிரியர்-வசிஷ்டபகவான்- விசுவாமித்திரர்-கௌதமர்-
வியாக்கிரபாதர்- ஜமதக்கினிரிஷி -பரத்துவாசர்-சவுநகர்-வித்திரேய
ர்-சவுபரிமுனீந்திரர் - பிருகுமகாரிஷி-உத்தாலகர்-சாலிகேந்திரர்-வாம
தேவர்-ஆங்கீரசர்-மதங்கர் முதலான மகாரிஷிகளும் அதுவல்லாமல்வா
ய்வுபக்ஷணிகர்களாகியும் சருகுபல பக்ஷணிகாகளாகியும் பஞ்சாக்கி
னிமத்தியினின்று அகோரதவஞ் செய்கின்றமகாத்துமாக்களாகியும்
விளங்கப்பட்ட முனீஸ்வரர்களும் கூட்டமாகக்கூடிஎழுந்தருளிவந்த
துகண்டு தருமபுத்திரரானவர் சந்தோஷமடைந்துகிருஷ்ணபகவானு
டனும்தம்பிமார்களுடனும் மந்திரிபிரதானிகளுடனும்விதுரசஞ்சயர்க
ளுடனும் சிம்மாசனத்தைவிட்டு திடுக்கிட்டெழுந்திருந்து அந்தரிஷிக
ணங்களுக்கு எதிர்கொண்டுபோய் அவர்களுக்குபிரதட்சணநமஸ்கார
ங்கள்பண்ணி அவர்களையழைத்துக் கொண்டுவந்துநவரத்தினசிம்மா
சனங்கள்போடுவித்து அதுகளின்பேரில் அவர்களையெல்லாம் எழுந்
தருளும்படி தருமபுத்திரருமபயபக்திவிநயத்துடனே கைகளைக்கட்டி
க்கொண்டுநின்று அவர்களைப்பார்த்து விண்ணப்பஞ்செய்தார், அதுக
ண்டுவியாசபகவான் முதலான ரிஷிகணங்களெல்லாம் சந்தோஷப்ப
ட்டுதருமபுத்திரருடைய குணாதிசயத்தையும் பக்தி விசுவாசத்தையும்

பிரபாவத்தையும் வர்ணித்துக்கொண்டு அவ்விடத்தில் தற்குமுன்னமேவந்து எழுந்தருளி விற்றிருக்கின்ற பகதலப்பிரீயமுனீந்திரனைக்கண்டு அந்த ரிஷிகணங்களெல்லாரு மவருக்குப்பிரதட்சணநமஸ்காரங்கள்பண்ணி சந்தோஷசித்தர்களாய் அந்தமுனீஸ்வாருடைய உத்தரவின் பேரில் தங்கள் தங்களுடைய ஆசனத்தின்பேரி லெழுந்தருளியிருந்தார்கள்கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜாவே அப்பால்தருமபுத்திரரானவர் வியாசபகவானைப் பார்த்து ஐயா முனிநாதா அடியேன்செய்த புண்ணியத்தினால் தேவரீர் சகலமான ரிஷிகணங்களுடனும எழுந்தருளி வந்திருக்கிறீர் தேவரீருடைய உத்தாரப்படிக்கு அஸ்வமேதக்குதிரையும்பூமிப்பிரதட்சணஞ் செய்துவந்துசேர்ந்தது ஆகையால் இனிதாமசப்படுத்தாமல் என்னுடையகையினால் இந்தயாகத்தை நிறைவேற்றிவையுஞ்சுவாமியென்றுவிண்ணப்பஞ்செய்ய அதுகேட்டுவியாசபகவானுஞ்சந்தோஷப்பட்டு தருமபுத்திரரைப்பார்த்து ஓ தருமநந்தனனே இதுவரையில்நீ ரநினைத்த கருமங்களெல்லாம்உம்முடையதருமகுணத்தினாலே நடந்தேறிவந்ததேயல்லாமல் மற்றொருவராலும்நடந்தேறவில்லை ஆகையால்இதற்குமேலும் ஒருதாழ்வில்லை இனிசாங்கமாக யாகத்தைச் செய்யுமென்றுசொல்லி அந்தவியாசபகவானவர் தாமெழுந்தருளியிருந்த ஆசனத்தைவிட்டெழுந்திருந்து வசிஷ்டர்முதலான ரிஷிகணங்களுடனும்சந்திரகாசன்முதலான ராசகூட்டங்களுடனும்தருமபுத்திரர் வீமார்ச்சுனநகுலசகாதேவர்களுடனும்ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியாருடனும் பகதலப்பிரீயமுனீந்திரருடனும் அந்தக்கொலுமண்டபத்தைவிட்டுபுறப்பட்டுநடந்துயாகசாலையிற்பிரவேசித்து ரிஷிகணங்கள்முதலானசகலமானபேர்களையும்உட்காரும்படி உத்தாரம்பண்ணி தாமும் ஒருதர்ப்பாசனத்தின்பேரிலுட்கார்ந்துகொண்டு அங்கிருந்தவேவலாளர்களால்அந்தயாகசாலையை நவரத்தினங்களினால்அலங்காரம்பண்ணிவித்துமுத்துகளாலும்பவளங்களாலும் கோலங்களிடுவித்து தங்கத்தினாற்செய்தவாழைமரங்களைநிறுத்துவித்து காராம்பசுவின் சாணத்தினாலும்சந்தனத்தினாலும்பூமியைமெழுகச்செய்து நிலைக்கண்ணாடிகள்கட்டிவித்துகர்ப்பூரதீபங்களேற்றுவித்து இப்படிசர்வாலங்காரமுஞ்செய்வித்துபின்பு யாகத்திற்குவேண்டிய சமித்துமுதலான ஓமவஸ்துக்களெல்லாம்-வீமன்-அர்ச்சுனன்-விதுரன்-சஞ்சயன் - இவர்கள்கையினாலழைப்பித்துக்கொண்டு அதன்பிறகுதரும புத்திரருக்குந் திரௌபதாதேவிக்கும ஸ்நானம்பண்ணுவிப்பதற்கு கெங்காதீர்த்தம் வேண்டுமேயென்றுவசிஷ்டபகவானுடனும் பகதலப்பிரீய முனீந்திரருடனும்ஆலோசனைசெய்து அங்கிருந்தவர்களில் அறுபத்துநாலு தம்பதிகளையேற்படுத்தி அறுபத்துநாலுவெள்ளையானைகளையுமழைப்பித்து அவர்களையெல்லாம் அந்தயானைகளின்பேரிலேற்றிக்கொண்டு தங்கக்குடங்களையெடுத்துக்கொண்டுபோய்கெங்காதீர்த்தங்கொண்டு வரும்படி வியாசபகவான்உத்தாரம்பண்ணியருளினார் அந்தத் தம்பதிகளாரென்றால் ஸ்ரீகிருஷ்ணபகவானும்-ருக்மணிதேவியும்-அர்ச்சுனராசனும்-சுபத்திராதேவியும்-பிரத்தியுமனனும்-ரதிதேவியும்-பலபத்திரரும்-தேவகிதேவியரும் விஸ்வகேதும்-மதனமஞ்சரியும்-எவ்வர்ணசுவனும்-பிரபாவதியும்-அம்சத்துவசனும்-கோகிலாதேவியும் மயூரத்துவசனும் குமுதவதிதேவியும் வீரவர்ம-

இம்-குயில்மொழியாளும் சந்திரகாசனும்- சண்பகாவதியும்-ஆங்கிரச
முனிவரும்-அனுசூயாதேவியும்-வசிஷ்டபகவானும்- அருந்ததியும்-இ
ப்படிஅறுபத்துநாலுதம்பதிகளும் புறப்பட்டுஅவரவர்கள்கையில்தங
கக்குடங்களையேந்திக்கொண்டுவெள்ளையானையின்மேலேறிக்கொண்
டுபோய்க்கங்கைகரையிற்சேர்ந்து யானைகளைவிட்டிறங்கி ஒவ்வொருத்தரா
ய்அவரவர்களுடைய தேவிகளுடனே நதியிலிறங்கிஸ்நானம்பண்ணி
ஜெபதபங்களைமுடித்துக்கொண்டுசூரியபகவானுக்குஆர்க்கியங்கொடு
த்துதங்களுடையநேமநிஷ்டைகள்முடிந்தபின்பு தங்கக்குடங்களில்
அந்தக்கங்காசலத்தைப்பூரணமாகமுகர்ந்துகொண்டு கரைமேல்வந்து
திரும்பவுமவரவர்களுடைய யானைகளின்பேரிலேறிக்கொண்டுஅஸ்தி
னாபுரத்தைநோக்கிப் புறப்பட்டுவருகிறார்கள். பின்னாக்குழல்வேணுநாதம்
சங்கீதமேளமுதலான பதினெட்டுவித வாத்தியங்களும் வெண்கலப்
பேரிகைசயபேரிகை தவளமுரசுமுதலான வகைகளுமண்டகடாகங்க
ளெல்லாமதிரத்தக்கதாகத்தாம்தாமென்று முழங்கவும்சந்திரவம்சத்
துராஜாவாகியதருமபுத்திர மகாராசாவானவர் அஸ்வமேதயாகம்பண்
ணப்போகிறாரென்று திருச்சின்னம்பணிமாறவும்தேவதாஸ்திரீகளு
மதிசவுந்தரியத்தையுடைய நாடகப்பெண்கள் வெண்சாமரைமயில்
விசிறிஆலவட்ட முதலானதுகளையெடுத்து உபசாரம்பண்ணிக்கொ
ண்டுவரவும்பாட்டகர்கள் புகழ்ந்துகொண்டாடவும்பதிவிரதாஸ்திரீக
ளெல்லாம் மங்களங்கள்பாடிக்கொண்டு கந்தபுஷ்பஅக்ஷதைகளைவாரி
யிறைத்துஆசீர்வாதம பண்ணவும் இப்படிப்பட்ட வைபவத்துடனே
அந்தத்தம்பதிகளெல்லாரும் யாகசாலைக்குச்சமீபமாகநெருங்கிவரும்
போதுகேட்டீரோஜெனமேஜெயபூபாலகா அந்தவைபவங்களெல்லா
ம்நாரதமுனிவர்கண்டுமனம்பொறுதவராய் விசனமடைந்துநமக்குநா
ரதகலகப்பிரியரென்று பேரவைத்திருக்க நாம்சும்மாயிருக்கலாமோ
நமக்குஇந்தவைபவத்தினால்வருகிறபிரயோசனமென்னகலகமுண்டா
னால்சந்தோஷமாயிருக்குமிவிடத்தில்கலகம் பண்ணலாமென்றால்ஒரு
சந்துமில்லையே இதற்குஎன்னசெய்யலாமென்று சற்றுநேரந்தனக்
குத்தானேஆலோசனை பண்ணிஉடனே அதற்குயோசனைபிறந்துசந்
தோஷமாய்சிரித்தமுகத்துடனே அந்தயாகசாலையைவிட்டுப்புறப்ப
ட்டுகிருஷ்ணபகவானுடைய அரமனைக்குள் நுழைந்துசத்தியபாமை
யினுடையவீட்டினிடத்திற் போய்நின்றார் அதுகண்டுசத்தியபாமை
யுந்திடுக்கிட்டெழுந்திருந்து மகாபயபக்திவிசுவாசத்துடனே அந்தமு
னிவருக்குஎதிராகவந்து தண்டனிட்டுஅவரைஅழைத்துக்கொண்டு
போய்ஒருநவரத்ந பீடம்போடுவித்து அதின்பேரில்அந்தநாரதமுனிவ
ரைஎழுந்தருளப்பண்ணி அவருக்கு அர்க்கியபாத்தியமுதலானவைக
ளால்பூசைபண்ணி பிரதக்ஷணநமஸ்காரஞ்செய்து அனேகவிதமாகத்
தோத்திரம்பண்ணிக்கொண்டு எதிரேநின்றாள் அதுகண்டுநாரதருஞ்
சத்தியபாமையைப்பார்த்து ஓசத்தியபாமா பூர்வகாலத்தில்என்னுட
னேஒருரஹசியஞ்சொல்லி யிருந்தாயே அதைஇப்போதுசோதித்தறி
யலாமென்றுவந்தேன் அஃதென்னவெனக்கேட்பாயானால் என்புரு
ஷனைகிருஷ்ணபகவான் என்பேரில் பிரியமாயிருக்கிறார் என்னைவி

டுவிட்டு எவர்களிடத்திலுமிருக்கமாட்டார் எந்தகாரியங்களுக்கும்
என்னையே யழைத்துக்கொண்டுபோவார க்ஷணப்பொழுதாகிலுமெ
ன்னைவிட்டுப்பிரியமாட்டார் இந்தபதினாறாயிரத்தொருநூற்றிரண்டு
ஸ்திரீகளிடத்தில் வைத்திருக்கின்ற இஷ்டத்திலுமென்னிடத்திலதி
க இஷ்டம்வைத்திருக்கிறார் அல்லும்பகலும்அறுபதுநாழிகையுமென்
னிடத்தில்தானேவாசமாயிருக்கிறாரென்றுசொல்லியிருந்தாயல்லவோ
அந்தவார்த்தையை இதுவரையில் மெய்தானென்றெண்ணியிருந்தே
ன் அது இன்றையதினம் பொய்யாகிவிட்டது இப்படிப்பட்ட பொய்
வார்த்தையைப் பெரியோர்களிடத்திற்சொல்லலாயோவென்றுசொல்
ல அதுகேட்டுச்சத்தியபாமையுநாரதமுனிவரைப்பார்த்து ஐய பிரமண
குமாரா இப்போது தேவரீர்சொன்ன வார்த்தையெல்லாமமெய்தான்
அதற்குச்சம்சயமென்னநான் ஒருநாளும்பொய்சொல்லுகிறதில்லையெ
ன்றுமறுபடியுஞ்சொல்ல அதற்குஅந்தநாரதருஞ் சத்தியபாமையைப்
பார்த்துஓஅம்மா பாக்கியவதி நான் திருஷ்டாந்தமாய்ப்பார்த்துவந்தி
ருக்கும்போதே இப்படிஇரட்டித்துச்சொன்னால்உன்னுடையசொல்
லை எப்படிநம்புகிறது உன்பேச்செல்லாம் அபத்தந்தானெப்ப
டியென்றால் தருமபுத்திரருக்கும் திரௌபதாதேவிக்கும் ஸ்நானம்ப
ண்ணுவிக்கும் பொருட்டுவியாசமுனிவரானவர் அறுபத்துநாலுதம்ப
திகளையேற்படுத்தி அவர்களெல்லாம் ஒவ்வொருதங்கக்குடங்களையெடுத்
துக்கொண்டுவெள்ளையானையின்பேரி லேறிக்கொண்டுபோய்கங்காதீ
ர்த்தங்கொண்டுவரும்படி கட்டளையிட்டனுப்பினார் அதிலேஉன்புரு
ஷனாகியகிருஷ்ண மூர்த்தியையும்ஒருவராயேற்படுத்தினபடியால் அவ
ரும்ருக்மணிதேவியாருடனே மகாசந்தோஷகாமாய்வெள்ளையானையி
ன்பேரிலேறிக் கொண்டுபோய் அந்தக்கங்காநதியில்இரண்டுபேரும்ஸ்
நானம்பண்ணிநல்ல வஸ்திராபரணங்களை யலங்கரித்துக்கொண்டுதங்
கக்குடத்தில்தீர்த்தமுகந்துகொண்டு மகாஆடம்பரத்துடனே அதோ
வருகிறாரவருக்குஉன்பேரில் மோகமுண்டானால் உன்னையழைத்துக்
கொண்டுபோகமாட்டாரோ இதனால் உன்னுடைய ஆசையும் அவரு
டையஆசையுநன்றாய்த்தெரிந்துவிட்டது இப்படியே அவர்நாள்தோ
றும்நடந்துவருகிறார் அது உனக்குக்கொஞ்சமாகிலும்தெரியவில்லை அ
தைப்பார்த்துவந்ததுமுதல் எனக்குமனதுபதைக்கின்றது நல்லது இ
னிமேலாகிலும் அவர்உன்னிடத்திற்குவந்தால் கொஞ்சத்தில்விட்டுவி
டாமல்அவ்விடத்திற்குத்தானே போவென்றுசண்டைபண்ணுமம்
மாவென்று சகாயமாய்ச்சொல்லுகிறவரைப்போல் கலகப்பிரியசிகாம
ணியாகியநாரதர்சொல்ல அதுகேட்டுநாரதரைப்பார்த்துசத்தியபாமை
யுஞ்சிரித்து ஓஐயாநாரதமுனீந்திரா தேவரீர்என்னைப்பொய்வார்த்தை
சொன்னாயென்றுசொன்னீரல்லவோ நான்ஒருக்காலும் பொய்சொல்
லுகிறதில்லை தேவரீர்பேசுகிறபேச்செல்லாம் அபத்தம்பெரியோர்கள்
பொய்சொல்லுகிறதினால் குற்றமில்லைபோலிருக்கின்றது இப்போது
என்புருஷனை கிருஷ்ணபகவான்என்சக்களத்தியாகியருக்மணிதே
வியுடனேமகாசம்பிரமமாய் வெள்ளையானையின்பேரிலேறிக்கொண்டு
போய்க்கங்காதீர்த்தங்கொண்டு வருகிறாரென்றுசொன்னீரே இதுநிச
மோஅல்லது உம்முடையவார்த்தை பொய்யென்றும்என்னுடையவா

ர்த்தைபொய்யென்றுந் தெரிந்துகொள்ளலாம் இப்படிதானேபூர்வ
த்திலும்என்னை ஒருதரம்ஏமாற்றினீரப்படி இப்போதுமோசம்பண்ண
வந்தீரோ ஆகட்டும் வாருமையாவென்று அந்தமுனீஸ்வரனை உட்கட்டு
க்குஅழைத்துக்கொண்டு போனானென்றுஜெயமுனீந்திரர்சொல்லஅ
துகேட்டு ஜெனமேஜெயமகாராஜனுஞ்சிரித்து சந்தோஷித்தனாய்அ
ந்தமுனீந்திரரைப்பார்த்து ஓஜயா சயமுனீந்திரா பூர்வத்தில்சத்தியபா
மையம்மனை நாரதமுனிவர்என்னமோசம்பண்ணினா ரதையும்எனக்கு
த்தெரியச்சொல்லுமையா வென்றுகேட்க அதற்குச்சயமுனீந்திரரும
ந்தராசனைப்பார்த்து ஓராஜேந்திரா பூர்வகாலத்தில்துவாரகாபுரியில்ச
த்தியபாமையானவள் தன்புருஷனாகிய கிருஷ்ணபகவான்தன்னிடத்
தில்தானே எப்போதுமிருக்க வேண்டுமென்றுநினைத்துபதினைந்துநா
ள்மட்டுக்கும் ஒருநோன்புநோற்கும்போது இந்தநாரதமுனிவர் அதற்
குப்புரோகிதராயிருந்து வேதமந்திரங்களைச்சொல்லி அந்தநோன்பை
நிறைவேற்றிவைத்தபிறகு சத்தியபாமையுஞ் சந்தோஷமடைந்து அந்
தமுனீஸ்வரருக்குப் பூசைபண்ணி பிற்பாடு அவரைப்பார்த்து ஓநாரத
முனீந்திராதேவரீர்எனக்குப் புரோகிதராயிருந்துஎன்னுடையவிரதத்
தைவிக்கினமில்லாமல் நிர்விக்கினமாய் நிறைவேற்றிவைத்தபடியால்
அந்தவிரதபலன்எனக்குச்சித்தியாகும்பொருட்டுஉமக்குதக்ஷிணைதா
ம்பூலங்கொடுத்து உம்முடையமனதைச்சந்தோஷப்படுத்தவேண்டும்
ஆகையால்தேவரீருக்கு இஷ்டமானவஸ்துக்களெதுவோ அதைக்கே
ட்டால்தருகிறேன் சுவாமியென்றுசொன்னமாத்திரத்தில்அதுகேட்
டுநாரதருஞ்சிரித்து சற்றுநேரம்ஆலோசித்து இதுவுமொருகாரியத்தி
ற்குநன்மைதானென்றுநினைத்து அந்தஅம்மனைப்பார்த்து ஓசத்தியப்
பிரஸ்தன்குமாரத்தியான சத்தியபாமையேநீஇப்போதுகேட்கச்சொ
ன்னபடிஎனக்கு இச்சையானபொருளைக்கேட்பேனாகில் அந்தப்பொ
ருளெதுவாயிருந்தாலும் மறுதலியாமல் கொடுத்தால்மாத்திரம்உனக்
குஅந்தவிரதபலன் சித்தியாகும் இல்லாவிட்டால் அபலமாய்ப்போய்
விடும்அதுவல்லாமலும் பெரியோர்களுக்குப் பொய்சொன்ன அபசா
ரமும்வந்துசேரும் அதுதெரியாமல் என்னபொருளைக்கேட்டபோதி
லுந்தருகிறேனென்றுஉன்வாக்கினாற் சொல்லிவிட்டாயே அப்படியே
நான்கேட்டபொருளைத் தடையில்லாமற் கொடுக்கமாட்டுவாயோவெ
ன்றுகேட்க அதற்குச்சத்தியபாமையுஞ்சிரித்து ஓநாரதமுனிவரே
என்னைப்பூலோகத்துஸ்திரீகளில் ஒருத்தியாகநினைத்துக்கேட்கிறீரோ
அதுவுமல்லாமல் பொய்வார்த்தைசொல்லுகின்றவர்கள் இகபரதூஷ
ணர்களாய்அந்தியத்தில் ரவுரவாதி நரகத்திற்சேருவார்கள்வேதப்பி
ரமாணத்தையறியாதிருந்தாலும்உலகத்தில்சாதாரணமாய்ப்பொய்சொ
ன்னவாய்க்குப்போசனங்கிடையாதென்று சொல்லிக்கொள்ளுகிறவ
ழக்கச்சொல்லையாகிலுங்கேட்டிருக்கமாட்டீரோ ஆகையினால்உமக்
குவேண்டுமென்றபொருளைச் சம்சயப்படாமல்கேளுஞ்சுவாமியென்
று அந்தஅம்மனும்இவர்எந்தப்பொருளைக் கேட்கப்போகிறார்பண்டி
பண்டாரங்கள் ரொக்கரொசனங்கள் சீமைபூமிகள் ஆனைகுதிரைக
ள்ஸ்திரீசனங்கள்முதலானபொருள்களில் எதையாகிலுங்கேட்கப்
போகிறார் அதைநாம் கொடுக்கமாட்டோமோவென்று இலேசாய்நினை

த்து நாரதருடையமனக்கருத்தை யறியாமற்சொன்னபோததுசேட்டு
நாரதபகவானுஞ்சிரித்து ஓ அம்மாபாக்கியவதிநீயெனக்கு அபேக்ஷியா
கியபொருளைத்தருகிறேனென்றுவாக்குதத்தம் பண்ணிவிட்டாயல்ல
வோ ஆனால்சொல்லுகிறேன் அதென்னவென்றால்நான் பதினாலுலோ
கங்களிலுமெந்தவேளையும் ஓய்வில்லாமல்திரிகிறபடியால்சரீரப்பிரயா
சமிருந்து இரண்டுபாதங்களும் வலிகொண்டுராத்திரிகளெல்லாம்நித்தி
ரைவராமலவருந்தப்படுகிறேன் ஆகையினால் ஒருசிறுபிள்ளையைச்சி
ஷனாகச்சம்பாதித்துக்கொண்டால் ராத்திரிவேளையில் கைகால்பிடித்
துக்கொண்டிருப்பானென்று நெடுநாளாய்ப் பூமிமுழுதுந்தேடிக்கொ
ண்டுதிரிகிறேன் எனக்குத்தகுந்தசிஷன் அகப்படவில்லை அப்படியிரு
க்கும்போது என்னுடையபுண்ணியவசத்தினால் கேட்டபொருளைத்த
ருகிறேனென்று நீவாக்குதத்தம்பண்ணினையல்லவா ஆதலால்கொடி
க்காரனும்பலசாலியாய் திவ்வியசரீரனுமிருக்கின்றஉன்னுடையபுருஷ
னாகிய கிருஷ்ணதேவனை நமக்குத்தட்சணையாகக்கொடுமென்றுசேட்
க அந்தவார்த்தையைக்கேட்டுச் சத்தியபாமையுஞ்சிரித்து ஓஐயாநாரத
ரேநீர்நல்ல தக்ஷணைகேட்டீர் அதற்குநான்பின்னிடாமல்உம்முடைய
கருத்தின்படியே தருகிறேனென்றுசொல்லி தன்னுடையபக்கத்திலி
ருந்தகிருஷ்ணதேவரைப்பார்த்து ஓபிராணநாதா தேவரீர்நாரதருக்கு
த்தானமாகக்கொடுத்தேன் ஆதலால்நீரும் அவருக்குச்சிஷனாய்ப்போ
மென்றுசொல்ல அதுகேட்டு அந்தக்கபடநாடகசூஸ்திராவதாரியும்பு
ன்சிரிப்பாகச்சிரித்து ஓசத்தியபாமா நான் இந்தநாரதருக்குச்சிஷனாகு
ம்படிநேரிட்டதுஎன்னுடையபுண்ணியவசந்தான் ஆதலால்நான்உன
னுடையசொற்படியே செய்கிறேனென்று அந்ததேவனும்லோகநாட
கந்தப்பிரடக்சக் கூடாதபடியினாலே அந்தமுனிவருக்குநமஸ்காரம்ப
ண்ணி அவருக்குப்பின்னாகத்தொடர்ந்து நடக்க அதுகண்டுநாரதரும்த
னக்குள்ளேதானேசந்தோஷப்பட்டுக்கொண்டுநமக்குஇப்படிப்பட்ட
சிஷன் திரிலோகங்களிலு மகப்படமாட்டான்நமக்குநல்லசிஷன் அக
ப்பட்டான் எப்படிப்பட்ட தபோதனர்களுக்கும் அகப்படாதபுருஷ
ன்நமக்குஅகப்பட்டானே நம்முடையபாக்கியமே பாக்கியமென்றும
கிழ்ச்சியடைந்துதம்முடையகிருஷ்ணசலம்தண்டுகமண்டலம்ஜபமா
லிகை இதுகளையெல்லாஞ் சிஷனாகிய அந்தகிருஷ்ணமூர்த்தி கையிற்
கொடுத்துஎடுத்துவரும்படி உத்தாரம்பண்ணி அந்தநாரதரும்நடந்து
கொண்டிருந்தார் அப்போதுசத்தியபாமையும்ஆலோசனைபண்ணிநா
மென்னவேலை செய்துவிட்டோம் நம்முடையபுருஷனைவிட்டுநாமெ
ப்படிதனித்திருப்போம்புருஷனில்லாத பெண்களுக்குஎன்னசந்தோ
ஷமிருக்கின்றது அந்தநாரதருங்கேளாதபொருளைக் கேட்டார்நாமுங்
கொடுத்துவிட்டோம் சத்தியவசனமுந்தப்பக்கூடாது இதற்குஎன்ன
செய்யலாம் அல்லாமலும நம்முடையசக்களத்திகளான பதினாறாயி
ரத்தொருநூற்றிரண்டுபேர்களும் இந்தச்சேதியைக்கேட்டால்நம்மு
டனேபோராடிவிசாரப்படுவார்களேஎன்னஅனர்த்தம்பண்ணிக்கொ
ண்டோம்ஹரிகிருஷ்ணா-கோவிந்தா-பக்தவச்சலா-பரமதயாளா- ஆதி
மூலமேயென்று அந்தச்சத்தியபாமையும் விசாரப்பட்டுதன்னுடைய
மனதைத்தானேதேற்றிக்கொண்டு சரேலென்றெழுந்துமுன்னே ந

டந்துபோகிறநாரத பகவானண்டைக்குவந்து அவருக்குப்பிரதக்ஷிண
நமஸ்காரங்கள்பண்ணி அவரைப்பார்த்து ஓதபோநிதிநாரதமுனீந்திர
தேவரீர் இப்போதுநான் கோரிவந்தகோரிக்கையை ஈடேற்றும்நான்செய்
த அபசாரத்தைமன்னித்தருளும்நான் தேவரீருடையமகத்துவத்தை
யறியாமல்மோசம்போனேனே என்பேரில்கிருபைசெய்துஎன்னுடை
யபுருஷனைஎனக்குக் கொடுத்தனுப்பும் அவரால்உமக்குஎன்னகாரிய
ம்நடக்கப்போகிறது அவர்எங்களண்டையிலிருந்தால்எங்களுக்கு அ
னேககாரியங்களெல்லாம் நடக்கும்ஆகையால்தானஞ்செய்தபொரு
ளைத்திரும்பவுங் கேட்கிறேனென்றுதிருவுளத்தில் ஆயாசங்கொள்ளா
மல்என்புருஷனை அனுப்பிவையும் சுவாமியென்றுவெகுவாய்விசனப்
படுகிறசத்தியபாமையைப்பார்த்து அந்தநாரதருஞ்சிரித்துசற்றுநேரம்
ஆலோசனைபண்ணி இந்தக்கிருஷ்ணனையழைத்துக்கொண்டுபோனா
ல் இவன்நமக்குஎன்னபணிவிடை செய்யப்போகிறான் இவன்நமக்குத்த
குந்தசிஷனல்ல இவனுடைய பெருவயிறுக்குநாம்எங்கேபோய்போ
சனஞ்சம்பாதிக்கப் போகிறோமாகையினாலிவனைஉபாயதந்திரங்களை
ச்சொல்லிசத்தியபாமையின்பின்னே அனுப்பிவிட்டிவனுக்குச்சரியா
ன நிறையாய் தங்கத்தைவாங்கிக்கொண்டு போகலாமென்று நினைத்து
அந்தசத்தியபாமையைப்பார்த்து அம்மாபாக்கியவதி நீயேன்விசனப்
படுகிறாய் சந்தோஷமாயிரு இந்தக்கிருஷ்ணனால்நமக்குஎன்ன ஆதாய
மிருக்கின்றது நீதானங்கொடுத்தபடியினால் தள்ளப்போகாதென்றுச
ம்மதித்துவாங்கிக்கொண்டேன் இனிஅப்புறத்தே கொண்டுபோய்வி
ற்றுப்போடுவேன் ஆதலால்அந்ததிரவியத்தை நீகொடுத்தபோதிலும்
உனக்கேகொடுத்துவிடுகிறேன் நீஅந்தக்கிருஷ்ணனுடைய நிறைக்கு
ச்சரியாய்தங்கத்தைவைத்து நிறுத்துக்கொடுத்தால்வாங்கிக்கொண்டு
போகிறேனென்றுசொல்ல அந்தவார்த்தையைக்கேட்டுச் சத்தியபா
மையுஞ்சந்தோஷித்து ஓசுவாமி நானப்படியேதருகிறேனென்றுசம்ம
தித்துத்தன்னுடைய அரண்மனைக்குப்போய்ஒருபெரியதராசைக்கொ
ண்டுவந்துகொடுத்து அந்தத்தராசினுடைய ஒருதட்டில்ரொக்கமுந
லானசகலமானஉடைமைகளையுங் கொண்டுவந்துவைத்துஒருதட்டில்
லோகநாயகராகிய கிருஷ்ணமூர்த்தியைஉட்காரவைத்துநிறுக்கும்போ
து அந்தக் கிருஷ்ணமூர்த்தியுஞ் சத்தியபாமையினுடையபிரியத்தைக்
கண்டுசந்தோஷித்தராய் இவளைப்பங்கப்படுத்தவேண்டுமென்றுதிரு
வுளத்தில்நினைத்துதாமிருந்ததட்டைப் பெருவிரலினால் அழுத்தினமா
த்திரத்தில் அந்ததட்டானது சொஞ்சமாகிலும்உயரஎழும்பாமல்அ
ப்படியேயிருந்தது அதுகண்டுசத்தியபாமையும் ஆச்சரியப்பட்டுபின்
னையும்தன்னுடைய உடைமைகளையுந் தோழிமாருடைய உடைமைக
ளையுங்கழற்றிக்கொண்டுவந்து அந்தத்தட்டிலேவைத்தாள் அப்போது
ம்அந்தபகவான்உட்கார்ந்திருக்கிறதட்டானது எழும்பவில்லை அது
கண்டுசத்தியபாமையும் இதுவெல்லாம் ஸ்ரீகிருஷ்ணதேவருடையதிரு
விளையாட்டென்றுநினைத்து ஆச்சரியப்பட்டுக்கொண்டுதன்னுடைய
சக்களத்திமார்களிற்சிலபேர்களுடைய அரண்மனைக்குப்போய் அவ
ர்களுக்கெல்லாம் அந்தச்சங்கதியைத் தெரிவித்து அவர்களுடையஉடை
மைகளையும்ரொக்கங்களையும் வாங்கிக்கொண்டுவந்து அந்தத்தட்டிலே

போட்டாளப்போதும் அந்தத்தட்டானது முன்னிருந்ததுபோலிருக்
க அதுகண்டுசத்தியபாமையும் மிகுந்தவிசனமடைந்து மற்றச்சக்கள
த்திமார்களுடைய உடைமைகளையும்ரொக்கங்களையுங்கேட்டுவாங்கிஆ
னைகள்பேரிலும் ஒட்டகங்கள்பேரிலும் எடுப்பித்துக்கொண்டு அவைக
ளையுங்கூட்டிக்கொண்டுவந்து அந்த பொருள்களையெல்லாம் அந்தத்த
ட்டிலேபோட்டாள் அப்போதும் அந்தத்தட்டானது உயரவெழும்பாம
லிருந்தது அதுகண்டு சத்தியபாமையும்விசாரப்பட்டு இனியென்ன செ
ய்வேனென்று தன்னுடையகையைநெரித்துக்கொண்டுகண்களில்சல
மானதுதாரைதாரையாய் வடியும்படியாகப்பிரலாபிக்கத்தொடங்கின
ளதுகண்டுசாம்பவதி-காளிந்தி-லக்ஷணைமுதலான பட்டஸ்திரீகளு
ம்பின்னுமுண்டானபதினாறாயிரத்தொருநூற்றிரண்டுதேவிமார்களு
மற்றுமுண்டான புரசனங்களுங் கோவென்றுபுலம்பி விசாரப்படத்
தொடங்கினார்கள் அவர்களிற் சிலர் சத்தியபாமையைநிந்தித்தார்கள், சி
லர்நாரதமுனிவரை நிந்தித்தார்கள், சிலர்கிருஷ்ணதேவருடையமாயா
விலாசமென்றெண்ணிக்கொண்டார்கள் இந்தக்கோலாகலங்களையெல்
லாம்பார்த்து கிருஷ்ணதேவரும்புன்சிரிப்பாகச்சிரித்துக்கொண்டு இ
ன்னம் இவர்களுடைய நினைவைஅறிவோமென்று அந்தத்தட்டிலேதா
னே அசையாமல் உட்கார்ந்திருந்தார், அப்போதந்தப்புரத்திலிருந்த ஆ
திலக்ஷுமியாகியருக்மணிதேவியாரும் இந்தச்சவிஸ்தாரமெல்லாந்தோ
ழிமார்களால்கேள்விப்பட்டுவந்துதன்னுடையசக்களத்தியாளசத்திய
பாமையைநிந்தித்து நாரதர்பண்ணினசூதுக்குங்கிருஷ்ணமூர்த்தியாரு
டையதந்திரத்திற்குஞ் சந்தோஷப்பட்டு புன்சிரிப்புடனே அந்தச்சத்
தியபாமைமுதலான ஸ்திரீகளெல்லாரையும்அப்புறத்தேவிலகியிருக்
கச்சொல்லித்தன்னுடையமனதில் ஒருபொருளை உத்தேசம்பண்ணிக்
கொண்டுபின்பு நாரதமுனிவரைப்பார்த்து ஓமுனீந்திரா உமக்குஎன்பு
ருஷனுக்குச்சரியானநிறையுள்ள மகாவிசேஷமான பொருளைக்கொடு
க்கிறேன் சுகமாய் வாங்கிக்கொண்டுபோமென்றுசொல்லி அந்தலோ
கமாதாவாகியருக்மணிதேவியாருஞ்சிரித்து ஒருதுளசிதளத்தைக்கை
யிலெடுத்துக்கொண்டு அஷ்டாக்ஷரமந்திரத்தை உச்சரித்து அநேகமா
யிரங்கணக்கில்லாத திரவியப்பொதிகளைப்போட்டு எழும்பாத அந்தத்
தட்டின்மேலில்வைத்தாள் அதுகண்டுமகத்துக்குமகத்தாகவும் அணுவு
க்கு அணுவாகவும்விளங்குகிறகிருஷ்ண பகவானுஞ்சிரித்து அந்தத்து
ளசிதளம்தமக்குப்பிரீதியானபடியால்சத்தியபாமைமுதலானதேவிமா
ர்களுக்குமுன் ருக்மணிதேவியாரை மேன்மைப்படுத்தவும்நாரதமுனி
வருடைய கபடத்தையடக்கவும் திருவுளத்தில்நினைந்து தம்முடையப
லத்தையடக்கிக்கொண்டெழுந்தருளியிருக்கின்ற தட்டைமேலெழும்பச்செ
ய்து துளசிதளமிருக்கிற தட்டை கீழாகச்செய்துவிட்டார் அதுகண்
டு அந்தஸ்திரீகளெல்லாரும் ருக்மணிதேவியை மெச்சிக்கொண்டாடி
னார்கள் அப்போது ருக்மணிதேவியாரும் புன்சிரிப்புடனே அந்தத்து
ளசிதளத்தையெடுத்து நாரதமுனிவருடைய கையிற்கொடுத்துப்போ
ய்வாருமென்றுசொல்லி அந்தநாரதருக்கு நமஸ்காரம்பண்ணி அனுப்
பிவிட்டுத்தன்னுடைய புருஷனை அழைத்துக்கொண்டுதன் அரண்மனை
க்குப்போய்விட்டாள் அதுகண்டு சத்தியபாமைமுதலானதேவிமார்கள்

விசனப்பட்டுநாமெல்லாரும் நம்பியிருக்க அந்தருக்மணிதேவிவந்து ஏதோசூதுபண்ணி நமதுபுருஷனை அழைத்துக்கொண்டுபோனாள் நம்முடையபாக்கியம் இப்படியிருந்துவிட்டதென்று சொல்லிக்கொண்டார்கள், நாரதமுனிவரும் அந்தத் துளசிதளத்தைவாயில்போட்டுக்கொண்டு தம்முடையஸ்தானத்திற்குப்போய்விட்டார்கேட்டீரோஜெனமேஜயமகாராஜாவே என்றுசொல்லி அப்பால்சத்தியபாமைவீட்டில்நடந்தசவிஸ்தாரத்தைச்சொல்லுகின்றார் கேளுமையாராஜேந்திரா அப்படிசத்தியபாமையும் நாரதரைப்பார்த்து ஐயா நீர்பூர்வத்திலொருதரம்வந்து மோசம்பண்ணினதுபோல இப்போதும் ஏதோமோசம்பண்ணவந்திருக்கிறீர் நல்லது எல்லாந்தெரியுமென்று சொல்லித்தன்னுடைய அரமனைக்குள்ளே அழைத்துக்கொண்டுபோனாள் அப்போதுசப்பிரகூடமஞ்சத்தின்பேரில் படுத்துக்கொண்டு பீதாம்பரத்தினால் முக்காடிட்டுக்கொண்டு குறுகுறுவென்றுகொறுக்கையிட்டுநித்திரைசெய்கிறதுபோலிருக்கிற அந்தகபடநாடகசூஸ்திராவதாரியான கிருஷ்ணதேவரானவர் நாரதர் சொன்னகபடவார்த்தைகளெல்லாங்கேட்டுக்கொண்டிருந்து தனக்குள்ளேதானே சிரித்து அந்த நாரதமுனிவர்சமீபத்தில்வந்தபோது அதிகமாகக்கொறுக்கையிட்டுச் சற்றேபுரண்டுதிரும்பிக்கண்ணைத்திறந்து பார்த்து ஒன்றுந்தெரியாதவரைப்போல்நாரதரோ வந்தாரென்று திடுக்கிட்டு மஞ்சத்தைவிட் டெழுந்திருந்து நமஸ்காரம் பண்ணி வாருமையாவென்று நாரதனை அழைத்துஒருரத்நபீடத்தின்பேரில் உட்காரவைத்து அந்தநாரதருக்குஆர்க்கியபாத்தியமுதலான உபசாரங்களினாற்பூசைபண்ணி அவரைவெகுவாகத்தோத்திரம்பண்ணிக் கொண்டாடினாராதுகண்டு நாரதரும்தமக்குள்ளேதாமேசிரித்து சர்வாந்தரியாமியான இந்தப்பகவானுடையமகிமையைநம்மாலறியக்கூடுமோ நாமிவருடைய மகிமையையறியாமல் இவ்விடத்திற்குவந்து வெட்கப்பட்டோம் இந்தபகவான் எந்தஇடத்திலும சர்வபரிபூரணராய் வியாபித்திருப்பாரென்றுதம்முடையஉள்ளத்திலெண்ணிக்கொண்டு சற்றுநேரம் அவிடத்தில்பேசிக்கொண்டிருந்து பிற்பாடு அந்தச்சத்தியபாமை ஸ்ரீகிருஷ்ணதேவரிடத்திலும் செலவுவாங்கிக்கொண்டுவெளியேவந்து அந்தநாரதமுனிவரானவர் இன்னமற்றமூண்டானதேவிமார்கள் வீட்டிலும் நுழைந்துபார்க்கையில் ஒருவீட்டில்சாப்பிடுகிறதும் ஒருவீட்டில்பேசுகிறதும், ஒருவீட்டில்திருநாமந்தரித்துக்கொள்ளுகிறதும், ஒருவீட்டில்ஸ்நானம்பண்ணுகிறதுமாக அந்தத்தேவன் எந்தஇடத்திலும் வியாபித்து அந்தந்ததேவிமார்களுடையஇருதயத்தில் நம்முடைய புருஷன் நம்மைவிட்டுப்பிரிந்து எங்கேயும்போகிறதில்லையென்று நினைந்திருக்கும்படி திருவிளையாடல் பண்ணிக்கொண்டிருக்கின்றகிருஷ்ணபகவானைப்பார்த்துநாம் இவருடையமகிமையைக்கொஞ்சமாகிலும் யோசித்துப்பாராமல் இவரிடத்தில்வந்துகலகம்பண்ணவந்தோம் நம்முடையகலகம் இங்கேசெல்லமாட்டாது வீணாகவந்துவெட்கப்பட்டோம் இனிமேலிங்கேவரப்போகாதேயென்று நினைத்துக்கொண்டு மறுபடியும் தருமபுத்திரருடையயாகசாலைக்கு நடந்துவிட்டார்.

ஸ்ரீகிருஷ்ணதேவரும்பகதலப்பிரியமுனீந்திரர்முதலிய ரிஷீஸ்வரர்களும், தருமர்வீமார்ச்சுனநகுலசகாதேவர்களுடனும், சந்திரகாசன் மற்றுமுள்ளராசசிரேஷ்டர்களுடனும், திரௌபதாதேவிமுதலிய பத்னிமார்களுடனுமஸ்வமேதயாகத்தைநிறைவேற்றல்.

கேட்டீரோசனமேசெயமகாராசாவே இப்பாலந்தத் தம்பதிகளுபசதுநால்வரும்வெள்ளையானையின்பேரிலேறிக்கொண்டு தங்கக்குடங்களிலகங்காதீர்த்தத்தை யேந்திக்கொண்டு மகாசம்பிரமத்துடனே வந்து யாகசாலையைச்சேர்ந்துயானைகளைவிட்டிறங்கி அவரவர்கள்கொண்டுவந்த தீர்த்தக்குடங்களை வேதவியாசபகவானிடத்தில் ஒப்புவித்தார்கள் அதுகண்டுஅந்தவேதவியாசபகவானும் அந்தத்தங்கக்குடங்களையெல்லாம்மந்திரபூர்வகத்துடனே வாங்கியாகசாலைக்குள்ளே வைக்கச்சொல்லியொருபக்கத்தில் பதினெட்டுவகை மேளவாத்தியங்களுமதாம் தாமென்றுமுழங்கவும்ஒருபக்கத்தில்பிராமணர்களும் ரிஷீஸ்வரர்களுமிருந்துகொண்டுவேதபாராயணம்பண்ணவும் இப்படிப்பட்டவைபவத்துடனே அந்தவியாசபகவானவர் பகதலப்பிரியமுனீந்திரருடைய உத்தாரப்படிக்குத்தருமபுத்திரரையுந்திரௌபதாதேவியையும் அழைப்பித்துநல்லசுபமுகூர்த்தத்தில்அவர்களிருவரையும் கிழக்குமுகமாய்உட்காரவைத்துக்கங்காதீர்த்தத்தினால்இரண்டுபேருக்குமஸ்நானஞ்செய்வித்து நல்லவஸ்திராபரணங்களினால் அவர்களையலங்காரப்பண்ணிக்கந்தபுட்பஅட்சதைகளினால்சிங்காரித்துப்பிற்பாடு யாகசாலைக்குட்பிரவேசித்துஅங்கேஅத்திப்பலகையால் ஓராசனம்போடுவித்து அந்த ஆசனத்தின்பேரில்தருமநந்தனரைத்திரௌபதாசமேதரா யுட்காரப்பண்ணித் தருமபுத்திரருக்குத்தர்ப்பையினால்பவித்திரம்போடுவித்து அந்தத்தருமநந்தனருடையகையினால் சகலசமித்துகளையும் மந்திரபூர்வகத்துடனேயாககுண்டத்திற்போடுவித்துஅப்பால்அக்கினிதேவனைப் பிரார்த்தனைபண்ணிஅந்தயாககுண்டத்தில்நிறுத்தி அநேகமாயிரம் நெய்க்குடங்களையழைப்பித்து அந்தநெய்கள்முழுதும்யானைத்தும்பிக்கையிலிருந்துசலம்பொழிகிறதுபோலத் தருமபுத்திரருடையகையினால் அந்தவோமகுண்டத்தில் பொழிவித்துப்பஞ்சதிரவியங்கள் நவதானியங்கள்முதலானவஸ்துக்களையுமந்தவோமகுண்டத்தில்தாராளமாய்நிறைவித்து வேதகோஷ்டமானதுசமுத்திரகோஷ்டத்திலும் அதிகமாய் முழக்கம்பண்ணுவித்து அந்தச்சமயத்தில்வியாசபகவானும் பகதலப்பிரியமுனீந்திரரை அந்தயாகத்திற்குப்பிரமாவாக்கிவசிஷ்டர்முதலான பிரமரிஷிகளொன்பதுபேரைச்சத்தரிஷிகளான ரித்துவிசர்களாகச்செய்து சோமயாஜிகளாய் ஆயுரிஷிகளையேற்படுத்திவைத்துத்தாம் புரோகிதராகவுமிவர்களுடனேசகாயமாயிருந்துகொண்டு அஸ்வமேதயாகத்திற்குள்ளத்தனைவிதத்தினால் ஓமஞ்செய்விக்கவேண்டுமோ அத்தனை விதத்தினாலும் அந்தத்தருமநந்தனருடையகையினால் ஓமம்பண்ணுவித்தார்களப்போது அக்கினிதேவனும்மகாசந்தோஷமாய்அந்த ஓமகுண்டத்திற்பிரவேசித்துவிளங்கினான் அந்த ஓமப்புகையானது ஆகாசமுழுதும் பரவிச்சொர்க்கலோகத்திலும்போய்ப்புகுந்தது அதுகண்டுதேவேந்திராதிதேவர்களெல்லாரும்சந்தோஷமடைந்து ஆகாசவீதியில்வந்து நின்றார்கள்

இப்படிச்சகலவைபவங்களுடனே அந்தத்தருமநந்தனனும் வியாசபகவானுடையசொற்படிக்கு யாககுண்டத்தில்பிரகாசிக்கின்ற அக்கினியில் சமித்துமுதலான வஸ்துக்களையெல்லாம ஆகுதிபண்ணுவித்து அசுவமேதப்பிரயோ டுவியாசபகவானுடைய உத்தாரவின்பேரில் அஸ்வமேதக்குதிரையை விமசேனனால் அழைப்பித்து அவ்விடத்தில் ஒருகாட்டுவிருக்ஷமரத்தை யழைப்பித்து அதைச்சிற்பாசாரிகளால் இழைப்பித்து எதமாகவிருந்தி அந்தரத்தைக் கந்தபுட்ப அட்சதைகளினால் பூசைபண்ணிப் பிறகு பிராமணருக்களாகிய கயிற்றினால் அசுவத்தை யந்தாரத்தில் கட்டிவைத்து அதன் பிறகு அந்த அசுவத்தைத்தருமநந்தனனும் வேதமந்திரங்களினால் கந்தபுஷ்ப அட்சதைகளாற்பூசித்து இரண்டுகைகளையும் சிரசின்பேரில் அஞ்சலியாகக் கூப்பிக்கொண்டு அந்த அசுவத்தைப்பார்த்து ஓ உத்தம அசுவமேநீயென்னுடையவிண்ணப்பத்தைக்கேள் அது என்னவென்றால் நான் இந்த ஓமாக்கினியிலெனனை ஆவாகனம்பண்ணித் தேவர்களுக்குப்பிரீதியாய் அவிர்ப்பாகங்கொடுத்து நான்பரிசுத்தனாகவேண்டும் அதுவல்லாமலு நானுன்னிட சகாயத்தினால் திவ்வியசரீரத்தைப்பெற்றுக் கீர்த்திப்பிரதாபத்தை அடையவேணும் இப்படிசெய்தால்நீயும் உன்னுடைய அசுவமேதத்தை இந்தஓமாக்கினியில் பிரீதிபண்ணிவித்து வேறதிவ்வியசரீரத்தைப்பெற்று என்றைக்கும் அழிவில்லாதபதவியிற் சேருவாய் ஆகையால்நீசந்தோஷகரமாக உத்தாரம்பண்ணினால் அப்படிசெய்கிறேனுனக்குச்சம்மதமாயிருப்பதும் இல்லாததும் எனக்குத்தெரிவிக்கவேண்டும் ஓ அசுவமேயென்றுசொல்ல அதுகேட்டு அசுவமுஞ் சந்தோஷப்பட்டு இரண்டுசெவியுமசைந்தாட முன்னங்காலிரண்டையும் உயரவெடுத்துக்கொண்டு பவளம்போற்பிரகாசிக்கின்றவாயைத்திறந்து ஏழாரவங்களைச்செய்து அதினுடைய இரண்டுகண்களின்வழிகளாலும் அமிர்தமான துளியில்துளியென்று தாரைதாரையாய்வடிந்தது அதினுடையமுகமலர்ச்சியான தூரணசந்திரவிம்பம்போற்பிரகாசித்தது அது கண்டு அந்தச்சபையிலிருக்கிற ஸ்ரீகிருஷ்ணபகவான்முதலானவர்கள் எல்லாம் இதுவென்னகாரணமோவென்றுசொல்லிக்கொண்டார்கள் அந்தச்சமயத்தில் அங்கிருந்தகுலாசனானவன் அசுவலட்சணமும் அசுவத்தினுடைய இருதயமும் அசுவபாஷையு மறிந்திருக்கிறவனாதலால் அந்த அசுவத்தினுடையசகலவெல்லாந் தெரிந்து சந்தோஷித்தனாய் அந்தச்சபையைப்பார்த்து ஓ பிரமரிஷிகளே தேவவிருடிகளே ராசாக்களே இந்த அசுவத்தினுடையகருத்தைக்கேளுங்கள் அதாவது தருமநந்தனனவர் இந்த அசுவத்தைவேண்டி மனுவு பண்ணிக்கொண்ட காரியத்தைப்பற்றி இந்த அசுவமும் தருமநந்தனனைப்பார்த்துச்சந்தோஷப்பட்டு ஓ தருமபுத்திரமகாராசாவே தேவரீர் சொன்னவார்த்தை யெனக்குச்சந்தோஷமாச்சுது என்னுடையவம்சமெல்லாம்புண்ணியலோகத்தைப்பெறாதிருக்கிறகாலமுண்டாச்சுது ஆதலால் தேவரீர் தாமசப்படுத்தாமல் என்பேரில் கிருபைசெய்து இந்தஓமகுண்டத்திலென்னை ஆவாகனம்பண்ணித் தேவர்களுக்குப்பிரீதியாய் அவிர்ப்பாகங்கொடுத்து என்னைப் பரிசுத்தனாக்கி நீரிந்தப்பூமண்டலத்திற்சுகமாயிருந்து கீர்த்திப்பிரதிஷ்டையையுடையும் நானும் சுவர்க்கலோகத்திற்குப்போய்ச்சேருகிறேன் நீரிப்போது இவ்வளவு உபகாரம்பண்ணிரட்சியுமையாவென்றுசொல்லின தென்று

சொல்ல அதுகேட்டு அந்தச்சபையி லிருந்தவர்களெல்லாம் மிகுந்தசந்தோஷத்தை யடைந்து நகுலனுடைய சாமர்த்தியத்தைப் புகழ்ந்துகொண்டாடினார்கள் அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவானும் நகுலராசனைப் போய்த் தழுவிக்கொண்டு ஓமைத்துனா! சகலபாஷைகளும் அறிந்திருக்கிறீரா என்றுபரிகாசம் பண்ணினதுபோலக் கொண்டாடினார் வியாசபகவானுடைய உத்தாரப்படிக்கு அந்த அசுவத்திற்கு தூபதீபங்கொடுத்து அநேகவிதமாகப்பூசைபண்ணித் தோத்திர நமஸ்காரங்களைசெய்து பிறபாடு அந்த அசுவத்தைத்தண்டிக்கும்படி வீமசேனனைப்பார்த்துச் சைகையாகச் செலவுகொடுத்தார் அந்தச்சமயத்திலதினுடைய இரண்டுகாதிலு மிருந்து அமிர்தமானது குபீலகுபீலென்றுகங்கையாய்வடிந்தது அதுகண்டு வீமசேனனு மகாஉச்சாகத்துடனே யெழுந்துநின்று அந்தச்சபையிலிருக்கின்ற ரிஷியீஸ்வரர்களிடத்திலும் ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்திலும் தருமநந்தனரிடத்திலும் உத்தாரம்பெற்றுகொண்டு கொட்டுமுருக்கமாத்திரனற்பண்ணின கத்தியையுருவிக்கொண்டு அந்த அசுவத்தினுடையசிரசில்வைத்து ஒருதரம்ஓங்கிவீசினமாத்திரம் அந்த அசுவத்தினுடையசிரசானது அறுபட்டுப்பூமியில்விழாமலும் உதிரம்வடியாமலும் அமிர்தம்வடியும்படி சிவ்வென்று ஆகாசவீதியிலெழும்பி ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைக்கொண்டாடிக்கொண்டு சூரியமண்டலத்திற்குச்சமீபமாகப்போய்மாய்கையாய்ப்போய்விட்டது அந்த அதிசயத்தையெல்லாந் தேவகணங்களும் ரிஷிகணங்களும் ராசகணங்களும் கண்டு ஆச்சரியப்பட்டு அந்த அசுவத்தினுடையபாக்கியந்தானெப்படிப்பட்டதோவென்று சொல்லிச்சந்தோஷமடைந்தார்கள் ஆகாசவீதியில்தேவதுந்துபியும் திமிதிமியென முழங்கியது தேவர்களுஞ்சந்தோஷகரமாய்ப்பாரிசாதப்புட்பங்களைச்சலசலவென்று வருஷித்தார்கள் கந்தருவர்கள்பாடினார்கள் ஊர்வசிரம்பைமேனகை திலோத்தமைமுதலான தேவஸ்திரீகளெல்லாம்நடனம் பண்ணினார்கள் இந்திரன் முதலான தேவர்களெல்லாம் அவிர்ப்பாகம்வாங்கவேணுமென்கிற சந்தோஷத்தினால் உச்சாகத்துடனே தேவதாமகோச்சவங்களெல்லாம்நடத்திவிட்டு எங்கேமிஞ்சிப்போகின்றதோவென்று ஒருவர்க்கொருவர்முன்னிட்டுவந்துகண்களைச் சிமிட்டாமல் தருமபுத்திரருடைய யாகசாலையைநோக்கிக்கொண்டு நின்றார்கள் பிர்மாருத்திரன் முதலானவர்களும் அப்படியேயெச்சரிக்கையாய்வந்து நின்றார்கள் அப்போதுகபடநாடகசூஸ்திரவதாரியான ஸ்ரீகிருஷ்ணபகவானும் தம்முடையபாகத்தைக்கொடாமலெங்கே யேமாற்றிவிக்கிறார்களோவென்று நினைத்து எல்லாருக்கும் முன்னதாகப்போய் அஷ்டதிக்குப்பாலகர்களுடனேயிருந்து மகாசாக்கிரதையாய்த் தருமபுத்திரருடைய முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தார் கேட்டீரோ செனமேசெயமகாராசாவே அப்பால்தருமபுத்திரருடைய உத்தாரவின்பேரில் அந்தயாகசாலைக்குநடுவே முருக்கமரத்தில்எருக்கநாராலாகியகயிற்றினால் கட்டியிருக்கிற அசுவத்தின்மாமிசத்தைவீமசேனனால் துண்டந்துண்டமாய்வைரம்போலும் பவளம்போலும்புட்பம்போலுந்துண்டித்துத்தருமபுத்திரர்கையிற்கொடுக்க அவரும் அதுகளை வாங்கி வியாசபகவான்சொல்லுகிற மந்திரபூர்வகத்துடனே வடவாமுகாக்கினியைப்போலத்தகதகாயமாய் ஆகாசபரியந்தங் கொழுந்துவிட்டுப் பிரகாசித்தெரிகின்ற அக்கினியிற் போட்டு

க்கொண்டிருந்தார் அக்கினிதேவனுமதுகளை மகாப்பிரியமாய் ஏற்றுக்கொண்டு தம்முடைய பக்கத்தில் ஒருகும்பலாகச் சேர்த்தார் ரதிகளிலிருந்து மகா தெய்வீகமான பரிமளமுண்டாச்சுது அப்போது தருமநந்தனருடைய அசுவத்தினுடைய சரீரத்திலுள்ள எலும்புகளையுமப்புறஞ்சேதமாயப்போகவொட்டாமல் துண்டித்து அக்கினியிறபோட்டுமுடிவில் சகலமுந்தேவதாபிரீதியாகச்சுவாகாவென் றோமம்பண்ணினார் அந்தப்புகையானதாகாயமட்டாயெழும்பிச்சுவர்க்கபூமியுங்கடந்து அப்பால் பிரமலோகத்திலும்போய் நிறைந்தது அப்போது வியாசபகவானும் தருமபுத்திரருடையகையினால் முறைமைப்படி சகலதேவர்களுக்குமந்த அவிர்ப்பாகத்தைக்கொடுக்கும்படி உத்தேசித்துத் தம்முடைய சமீபத்திலிருக்கின்ற பகதலப்பிரியமுநீந்திரருடைய அனுமதியின் பேரில் முதலாவது சாம்பவமூர்த்தியையழைக்க அதுகேட்டு அவரும் மகாசந்தோஷகரமாய்ச்சிவகணங்களுடனே புறப்பட்டு விக்கினேசுவரர் குமாரசுவாமி நந்திகேசுவரர் பிருங்கிரிஷி முதலானவர்களும் புடைசூழத்தக்கதாக ரிஷபவாகனரூடராய்வந்து அங்கே யக்கினிதேவன் வசத்திலிருக்கிற தம்முடைய பங்காகிய அவிர்ப்பாகத்தை வியாசபகவானெடுத்துத் தருமபுத்திரருடைய கையினாற் கொடுப்பிக்க அதையந்தச்சாம்பவமூர்த்தியுஞ்சந்தோஷமாகவாங்கிக்கொண்டு தருமபுத்திரரைப்பார்த்து ஓதருமநந்தனனே நீ நெடுநாளுஞ் சுசீவியாய் வாழ்ந்திருக்கக் கடவதென்று ஆசீர்வாதம் பண்ணிவிட்டுத் தம்முடைய ஸ்ரீகைலாசத்திற்கு எழுந்தருளிப்போனார் அப்பால் இரண்டாவது ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியையழைத்து அவருக்குமந்தப்படியேயவிர்ப்பாகத்தையெடுத்துத் தருமபுத்திரருடைய கையினால் கொடுப்பிக்க அதையவரும்வாங்கிக்கொண்டு சந்தோஷகரமாய தருமபுத்திரரைப்பார்த்து இந்தத்தருமநந்தனர் சதாகாலமும் பல்லாண்டாய்வாழக்கடவதென்று ஆசீர்வாதம்பண்ணியருளினார் அப்பால் மூன்றாவது சத்தியலோகநாயகரான பிரமதேவரையழைத்து அவர்பங்காகிய அவிர்ப்பாகத்தையெடுத்துத் தருமநந்தனருடைய கையினால் கொடுப்பிக்க அதையவரும்வாங்கிக்கொண்டு ஆனந்தசித்தராய்த் தருமபுத்திரரைப்பார்த்து இந்தத்தருமபுத்திரர் எந்நாளுஞ்சிரஞ்சீவியாயிருக்கக் கடவதென்று ஆசீர்வாதம்பண்ணிவிட்டுத் தம்முடைய பிரமலோகத்திற்கு அம்சவாகனரூடராயெழுந்தருளிப்போனார் இந்தப்பிரகாரம் பிரமா-விஷ்ணு-உருத்திரன் என்கிற மும்மூர்த்திகளுக்குமவிர்ப்பாகம் கொடுத்து அவர்களுடைய ஆசீர்வாதங்களையுந்தருமநந்தனர் கைக்கொண்டபின்பு வியாசபகவானுஞ்சந்தோஷமாகி இந்திரன் முதலான அஷ்டதிக்குப்பாலகர்களையும் முறைமைப்படி வரிசைக்கிரமமாயழைத்து அவரவர்களுடைய பங்கையெடுத்து அவரவர்களுக்குத் திருப்தியாகக் கொடுத்தெல்லாரையுஞ்சந்தோஷமாயனுப்பிவிட்டுப் பிறகு யட்சகின்னரர் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர்கள் பன்னகர் அசுவனிதேவதைகள் ஏகாதசருத்திரர்கள் துவாதசாதித்தர்கள் நவக்கிரகங்கள் நவப்பிரமாக்கள் அஷ்டவசுக்கள் முதலான முப்பத்துமுக்கோடி தேவர்களையுமழைப்பித்து அவர்களுடைய பங்குப்பிரகாரம் அவிர்ப்பாகத்தையெடுத்துத் தருமபுத்திரருடைய கையினாலவரவர்களுக்குக்கொடுப்பித்து அவர்களையெல்லாஞ்சந்தோஷப்படுத்தியனுப்பிவிட்டு யாககுண்டத்தில் ஆ

வாகனமாயிருக்கின்ற அக்கினிபுருஷனையும் அதிகசந்தோஷப்படுத்தியனுப்பிவிட்டார்பிற்பாடு தருமபுத்திரரும்வெகுசந்தோஷமாய்த் தன்னுடையகையினால் அசுவமேதயாகத்தைச்செய்துமுடித்துப் பரமஸ்வுத்தமாகப்பண்ணின வேதவியாசமுனிவரையும் பூசைபண்ணி அவருக்குப்பிரதட்சிணநமஸ்காரங்கள் செய்து அந்த முநீஸ்வரருக்குத் தட்சணையாய்த்தாம்அரசாட்சிசெய்கின்றபூமிமுழுதுமதாரைவார்த்துக்கொடுத்து அவரைச்சந்தோஷப்படுத்திவைத்துப் பிற்பாடு யாககிருத்விகராகியபகதலப்பிரியமுநீந்திரரையும் பூசைபண்ணி அவருக்குப்பிரதட்சணநமஸ்காரங்கள்செய்து தட்சணையாய்ப்பத்துயானைகளும் இருபது அஸ்வங்களும்ஆயிரம்பாரந்தங்கமுங்கொடுத்து அவரைச்சந்தோஷப்படுத்திவைத்துப்பிற்பாடுரித்துவிசாகளாகியஒன்பதுபேருக்குத்தட்சணையாயொவ்வொருத்தருக்கு ஐந்துயானைகளும் பத்து அசுவங்களும கோடிவராகனிதுகளெல்லாங்கொடுத்துஅவர்களைச் சந்தோஷப்படுத்திவைத்துப்பிற்பாடுசோமயாதிகளாறுபேருக்குமதட்சணையா யெவ்வேழுயானைகள் பதினாறுகுதிரைகளஅறுபதுபாரந்தங்கம் இந்தப்பிரகாரம கொடுத்து இவர்கள்மனதைச்சந்தோஷப்படுத்திவைத்துப்பிற்பாடு மற்றரிஷிகளுக்கெல்லாம்தட்சணையாக ஒவ்வொருயானையொவ்வொருகுதிரை ஐந்துபாரந்தங்கம்இந்தப்பிரகாரமாகக்கொடுத்து அவர்களையெல்லாஞ்சந்தோஷப்படுத்தி அதன்பிறகுபிரமக்ஷத்திரியவைசிய சூத்திரர்களாகிய நான்குவருணத்தார்களுக்கும ஆசைதணியத்தக்கதாய அநேக திரவியங்கள்-ஆனைகள்-குதிரைகள்-ஆசனங்கள்-வஸ்திரங்கள்-வராகன்-மோதிரங்கள்-ஆபரணங்கள் போதும்போதுமென்னத்தக்கதாய்க்கொடுத்துத்தானம்பண்ணினார் அப்போதுதேவர்களெல்லாம்ஆகாசவீதியில்நின்றுதருமபுத்திரரைப்பார்த்துக்கொண்டாடிப்பாரிசாதபுட்பங்களைச்சலசலவென்றுவருஷித்தார்கள் தேவதுந்துபியும திமிதிமென்றுமுழங்கியது அப்போதுசகலமானபேர்களுந் தர்மநந்தனரைக்கொண்டாடிச்சந்தோஷப்பட்டார்கள் அப்போதுவியாசபகவானும் தருமராசாவைப்பார்த்துஓதருமநந்தனநீநமக்குத்தட்சணையாய்க் கொடுத்தபூமியெல்லாம்நமக்கென்னசெய்ய அந்தப்பூமிமுழுதும்நீயேவைத்துக்கொண்டு அதற்குத்தகுந்தவிலையைக்கொடுமென்றுசொல்ல அதுகேட்டுத்தருமபுத்திரரும்மகாமேருவைப்போலத்திரவியத்தைக்கொண்டுவந்துகுப்பலாய்ப்போட்டுஇதைக்கொள்ளுஞ்சுவாமியென்றுசொல்ல அதுகண்டுவியாசபகவானுஞ்சந்தோஷப்பட்டுத்தருமநந்தனரைமெச்சிக்கொண்டாடியவரிடத்தில்வாங்கினதிரவியத்தையெல்லாங்குந்திதேவிக்குக் கொடுத்துவிட்டார் அந்தஅம்மாளும் அந்தத்திரவியங்களையெடுத்துப் பிராமணர்களுக்குத்தானமாய்க்கொடுத்துவிட்டாள் இப்படியாய்த்தருமபுத்திரரு மநேகமாயிரம்பேர்களுக்குத்தட்சணைகொடுத்துமூன்று அசுவமேதயாகபலனைப்பெற்றுமகாசந்தோஷமாய்க்கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து அநேகவிதமாகத்தோத்திரம்பண்ணி ஓசநார்த்தனா-ஓசகத்ரட்சகா-ஓசகநாதா-ஓசுவாமிநான் அசுவமேதயாகஞ்செய்துமுடித்ததுங் கீர்த்திப்பிரதாபம் பெற்றதுந் தேவரீருடைய பரிபூரணகிருபையல்லவோவென்று வெகுவாகக்கொண்டாடி நமஸ்காரம்பண்ணினார் அப்போதுகிருஷ்ணபகவானும்புஞ்சிரிப்பாய்ச்சிரித்துத்தருமராசாவைப்பார்த்து ஓதருமநந்தனா

நீரெனிப்படி நம்மைக்கொண்டாடுகிறீர் நம்மா லொருகாரியமும் நடக்க
வில்லையெல்லாம் அந்தவியாசபகவானுடைய வனுக்கிரகத்தாலும் ஸ்ரீமந்நா
ராயணமூர்த்தியினுடைய கிருபையினாலு முமமுடைய தருமகுணத்தி
னாலும் நடந்ததென்று அந்தப்பகவான் சொல்ல அதுகேட்டுச்சகலரா
ஜாக்களுஞ் சந்தோஷப்பட்டார்கள் அப்பொழுது தருமநந்தனரும்
ஆனந்தபரவசராய்க் கிருஷ்ணபகவானுடனும் மற்றுமுண்டானராசாக்க
ளுடனுஞ் சந்தோஷம்பேசிக்கொண்டிருந்து பிற்பாடு சகலமானபேர்க
ளையுஞ் சந்தோஷகரமாய்ப் போசனம்பண்ணுகிறதற்கு வாருங்களென்று
போசன சாலைக்குள் அழைத்துக்கொண்டுபோய் அவர்களுக்கெல்
லாங் கைகால்சுத்திபண்ணிக்கொள்ளுகிறதற்குப் பனிநீர்கொடுப்பித்துப்
பிற்பாடு சகலபிராமணர்களுடனும ரிஷிகளுடனும் ராட்சசகூட்
டங்களுடனும் மந்திரிபிரதானிகளுடனும் தண்டநாயகர்களுடனும் திரு
தராட்டிரன்-சஞ்சயன்-விதுரன் முதலானவர்களுடனும் தேவாதிதேவ
னான கிருஷ்ணபகவான்-பலராமர்-சாத்தகி-கிருதவர்மன் முதலான
யாதவவீரர்களுடனும் பிள்ளைகள் பேரமார் தம்பிமார்களுடனும் தருமபுத்
திரரானவர் மகாசம்பிரமத்துடனே போசனம்பண்ண உட்கார்ந்தார்
கேளுமையா செனமேசெய மகாராசாவே அதுஎப்படியென்றால் மிகுந்த
வெண்மையுமமூன்றுமுழவகலமும் நாலுமுழநீளமுமுள்ள தலைவா
ழைகளைப்போட்டு அந்தஇலைகளின்பேரில்சுத்தசலந் தெளித்து பிற்பா
டு முல்லைபருப்புகள் போல வெண்மையுள்ள சின்னசம்பா அரிசிசாதத்
தைப்பரிமாறியந்தச்சாதமாகிய வெள்ளியலைக்குப் பொன்மலையாற் சிக
ரம்வைத்ததுபோல அந்தச்சாதத்தின்பேரில் துவரம்பருப்பைப் போ
ட்டுரைப்படிப்புத்துருக்கு நெய்விட்டந்தஇலைகளைச் சுற்றிலும் சட்டு
வகையாகிய ஆறுவகைப்பொரியலும் நான்குவகைக்கறிகளும் இரண்டு
வகைத்தப்பளமும் பதினெட்டுவகைப்பச்சடியும் ஐந்துவகை யூறுகாய்க
ளுமதுவல்லாமலும் பஞ்சகச்சாயமும் பணியாரவகைகளும் ஆமைவ
டைமுதலானதுகளும் சல்லருசிகாமானபழவகைகளும் சீனிச்சருக்க
ரைகற்கண்டுமுதலானதுகளும் இளந்தோய்ச்சலாகிய தயிரும் பரமான்
னமும்பரிமாறச்செய்து தருமநந்தனரானவர் கிருஷ்ணபகவான் முதலா
னபேர்களைப்பார்த்து நீங்களெல்லாருஞ் சந்தோஷகரமாய் வேண்டியமட்
டுக்கும் போசனம்பண்ணுங்களென்றுபசாரமாகச் சொல்லி யவர்களுக்
குப்போசனம்பண்ணும்படி செலவுகொடுத்துத்தாமு மவர்களுடனே
போசனஞ் செய்து பிற்பாடு இளநீர் - நீர்மோர்-வெந்நீர் முதலா
னதுகளை விருப்பத்தின்படியவரவர்கள் தாகத்துக்குச் சாப்பிட்டு மகா
சந்தோஷத்துடனே யெழுந்திருந்து பனிநீரால் சகலமானபேருங் கைகா
ல்சுத்திபண்ணிக்கொண்டு மகா ஆடம்பரமாய் முகமல்பட்டினாலாகிய தி
ண்டுகளின்பேரில் பில்லைத்தலையணைகளின்பேரில் சார்ந்துகொண்டு சுகந்
தபுட்பமரிமளாதிகளையணிந்துகொண்டு கர்ப்பூரதாம்பூலம் போட்டுக்
கொண்டு நாகசுரம் சின்னாங்குழல் துத்தி திருச்சின்னம் சங்கீதமேளம்
இதுமுதலான பதினெட்டுவகைவாத்தியங்கள் முழங்கவும் வெண்பா
கலிப்பா-கொச்சகப்பா-விருத்தப்பா-அகவற்பா முதலான பலபாக்க
ளையுமெடுத்துச் சங்கீத வித்துவான்கள் கலியாணி-பைரவி-கேதாரக
[illegible]

ங்களிலுந்தொடுத்துயாழ்வீணை-கின்னரிமுதலானகருவிகளைக்கொண்டு
பாடவும் இரம்பை-ஊர்வசி-திலோத்தமைச்குச்சரியானநாட்டியஸ்தி
ரீகளெல்லாமகா அபிநயத்துடனே நாட்டியம் பண்ணவும் வே
டிக்கையைப்பார்த்துக்கொண்டுமக உல்லாசமாயிருந்தார்கள் கேட
ரோஜனமேஜயராஜாவேயப்பொழுதவ்விடத்தில்ஒருகீரிப்பிள்ளை
வந்துஅந்தச்சபையிலிருக்கின்றவர்களைப்பார்த்துசபையார்களே இ
ந்ததருமநந்தனர்செய்துமுடித்தஅசுவமேதயாகமானது பூர்வகாலத்தில்
சத்துப்பிரஸ்தனென்கிற முநீசுவரன் செய்த பெரியதானத்திற்கு
ஈடல்லஅதெப்படியென்றாலந்தசத்துப்பிரஸ்தனும் அவன் பெண்சாதி
யும்பிள்ளையும்மருமக்களும் ஒருவிதமாய்ப்பௌர்ணமிகழித்த பிரத
மைமுதற்கொண்டமாவாசை பரியந்தம் தினந்தோறும் உதயகாலத்தி
லெழுந்திருந்துவயல்களுக்குப்போய்ச்சூரியாஸ்தமானமாகிற பரியந்தம்
பூமியிலுதிர்ந்து கிடக்கின்ற நெல்களைப் பொறுக்கிக்கொண்டுவந்து
சேர்த்திரண்டுமாக்காலானவுடனேயன்றையதின மந்தநெல்லையுலர்த்
தியரிசியாய்க்குத்திப்பிற்பாடந்தவரிசியை வறுத்தரைத்து மாவாக்கி
யந்தமாவை ஐந்துபங்காக்கி யதிதிக்குஒருபங்கைக்கொடுத்து மற்ற
நாலுபங்கையந்தநாலுபேருஞ்சாப்பிடுவார்கள் இப்படியந்த முநீசுவர
ன்நடந்துவருங்காலத்தில் ஒருநாள்பட்சத்தினன்றுசேர்த்த நெல்லை
யுலர்த்தி யரிசியாக்கி வறுத்தரைத்தால் குறுணிமாவாச்சு தனைத்
ஐந்துபங்காகப்பங்கிட் டொருபங்கதிதிக்குக்கொடுத் தவனை யனுப்
பிவிட்டுப்பிறகுஅந்தநாலுபேரும் வரிசையாயுட்கார்ந்து இலைகளில
ந்தப்பொரிமாவைப்பரிமாறிக்கொண்டார்களந்தச்சமயத்தி லவ்விடத்தி
ல்வேறேயொருஅதிதிவந்தாரவரைக்கண்டுசத்துப்பிரத்தமுனிவரு மெ
ழுந்திருந்துநமஸ்காரம்பண்ணி அவருக்குந்தன்பங்குமாவைக் கொடுத்
தானந்தஅதிதியானவர்சாப்பிட்டுப்பசிநீங்கவில்லையேயென்று சொல்ல
வதுகேட்டுச்சத்துப்பிரத்தமுனிவனும் நானென்னசெய்வேனென்னவி
சாரப்படும்போதுஅவனுடையபிள்ளைகண்டு ஐயா நீரேன்விசாரப்ப
டுகிறீர் நீர்விசாரப்படவேண்டாம் இதோ என்னுடையபங்குமாவிருக்கிற
தென்று தன்பங்குமாவையு மெடுத் ததிதிக்குக் கொடுத்தா
னதைச் சாப்பிட்டு மந்த அதிதியானவர் இன்னமு மென்பசி
தணியவில்லையென்றுசொல்லஅதைக்கேட்டுச்சத்துப்பிரத்தனும் ஐயா
அதிதியேஇன்னமுந்தேவரீருடையபசிதீரவில்லையென்று சொன்னால்
நானெங்கேபோய்க்கேட்கிறதென்றுவிசனப்படுகையிலதைக்கேட்டிரு
ந்தகுணவதியான அவன்மருமகளானவள் ஐயா நீங்களேன் ஆலோசனை ப
ண்ணுகிறீர் இதோ என்பங்குமாவிருக்கின்றதென்று மாமனாரானசத்
துப்பிரத்த முனிவனுக்குத்தெரிதல்சொல்லித் தன்பங்குமாவையு மெ
டுத்ததிதிகையிற்கொடுத்தா ளதைவாங்கி யந்த வதிதியானவர்
சாப்பிட்டுச்சந்தோஷமடைந்துசத்துப்பிரத்த முனிவனைப்பார்த்து ஓ ரி
ஷியசம்பன்னே தருமகுணாளா நான்தருமதேவன் நானுன்னுடை
யஇருதயத்தைச் சோதிக்க அதிதியைப்போல வந்தேன் இப்போ
து உங்களுடையதயாளகுணத்தைக்கண்டு மெச்சினேன் நீங்களெல்
லோருமிந்தசரீரத்துடனே இந்ததிவ்யவிமானத்திலேறிக்கொண்டு சு
வர்க்கலோகத்திற்குப் போங்கள் இதோ விமானம் வந்திருக்கின்ற

கென்றுசொல்லியந்த வதிதியானவர் மாய்கையாய்ப்போய்விட்டாரப்போதுதானே தேவேந்திரனுடையசாரதியாகிய மாதலியானவன் ஒருதெய்வவிமானத்தைக்கொண்டுவந் தவர்களுக்குமுன்னேநிறுத்தி யந்தச்சத்துப்பிரத்தமுனிவனைப்பார்த்து ஓஐயாநீங்க ளெல்லாரு மிந்தவிமானத்தின்மேரிலேறுங்களென்றுசொல்லவதுகேட்டுச்சத்துப்பிரத்தமுனிவனும்சற்றுநேரமாலோசனைசெய்துமாதலியைப்பார்த்து ஓஐயா தேவசாரதியேயென்னுடைய வார்த்தையைக்கேள்பூலோகத்திலிருக்கப்பட்டபிரமக்ஷத்திரியவைசியசூத்திரரென்றுசொல்லப்பட்ட நான்குவருணத்தார்களிலெவர்களாகிலுமொருவரவர்கள்செய்த புண்ணியபலத்தினால்தெய்வலோகத்திற்குவந்துசேர்ந்தவ்விடத்திலுண்டான தேவதாசவுக்கியங்களையனுபவித்துக்கொண்டுதேவரிஷிகளுடனேகூடிக்கொண்டிருக்கும்போதுசிறிதுநாளையில் தேவர்கள்வந்துநீங்கள் பண்ணினபுண்ணியமெல்லாமனுபவித்துத்தீர்ந்தது இனிமேல் பூலோகத்திற்குப் போங்களென்றவர்களைப்பிடித்துப்பலாத்காரமாய்த் தலைகீழாய் விழும்படிபூமியிற்றள்ளிவிடுவார்களல்லவா ஆகையினாலப்படிப்பட்ட வறுப்பாலசுகத்திற்குநான்வரமாட்டேன் இன்னஞ்சிலகாலமிவ்விடத்தில் தானேவானப்பிரஸ்தனாயிருந்துகொண்டுதவஞ்செய்துஎன்றைக்குமழியாத பதவியான பிரமலோகத்தை யடைகிறேன் ஆதலால் இந்தவார்த்தையெல்லாந்தேவேந்திரனிடத்திற்போய்ச்சொல்லென்று சொல்லவதுகேட்டுமாதலியுமப்படியேயந்தவிமானத்தைத்திருப்பிக்கொண்டமராவதிப்பட்டணத்திற்குப்போயந்தவார்த்தையெல்லாந்தேவேந்திரனுடனேசொன்னான் அதுகேட்டுத்தேவேந்திரனும்சத்துப்பிரத்தமுனிவனுடைய வார்த்தைக்குமெச்சியந்த மாதலியைப் பார்த்து அப்படியானால் தருமதேவனுடையசொல்லுக்குப்பிசகுவரலாமோவல்லது நீபோய்ந்தச்சத்துப்பிரத்தமுனிவனைக்குடும்பத்துடனே விமானத்திலேற்றிக்கொண்டு சத்தியலோகத்திற் கொண்டுபோய் விட்டுவாவென்று செலவுகொடுத்தனுப்பினான் அதுகேட்டுமாதலியானவன்மறுபடியும் பூலோகத்திற்குவந்து சத்துப்பிரத்தமுனிவனைக்கண்டு தண்டனிட்டு ஐயா நீருடையகருத்தின்படியேமகவானானதேவேந்திரன் செலவுகொடுத்தார் ஆதலால்தேவரீர்குடும்பத்துடனேயதிசீக்கிரத்தில் இந்தவிமானத்திலேறிக்கொண்டுபிரமலோகத்திற்குவாருங்களென்று சொல்லவதுகேட்டுச்சத்துப்பிரத்தமுனிவரும்சந்தோஷித்துப்பெஞ்சாதிபிள்ளைமருமகள்இவர்களுடனேகூட அந்தவிமானத்தின்மேரிலேறிக்கொண்டுசகலதேவகணங்களும்புடைசூழ்ந்துவரத்தக்கதாகச் சத்தியலோகத்திற்குப்போனார் அதுதெரிந்து சத்தியலோகவாசிகளாகிய தேவரிஷிகள் பிரமரிஷிகள்ராசரிஷிகள்முதலானவர்களுமெதிரேவந்து சத்துப்பிரத்தமுனிவரையாசீர்வதம் பண்ணிக்கொண்டு பகு வைபவத்துடனேபிரமலோகத்திற்கழைத்துக்கொண்டுபோனார்கள் அந்த இந்திரசாரதியாகியமாதலியும்அவர்களைக்கொண்டுபோய்ப்பிரமலோகத்தில் விட்டுவிட்டுவிமானத்தைத்திருப்பிக்கொண்டுமறுபடியுஞ்சுவர்க்கலோகத்திற்குப் போனான் கேட்டீர்களோசபையார்களே அந்தச்சத்துப்பிரத்தமுனிவன் தானம்பண்ணினபொரிமாவிலோரணுமாத்திரம் என் சரீரத்தில்விழுந்தபடியினாலென்னுடையசரீரமொருபுறம் பொன்னாக து ற்ற

ஒருபுறம்எப்போது பொன்னாகுமோ வென்றுதருமபுத்திரர்செய்கிற யாகத்தைக்கேள்விப்பட்டு வந்தேன் இந்தயாகத்தினால் என்னுடைய சரீரம்பொன்னாகாமற்போச்சுது ஆகையினாலந்த சத்துப்பிரஸ்தமுனிவன்செய்ததானத்திற்குமுன் இந்ததருமபுத்திரர் செய்ததானஞ்சரியல்லவென்றுசொல்லி அந்தக்கீரிப்பிள்ளையானது அங்கேகிடக்கிறஎச்சிலைகள்பேரில்விழுந்துபுரண்டு அதுகளால்ஒருபயனையும்பெறாமல்கடைசியில் ஸ்ரீகிருஷ்ணபகவான் போசனம்பண்ணின இலைமேல்விழுந்துபுரண்டு இரண்டுபுறம்பொன்னாகி மறுபடியும்அந்தசபைக்குவந்து இந்ததருமநந்தனர் செய்ததானமுஞ்சரிதானென்றுசொல்லிப்போய்விட்டது அதுகேட்டுத் தருமநந்தனருமாச்சரியமடைந்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து ஐயாகிருஷ்ணா-தேவகிநந்தனா- சிசுபாலமர்த்தனா காளிங்கமர்த்தனா- கம்சசம்மாரபக்தவச்சலா- பரமதயாளா-கோபிகாரமணா கோவிந்தா-யாதவகுலேஸ்வரா- அந்தக்கீரிப்பிள்ளைசொல்லிப்போனவசனத்தை நன்றாய் ஆலோசித்துப்பார்க்குமிடத்தில் பசுபக்ஷிகள் ஜனசெந்துக்கள்முதலான சீவவதைசெய்துதருமம்பண்ணுகிறதைப்பார்க்கிலும் தபோவிரதமார்க்கமே உத்தமமென்றுதோற்றுகின்றதல்லவே அதல்லாமல்பூர்வத்தில் அகஸ்தியமகாமுனிவருமன்னதானமபண்ணி அதனால்வரும் மகிமையைப்பெற்றார்திலீபன்மாந்தாதாமுதலான மகாராஜாக்களெல்லாரும் அன்னதானம்பண்ணி அதனால்மகிமையையடைந்தார்கள். ஆகையால் பூலோகத்தில்எவ்வகைப்பட்டயாகங்கள் எவ்வகைப்பட்ட தானதருமங்கள்செய்கிறதைப்பார்க்கிலுமன்னதானஞ் செய்கிறதே முக்கியமாய்க்காணுகின்றது இதுவுமல்லாமல்எந்த தானங்களிலும் அன்னதானமேயதிகமென்றும்அன்னதாதாசுகியவாவென்றும் சர்வத்திரசாதாரணமாய்ச்சொல்லுகின்றார்கள் அல்லது ஒருகாலத்தில் இலக்ஷம்பிராமணர்களுக்குஅன்னதானஞ்செய்விக்கும்போது பேரிகையானது சற்றேஒருநிமிஷம்அடிபடும் அப்படிக்கிருக்கதாம்இந்த அஸ்வமேதயாகஞ்செய்யத்தொடங்கினநாள்முதல்இதுபரியந்தமும் ராத்திரியும்பகலும் இடைவிடாமல்அனேகமாயிரம்பேரிகைகள் அடிபட்டு முழங்கிக்கொண்டேயிருந்ததுநம்முடையயாகத்திற்குவந்தநாலு வருணத்தார்களிலெவர்களும்போசனபக்ஷணங்களினாலும் வஸ்துவாகனங்களினாலுந் திருப்தியடையாமற்போனவர்களில்லை சகலமானபேர்களுந் திருப்தியடைந்தார்கள்இப்படிக்கெல்லாந்தேவரீருடையகிருபாகடாக்ஷத்தினால்ஒருவிக்கினமுமில்லாமல்நிர்விக்கினமாய் நடந்தயாகத்தை அந்தக்கீரிப்பிள்ளையானதுமகாஅற்பமாகச்சொல்லிப்போனகாரணமென்ன அதுமெய்யானகீரிப்பிள்ளைதானோஅல்லதுஎதாகிலும் ஒருமுன்னிலையினால்மாயவடிவாய் வந்தகீரிப்பிள்ளையோ இதுகளையெல்லாம் விவரமாய்என்னுடையசந்தேகந்தீரும்படி சொல்லுமையாவென்றுகேட்க அதுகேட்டுஸ்ரீகிருஷ்ணமூர்த்தியுந்தருமநந்தனரைப்பார்த்துப்புன்சிரிப்பாகச்சிரித்துச்சற்றேதம்முடையஞானதிருஷ்டியினால் யோசித்துஐயாதருமநந்தனாஇப்போதுஇந்தமகாசபையில் அச்சமில்லாமல்வந்து நீர்செய்தயாகத்தை அற்பமாகச்சொல்லிப்போன கீரிப்பிள்ளையை ஆரென்றுகேட்டீராகில்அதைச்சொல்லுகிறேன் அஃதெப்படியென்றால்பூர்வகாலத்தில்ஜெ

மதக்கினியென்பவர் முன்வகித்திருந்த கோபத்தைவிட்டு சாந்தகுண
த்தைவகித்துக்கொண்டிருந்தகாலத்திலொருநாள் அவருடையதகப்ப
னருக்குத்திவசம்வந்தது அன்றையத்தினம்ஒருபசுவினுடையபாலைபா
த்திரத்தில்கறந்துகொண்டுவந்து ஓரிடத்திற்பத்திரப்படுத்திவைத்திரு
க்கும்போது அதுதெரிந்துகோபதேவனும்அவருடையபொறுமையை
ச்சோதிக்க வேண்டுமென்றெண்ணி ஒருமனிதனைப்போலவந்து அந்த
ப்பாலைக்குப்புறப் பூமியிற்கவிழ்த்துவிட்டார் அதுகண்டு அந்தஜெமத
க்கினியென்பவர் கோபித்துக்கொள்ளாமல் சாந்தமாயிருந்துவிட்டார்
அதுதெரிந்து அவருடையபிதுர்த்தேவதைகள் கோபங்கொண்டுநீவி
யர்த்தமான சிரார்த்தம்பண்ணபடியினால் நீகீரிப்பிள்ளையாகக்கடவா
யென்றுசாபமிட்டார்களதுகேட்டு அந்தஜெமதக்கினியும்பயந்து அந்
தப்பிதிர்த் தேவதைகளுக்கு நமஸ்காரம் பண்ணி ஐயாபிதாக்க
ளே இந்தச்சாபம் எந்தகாலத்தில் விமோசன மாகுமென்று
கேட்கஅவர்களும் அவரைப்பார்த்து நீபூலோகத்தில் எவர்களா
கிலும்பண்ணின மகாதானத்தைக் கண்டு அற்பதான மென்று
சொல்லிநிந்திப்பாயானால் அந்நாளில்இந்தச்சாபவிமோசனமாகிஉ
ன்னுடையகீரிப்பிள்ளைரூபம்போமென்று சொல்லிப்போனார்கள்ஆ
கையினால்அந்தக்கீரிப்பிள்ளையானது இந்தமகாசபையில்பயப்படாம
ல்வந்துபொரிமாதானம் பண்ணினபிராமணனுடைய தருமத்திற்குஇ
ந்தயாகஞ்சரியல்லவென்று நிந்தனைசெய்து தன்னுடையசாபத்தைவி
மோசனம் பண்ணிக்கொண்டுபோய்விட்டதென்றுசொல்லியருளினா
ர் அதுகேட்டு தருமபுத்திரருஞ் சந்தேகந்தீர்ந்துமகாசந்தோஷத்தைய
டைந்தார் மற்றுமுண்டானபேர்களுஞ் சம்சயந்தீர்ந்து ஆனந்தமாயிரு
ந்தார்கள்கேட்டீரோஜெனமேஜெயபூபாலகா இப்படிதர்மபுத்திரரான
வர்மகாசம்பிரமத்துடனே அஸ்வமேதயாகத்தைச்செய்துமுடித்துச
கலமானபேர்களுக்குந் திருப்தியாகும்படி அபரிமிதமாகத்தக்ஷிணைக
ள்போசனகிருத்தியங்கள்முதலான சர்வவுபசாரங்களுஞ்செய்துமுடி
ந்தபின்பு அந்தருமநந்தனரானவர் திரௌபதாதேவியுடனும்தம்பி
மார்களுடனும் பந்துஜெனங்களுடனும் எழுந்துநின்றுமகாபயபக்தி
வினயத்துடனே பகதலப்பிரீயமுனீந்திரர் வேதவியாசர் மார்க்கண்டே
யர்நாரதர் வதிஷ்டர்முதலானயாகத்திற்குவந்தரிஷீஸ்வரர்களுக்கெல்
லாஞ்சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்தார் அதுகண்டு அவர்களெல்
லாருஞ்சந்தோஷமடைந்து ஒருமுகமாய்நின்று வேதமந்திரங்களைச்
சொல்லிஇந்ததருமபுத்திரர் எப்போதும் சகலசவுக்கியராய்தேவப்பி
ராமணவிசுவாசராய் மந்திரிபிரதானிகளுடனும் புத்திரபவுத்திராதி சி
னேகிதர்களுடனும் அபிவிர்த்தியுண்டாகி சுகசீவியாய்வாழ்ந்திருக்க
க்கடவரென்று ஆசீர்வாதஞ்செய்து ஸ்ரீகிருஷ்ணபகவானுடையஆசீர்
வாதத்தைப்பெற்றுக்கொண்டு தருமபுத்திரர்முதலானராஜாக்களிடத்
திலுஞ்செலவு பெற்றுக்கொண்டு அந்தமுனீஸ்வரர்களெல்லாரும் த
ங்கள்தங்களுடைய ஆசிரமத்திற்குப்போனார்கள் பகதலப்பிரீயமுனீ
ந்திரரும்அந்தப்படியே அவர்களிடத்திலெல்லாஞ்செலவுவாங்கிக்கொ
ண்டுதிருப்பாற்கடல் மத்தியாகிய சுவேததீபத்திற்குப் போய்விட்டா
ர் அப்பால்இவ்விடத்தில் கிராமப்பிரதிஷ்டை செய்யும்படிநினைத்துசு
ந்திரகாசன்முதலான மகாராஜாக்களும் தம்பிமார்களும்திருதராட்டிர

லும்விதுரசஞ்சயர்களும் சர்வாலங்கிருதராய்ப் புறப்பட்டுரதாரூடர்களாய்நடக்கவுங் குந்திதேவி-தேவகிதேவி-திரௌபதாதேவி- சுபத்திரை-ருக்மணி-சத்தியபாமைமுதலான ஸ்திரீஜனங்களெல்லாரும்நவரத்னமயமானரதங்களிலேறிக்கொண்டுநடக்கவும்பப்பிரவாகன்முதலானகுமாரர்களெல்லாருங் குதிரைகளின்பேரிலேறிக்கொண்டுநடக்கவும் அநிருத்தியாதவதுரைகளெல்லாரும்யானைகளின்பேரிலேறிக்கொண்டு நடக்கவும்மற்றுமுண்டான சேனைகள் அவரவர்கள் ஆயுதங்களைக்கையிலிடமாகப் பிடித்துக்கொண்டு அணிவகுத்தாற்போல வரிசைவரிசையாய்நடக்கவும் இப்படிப்பட்ட சகலசம்பிரமத்துடனே தருமபுத்திரமகாராஜாவானவர் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியுடனும் பலராமருடனும்ரதாரூடராய்ப்புறப்பட்டு நால்வகைச்சேனைகளும்புடைசூழ்ந்துவரத்தக்கதாகத் தண்டுவிட்டுநடக்கும்போதுபதினெட்டுவிதவாத்தியங்களும் தாம்தாமென்றுமுழங்கவும் அரம்பை ஊர்வசிமுதலான தேவதாஸ்திரீகளைப்பார்க்கிலும் அதிரூபலாவண்ணியமுள்ள அனேகமாயிரநாடகசாலைப்பெண்கள் கும்பல்கும்பலாய்வந்து தருமபுத்திரமகாராசாவுக்கு முன்பாகநின்றுமகா அபிநயத்துடனேபாதநாட்டியம்பண்ணிக்கொண்டுவரவும்காந்தர்வஸ்திரீகளும் அந்ததருமபுத்திரருக்கு முன்னேவந்துநின்று தம்புரு-யாழ்-கின்னரி-வீணை- ராவணஹஸ்தமுதலானகருவிகளை மீட்டிக்கொண்டு யாவருக்குஞ் சந்தோஷமுண்டாகும்படிவர்ணசுரங்களைப்பாடிக்கொண்டுவரவும் பாட்டகர்களெல்லாருங் கும்பல்கும்பலாய்வந்துதருமநந்தனைப்பார்த்து ஓ அஸ்தினாபுரேஸ்வரா குந்திதனயா அகண்டிதவீரபராக்கிரமா ஆதருமபுத்திராவென்றுபுகழ்ந்துகொண்டாடவும் திருச்சின்னங்களின் ஓசையானதுபூர்வத்தில் தருமந்தப்பாமல் பன்னிரண்டுவருடம் வனவாசமும்ஒருவருடம் அக்ஞியாதவாசமுஞ் செய்துமுடித்து பிற்பாடுதருமமேசெயமென்றுபதினெட்டுநாள்பாரதயுத்தஞ்செய்து வீஷ்மர்-துரோணர்-கிருபர்-அசுவத்தாமர்-கர்னன்-சல்லியன்-சயிந்தவன்-பகதத்தன்-அலம்பன்-துச்சாதனன்-விகர்னன்முதலான மேட்டானமேட்டிகளாகிய சுத்தவீரர்களையெல்லாம் ரணக்களத்திற்கொன்று வீரலட்சுமியையடைந்து கீர்த்திபெற்றவீராதிவீரர்வருகிருரென்றும் அஷ்டதிசைகளிலுமுள்ள ராசாக்களையெல்லாஞ்செயித்துப் பிதாவினுடையவார்த்தையைக்கடவாமல்ராசசூயயாகம்பண்ணி முடித்துப் பிதாவுக்குப் புண்ணியலோகங்கொடுத்தபுண்ணியபுருஷர்வருகிருரென்றும்துன்மார்க்கானகலிபுருஷவம்சனாகிய துரியோதனன் செய்தஇம்சைகளையெல்லாஞ்சகித்துக்கொண்டிருந்துகடைசியில் அந்தமகாபாவியாகியதுரியோதனனானவன்எத்தனைவஞ்சனை செய்தபோதிலும் அதுகளையெல்லாம்நிவர்த்திபண்ணிதம்பியாகிய வீமசேனனுடைய கையினால்அவனைக்கொல்லுவித்தபராக்கிரமபுருஷர் வருகிருரென்றும் வீராதிவீரரான அர்ச்சுனராசனையனுப்பிக் காலகேயநிவாதகவசாளென்கிற முப்பதுகோடி ராக்ஷசவீரர்களையெல்லாருங்கொல்லுவித்து தேவேந்திராதிதேவர்களுடைய பயந்தீர்த்துநிர்ப்பயமாக்கி ரட்சித்தமகானுபாவர் வருகிருரென்றும்சகலசீவகோடிகளுக்கும் மாதாபிதாக்களைப்போலிருந்துஒருநாளாகிலும்துக்கப்படவொட்டாமல்காப்பாற்றுகின்றபரமதயாளர்வருகிருரென்றும்ஸ்ரீகிருஷ்ணபகவானுடையசகாயத்தினால்அஸ்வமேதக்குதிரை

யைவிட்டு அந்தக் குதிரையின்பிறகே மகாபராக்கிரமசாலியான அர்ச்சுனாசனையனுப்பி அங்க-வங்க-கலிங்க-காஸ்மீர-காம்போஜ-மிலேச்ச-மலையாள-பாஞ்சால-மச்ச-பாண்டிய-சோழ-கர்னாடகமுதலான ஐம்பத்தாறுதேசங்கள்தோறும் அஸ்வமேதக்குதிரையைநடத்துவித்து அங்கங்கேஎதிர்த்துவந்த சந்திரகாசமகாராசன் வீரவர்ம்மன் முதலானமகாராசாக்களையெல்லாஞ்செயித்து அவர்கள்கையில் அபரிமிதமானகாணிக்கைக்கப்பங்களைப் பெற்றுக்கொண்டு அவர்களையெல்லாந்தம்முடையவசம்பண்ணிக்கொண்டு மகாவைபவத்துடனே பகதலப்பிரீயமுனிந்திரர் வியாசர்வசிஷ்டர்முதலான மகாரிஷிகள்முன்னிலையில் அஸ்வமேதயாகஞ் செய்துமுடித்து பிர்மக்ஷத்திய வைசியசூத்திரர்களாகியநான்குவருணத்தார்களுக்கும்ஆசையடங்கத்தக்கதாகதட்சணைகள்கொடுத்து அன்னதானம் சொர்ணதானம்பூதானம்கோதானம்கன்னிகாதானம் வஸ்திரதானமுதலான சோடசமகாதானங்கள் பண்ணி அஸ்தினபுரத்தைதப்பரிபாலனம்பண்ணுகிற தருமபுத்திரமகாராசாவானவர்வருகிறாரென்றும் அஷ்டதிசைகளுஞ் செவிடுபடும்படி முழங்கவும்வெற்றிச்சங்குகளும் செயம்செயமென்று முழங்கவும்பொற்பிரம்புக்காரர்கள்சேனைகளுக்கு முன்னேநின்று மகாதர்மக்கியானராகியதர்மசொரூபர்வருகிறார்விலகிநில்லுங்கோளென்றுசந்தடிவிலக்கிக்கொண்டுவரவும் இரண்டுபக்கத்திலுமனந்தமாயிரம்பேர்கள்வரிசைவரிசையாய்நின்றுகொண்டு கர்ப்பூரதீவட்டிகள் பிடித்துக்கொண்டுவரவும் ஆகாயத்திலிருக்கின்ற தேவேந்திராதி தேவர்கள்மகாசந்தோஷத்துடனேபாரிசாதபுட்பங்களைச் சலசலவென்று வருஷிக்கவும்குளிர்ந்தகாற்றுவீசவும் அப்படிப்பட்ட வைபவத்துடனே தருமநந்தனர்கிராமப்பிரதிஷ்டையாசப்பவனிவரும்போது சேனைவெள்ளங்கள்நடக்கின்ற அதிர்ச்சியில்பூமியதிர்ந்துகயிலாசபதியாகிய பரமசிவனானவர் இமோற்பர்வதத்தில் உலகமாதாவாகிய உமையவளைத்திருக்கலியாணஞ்செய்துகொண்டகாலத்தில் அகஸ்தியமுனிவரும் அந்தத்திருக்கலியாணத்திற்குப்பொதியமலையைவிட்டெழுந்தருளி வந்தபோது உத்தாதிசையானதுகாழ்ந்து தட்சணதிசையானதுஎப்படிஉயர்ந்துநின்றதோ அப்படிப்போல் நான்குதிக்கிலுமுள்ள ராசகூட்டங்களெல்லாம்ஒருமுகமாய்த்திரண்டு நடக்கிறபடியினால் அப்போது அஸ்தினபுரமானதுசற்றேதாழ்ந்துநின்றது எப்படியிருந்ததென்றால்முன்னால் அர்ச்சுனனானவன்நாரதமுனிவருடைய வாக்கியத்தைக் கடவாமல்தீர்த்தயாத்திரைபண்ணிவருகையில் துவாரகாபுரிக்குவந்து சுபத்திரையைக்கண்டுகபடசன்னியாசி வேடமாயிருந்து ஒருவரையுமறியாமல்சுபத்திரையைத்திருடிக்கொண்டுவந்து அஸ்தினபுரஞ் சேர்ந்தபிறகு கிருஷ்ணதேவானுமதியினால் கலியாணம்பண்ணிக்கொண்டான் அதையெல்லாம்பலராமர்கேள்விப்பட்டு மகாகோபங்கொண்டு அந்தத்துன்மார்க்கனாகிய அர்ச்சுனன் என்னையறியாமல் கபடசந்நியாசிவேடமபோட்டுக்கொண்டிருந்துஎன் தங்கையைத்திருடிக்கொண்டு போனானல்லவா அவனைநான்கொல்லாமல் விடுகிறதில்லையென்று மகாஆக்ருஷத்துடனேவந்து தன்னுடையஆயுதமாகியகலப்பையினால்இந்த அஸ்தினபுரத்தைப்பேர்த்துச்சமுத்திரத்தில் தள்ளுகிறேனென்றுசொல்லிதம்முடையகலப்பையினுனியை அஸ்தினபுரத்துக் கோட்டைவாசலிலூன்றினமாத்திர

த்தில்அந்தக் கோட்டையினுடைய சிகரமானது ஒருபுறந்தலைகீழாகத் தாழ்ந்தது அதை கிருஷ்ணபகவானுங் கேள்விப்பட்டுவந்துசமாதானஞ்சொல்லிபலராமருடைய கோபத்தைத்தணித்தார் அதின்பிறகு அவருங்கோபந்தணிந்து சாந்தமாய்க்கலப்பை யெடுத்துக்கொண்டுதுவாரகைக்குப்போனார் அந்தஅஸ்தினாபுரம் எப்போதும்போல்சமமாய் நின்றது அப்படி இப்போதும்சேனைகளாகிய கலப்பையினால்தாழ்ந்தது இவ்விதமாய் தருமநந்தனர் சகலாடம்பரத்துடனே கிராமப்பிரதிஷ்டை பண்ணி மறுபடியும்நல்ல சுபமுகூர்த்தத்தில் திரும்பிஅஸ்தினாபுரத்திற்குப்பிரவேசித்து அரமனைக்குவந்துசேர்ந்து ரதத்தைவிட்டிழிந்துசகல ஆடம்பரங்களையும்நிறுத்தி யவைகளையனுப்பிவிட்டுவிதுரசஞ்சயர்களினால் சந்திரகாசன் முதலாகிய சகலமானராசாக்களுக்கும்வெவ்வேறேவிடுதிகளமர்த்திவைத்துதாம்தம்பிமார்களுடனும்கிருஷ்ணபகவானுடனும் அரமனைக்குள்ளேபோனார் பிற்பாடுதருமநந்தனரும் மறுநாள்உதயத்திற்குமுன் எழுந்திருந்து காலோசிதகாரியமானநித்தியகர்ம்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டுசர்வாலங்கிருதபூஷிதராய்ப்புறப்பட்டு தம்பிமார்கள் குமாரவர்க்கங்கள் மந்திரிசாமந்திரிகள்பிரதானிகள்பரிவாரங்கள்புடைசூழ்ந்து வரத்தக்கதாக கொலுமண்டபத்திற்குவந்துசேர்ந்து ரத்னசிம்மாசனத்தின்பேரில்உட்கார்ந்துகொலுவாயிருந்தார் அப்போதுகிருஷ்ணபகவானும் தம்முடையநித்தியநேமங்களைமுடித்துக்கொண்டு சர்வாலங்காரத்துடனேபுறப்பட்டுபலராமர்சாத்தகிமுதலானயாதவவீரர்களுடனே கொலுமண்டபத்திற்குவந்துசேர்ந்துதருமபுத்திரரைக்கண்டுசாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து அவர்போடுவித்தரத்னசிம்மாசனத்தின்பேரி லுட்கார்ந்திருந்தார்மற்றுமுண்டானசந்திரகாசன்முதலான மகாராசாக்களெல்லாரும் அவர்களுடைய மந்திரிபிரதானிகளுடனேவந்து தருமநந்தனர் பலராமர்கிருஷ்ணதேவர்இவர்களுக்கு நமஸ்காரம்பண்ணி பிற்பாடுதருமராசாவையுங்கிருஷ்ணமூர்த்தியையுஞ்சூழ்ந்து உட்கார்ந்தார்கள் அப்போதுசந்திரகாசன் முதலானராசாக்களெல்லாரும்கிருஷ்ணபகவானையும்தருமபுத்திரரையும்பார்த்து ஐயாலோகநாயகா தருமபுத்திரா நாங்களெல்லாரும் உங்களுடையஅனுக்கிரகத்தினால் யாகதரிசனம்பண்ணி அதனால் நாங்கள் அனேகஞ்சென்மங்களில் அறிந்தும்அறியாமலும்பண்ணினபாவங்களையெல்லாம்போக்கடித்துக்கொண்டுபுண்ணியபுருஷர்களாய்கிருதார்த்தர்களானோம் எங்களுடைய வமிசத்தாரெல்லாரும்புண்ணியலோகத்தையடைந்தார்கள்அதற்குச்சம்சயமில்லை நாங்களிவ்விடத்திற்குவந்து ஒருவருஷகாலமாச்சுதே இதுவரையில் எங்களுடையதேசமெல்லாம்எப்படியிருக்கின்றதோ ஆதலால்நாங்கள்எங்களுடையதேசத்திற்குப்போய்வருகிறோம் எங்களுக்குச்சந்தோஷகரமாய்ச் செலவுகொடுத்தனுப்புங்கோ ளென்றுசொன்னார்கள் அதுகேட்டுக்கிருஷ்ணதேவரும்மெய்தானென்று தருமநந்தனரைப்பார்த்து ஐயாராஜேந்திரா இவர்களெல்லாருந் தங்கள்தேசங்களுக்குப் போகவேண்டுமென்று கேட்கிறபடியால் அவர்களுக்குச் செலவுகொடுத்தனுப்பிவையுமென்று சொல்லஅதுகேட்டு தருமநந்தனரும் அப்படியேநல்லதென்றுசம்மதித்துவெகுசந்தோஷத்துடனே கிருஷ்ணபகவானுடைய அனுமதியின்பேரில் விதுரசஞ்சயர்களால் நவரத்தினகிரீடங்கள்முதலான பூஷ

ணவனைகளும் சால்வைகள்முதலான திவ்வியவஸ்திரங்களும்வெகுவா யழைப்பித்து அர்ச்சுனராஜனுடைய கையினால்சந்திரகாசன்முதலான ராசாக்களுக்கெல்லாம் வெகுமதிபண்ணுவித்து அவர்களுடையமந்திரிபிரதானிகள்முதலான சகலசேனைகளுக்கும் போதும்போதுமென்று சொல்லத்தக்கதாகவெல்லவஸ்திராபரணங்களை வெகுமானம்பண்ணுவித்து அதுவுமல்லாமல் ஓராஜாக்களுக்குமூன்றுவெள்ளையானைகளும்பஞ்சலட்சண முள்ள ஐந்துஉத்தம அஸ்வங்களும் ஒருகனகதண்டிகையும்ஒருசோடு வஸ்திரஅங்கியும் இந்தப்பிரகாரம்அந்தமகாராஜாக்களுக்கெல்லாம் வெகுமானம்பண்ணி அவர்களுடைய பட்டதேவிகளாகியராஜஸ்திரீகளெல்லாருக்கும் மாணிக்கத்தாழ்வடங்கள்நவரத்தினசேலைகள்முத்துரவிக்கைகள்பச்சைசப்பாவாடைகள்இதுகளெல்லாம்வெகுமானம்பண்ணி அதுவுமல்லாமல் தண்டிகைகள்வண்டில்கள் மூடுபல்லாக்குகள்முதலானவாகனாதிகளுங்கொடுத்து தருமபுத்திரரும்மகாசந்தோஷத்துடனே சகலமானவர்களுக்கும் பிரியவசனமாய்உபசாரணைகள்சொல்லி அவர்களைச்சந்தோஷப்படுத்தி எங்கள்பேரில்கிருபைவைத்துப்போய் வாருங்கோளென்றுசொல்லிச் செலவுகொடுத்தனுப்பினார்.

அவர்களும்வெகு சந்தோஷத்தையடைந்து தங்கள் தங்கள்மந்திரிபிரதானிகளுடனேகூடிக்கொண்டு தருமநந்தனருக்கும்ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கும்பலபத்திராமருக்கும் நமஸ்காரம்பண்ணிவீமார்ச்சுனர்முதல் னவர்களுக்கும் வந்தனம்பண்ணிகுந்திதேவி-தேவகிதேவி-இவர்களிருவருக்கும் நமஸ்காரம்செய்து இவர்களெல்லாரும்சுகசீவியாய்ப்போய்வருங்களென்று செலவுகொடுத்தனுப்ப அப்படியேசந்திரகாசன்முதலான மகாராஜாக்களெல்லாம் அவரவர்களுடையவாகனங்கள்பேரிலேறிக்கொண்டு தங்கள் தங்கள் சேனைகளுடனே அஸ்தினபுரத்தைவிட்டுப் புறப்பட்டுநடந்தார்கள் இப்படிசகலதேசத்துராஜாக்களும்வெண்கலப்பேரிகை செயபேரிகை நாகசுரமுதலானபதினெட்டுவகைமேளவாத்தியங்களும் தாம்தாமென்று முழங்கத்தக்கதாகஅஸ்தினபுரத்தைவிட்டுப் புறப்பட்டுநடந்து வெவ்வேறுதண்டுகளாய்ப்பிரிந்து அவரவர்களுடைய பட்டணங்களிற்போய்ச் சேர்ந்தார்கள். இப்பால் அஸ்தினபுரத்தில் தருமபுத்திரமகாராஜாவானவர் தமதுதங்கையாகிய துச்சேலைக்கும் அவள்குமாரனாகிய விருசசந்திரனுக்கும்ஆடையாபரணங்கள் ஆனைகள் குதிரைகள்முதலானவஸ்துக்களெல்லாம் வெகுமானமாகக்கொடுத்தவர்களைப்பார்த்து நீங்கள்இனிமேல்சுகமாய்உங்களுடையசிந்துதேசத்திற்குப்போய் ராச்சியபரிபாலனம்பண்ணிக்கொண்டிருந்து இவ்விடத்திற்கும் சுபாசுபங்களுக்குவரப்போகவிருங்கோளென்று செலவுகொடுத்தனுப்பிவிட்டார் அவர்களும் ஸ்ரீகிருஷ்ணபகவான் தருமநந்தனர் முதலானவர்களிடத்திற் செலவு பெற்றுக்கொண்டுதங்களுடைய சிந்துதேசத்திற்குப் போய்ச்சேர்ந்துசுகமாயிருந்தார்கள் அப்போது பப்பிரவாகனும் சித்திராங்கதையும்உலுவசியும்அஸ்தினபுரத்தில் அர்ச்சுனராசனிடத்திலிருந்து சுகசீவியாய்வாழ்ந்துகொண்டிருந்தார்கள் இந்தப்பிரகாரம் ஐம்பத்தாறுதேசத்து ராஜாக்களுமவரவர்களுடைய தேசத்திற்குப் போய்விட்டபின்பு கிருஷ்ணபகவானும்சாத்தகி பலராமர்முதலான யாதவவீரர்களுடனேபின்னையும்

ஒருமாதவரைக்கும் அஸ்தினபுரத்தில் தருமபுத்திரரிடத்தில்தானேசகலவேடிக்கைகளுடனேயிருந்துபிறகு ஒருநாளந்தபகவானவர் தருமநந்தனரைப்பார்த்து ஓதருமநந்தன நாங்களெல்லாமிவ்விடத்தில்வந்துநெடுநாளாச்சுதே அவ்விடத்தில்துவாரகாபுரியில் வாசுதேவர்மாத்திரம்ஒண்டியாயிருக்கிறாரே பட்டணம்எப்படியிருக்கின்றதோதெரியாது நான் இங்கேதானேயிருந்துவிட்டா லவ்விடத்து காரியபாகங்களெப்படிநடக்கும் அங்குமிங்குமா யிருக்கவேண்டியது ஆகையினலின்றையத்தினம்எங்களுக்குத்துவாரகாபுரிக்குப்போகும்படி செலவுகொடுத்தனுப்பிவையுமென்றுகேட்க அதுகேட்டு தருமநந்தனரும்ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைப்பார்த்துஐயாலோகநாயகா தேவரீர் இன்னஞ்சிலநாளிவ்விடத்திலிருக்கலாகாதோ ஆனாலும் இன்றையத்தினமாத்திரம இருந்கோவென்றுசொல்ல அதுகேட்டு ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும் தருமநந்தனரைப்பார்த்துஓதருமசுகிபா நாம் இங்கேயிராமல் எங்கேபோகிறோம் பத்துநாள்பொறுத்து மறுபடியும்வருகிறோம் இன்றைபததினம்நல்லநாளாயிருக்கிறபடியினால்எங்களுக்குச்சந்தோஷகரமாய்ச்செலவுகொடுத்தனுப்புமென்று பிரியவசனமாகச்சொல்ல அதுகேட்டுத்தருமநந்தனரும்அப்படியே நல்லதென்றுசம்மதித்து ஸ்ரீகிருஷ்ணபகவான்பலபத்திராராமர் முதலானவர்களுக்கெல்லாம் போசனகிர்த்தியங்களைச்சம்பிரமமாய்நடப்பித்து தமதுதம்பியாகிய அர்ச்சுனனுடையகைகளினால்அவர்களையெல்லாம் நல்லவஸ்திராபரணங்களினாலலங்காரம்பண்ணுவித்து ஸ்ரீகிருஷ்ணபகவான் முதலானவர்களுக்கும் தேவகிதேவியாமுதலான ஸ்திரீசனங்களுக்கு மனேகமான உபசாரணைகள் சொல்லிஅவர்களையெல்லாம்பிரியவசனங்களினால் சந்தோஷப் படுத்திவைத்துநீங்களெல்லாரும் சுகசீவியாய் துவாரகாபுரிக்குப்போய் வாருங்கோளென்று செலவுகொடுத்து தருமநந்தனர்முதலான சகலமானபேர்களும்ஆஸ்தானத்தைவிட்டுளழுந்திருந்தார்கள் அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவானும் தருமநந்தனர்முதலானபாண்டவர்களிடத்திலும் குந்திதேவிகாந்தாரி திரௌபதாதேவிமுதலான ஸ்ரீசனங்களிடத்திலுமாநாங்கள்துவாரகைக்குப்போய் வருகிறோமென்று பிரியவசனமாகச்சொல்லிசெலவுபெற்றுக்கொண்டு தருமநந்தனர்முதலான சகலமானபேர்களும்ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி முதலானவர்களுக்கு வழிவிடும்படி பின்னேதொடர்ந்துநடக்க கிருஷ்ணதேவரும் பலபத்திரர்சாத்தகி கிருதவர்மன் முதலானவர்களுடனேமகாசந்தோஷமாய் ரதத்திலேறிக்கொண்டுநடந்தார்கள் அப்போதுதேவகிதேவிருக்மணிதேவிசத்தியபாமைமுதலானஸ்திரீகளெல்லாருங்குந்திதேவிகாந்தாரி திரௌபதாதேவிசுபத்திராதேவிமுதலான ஸ்திரீசெனங்களிடத்தில் செலவுவாங்கிக்கொண்டுகனகதண்டிகையிலும்முத்துப்பல்லக்கிலுமேறிக்கொண்டுஅந்த கிருஷ்ணபகவான்முதலானயாதவவீரர்களுக்குப்பின்னாகநடந்தார்கள் கிருஷ்ணபகவானும்பலராமசமேதராய்யாதவவீரர்களுடனே அஸ்தினபுரத்தைவிட்டுப்புறப்பட்டு மகாசம்பிரமத்துடனேதருமபுத்திரர்முதலானவர்களும்பின்னேவர இரண்டுகாழிகைதூரம்நடந்து அப்பால்ஒருவர்க்கொருவர்நமஸ்காரங்கள்செய்துகொண்டு இந்தமட்டும்மில்லுங்கோள்நில்லுங்கோள்நீங்கள்வரவேண்டாம்நாங்கள்போய்வருகிறோமென்று தருமநந்தனர் முதலானவர்களிடத்திற் செலவுபெற்றுக்கொண்டுநட

ந்து துவாரகாபுரிக்குப் போய்ச்சேர்ந்து அவ்விடத்தில்கிருஷ்ணதேவரும்பலபத்திரரும் வேடிக்கையாய் தருமநந்தனர்செய்த யாகவினோதங்களை ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு சுகசீவியாய்இருந்தார்கள். அப்பால் அவ்விடத்தில் தருமபுத்திரர்-தம்பிமார்கள்-பிள்ளைகள்- பேரன்மார்கள்-மந்திரிபிரதானிகள்-சாமந்திரிகள்-முதலான சகலசேனைகளுடனும்போய் கிருஷ்ணபகவான் முதலானவர்களைப் பிரயாணப்படுத்தி அனுப்பிவிட்டுமெறுபடியும் அஸ்தினபுரத்திற்குவந்துகொலுமண்டபத்தில்ரத்ந சிம்மாதனத்தின்பேரில்உட்கார்ந்துதம்பிமார்முதலானசகலசேனைகளும்புடைசூழ்ந்திருக்கத் தக்கதாகக்கொலுவிலிருந்து தருமமேசெயமென்றுசதாகாலமும் தருமத்தையோசித்துக்கொண்டுதம்முடையபட்டணதில் மாதமும்மாரிபொழிந்து பயிர்பச்சைகள்நன்றாய்விளைந்து பலதானியங்களும்அபிவிர்த்தியாய்பட்டணத்திலுண்டான சகலகுடிகளுஞ்செழித்துஎந்தகாலத்திலும் துக்கமில்லாமல்நித்தியமங்கள சுகபோசனங்களுடனேவாழ்ந்து தருமநெறிதப்பாமல்நடந்துவரும்படிசெய்வித்து மாதாபிதாக்களைப்போல் சகலஜனங்களையும்போஷித்துக்கொண்டு தம்முடையபட்டணத்தில் கலிபுருஷன்தொடராமல்தானதருமங்களையும்நடப்பித்து வீமார்ச்சுனர்முதலானதம்பிமார்களுடனே சுகஜீவியாயிருந்து அஸ்தினபுரத்தைப் பரிபாலனம்பண்ணிக்கொண்டிருந்தார் கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜாவேபிர்மக்ஷத்திரியவைசிய சூத்திரர்களென்கிற நால்வகைச்சாதியாகியசந்தஜாதியிற்பிறந்தவர்களானாலும்மிகுந்தஇழிவானபஞ்சமகுலத்திற்பிறந்தவர்களானாலும்மகா பஞ்சபாதகங்களைச் செய்தவர்களானாலும்ஒருதரம்கிருஷ்ணாவென்றுதியானம்பண்ணி வேதசாரமானஇந்தஅஸ்வமேதபர்வமாகிய திவ்வியசரித்திரத்தில் ஒருசுலோகமாகிலும் ஒருசொல்லாகிலும்ஒருஅக்ஷரமாயினும் பயபக்திவிசுவாசத்துடனிருந்துஎழுதினாலும்படித்தாலும் ஒருவர்படிக்கக்கேட்டாலும் அவர்கள்முற்பிறப்பிற்செய்த மகாபாதகங்களெல்லாம்நீங்கிப்பரிசுத்தர்களாய்காசியில் கங்காநதியில் இலக்ஷம்பிராமணர்களுக்கு அன்னதானம் பண்ணினபலனையும்நாலுபடிபால்கறக்கின்ற இலட்சங்கோதானம் பண்ணினபலனையும்கோடிகோதானம் பண்ணினபலனையும் மூன்றுகோடி அஸ்வதானம்பண்ணினபலனையும் கோடிபிராமணர்களுக்குப் பூமிதானம்பண்ணினபலனையும்பெற்று ஸ்ரீமகா லட்சுமிநாயகராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானுடையபாதார விந்தங்களுக்கிசைந்த அந்தரங்கபக்தியுடையவாகளாய்இகத்தில்சகலசுபசந்தோஷசவுக்கியங்களும் புத்திரமித்திரகளத்திராதிகளும் சனகனகவஸ்துவாகனாதிகளும்ஆயுராரோக்கியங்களும்உண்டாயிருந்து தேவதாசம்போகசவுக்கியங்களை அனுபவித்துத்தீர்ந்துமுடிவில்சாலோகசாமீப சாரூபமென்கிறமூன்றுபதவிகளுக்குமேலானநாலாம்பதவியாகிய சாயுச்சியபதவியைப் பெறுவார்கள்இதற்குச்சந்தேகமில்லை கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜாவேயென்று ஜெயமுனீந்திரர் சொல்லியருளினார்.

இந்தத்திவ்வியசரித்திரத்தை நாமும் உங்களுக்குக்கிருபையினாற்
சொன்னோமென்று (சூதபுராணிகர்) சௌனகாதிமஹாரி
ஷிகளுக்குச் சொல்லியருளினாரென்றவாறு.

அஸ்வமேதபர்வம்- முற்றிற்று.

